# பதிப்புரை

செந்தமிழ் மொழியிலே வழங்கும் செய்யுள் நூல்கள் சிற்றிலக்கியம் என்றும் பேரிலக்கியம் என்றும் இருவகை யாகப் பகுக்கப்பெறும். பேரிலக்கியமாவது,

"அவற்றுள்,
பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றிெஞன்
றேற்புடைத் தாகி முன்வர வியன்று
நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரந் தூது செலவிகல் வென்றி
சந்தியிற் றொடர்ந்து சருக்கம் இலம்பகம்
பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப"

என்னும் சூத்திரத்திற் கிணங்க அமைந்து அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கையும் உரைப்பதாய்ச் சிறந்து விளங்குவது. சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன பண்டைக்காலப் பேரிலக்கியங்களாம். மற்றும் பிற்காலத்தெழுந்த கம்ப ராமாயணம், பாரதம் முதலிய இதிகாசங்களும் புராணங் களும் பெருங்காப்பியங்களே.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் இந் நான்க னுள் ஒன்றும் பலவும் குறைந்து வருவது சிறுகாப்பியம் என்றும் கூறப்பெறும். பொருளானன்றி இவைகள் அளவானும் குறைந்தே விளங்கும். சிறுகாப்பியம் எனி னும் காப்பியமெனினும் சிற்றிலக்கியம் எனினும் ஒக்கும். அந்தாதி, உலா, மடல், பிள்ளைத்தமிழ், பரணி, ஆற்றுப் படை முதலியன சிற்றிலக்கியங்களின் பாற்பட்டவை. இவைகள் பெரும்பாலும் தெய்வவணக்க நூல்களாகவே அமைதல் வழக்கம்.

சிற்றிலக்கிய நூல்களை அருஞ்சொற் பொருள் விளக் கங்களுடனும் ஆராய்ச்சி முன்னுரையுடனும் தனி நூல்க ளாகவும் கொத்துநூல்களாகவும் வெளியிடவேண்டும் என்பது கழக நோக்கங்களுள் ஒன்று. சிறுநூல்கள் தனித்தனியாகச் சிதறிக் கிடத்தலால் அவைகளின் பெருமை நன்கு விளங்குவதில்லை. இவைகள் பல ஒன்று கூடுதல் பெருமைக்குரிய செயலாகும்.

முதற்கண் பிள்ளைத்தமிழ் நூல்களை அம்முறையில் வெளியிடத் தொடங்கி முன்னர்ச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், திருச்செந் தூர்ப் பிள்ளைத்தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் ஆகிய ஐந்து பிள்ளைத்தமிழ் நூல்களடங்கிய தொகுப்பினை வெளியிட்டனம். இப் பொழுது திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ், மதுரை மீனாட்சி யம்மை பிள்ளைத்தமிழ், குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், கோமதியம்பிகை பிள்ளைத்தமிழ், ஆகிய நான்கு பிள்ளைத் தமிழ் நூல்களை ஒருங்கே தொகுத்து பிள்ளைத்தமிழ்க் கொத்து இரண்டாம் புத்தகமாக வெளியிடுகின்றோம்.

இக்கொத்து நூல்கள் நூல் நிலையங்கட்கும், படிப்பகங் களுக்கும், தனிப்பட்டவர்கட்கும் இன்றியமையாவாகலின் அனைவரும் இவ் வெளியீடுகளைப் பெற்றின்புறுவார்கள் என்று நம்புகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை





கழக வெளியீடு : அஅக

கவிராச பண்டாரத்தையா
இயற்றிய

# திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ்



பேராசிரியர், பெருநாவலர்,
திரு பு சி புன்னைவனநாத முதலியார்
எழுதிய
அரும்பொருள் விளக்கத்துடன்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1
திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
1973

புலவரகம் சிதம்பரநாத பிள்ளைவளநாத முதலியார் (1889)



Ed I May 1957
Reprint: Jan 1973



THIRUVILANJI MURUGAN PILLAITH THAMIZH

Thiruvaranganar Achakam, Madras-13. (I/2)

# பதிப்புரை

தமிழ்மொழியில் உள்ள தொண்ணூற்ருறுவகைச் சிற்றிலக்கிய நூல்களுள் பிள்ளைத்தமிழ் என்பதும் ஒன்று. பிள்ளைத் தமிழ் என்னுஞ்சொல் பிள்ளையைப்பற்றிய தமிழ் என்று விரியும். பிள்ளைத்தமிழ் நூல்கள் பிள்ளையாகப் பிறந்ததாகக் கதை வழங்கும் தெய்வங்கள்மீதும் பெரியோர்கள்மீதும் பாடப்பெறும். முன்னோர்கள் தெய்வத் திருவருளையும் பெரியோர்களின் அருளையும் பெறுதற்கு இதனையும் ஒருவழியாகக் கைக்கொண்டுள்ளனர்.

ஆனைமுகக்கடவுள், முருகக்கடவுள், உமையவள் ஆகியோர் பிள்ளையாகப் பிறந்ததாக வழக்குண்மையின் இவர்கள்மீது பெரும்பான்மையாகப் பாடப்பட்டுள்ளன. சிவபெருமான் எக்காலத்தும் யாண்டும் பிள்ளையாகப் பிறந்தார் என்னும் வழக்கா றின்மையின் சிவபெருமான்மீது பிள்ளைத்தமிழ் பாடும் வழக்கம் இல்லை.

பிள்ளைத்தமிழ் பெற்ற கடவுளர்களுள் முருகக்கடவுள் முதன்மையானவர். இவர்மீது எண்ணற்ற பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடப்பெற்றுள்ளன. பிள்ளைத்தமிழ் முதலிய சிறு நூல்களை அரும்பதவுரை ஆராய்ச்சி முன்னுரை முதலியவைகளோடு வெளியிட எண்ணி இதுவரை, முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ், திருமலை முருகன் பிள்ளைத்தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் முதலியவைகளை வெளியிட்டோம்.

இப்பொழுது திருவிலஞ்சி என்னும் பதியின்கண் எழுந்தருளிய முருகக்கடவுள்மீது, கவிராச பண்டாரத்தையா என்னும் அருந்தமிழ்ப் புலவரால் இயற்றப்பெற்ற திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழைப் புலவர் திருமிகு பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்களைக்கொண்டு அரும்பொருள் விளக்கம் முன்னுரை முதலியன எழுதச்செய்து வெளியிடுகின்ருேம்.

இந்நூற்குப் பொருட் குறிப்பு எழுதியுதவிய உயர்திரு. இராவ்பகதூர், தணிகைமணி, வ. சு. செங்கல்வராயபிள்ளை, எம்.ஏ., அவர்கட்கு எம் நன்றி யுரித்தாகும். இப் பிள்ளைத்தமிழ் நூலைத் தமிழ் உலகம் கற்றுணர்ந்து பயனடையவேண்டும் என்று விரும்புகிருேம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

இஃது, இலஞ்சியில் திருக்கோவில் கொண்டிருக்கும் குமார சுவாமிமீது பாடப்பெற்ற பிள்ளைத்தமிழ். இதனைப் பாடியவர் தென்காசியை அடுத்த செங்கோட்டையில் வாழ்ந்துவந்த மகா வித்துவான், கனம் கவிராச பண்டாரத்தையா அவர்கள். இலஞ்சி நகர், திருநெல்வேலி மாவட்டம், தென்காசி வட்டம், திருக் குற்றாலத்தை அடுத்து உள்ளது.

பிள்ளைத்தமிழ் என்பது தமிழ்மொழியிலுள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. பிள்ளைத்தமிழ் ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இரு வகைப்படும். அவற்றுள் ஆண்பாற் பிள்ளைத்தமிழில் காப்பும், செங்கீரையும், தாலும், சப்பாணியும், முத்தமும், வருக என்றலும், அம்புலியும், சிற்றிலும், சிறுபறையும், சிறுதேரும், அறிஞர் தெளிந்த மற்றவையும் சுற்றத்தளவாக வைத்துப் பாடுதல் வேண்டும் என்று தெய்வத்தன்மையினை உடையவர்களாகிய நன்மையினைக்கொண்ட புலவர்கள் கூறினார்கள்.

காப்பாவது பாட்டுடைத் தலைவனை, திருமால் முதலிய தெய்வங்கள் காக்குமாறு வேண்டிக்கொள்ளுதல். செங்கீரைப்பருவமாவது பிள்ளை ஒருகால் முடக்கி இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலைநிமிர்த்து முகம் அசைத்தாடும் நிலை. தாலப்பருவமாவது பிள்ளையைத் தொட்டிலிற் கிடத்தி மாதர் நாவசைத்துப் பாடும் நிலை. சப்பாணிப்பருவமாவது பிள்ளை கையுடனே கை சேர்த்துக் கொட்டும் நிலை முத்தப்பருவமாவது பிள்ளையினது வாய் முத்தத்தை விரும்பிக்கூறும் நிலை. வருகைப்பருவமாவது பிள்ளையை நடந்து வருக என்று அழைக்கும் நிலை. அம்புலிப்பருவமாவது பாட்டுடைப் பிள்ளையுடன் விளையாட வரும்படி பெண்டிர் அப் பிள்ளையை ஒக்கலையில் இருத்திவைத்துக்கொண்டு அம்புலியை (சந்திரனை), சாம, பேத, தான, தண்டங்களால்

கூறி அழைக்கும் நிலை. சிறுபறைப்பருவமாவது பாட்டுடைப் பிள்ளையைச் சிறுபறை கொட்டும்படி வேண்டும் நிலை. சிற்றிற்பருவமாவது சிற்றில் இழைக்கும் சிறுமியர்தம் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம் என்று பாட்டுடைக் குழவியை வேண்டும் நிலை சிறுதேர்ப்பருவமாவது பாட்டுடைப் பிள்ளையைச் சிறுதேர் உருட்டும்படி வேண்டும் நிலை.

பெண்பாற் பிள்ளைத்தமிழ் ஆயின், இறுதி மூன்று பருவங்களுக்கு ஈடாக அம்மானை, நீராடல், ஊசல் என்ற மூன்றும் சொல்லப்படும். அம்மானைப்பருவமாவது பாட்டுடைப் பெண்பிள்ளை பலநிற அம்மனையை எடுத்து, மாறி மாறி எறிந்து ஆடுதலைக் கூறும் நிலை. நீராடற்பருவமாவது தலைவி புதிய வெள்ளநீர் ஆடுதலைக் கூறும் நிலை. ஊசற்பருவமாவது தலைவி பொன் மணிகளால் செய்யப்பட்ட ஊசலில் இருந்து மகிழ்ந்து விளையாடலைக் கூறும் நிலை.

இப் பருவங்களுள், காப்புப் பருவம், பிள்ளை பிறந்த மூன்றும் திங்கள்வரை கூறப்படும். ஏனைய ஒன்பது பருவங்களும் அம் மூன்றும் திங்கள் தொடங்கி, ரு, எ, க, கக, கூ, கரு, கஎ, கக, உக-இவ் ஒற்றை எண் கொண்ட திங்கள்களில் முறையே கூறப் படுவன என்றும், மூன்று, ஐந்து, ஏழு, ஆண்டுவரையும், சொல்லுதலும் கொள்வர் என்றும் பன்னிரு பாட்டியலிற் கூறுவர். இவற்றுள் பன்னிரு பாட்டியலிலே ஆண்பாற்குப் பதினாறு வயதுவரையும், பெண்பாற்குப் பூப்பு நிகழும் அளவும் பிள்ளைப் பருவம் கொள்ளலும் உண்டு என்று சொல்லப்படுகிறது. பிங்கலந்தையில் அடியில் வரும் சூத்திரத்தால் இதனைக் கண்டுகொள்க;

"பிள்ளைப் பாட்டுத் தெள்ளிதின் கிளப்பின்,
திங்கள் இரண்டில் தெய்வம் காக்கென,
இன்தமிழ்ப் புலவர் இயம்பிய காப்பும்,
ஐந்தாம் திங்களில் செங்கீரை ஆடலும்,
ஆரும் திங்களில் கூறுதல் கற்றலோடு,
ஏழாம் திங்களின் இன்னமு தூட்டலும்,

எட்டாம் திங்களின் இயல்தா லாட்டலும்,
ஒன்பதாம் திங்களில் உயர்சப் பாணியும்,
பத்தினோடு ஒன்றில் முத்தம் கூறலும்,
ஆண்டுவரையின் ஈண்டுவரு கென்றலும்,
மதியீரொன்பதில் மதியை அழைத்தலும்,
இரண்டாம் ஆண்டில் சிறுபறை கொட்டலும்,
மூன்றும் ஆண்டில் சிற்றில் சிதைத்தலும்,
நான்காம் ஆண்டில் சிறுதேர் உருட்டலும்,
பத்தில் பூண்அணி பன்னீ ராண்டினில்
கச்சொடு சுரிகை காமுறப் புனைதல்என்று,
இன்னவை பிறவும் ஆகும் அவற்றுள்,
முன்னர் மொழிந்த ஒழிந்தவற் றோடும்,
பெற்ற ஆண்பாற் பிள்ளைப் பாட்டாம்,
முன்னுறக் கிளந்த ஆண்டின் நாள்வரை,
இசைத்த பாடல் இருபாற்கும் உரியதே.''

முன்னூல்களில் இவ்வாறு பருவங்களும், கால அளவு பல வேறுவகையாகக் காணப்படுவன ஆயினும் மேற்கூறிய பத்துப் பருவமே இக்காலத்தால் ஆட்சிக்குக் கொண்டு வரப்பட்டவை.

இப் பிரபந்தம் தாம் வழிபடும் தெய்வங்கள், பெரியோர்கள் என்னும் இருகூட்டத்துள் எவரையேனும் பாடும் இயல்பினதாகும்.

அன்புள்ள,
பு. சி புன்னைவனநாதன்.

புலவரகம், நெல்லை
20—4—1957

சிவமயம்

திருவிலஞ்சி முருகன்

# பிள்ளைத் தமிழ்

---

## காப்பு

முகில்ஒன்று பாற்கடல் மடுப்பது கடுப்பநெடு
மோட்டுப் பணைக்கை நீட்டி
மூவுலகும் ஈன்றஉமை கும்பப் படாமுலை
முகட்டுப் பகட்டில் முட் டித்

துகில்ஒன்றும் உத்தரியம் நனைவுறப் பெருகுபாற்
றள்அருவி வெள்ள மாந்தித்
தோய்ந்துநீந் திக்களித் தாடும்ஒரு கன்றினை
துணைஅடிக் கன்பு செய் வாம்;

பகல்ஒன்று செஞ்சுடர் புறத்திருள்சு ருட்டும்அப்
பான்மைபோல் இருபோழுதும் என்
பல்வகை அகத்திருள்சு ருட்டும்ஒரு ஞானப்ர
பாகரனை மகளிர் கூந்தல்

அகில்ஒன் றிலஞ்சிகமழ் தேன்இலஞ் சிக்குமர
குருபரனை அமரர் வாழ்வை
அள்இலைய வேற்கைப்பி ரானைப் பராவுறும் என்
அதிமதுர கவிதழைகவே.

(அரும்பதவுரை) முகில் - மேகம். மடுப்பது கடுப்ப -- பருகுவதைப்போல. பணைக்கை - பனைபோன்ற கை; உவமைத்-

தொகை. மோடு - உயர்ந்து. படாம் - துகில். பகடு - யானை. கன்றுனை - யானைக்கன்று; பிள்ளையார். துணை - இரண்டு. பான்மை - தன்மை, இயல்பு. அகத்திருள் - மன அறியாமை. ப்ரபாகரன் - சூரியன். அள் இலை - கூரிய இலைவடிவமான. அதிமதுர கவிதை - மிக இனிய பாடல். தழைக - செழித்தோங்குக. வியங்கோள் வினை முற்று.

---

## க. காப்புப்பருவம்

### திருமால் துதி

தேமேவு தமிழும் கடம்பும் தடம்புயத்
திரள்மணிக் குவடு பூத்துச்
சேக்கர்வான் என்னவரும் ஓர்ஆறு திருமுகத்
திங்கள்அம் சிறுகுழவியைக்

கோமேவு செந்தமிழ் இலஞ்சிவே லவனைத்ரி
கூடா சலத்தெம் பிரான்
கோத்தடியர் குலம்எலாம் தழையவரும் அரசிளங்
குமரனை வியந்து காக்கப்

பூமேவும் உந்தியில் பல்புவன பந்தியைப்
பூத்துமுறை காத்து நின்ற
பொருவரிய நீலப்பொ ருப்பைக் கருப்பைப்
புகாதுபுக் கிந்தி ரற்குக்

காமேவும் அரசிருப் புதவுசக் ராயுதக்
கடவுளைக் குடவளைக் கைக்
கண்ணனைத் தண்அம் துழாய்மௌலி யானைமங்
கலவாழ்த் திசைத்தும்அன் றே.

(அ - ரை.) தேமேவு - இனிமைபொருந்திய (தேன்மேவு). தமிழும் கடம்பும் பூத்தலாவது - தமிழ்ப் பாமாலையும் கடப்பம்பூ மாலையும் தோன்றுதல். செக்கர் - சிவப்பு. திங்கள் - மதி. திரிகூடாசலம் - முக்குடுமி மலை; திருக்குற்றாலத்தை அடுத்து விளங்கும் பொதிகைமலைப் பகுதி. கொத்து - தொகுதி, திரள். உந்தி - நாபி. புவனபந்தி - உலக அடுக்கு. பொருப்பு - மலை.

*குடவளைக்கை - திரண்ட சங்கைத் தாங்கிய கை; சங்கு, பாஞ்ச சன்னியம்.* (௬)

## சிவபெருமான் துதி

அரவின்முக மண்டலமும் அமுதமயம் ஒன்றநில
வார்சடைக் கோத்தேறு நீள்பிறைக் கீற்றனை
அமுதபலி தந்தபல முனிவரர் மடந்தையரும்
ஆசைமுற் றிச்சோரும் மாதவக் கூத்தனை
அருவிசோரி கங்கைமது ஒழுகிநுரை பொங்குபுனல்
வார்திரைச் சிற்றுறு சூழ்துறைத் தீர்த்தனை
அகிலபகிர் அண்டமும்ஓர் அடியினில் அளந்தமுகில்
காணுதற் கெட்டாத சோதியைச் சீர்ப்பொலி

பரவைமனை சென்றுகவி பரவசம் இயம்பிவரு
தூதினைச் சொற்றருளும் நீதனைப் பூத்தோளிர்
பணிவரை மடந்தைபெறு குழல்மொழி மடந்தை ஒரு
பாகனைச் சொற்காதி போகனைப் பாக்கியப்
பலமிகுகு றும்பலவின் நிழல்மிகு விளங்குசிவ
லோகனைக் கர்த்தாவை ஏகனைக் கூர்த்தெழு
பழமறைகி டந்தலற வழிஅடியர் தொண்டன்இடு
பாதனைக் குற்றால நாதனைப் போற்றுதும்;

வீரிதிரைமு கந்துநவ மணிவிசிறு செந்திநகர்
மேவுகப் பற்சேரும் ஆழ்கடற் சேர்ப்பனை
மிர்கமதக தம்பதள பரிமள சுகந்தபுய
பாரனைக் கற்பூர பாளிதக் காப்பனை
விகடதட கும்பகட கரடமத குஞ்சர
விநாயகர்க் கற்பமர்வி சாகனைச் சேட்பொலி
வெறிகமழ் குறிஞ்சிமனை வரையுறு மடந்தையால்
விகாரமுற் றச்சாப வேடரில் தோற்றிய

குரிசிலை மணம்புணர்தல் குறமகள் விரும்பும்அநு
கூலனைக் கட்டாரி வேலனைக் கோற்றேடி
குலவுகர சுந்தரிபொன் மனையில்வளர் குஞ்சரி
மணாளனைச் சப்பாணி கூடுகைக் காப்பொலி

குழுறஒரு புண்டரிகன் மணிமகுட பந்திபுடை
கோபனைக் கற்றோர் குழாம்எழுந் தேற்றிய
கோழிதமிழ் இலஞ்சிநகர் தழையவள ருஞ்சிறு
குமாரனைக் கட்டாண்மை வீரனைக் காக்கவே.

(அ - ரை.) அரவின் - பாம்பின். நிலவு ஆர் - ஒளிபொருந்திய. பிறைக்கீற்றனை - இளமதி அணிந்தவனை. அமுதபலி - சோற்றுப் பிச்சை. ஆசை முற்றி - காதல் நிரம்பி. வார்திரை - நீண்ட அலை. சிற்றாறு - சித்திரா நதி. முகில் - மேக வண்ணனாகிய திருமால். பரவை - திருவாரூரில் சுந்தரமூர்த்தி நாயனாரை மணந்த பொதுமகளிராகிய பரவை நாச்சியார். நீதன் - நியாயம் உடையவன். பனிவரை மடந்தைபெறு - பனிமலையாகிய இமய மலைக்குரிய இமவான் பெற்ற தவமடந்தை உமாதேவியார். குறும்பலவின் நிழல் - தலமரமாகிய குறும்பலா மரத்தின் நிழலில். பழமறை - பழைமையாகிய வேதம்; மறை - பொருள்களை மறைவாகக் கொண்டு இருப்பது; மறை மறுக்கப் பட்டது என்றலும் ஒன்று. போற்றுதும் - வணங்குவோம்.

விசிறு - வீசுகின்ற. சேர்ப்பன் - கடற்கரைத் தலைவன். மிர்கமத கதம்பதள பரிமள சுகந்த புயபாரனை - கத்தூரி வெண் கடம்பு நல்மணமிகு மாலை பொருந்திய தோளை உடையவன். பாளிதம் - சந்தனப் பாற்சோறு. இனி, பாளித கற்பூரம் மீமிசை மொழியுமாம். விகடதட கும்பகட கரடமத குஞ்சர விநாயகர் கற்பமர் - விகடக் கூத்துடைய பெரிய கும்பம்போன்ற மத்தகத்தின் நின்றும் பெருகுகின்ற மதநீர்ச்சுவட்டை உடைய யானை முகத்தை உடைய விநாயக மூர்த்தியின் இடத்தில் அன்பு கொண்டுள்ள, விசாகநாளில் தோன்றியவனாகிய முருகனை. அற்பமர் - அன்புஅமர்: மென்தொடர் வன்தொடர் ஆயிற்று. சேட்பொலி - வெகுதூரம் விளங்குகின்ற. வெறி - மணம்; இனி, வெறியாடலும் ஆம். மடந்தை - வள்ளி நாயகி. விகாரம் - வேறு பாடு. சாபம் - வில். கட்டாரி - குத்துவாள். கோற்றொடி :- அழகிய வளையல்; தொடுக்கப்படுவது தொடி. தொடுத்தல் - பெய்தல். குஞ்சரி :- தெய்வயானை. கைக்காப் பொலி - கையில் அணிந்த காப்பின் சத்தம். புண்டரீகன் - தாமரையான், பிரமன். மணிமகுட பந்திபுடைகோபனை - பிரணவப்பொருள் அறியாத பிரமன் நான்கு தலையிலும் அணிந்த மணி மகுட வரிசைகள் சிதறும்படி குட்டிக் கோபம்கொண்ட குமரனை. குழாம் - கூட்டம். (உ)

## பராசக்தி துதி

வலம்புரிகோள் வீதியினும் வளர்கோ புரத்தினும்
வயங்கும்செழ் நீள்அருவி மணிகாலும் வைப்பினும்
வழங்கும்ஒரு மூவரையும் மகவாய் வளர்த்திய
வளந்தரணி பீடநிலை சோலவே தொழப்புகல்

சூலம்கெழு சுராதிபர்ம குடகோடி துற்றிய
கொழுங்கதிர் நிலாமணிகள் வெயிலாய் எரிக்கவுர்
குறும்பலவின் நீழல்உறை குழல்வாய் மொழிக்கொரு
குழந்தைஅடி யேமுழுதும் வழிபா டியற்றுவாம்

கலங்குகடல் நீர்சொரிய அயிரா வதத்தெழு
கடுங்குலிச தாரணனு மடவாள் குயத்திடை
கலந்தினிது வாழஒரு மயில்வா கனத்தெழு
கடம்பமலர் சேர்புயபன் னிருபார வெற்பனை

இலஞ்சிநகர் வாழ்பவனை எனை ஆளும் அப்பனை
இலங்கிழை நலார்எழுத முடியாத பொற்பனை
இலங்குசுடர் வேலவனை இமையோர்கள் வைப்பைஎன்
இளங்குமர நாயகனை இயல்பாய் வளர்க்கவே.

*(அ - ரை.) வலம்புரி கோள்வீதி - வலம்புரி வடிவமான சங்குவீதி. மணிகாலும் வைப்பு - முத்தைச் சொரியும் இடம். துற்றிய - நெருங்கிய. எரிக்க - எரியைச் செய்ய. குலிசதா ரணன் - வச்சிரப்படை தாங்கும் இந்திரன். புயபன்னிரு பார வெற்பனை - கனத்த தோள்களாகிய பன்னிரண்டு மலைகளுடைய வனை. பொற்பனை - அழகனை. வைப்பை - பொருளை, நிதியை. (க)*

## செண்பக விநாயகர் துதி

ஆனனம் விளங்கிய பனைத்தடக்கைச் சேர்த்தெழு
பாரதப் பெருங்கதை வடித்தெடுத்துக் காட்டிஓர்
ஆயிர நெடுஞ்சிகர புத்தகத் தில்தீட்டி?
அராமுடி அகன்புவி புரக்கும்ஒற்றைக் கோட்டனை

வானவர் பெருந்தகையை வச்சிரக்கைப் பார்த்திபன்
மாமுடி புனைந்தசர ணத்தனைப் பற்றார்க்கோரு
வாலுளை மடங்கலென நிற்கும்வெற்றித் தாக்கனை
மாரிசோரி சேண்பகவ னக்களிற்றைப் போற்றுதும்;

பானல்கம ழுஞ்சரவ ணத்துதித்துக் கார்த்திகை
பால்ஒழுகு கும்பமுலை யைக்குடித் துப்பார்த்தேழு
பார்வையில் இரங்கிஒரு பட்டுடுத் துப்போர்த்த
படாமுலை முகங்களில் எடுத்தணைத் துப்பார்ப்பதி

வானுலவு செங்கண்விடை மத்தர்வைத் துத்தேற்றிடு
வானிகர வந்தசிறு பொற்றளிர்க்கைக் காப்பனை
வாழ்வுறும் இலஞ்சிநகர் வைப்பை எய்ப்பிற்காக்கும்
மனோகர துரந்தர மணிப்போருப்பைக் காக்கவே.

(அ - ரை.) ஆனனம் - முகம். பணைத்தடக்கை - பனை போன்ற பெரிய தும்பிக்கை. நெடுஞ்சிகரப் புத்தகம் - நீண்ட குடுமிகளாகிய புத்தகம். "வாடாத தவவாய்மை முனிராசன் (வியாசன்) மாபாரதஞ் சொன்ன நாள் ஏடாக வடமேரு வெற்பாக எழுத்தாணிதன் கோடாகக் கொண்டெழுதும் பிரான்" என விநாயகர் வில்லிபுத்தூரரால் போற்றப்படுதல் காண்க. அராமுடி - பாம்புமுடி. அகன்புவி - பரந்த உலகம். கோட்டன் - கொம்பன். பார்த்திபன் - அரசன். வால்உளைமடங்கல் - வாலையுடைய பிடரிமயிர் வாய்ந்த சிங்கம். தாக்கன் - உரமுடையவன். பானல் - கருங்குவளை. போர்த்த - மூடிய. மத்தர் - ஊமத்தம் பூவணிந்த அல்லது உன்மத்தர் (பித்தர்) ஆன சிவபெருமான். பொற்றளிர்க்கை - பொன் போல் அழகிய தளிர் போன்ற கை. எய்ப்பிற்காக்கும் - இளைத்துத் துன்புற்ற சமயத்தில் வருந்தாமல் காக்கிற. (௪)

## திருமகள் துதி

வெங்கடாங் கரடக் கடாங்கவிழ்த் தூற்றுமத
வேழங் கடாந் தடக்கை
வெம்பணி பிணித்தசெம் பருதிபொரு வுஞ்செம்பொன்
விம்பகும் பங்க ளாட்டப்

பொங்குபூண் நகுகும்பம் எந்தைபைங் கூந்தல்அம்
பிடிகள்போற் கவரி காலப்
புடைநின்ற முடிபொறுத் தரிவணப் பூந்தவிசு
பொங்தபெண் அரசு காக்க;

கொங்குலாம் செழுமலர் இலஞ்சியிற் சினைவரால்
கொழுமலர் இலஞ்சி யிற்போய்க்
கொண்டல்நுண் துளிகொண் டிரங்குதேன் இலஞ்சியிற்
குமரனைச் சமர்க டந்த

சிங்கமா் முகனைமுதல் இட்டபகை வேர்அறச்
செவ்வேல் வலந்த ரித்துத்
தேவேந் திரற்கா சளித்ததிறல் ஆளியைத்
தேவர்சே னாபதி யையே.

(அ - ரை.) *வெங்கடாம் - கொடிய மதநீர். வேழம் - யானை. செம்பருதி - சிவந்த சூரியன்; விம்பம் - உருவம். நகு - விளங்குகின்ற. பிடிகள் - பெண் யானைகள். அரிவணம் - வண்டுக்கூட்டம். தவிசு - இருக்கை. சமர்கடந்த - போர் வென்ற. கொங்கு - மணம் - தேன். இலஞ்சி - ஏரி, குளம், மதில். முதலிட்ட - முதலாகக்கொண்ட. பகைவேர் அற - பகைவராகிய மரத்தின் வேர்கள் அறும்படி. வலம்தரித்து - வலது கையில் தாங்கி, அல்லது வெற்றிக்கு அறிகுறியாகத் தாங்கி. திறல் ஆளி - வீரமுடையவர். ஆழி எனின் கடல் என்க. சேனாபதி - படைத்தலைவன்.* (௪)

## பிரமதேவன் துதி

திணிகொண்ட முதண்ட மண்டபம் பணிகொண்டு
சீவகோ டிகள்உ யிர்த்துச்
செந்தா மரைப்போலந் தவிசில்வெண் தாமரைத்
தேவியுடன் மேவி ஏவற்

பணிகொண்ட மகவாடல் கண்டனைய விளையாடல்
பார்த்தகம் மகிழ்ந்துபூத் துப்
பல்ஊழி வாழும்ஒரு தொல்பெருஞ் செல்வம்
படைத்தவன் காக்கமன் னே;

மணிகொண்ட கட்செவி நிதம்பக் கதம்பமுலை
வள்ளிபடர் கொழுகொம்ப ராய்
வளர்கின்ற பன்னிரு தடம்புயனை என்இருகண்
மணியைமா ணிக்கமலை யைத்

தணிகொண்ட கொண்டல்நுண் துளியும்வெண்
தாரகையும் நிரைகிடப் பத் [தரளநிரையும்வண்
தண்டலை தழைத்தசுப் பிரமணிய புரவசதி
தருகுமர குருபரனை யே.

(அ - ரை.) திணி - உறுதி. மூதண்டம் - பழையலோகம். வெண்டாமரைத்தேவி - நாமகள். மணிகொண்ட கட்செவி நிதம்பம் - இரத்தினம் பொருந்திய பாம்பின் படம்போன்ற அல்குல். கதம்பம் - மணக்கூட்டு. கொண்டல் - மேகம். வெண் தரள நிரை - வெள்ளிய முத்துவரிசை. வண்தாரகை - வளப்ப மிக்க நட்சத்திரம். தண்டலை - சோலை. (௪)

### நாமகள் துதி

முத்தமிழ் ஒருத்தனுக் கருமறைக் கெட்டாத
மூர்த்திகுற் றேவல் கேட்க
முற்றிலிக் குந்திர முடத்தேன் முகந்துமணி
முடிவேந்தர் முன்றில் எதிர்போக்

தித்திறத் தரியா சனந்தர்அயி ராசபதம்
எய்திஇக மும்பர மும்வாய்ந்
தெம்மனோர் செம்மாந் திருக்கப் பெருங்கல்வி
இறைமைதரும் இறைவிதுணை ஆம்;

சித்தசனன் மைத்துனனை அத்திமுக னுக்கிளைய
சிங்கத்தை வென்சூர் அறச்
செஞ்சேவ லங்கொடி உயர்த்தபைங் கரம்ஒன்று
தேவர்கோ மகன் முடிக்கு

வைத்துமுழு தாண்டதேன் இலஞ்சிநகர் ஆதிபனை
வரைபக எறிந்தவேற் கை
மறவனைத் தழையுமர கதகலா பமயூர
வாகனனை வாழ்விக்க வே.

(அ - ரை.) முன்றில் - முற்றம். அரியாசனம் - சிங்காதனம். செம்மாந்திருக்க - களித்திருக்க. இறைமை - தலைமை. சித்தசன் - மன்மதன். அத்திமுகன் - யானைமுகக் கடவுள். வெம்சூர்அற - கொடிய சூரபத்மன் (ஆணவவீரம்) கெட. வரை-கிரௌஞ்சமலை. பக - பிளவுபட. மறவன் - வீரன் மரகதகலா மயூரவாகனன் - பச்சைநிறம் பொருந்திய தோகையுடைய மயிலை வாகனமாக உடையவன். (எ)

## சத்தமாதர்கள் துதி

பொன்னில் சிறந்திட்ட புலமையில் தலைமையில்
பொய்யாத மெய்உணர்வி னில்
பொற்புண்ட ரீகபத பூசனையில் வாசனை
பொருந்தப் பயிற்றிமுழு தும்

என்னைப் புரந்துகொண் டன்றே தனக்கடிமை
என்றுவிலை ஓலையிட் ட
எம்பிரான் செந்தமிழ் இலஞ்சிப் பிரான்பொருட்
டெழுவரையும் அஞ்சலிப் பாம்;

அன்னத்தில் வருமயிலும் மயிலில்வரு கிள்ளையும்வெள்
ஆனையில் தோன்றுபிடி யும்
ஆனின்வரு மானும்முது கலையில்வரு மானும்புள்
அரசில்வரு கரியகுயி லும்

முன்னுற்ற சிங்கப் பொருப்பில்வரு கால்மாவும்
முதிர்பரவை காற்றின்அணு கல்
முடுகாமல் மாற்றிநின் றேற்றகுழ விப்பருவம்
முழுதும் புரக்கஎன் றே.

(அ - ரை.) புலமை-அறிவுடைமை. மெய் உணர்வு-உண்மை அறிவு. பொற்புண்டரீகபதம் - பொற்றாமரை அடி. விலைஓலை - அடிமைச்சீட்டு. எழுவர் - எழுமாதர்கள். அஞ்சலிப்பாம் - கை கூப்பி வணங்குவோம். (1) அன்னத்தில் வருமயில் - நாமகள்; அபிராமி. (2) மயில்வருகிள்ளை - கௌமாரி. (3) வெள் ஆனையில் தோன்றுபிடி-இந்திராணி. (4) ஆனின்வருமான் - மகேஸ்வரி.

*(5) முதுகலையில் வருமான் - வராகி. (6) புள்ளரசில் வருகரிய குயில் - வைணவி; நாராயணி. (7) சிங்கப்பொருப்பில் வருகால்மா - காளி, சாமுண்டி. பரவை - கடல். முடுகாமல் - விரையாமல். புரக்க - காக்க. (அ)*

**காளி துதி**

பாமிழற்றும் பாணர்எனப் பண்மிழற்றும் சுரும்பு
பந்தியிருந் தந்திநறை பருகுதரைப் பாண்டிக்

கோமகற்குச் சென்னிபயந் தளித்தகுல மகள்தன்
குலமகட்கு மகன்எங்கள் குருபரனைக் காக்கத்

தேமலர்ச்சேண் பகக்காவும் திரிகூடச் சிலம்புஞ்
சினகரமும் நன்னகரும் தென்றல்உலாம் திசையும்

மாமணிச்சங் காவணமும் மன்றும்என்றும் காக்கும்
மங்கையைநம் குற்றால நங்கையைவாழ்த் துதுமே.

*(அ - ரை.) பாமிழற்றும்-பாட்டுக்கள் கூறும். பண்மிழற்றும் -இசைபாடும். சுரும்பு-வண்டு. நறை-தேன். சென்னிபயந் தளித்த - சோழன் பெற்றுக்கொடுத்த. தேமலர் சென்பகக் காவும் - தேன்பொருந்திய மலர்களையுடைய செண்பகமரம் அடர்ந்தசோலை. சிலம்பு - மலை. சினகரம் - கோயில். சங்காவணம் - சங்கவீதி. மன்று - சித்திரசபை. (கூ)*

**முப்பத்துமுக்கோடி தேவர்கள் துதி**

கோச்சைப் புனத்தில் குறிஞ்சிக் கொடிச்சியர்
குழாத்தொ டொருத்தி வளரக்
கொற்றமகள் அன்றிட்ட வாகையும் தும்பையும்
பின்னிக் கிடந்து குலவக்

கச்சைப் பொருந்தனத் திந்திர குமாரத்தி
காதல்மண மாலைசூட் டுங்
கற்பகப் பந்தரில் காப்பேந்தி நின்றவன்
காக்கமழ் இலஞ்சிகாப் பார்;

பச்சைப் பசும்புரவி மான்தேர் மிசைத்தோன்று
பண்ணவர்கள் பன்னிருவ ரும்
பரிமுகக் கடவுளோர் இருவரும் போருவரும்
பசுபதிகள் பதிஞெரு வரும்

இச்சைப் படுந்திறத் தெண்மரும் எனத்தொகுத்
தெண்ணுமுப் பான்மூவ ரும்
இக்கோடி முப்பத்து முக்கோடி என்றதொகை
அமையவரும் இமைய வருமே.

*(அ - ரை.) கொச்சை - இழ்மை. புனம் - காடு. கொடிச்சியர் - குறத்தியர். கொற்றமகள் - காளி. கச்சு - ரவிக்கை; மார்க்கட்டு. பொருந்தனம் - மோதும் கொங்கை. இந்திர குமாரத்தி - இந்திரன் வளர்ப்பு மகளாகிய தெய்வயானை. காக்கமழ் - சேரலை மணக்கின்ற. பச்சைப் பசும்புரவிமான்தேர் - மிக்க பசுமை நிறம் உற்ற குதிரைகள் ஏழும்பூட்டிய ஓர் ஆழித்தேரில். பண்ணவர்கள் பன்னிருவர் - பன்னிரண்டு சூரியர்கள். பரிமுகக் கடவுளோர் இருவர் - அசுவினி தேவர் இருவர். பசுபதிகள் - உருத்திரர்கள். இச்சைப்படுந் திறத்தெண்மரும் - திசை (ஆசை) காவலராகிய இந்திரன் முதலிய எண்மர். இமையவர் - தேவர். (௧0)*

## உ. செங்கீரைப் பருவம்

மேனைப் பிராட்டிதரு பெண்அரசி உள்உவகை
வெள்ளத்தில் ஆட்டுவது போல்
வெள்ளிவரை முன்றில்வாய் பொன்நூபு ரந்தள்ளி
மிளிர்கனைக் காற்கிடத் தி

ஏனைப் பசுங்குங் குமந்திமிர்ந் தீர்ம்புனல்
எடுத்தெடுத் தாட்டிவிரல் சேர்த்
தின்னினிய மஞ்சள்நீர் மும்முறை சுழற்றிவார்த்
திருநிலக் காப்ப ணிந்து

சோனைக் குறுந்திவலை பட்டாடை இட்டுத்
துவர்த்திவெண் நீறுசார்த் திச்
சுடர்மா ளிகைப்புகுந் தேந்துமுலை அமிர்தம்
சுரந்திருந் தூட்டிமட வார்

சேனைக்குள் வைத்துமுத் தாட்டும் பசுங்கிள்ளை
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே.

(அ - ரை.) *செங்கீரைப்பருவம் பிள்ளைக்கவியின் பத்துறுப்புக்களில் இரண்டாவது. அது பிள்ளை இரு கையும் முழந்தாள்களும் ஊன்றித் தலைநிமிர்ந்திட்டாடல். மேனைப்பிராட்டி-பார்ப்பதியை மகளாகப்பெற்ற இமவான் மனைவி. உள் உவகைவெள்ளம் - மனத்தில் பெருகுகின்ற மகிழ்ச்சிப் பெருக்கு. ஆட்டுவது - முழுக்காட்டுதல்; நீராட்டுதல். வெள்ளிவரை - வெண்ணிறம் பொருந்திய கைலைமலை. முன்றில் வாய் - முற்றத்தில்; வாய்: ஏழனுருபு. முன்றில்: இல்முன் என்பதன் இலக்கணப்போலி. நூபுரம் - சிலம்பு, காலணி. திமிர்ந்து - பூசி. ஈர்ம்புனல் - குளிர்ச்சியான நீர். இன்இனிய - மிக இனிய. சுழற்றி - சுற்றி: சுழல் என்றதன் வினைப்பகுதியடியாகப் பிறந்த பிறவினை வினையெச்சம். திலக்காப்பு அணிந்து - தரையில் நீரிட்டு வழித்த குழம்பைப் பொட்டாக அணிந்து. சோனைக்குறுந்திவலை -*

சொரியப்பட்ட சிறு துளி. துவர்த்தி - உலர்த்தி. முலை அமிர்தம்-முலைப்பால். மடவார்சேனை - பெண்கள் கூட்டம். (கக)

தார்ஆடு கிண்கிணிச் செந்தாள் துதைந்தாடு
தமனியத் தொட்டில் ஆடத்
தண்பவள மெல்விரல் அதுக்கிச் சுவைத்தன்னை
தாலாட்டும் இன்னிசை மடுத்
தேர்ஆடு மெய்துவண் டிணைவிழி முகிழ்த்தயர்ந்
தின்துயில் வரத்துயின் றுங்கு
இடைவரு பதத்துணை எழுப்பப் புலந்துவயி
றெக்கிக் குழைத்துவிம் மிப்
போர்ஆடு கன்றெனத் துள்ளிஎழு பொருமல்
பொருதுவந் தேந்திமோந்து
பொற்குழிசி ஊறுபால் வெண்சங்கு வைத்துப்
புகட்டத் தெவுட்டிமேள் ளச்
சீர்ஆடி எதிர்நிலைக் கண்ணாடி நிழலுடன்
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே.

(அ - ரை.) தார்ஆடு கிண்கிணி - பூவரும்பு பொருந்திய கிண் கிணி என்னும் சதங்கை. துதைந்தாடுதல் - உதைத்து நெருங்கியாடுதல். தமனியம் - பொன். தண் பவளமெல்விரல்-குளிர்ந்த பவளம்போன்ற மெல்லிய விரலை. அதுக்கி - வாயில் வைத்துக் கடித்து. இசைமடுத்து-பாடல் கேட்டு. ஏர்-அழகு. இணை விழி முகிழ்த்து-இரண்டு கண்களையும் மூடி. வயிறெக்கி-வயிறு குழியச்செய்து. பொருமல் - விம்முதல். பொற்குழிசி-பொற்கலம். தெவுட்டி - உமிழ்ந்து, வாந்தி எடுத்து. (கஉ)

பொருமல்அறி விக்குங் கடைக்கண் குறுந்துயில்
பொடிக்குமுன் அடுக்க வருவோம்
பொன்மேனி பாயலிற் பூந்தாதும் எந்தாது
புதுநீர் எடுத்தாட் டுவோம்

பகுமுலை அருத்தித் திருத்திவைத் தின்மொழி
பகர்ந்தணைத் துச்சி மோந்து
பசுமஞ்சள் இனியநீர் மும்முறை சுழற்றிஅப்
பால்ஊற்றி வாழி என்போம்

அருமணி நுதற்சுட்டி கட்டிஒரு பொட்டும்இட்
டண்ணல்வெண் நீறும்அணி வோம்
ஆட்டாத சரவணப் பூந்தோட்டி லிற்கிடந்
தாடின படிக்கு வனசத்

திருமுகம் மலர்ந்துகுழை ஆடவிளை ஆடிநீ
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே.

*(அ - ரை.) பொருமல் - பொருமுதல்; வீங்கல். பொடித்தல் - துளித்தல். அடுக்க-நெருங்க. பாயல் - பாய்தல். அருத்தி - உண்பித்து. பசுமஞ்சள் இனிய நீர்; இதனை ஆலத்தி நீர் என்றும் அயினிநீர் என்றும் கூறுப. சுழற்றி - சுற்றி. அண்ணல் - திருவாளன். குழை - காதணி. இச் செய்யுளில் குழந்தையை நீராட்டித் துடைத்து அணிசெய்தலாக உள்ள செயல்கள் குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கது.* (௧௫)

பட்டபுனல் நித்திலம் எனத்திகழும் வட்டவரி
பாசிலைய நெட்டை நெடிய
பச்சைப் பசுந்தாட் கழுத்தளவு நீருட்
பயின்றீன்ற மேல்அ ரும்பு

வட்டம்இடு பானலைப் புறநிறத் திசைமுரலும்
மழலைச் சுரும்பர்வீழ்ந் து
வாய்மடுத் துண்ணக் கபாடம் திறக்கும்ஒரு
வள்ளமாக் கோள்ளை நறவம்

கோட்டுபு செழுங்குங் குமத்தா திறைக்குங்
குறுந்தகட் டல்லி புல்லிக்
கோட்டோ டலர்ந்துகமழ் சேக்கச் சிவந்தபொற்
கோகனக மண்ட பத்தில்

சிட்டர்தொழ வாழும்ஒரு செல்விதிரு மருமகன்
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே.

*(அ - ரை.) சித்திலம் என - முத்துப்போல. பாசிலைய - பச்சை இலையையுடைய. பானல்-குவளை. முரலும்-ஒலிக்கும். சுரும்பர் - வண்டு: சுரும்பு என்பதன் போலி. கபாடம் - கதவு. கொள்ளை-மிகுதி. நறவம் கொட்டுபு - தேனைக்கொட்டி. தகட்டு அல்லிபுல்லி - தகட்டு வடிவினதான அல்லி மலரைத் தழுவி. கோட்டோடு - கொம்பில்., கோகனகம் - தாமரை.* (கஎ)

கங்கா நதிக்குநிகர் கடவுள்நதி களின்அதிக
கவின்மணல் தங்கு கழியில்
கதிர்மணிக் குன்றுபொதி புன்னையங் காவில்மென்
காவியங் கயல்பொரு தலைக்

குங்கால் இலக்கால் கொழிக்குமடை களில்மடைக்
கோவுகண் ணுற்றுவயலில்
குளிர்வயல் மருங்குவெண் முல்லைமல் லிகைவைத்த
கோல்லையில் கொல்யானை வாற்

பைங்காற் பசும்பொற் பொகுட்டுத் தகட்டிதழ்ப்
பங்கேரு கப்பொய்கை யில்
டங்கேரு கச்செல்வி விளையாடு பதிகளில்
பதிநிலா நுதலா ருடன்

செங்கால் அனங்கள்பயில் தென்ஆர்ய நன்னுட
செங்கீரை ஆடி அருளே
தெரிதமிழ் இலஞ்சிநகர் வருகுமர நாயகன்
செங்கீரை ஆடிஅரு ளே.

*(அ - ரை.) கவின்-அழகு. கழி - சங்கமத்துறை-மருங்கு; கடல் நீர்கழிந்து நிற்கும் இடம்: உப்பளம். காவி-நீலோற்பலம். கண்ணுறு - வயலில் நீர் பாயும் பகுதி. பங்கேருகம் - பங்கயம்,*

*தாமரை, சேற்றில் முளைப்பது. பதிசிலா நுதலார்-பரத்தையர், நடனமாதர்.* (க0)

இந்திரன் அங்கி யமன்கோடி யன்புனல்
ஈசன் நெடுங்கா லோன்
எண்தரு சந்திரன் இந்து வனைந்தவன்
மால்அயன் என்போர் தாம்

தந்தம் இடங்கள் புரந்திட வந்த
தபோதனர் சந்தோடர்
சங்கதி யும்சடை யும்கிர மங்களும்
வேதமும் நின்றேத

மந்தரம் என்ற தனங்கள் சுமந்த
மாதர் வளம்பாட
மங்கல சங்கம் முழங்க வலம்புரி
வால்வளை நின்றூத

அந்தர துந்துபி பொங்க இளங்குகன்
ஆடுக செங்கீரை
அண்டர் வணங்க இலஞ்சி உகந்தவன்
ஆடுக செங்கீரை.

(அ - ரை.) *அங்கி-அக்கினி, நெருப்பு. புனல்-வருணன். காலோன் - வாயுபகவான். எண்தரு - மதிக்கப்படும் இந்து-மதி. இந்து வனைந்தவன் - உருத்திரபசுபதி. புரந்திட-காக்க. கிரமங்கள் - ஒழுங்குகள். சங்கதி - தொடர். வால்வளை - வெள்ளிய சங்கு. மந்தரம் - மந்தரமலை. என்ற - போன்ற. அந்தரதுந்துபி - ஆகாய துந்துபி வாத்தியம். அண்டர் - தேவர். உகந்தவன் - விரும்பியவன்.* (கக)

வாழி மடற்பா ளைக்குழல் சரிதர
வார்கெழு பந்தாடும்
மாதர் இளைப்பா றத்தனி வருசிறு
கால்விசி றுங்காவில்

வீழிஇ தழ்க்கா வித்துணை விழிமணி
வேரல் நெடுஞ்சாரல்
வேடர் குலப்பா வைக்கோரு புதுமண
மாலைபு னைந்தாய்நீ

சூழிமு கத்தா னுக்கிளை யவன்உயர்
தோகையர் மன்றாடு
சூலம்எடுத்தா டிப்பலி கோளுமதி
சூடித ரும்பாலன்

ஆழித ரித்தோ னுக்கோரு மருமகன்
ஆடுக செங்கீரை
ஆறுமு கப்பே ரிக்குரு பரன்இனி
தாடுக செங்கீ ரை.

(அ - ரை.) *பாளைக்குழல் - பாளை பின்னியிருப்பதுபோல் பின்னிவிடப்பட்ட கூந்தல். சரிதர - சரிய. வார்கெழு - நீட்சி பொருந்திய. இளைப்பாற - இளைப்புத் தணிய. சிறுகால் - தென்றல். விசிறும் - வீசும். வீழி-கோவைப்பழம். வேரல்-மூங்கில். மணமாலை - மணத்தையுடைய மாலை, திருமணத்தைக் குறிக்கும் மாலை. சூழி - யானை முகபடாம். ஆடி குடி என்பன, விளையாலணையும் பெயர்கள். ஆழிதரித்தோன் - சுதரிசனம் என்னும் சக்கரப்படையைத் தாங்கிய திருமால்.* (கஎ)

மாதளை ஊடே மாவின் நறுங்கனி
வீழ்தர மந்தாரை
வாடியின் ஊடே வாழை நறுங்கனி
வீழ்குலை சென்றேமு

காதமும் மாறு வாசனை தந்திட
மூசு சுரும்பேற
காவிக ளோடே கார்வய லின்புடை
ஓடைப ரந்தோடி

மேதகு பாரா வாரம் வளந்தர
வேர்கவி சம்பீர
வேலியின் ஊடே பால்மணி சங்கினம்
வீசவ ளங்கூடும்

ஆதிபி ரான்ஊர் ஆளும் நெடுந்தகை
ஆடுக செங்கீரை
ஆரண நூலோர் தேடும் இலஞ்சிமன்
ஆடுக செங்கீரை.

(அ - ரை.) மாவின் நறுங்கனி - மாமரத்தின் இனியபழம். வாடி - கொல்லை; தோட்டம். பாராவாரம் - கடல். சம்பீரம் - எலுமிச்சை. நெடுந்தகை - பெருமைக் குணமுடையவன். (௧அ)

உருவப் பிடிநிகர் பருவக் குறமகள்
பந்தா டுங்காலு
டுருகிக் கனமயல் பெருகிக் கருகி
உழன்றே நின்றுய்வோய்

அருணைக் கிரிபுனை தெரியற் பெரியபி
ரபந்தா லங்காரா
அசலக் குறுமுனி பணியப் பணிவிடை
கொண்டா ளுந்தாளா

இருவர்க் கரியவர் பவளச் சடையினர்
மைந்தா ஐந்தூரா
எளியற் கருள்புரி கருணைக் கடலெனும்
எந்தாய் செந்தூரா

திருவிற் பொலிதரு பழனிக் குருபர
செங்கோ செங்கீரை
திமிரப் பரமத படலத் தினகர
செங்கோ செங்கீரை.

(அ - ரை.) உருவப்பிடி - வடிவமைந்த பெண்யானை. உழன்று - வருந்தி. ஆய்வோய் - ஆராய்கின்றவனே. அருணைக் கிரி புனை - அருணகிரிநாதன் சூடிய. தெரியல் - மாலை. பிரபந்தா அலங்காரா - பாடல் நூல்களை அணியாகக் கொண்டவனே. அசலம் - மலையாசலம் ஆகிய பொதிகை மலை. குறுமுனி - குட்டைமுனிவனுன அகத்தியன். தாளா - அடியையுடைய வனே. இருவர் - மால் அயன் என்ற காத்தற் கடவுளும் படைத்தற் கடவுளும் ஆகிய இரண்டுபேர். திமிரப் பரமத படலத் தினகர - அறியாமையாகிய இருளையுடைய புறமதங் களாகிய மறையை வெளிச்சமாக்கும் சூரியனே! (கக)

கும்பக் குறுமுனி வந்தர்ச் சனைபுரி
குன்றே சென்றே ஓர்
குன்றிற் சிறுகோடி ஒன்றிப் படர்கொழு
கொம்பே எங்கோ வே

அம்பொற் றளிர்அடி நம்பித் தொழும்அவர்
அன்பே என்பே றே
அங்கட் புவிமுதல் அண்டத் தளவுள
அஞ்சே செஞ்சே யே

வம்புப் பிறவியி டும்பைக் குதவும்
மருந்தே செந்தே னே
மன்றற் குழல்மொழி முன்றிற் பயில்சிறு
கன்றே வென்றே வேல்

செம்பொற் கையில்அணி செந்திற் கதிபதி
செங்கோ செங்கீ ரை
செஞ்சொற் பழகும்இ லஞ்சிக் குருபர
செங்கோ செங்கீ ரை.

(அ - ரை.) குன்றிற் சிறுகொடி - வள்ளிமலையிற்றோன்றிய இளங்கொடியாகிய வள்ளி. படர்கொழு கொம்பே - படர்ந்து தழைக்கத்தக்க செழித்த கொம்பு போல்வானே. பேறே - பெறப்படும் பெருமானே, பாக்கியமே. வம்பு - புதுமை, வீண். இடும்பை - துன்பம். (உo)

---

## க. தாலப்பருவம்

கடவுட் புலம்போய்க் கற்பகத்தின்
காவோ டிகலி உயரியபைங்
கமஞ்சூற் கமுகின் மிடறுவிண்ட
கற்றைத் துணர்ப்பூ விரிக்கவரி

துடைவைப் புதுப்பூந் தோடைஅழகார்
சுரமா மகளிர் பணிமாறும்
துணைப்பூங் கவரி உடன்பயின்று
சுடர்வெண் தரளம் இடைகலந்த

முடவுப் பிறைநான் கெனமுளைத்த
முனைவாள் மருப்புப் பொருப்புகைத்து
முற்றும் பவனிக் குலிசபதி
மொய்ம்பிற் சிறுகால் முகந்தேறியும்

அடவிப் போதும்பர் சேறிஇலஞ்சிக்
கரசே தாலோ தாலேலோ
ஆறு முகத் தேம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ.

(அ - ரை.) தாலப்பருவம் : இஃது ஏழாந் திங்களில் நிகழ்வதாகக் கூறுவது. இது பிள்ளையைத் தொட்டிலில் இட்டு மகளிர் நாவினுற்பாடும் பாடல்களுடன் தொட்டில் ஆட்டும் பருவம். தால் - நா. கடவுட் புலம் - தேவருலகம். இகலி - மாறுபட்டு. கமஞ்சூல் - கருப்பம் நிறைந்த. மிடறுவிண்ட - கழுத்தில் விரிந்த. கற்றைத் துணர்ப்பூ - தொகுதியான பூங்கொத்து. துடைவை - பூந்தோட்டம். பணிமாறும் - இரட்டும். தரளம் - முத்து. முடவு - வளைந்த. குலிசபதி - வச்சிரப்படை தாங்கும் இந்திரன். அடவிப்பொதும்பர் - காடான சோலை.

(உக)

பொலங்கற் பகத்தின் சினைபூத்த
பொன்னந் துணர்ப்பூந் தாதுபடி
புனிதச் சுரும்பர் முகடுரிஞ்சும்
புயல்காற் றரும்பின் மிசைபூத்த

கலங்கற் பசுந்தேன் உவட்டெழிபூங்
கனியின் சிறப்புக் கடைக்கணித்துக்
கனகா டவிஎன் றுவந்தடுக்கக்
கடுக்கைப் புறவம் தோன்றுதலும்

விலங்கற் கரிதாய்ப் புகுந்தயலே
வேரிப் புதுச்சண் பகச்சோலை
விழையா மருதப் பேட்டளியை
வேட்டங் கணையும் இலஞ்சிவெற்றி

அலங்கற் குடுமி இலங்கிலைவேல்
அரசே தாலோ தாலேலோ
ஆறு முகத்தேம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ.

(அ - ரை.) *சினை - கிளை. தாதுபடி - மகரந்தம் தோய். புனிதம் - தூய்மை. உரிஞ்சும் - தேய்க்கும். கடைக்கணித்து - பார்த்து. கனகாடவி - பொற்காடு. கடுக்கை - கொன்றை. புறவம் - காடு, குறிஞ்சி நிலம். வேரி - மணம். விழையா - விரும்பி: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் செய்து எனத் திரிந்தது. பேட்டளி - பெண்வண்டு. வேட்டு - விரும்பி.*
(உஉ)

கள்ளத் தடங்கண் கடைசியர்கைக்
கருங்காப் பிடறிக் களைபறித்த
கற்றைக் கழுநீர்ப் போதிசரித்துக்
கமுகின் பழுக்காய்க் குலைசிதறி

முள்ளுப் போதிந்த குடக்கனியை
முடத்தேம் பலவ முகந்துடைத்து
மோய்பூந் தேமாங் கனிஉகுத்து
முழுக்காய்க் கதலிக் குலைசாடி

வெள்ளைப் பெடைஓ திமங்கிடந்த
வேலிப் புறத்திற் பழுத்தளவு
மிச்சங் கனிபங் கூடத்துவேடி
வாளைப் பகடு விளையாடும்

அள்ளற் பழனத் தமிழ்இலஞ்சிக்
கரசே தாலோ தாலேலோ
ஆறு முகத்தேம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ.

(அ - ரை.) கடைசியர் - பள்ளியர். கருங்காப்பு - கரும்பொன் காப்பு, பெருங்காப்பு. சரித்து-சாய்ப்பித்து. பழுக்காய்-பாக்கு. குடக்கனி - பலாப்பழம். உகுத்து - சிதறி. சாடி - மோதி, புடைத்து. ஓதிமம் - அன்னம். வாளைப்பகடு - ஆண் வாளைமீன். அள்ளல் - சேறு. பெருமான் - பெருமையை யுடையவன். பெண்பால் - பெருமாட்டி. (உக)

என்பார்ப் பதித்தாய் ஏக்கறநின்
திருக்கார்த் திகைத்தாய் ஒருங்கேவந்
தேந்து முலைப்பால் அமுதூட்டி
இலைப்பாற் கிடத்த மலைப்பின்றி

முன்பா லிலையில் ஒருகோமுந்து
முகில்போற் கிடந்து தனிவளர்ந்த
முளரித் தடங்கண் மாதுலன்போல்
முழங்குஞ் செழுநீர்ச் சரவணத்துப்

பொன்போல் துயின்றாய் துயின்றமணிப்
பூந்தொட் டிலில்யான் தாலாட்டிப்
பொன்னங் குறங்கு தடவவும்கண்
பொருந்தாய் போலும் இருந்தாயால்

அன்பாய்த் தென்பார் புகழ்இலஞ்சிக்
கதிபா தாலோ தாலேலோ
ஆறு முகத்தேம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ.

(அ - ரை.) ஏக்கற-அங்கலாய்த்தலற. திருக்கார்த்திகைத் தாய் - சிறந்த கார்த்திகைப் பெண். ஆலிலையில் ஒரு கொழுந்து முகில்போல் - திருப்பாற் கடலில் ஆலஇலையில் அறிதுயில் கொள்ளும் திருமாலைப்போல். மாதுலன் - தாயுடன் பிறந்தான். குறங்கு - தொடை. கண் பொருந்தாய் - கண் உறக்கங் கொள்ளாய். தென்பார் - தெற்குலகம். (உ௨)

முடக்குங் கருங்கைச் செடித்தாடி
முடைவாய் இடையர் கடைகாலின்
முன்ஊன் றியகோல் மிசைத்துயில
முட்டேஞ் சுவைப்பால் முலைச்சுரபி

மடக்குங் குளகின் நசைக்கயல்போய்
வயற்பூஞ் சாலிக் கதிர்மேய்ந்து
மடற்பூ விரியாப் பசுங்கமுகை
வண்ணக் கரும்பென் றெண்ணிஉண்டு

குடக்கம் பிடறிக் கவைக்குளம்புக்
குறுங்கால் பெயர்த்து நறுங்காஞ்சிக்
குளிர்நீள் ஆற்றின் இளம்புனிற்றுக்
குழக்கன் றூட்டிக் குழல்ஒலிகேட்

டடக்குந் தமரோ டமர்இலஞ்சிக்
கரசே தாலோ தாலேலோ
ஆறு முகத்தேம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ.

(அ - ரை.) முடக்கும் - வளைக்கும். செடி - அற்பம். முடை வாய் - புலால் நாற்றமுற்ற வாய். கடைகால் - பால் கறக்கும் தூங்கிக் குழல். மிசைத்துயில - மேல்தூங்க. குழக்கன்று - இளங்கன்று. நசைக்கு - விருப்பத்தால். வண்ணம் - நிறம், அழகு. கவை - பிளப்பு. தமர் - சுற்றம். (உ[illegible])

வீடற் கரிய பாயலின்மேல்
வெறுப்பாய் முளைக்கும் விழிக்கணையோ
வேற்பூங் கணையாய்க் கோடிப்புருவ
வில்லே கோல்லுங் கொடுஞ்சிலையா

ஊடற் பெரும்பா சறைப்பூசல்
உடற்றுங் கடல்தேள் அமுதனையார்
உருக்குஞ் சமுக வெளிஅகத்தும்
ஊதுங் கருங்கோ கிலக்காளம்

சூடற் கரிய திறல்விருது
சூட்டுந் தடஞ்சோ லையின்புறத்தும்
தோடங்கும் இருள்மா மருள்மாலை
தோன்று முன்னம் தெருத்தோறும்பந்
தாடற் சிலைவேள் பயில் இலஞ்சிக்
கரசே தாலோ தாலேலோ
ஆறு முகத்தேம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ.

*(அ - ரை.) வீடற்கு அரிய - விடமுடியாத. பாயல் - படுக்கை. கொடுஞ்சிலையா - கொடிய வில்லாக. உடற்றும் - வருத்தும். கோகிலக்காளம் - குயில்முழக்கம். ஆடற்சிலை - கொல்லும் திறம் அமைந்த வில். வேள் - மன்மதன் : விருப்பத்தைச் செய்பவன்.* (உக)

இருவிக் குடுமித் திரிகூடத்
திணர்ப்பூஞ் சாரற் புறத்தும்தேன்
இலஞ்சித் திருக்கோ யிலின்அகத்தும்
இருந்த படியே திருந்தோளியாய்
மருவிப் பிரியா வள்ளியுடன்
வடிவேல் செங்கை வலன்ஏந்தி
மயிலின் புறத்துக் கயிலாய
மலைபோல் உயர்ந்த மலைஅகத்தும்
குருவிற் சிறந்த கும்பமுனி
கும்பிட் டிறைஞ்ச நின்றநிலை
கூட்டிப் பணியுந் தண்பொருநைக்
குமரா பாவ நாசம்என்னும்
அருவிக் குடுமித் தடாகபுலத்
தமர்ந்தாய் தாலோ தாலேலோ
ஆறு முகத்தேம் பெருமானே
ஐயா தாலோ தாலேலோ.

*(அ - ரை.) இருவிக்குடுமி - தினைத்தாள்களையுடைய முடி (சிகரம்). கோயில் அகத்தும் - கோயிலுள்ளும். மருவி - தழுவி. வலன் - வலக்கையில்; வெற்றி. குரு - ஆசிரியர். தடாகபுலம் - பொய்கையிடம்.* (உஎ)

இதம்உறும் ஐம்பத் தொருவன் னங்கள்
இலங்கு மணிக்கோவை
எழுதரு முதுமறை நான்கு வடத்தும்
இசைத்த பெரும்ப்ரணவப்

புதுமா ணிக்கத் தொட்டிலின் மானத
பூசைத் தனிஅடியார்
பொய்யா மெய்உணர் வணையா டையின்மிசை
பொன்போல் வளர்கின்றாய் ;

மதுமலர் பூத்த பொலங்கொம் பனையார்
வகைவகை தாலாட்டு
மட்டார் மலர்ப்பூந் தொட்டி லினங்கள்
மழைக்கண் நெடுங்காவித்

ததைமலர் அணையினும் ஒருதுயில் புரிவாய்
தாலோ தாலேலோ
சம்பத் துதவும் இலஞ்சிக் குருபர
தாலோ தாலேலோ.

(அ - ரை) ஐம்பத்தொரு வன்னங்கள் - வடமொழி எழுத்துக்கள் ஐம்பத்தொன்று என்ப. அம், அகா என்ற இரண்டும் சேர்த்தால் ஐம்பத்துமூன்றாம். முது - பழைய. மாணிக்கத் தொட்டில் - இரத்தின ஊஞ்சல். மட்டார்மலர் - தேன் பொருந்திய பூ. மட்டு - மணமுமாம். ததை - நெருங்கு. சம்பத்து - வாழ்வு. (உஅ)

சிங்கம் முழங்குந் தடவரை முடியிற்
செழுமணி கெழுமுல்லைச்
செறிதயிர் கடையும் இடைச்சியர் செங்கைச்
செந்தா மரைமலரில்

பொங்க முழங்கு மணித்தேர் வீதி
புனைகொடி மணிமாடப்
பொன்நகர் மருத வரைப்பு நிறைந்த
புறம்பணை யின்பாலில்

திருவில. பி.—3

வங்கம் முழங்கு கருங்கடல் நெய்தல்
மருங்கின் ஒருங்கேவெண்
மதியமும் அமுதத் திவலையும் மான
மணித்திரள் வீசுவதூர்

சங்கம் முழங்குந் தமிழ்நா டுடையாய்
தாலோ தாலேலோ
சம்பத் துதவும் இலஞ்சிக் குருபர
தாலோ தாலேலோ.

(அ - ரை.) செழுமணிகெழு முல்லை - செழித்த மாணிக்கங்கள் பொருந்திய முல்லைத்திணையிலுள்ள. செறிதயிர் - தோய்தயிர். மருதவரைப்பு - மருதநிலம். புறம்பணை - பணைப் புறம்; வயல்வெளி. வங்கம் - தோணி. நெய்தல்மருங்கின் - நெய்தல் நிலமாகிய கடற்கரைப் பக்கத்தில். மணித்திரள் - இரத்தினக் கூட்டம். ஊர்சங்கம் - நகர்ந்து செல்லும் சங்குகள். (உக)

வங்கக் கடலும் நடுங்கப் பொருதெழு
மாசூர் மாசூர்மா
மங்கப் பொருதனை பைங்கற் பகநிழல்
வானோர் ஏனோரும்

அங்கட் புவனியும் வெங்கட் கொடியவ
ராலே வாடாமே
அன்றிற் பெயரிய குன்றைப் பொருமதி
வீரா போரூரா

எங்கட் குடையவர் திங்கட் சடையினர்
பாலா நூல்ஆய்வோர்
என்றப் பழமறை அன்றைக் குளதமிழ்
ஏழேழ் பாவாணர்

சங்கப் புலமை தருஞ்சோற் புரவல
தாலோ தாலேலோ
சம்பத் துதவும் இலஞ்சிக் குருபர
தாலோ தாலேலோ.

(அ - ரை.) மாசுஊர்மாசூர்மா-குற்றம் பொருந்திய பெரிய சூரபத்மனாகிய மாமரம். வாடாமே - வருந்தாமல். அன்றித்

பெயரிய - அன்றில் என்னும் பொருள்தரும் கிரவுஞ்சப் பெயரை யுடைய. பொரும் அதிவீரா - போர்செய்த சிறந்த வீரனே!. போரூரா - திருப்போரூர் என்னும் ஊரிலுள்ளவனே!. திங்கட்சடையினர் - சந்திரனை அணிந்த சடையையுடையவரான சிவபெருமான். என்று அப்பழமறை அன்றைக்கு உள - என்று அந்தப் பழைமையான வேதம் வடமொழியில் ஏற்பட்டது எனப் படுமோ அன்று முதலே உளதாயிருக்கின்ற. ஏழ்எழ் பாவாணர் - நாற்பத்தொன்பது புலவர்; கடைச்சங்கப் புலவரானவர். சங்கப் புலமைதரும் - சங்கத்திலுள்ள அறிவுடைய சொற்களைக்கொண்ட புரவலனே! (௩0)

இந்திரன் பாவைபெறும் இளையவள்
பாகா ஏகா ஓகாரா
இங்கிதம் பேசு குறமகள்மண
வாளா வேளூர் வேளாளா

உந்தியங் கோகனக முகில்மரு
கோனே கோனே வேலோனே
ஒன்றிரண் டெனஉரை பகரும்என்
நாவாய் ஓவா மீகாமா

மந்தரம் போல்வளர் பனிருபுய
பாரா மாலா கேயூரா
வண்டுகோண் டாடு சுனைமருவு
பிரானூர் வானோர் போரேறே

சந்தனம் தோயுமுலை உமையவள்
பாலா தாலோ தாலேலோ
தண்டையும் காலும் அழகிய
பெருமாள் தாலோ தாலேலோ.

(அ - ரை.) இந்திரன் பாவைபெறும் இளையவள் - தெய்வயானை. இங்கிதம் - நன்மொழி. குறமகள் - குறக்குடியில் வளர்ந்த வள்ளி. வேளூர் - வைத்தீசுரன்கோயில். வேளாள - உதவிபுரிபவ. என் நாவாய் ஓவா - என் நாக்காகிய கப்பலை விட்டு நீங்காத. மீகாமா!- கப்பலோட்டுபவனே!. கேயூரா - மயில்வாகனம் உடையவனே. போர்ஏறே - போர்புரிவதிற் சிங்கம் போன்றவனே! (௩௧)

## ௪. சப்பாணிப்பருவம்

வல்ஏறு பூண்முலைக் குழல்வாய் மொழிக்கவுரி
மழஏ றெனப்பயந் த
வண்டுபடு கவுள்மதக் கரடக் கடாயானை
வட்டம்இட் டுக்கோட்ட நீ

எல்ஏறு சுடர்மணிக் கடகபன் னிருகரம்
இசைந்துசப் பாணிகோட் டில்
இவ்வாறு கோட்டுதும் எனப்பவள வாய்மலர்ந்
தின்அருள் பழுத்துமது ரச்

சொல்ஏறு கடவுட் பழம்பாடல் முறையிடச்
சுடிகைஅர வரசுநெளி யத்
தொந்தம்இடு சூலா யுதக்காளி வெட்குறச்
சுத்ததாண் டவம்நவிற் றிக்

கொல்ஏ றுயர்த்தவன் தமருகம் கொட்டநீ
கொட்டிஅருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணி யே.

(அ - ரை.) சப்பாணிப்பருவம் : இஃது ஒன்பதாவது திங்களில் நிகழ்வது, இது குழவி கையொடு கை பொருந்துமாறு கொட்டும்படி கூறும் பருவம்; பாணி - கை. வல் - சூதாடு கருவி. மழஏறு - இளஞ்சிங்கம். பயந்த - பெற்ற. கவுள் - கன்னம். எல்ஏறு - ஒளிபொருந்திய. கொட்டுதும் - கொட்டுவோம். பவளவாய் மலர்ந்து - பவளம்போற் சிவந்த வாயைத் திறந்து. மதுரச்சொல் - இனியமொழி. கடவுட் பழம்பாடல் - நான்மறை. சுடிகை - உச்சிக்கொண்டை. அரவரசு - ஆதிசேடன். நெளிய - நெளிந்துகொடுக்கும்படி. தொந்தம்இடு - குதித்து நடமிடுகின்ற. வெட்குற - நாணும் படி. நவிற்றி - செய்து. கொல்ஏறு - கொல்லும் வலி படைத்த இடபம். தமருகம் - உடுக்கு. (௧௨)

கடசலதி கொட்டுகைத் தந்தா வளத்துரி
கருங்காள மேகம்வெய்ப் பக்
காய்சினப் புலியின்அதள் வெண்தார காபடலம்
ஒப்பக் கவின்கொழித் துப்

படநிலவு கோட்டும்வெண் ணீற்றொளியும் மெய்யுமதி
பாநுமண் டலநிகர்ப் பப்
பவளச் சடைக்காடு செக்கர்வான் இசையமழை
பைந்தேன் கடுக்கைதூற் ற

விடஅளறு கோட்டும்வெங் காகோ தரப்பணிகள்
மின்ஒளி கவற்றிவீ ச
விண்ணின்ற விண்ஏறு விண்ணவர் வியந்தேத்த
விண்ஏற்றில் அண்ணல்நந் தி

குடமுழவு கோட்டநடம் இட்டவன் திருமதலை
கோட்டிஅருள் சப்பாணி யே
கோழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கோட்டிஅருள் சப்பாணி யே.

(அ - ரை.) கடசலதி - மதநீர்க் கடல். கைத்தந்தாவளம்-கையையுடைய யானை. உரி - தோல். கானமேகம் - கருமேகம். ஏய்ப்ப - ஒக்க. புலியின் அதள் - புலித்தோல். வெண்தாரகாசலம் - வெள்ளிய தாரகைமலை. மதிபாநு - சந்திர சூரியர். செக்கர் வான் - சிவந்தவானம், செவ்வானம். இசைய - நிகர்ப்ப. கடுக்கை - கொன்றைமலர். விடஅளறு - நஞ்சுக்குழம்பு. வெம்காகோதரம் - கொடிய பாம்பு. பணி-படத்தையுடையது; பாம்பு. பணம் - படம். காற்றி - சொரிந்து. கால் என்னும் பகுதியடியாகப் பிறந்த பிறவினை வினைஎச்சம். அண்ணல் - பெருமையிற் சிறந்த. முழவு - மத்தளம். (கக)

தடம்வைத் தடர்ந்தேறு கறைஅடிச் சிறுநடைத்
தந்தா வளப்பிடிக ளும்
தடவுக் குழைச்செவி கழற்கால் முகந்தேறி
தடக்கைக் கடாயானை யும்

சுடர்வைத்த கோன்பிறை நுழைந்தேறு கொண்டலில்
துளைபடா முனைமருப் புத்
துடிஅடிக் கன்றுநின் ஞருடுங் தடாகத்
துறைப்புனல் பரந்து வெள்ளிப்

புடம்வைத்து வார்த்தனைய பொங்குமா கடல்அருவி
பொன்னுமுத் துங்கொழிக் கும்
பூலோக கைலாய கிரியென் றுயர்ந்துமைப்
புயல்முக டுரிஞ்சுபொன் அம்

குடுமித்ரி கூடத் தடஞ்சாரல் வளநாட
கொட்டிஅருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணி யே.

*(அ - ரை.) கறை அடி - உரல்போன்ற கால். தந்தாவளப் பிடிகள் - பெண்யானைகள். கடாயானை - களிறு. துளைபடா - துளைசெய்யப்படாத. மருப்பு - கொம்பு. துடி - உடுக்கை. மைப்புயல் - கருமேகம்.* (௩௫)

மறந்தலை மயங்கர விலங்கிலை வலங்கல்வேல்
வாங்குபு திரித்துமரு வார்
மடியத் துறந்தடியர் பொன்உலகு வாழ்வித்த
வரதாப யங்கள்என் று

சிறந்தமலை யாசலச் செந்தமிழும் அருமறைத்
தெய்வப் பழம்பாட லும்
செந்நா முகந்துபல் நாளும் தவங்கள்புரி
செல்வர்வந் தேத்துவது போல்

நறுந்தளிர்ச் செந்தா மரைக்காடு தைவந்து
நறைவண்டு முரலுவது போல்
நடைபயில் பசும்புரவி புடைபயில் விசும்பிரவி
நான்மூன்று முறையிடுதல் போல்

குறுந்தொடி புலம்புகை சிவந்தொளி ததும்பநீ
கொட்டிஅருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டியருள் சப்பாணி யே.

*(அ - ரை.) மறம் - வீரம். தலைமயங்கு - கலக்கும் இலங்கு. இலை - விளங்குகின்ற இலைவடிவான. வாங்குபு -*

*வாங்கி. மலயாசலம் - பொதிகைமலை. காடு - கூட்டம், தொகுதி. தைவந்து - தடவி: தைவா பகுதி. முரலுவது - ஒலிப்பது. நான்மூன்று - நான்குமூன்று பன்னிரண்டு. விசும் பிரவி - ஆகாயத்தில் இயல்கின்ற சூரியர். குறுந்தொடி - சிறிய தொடி என்னும் அணி. புலம்பு - ஒலிக்கின்ற. (௯)*

வித்துமுளை வைத்துவெண் பார்கோலி ஒருமித்து
வெள்ளிக் குருத்துவிட் டு
வேர்ஊன்றி விற்கூன் நிமிர்ந்தெளிந் தள்இலை
விரித்துக் கருக்குவைத் துப்

பைத்தரை திரண்டுபொதி யாய்க்கமம் சூல்கொண்டு
பச்சைப் பசும்பாம்பு போல்
பருவக் கருக்கொண்டு பச்சென் றிளங்கதிர்
பயந்துபரி போற்கவிழ்ந் து

முத்துவிளை வித்துருமம் ஒத்துவாய்த் தீர்ங்குலை
முதிர்ந்துபொன் போல்விளைந் து
மொய்வரம் பறியாது தெற்றலா டிக்கழனி
முற்றுமுடி வைத்தழைத் துக்

கொத்துமலி செந்நெல்செறி தென்ஆரி நல்நாட
கொட்டிஅருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணி யே.

*(அ - ரை.) அள்இலை - கூரிய இலை. கமம் - நிறைவு. கருக்கொண்டு - கருப்பமுற்று. பரி - குதிரை. வித்துருமம் - பவளம். ஈர்ங்குலை - குளிர்ச்சியான குலை. தென் ஆரி - தெற்கிலுள்ள ஆரியநாடு. (௰)*

மூப்பாண்ட கூடலின் முதற்பாண்டி யன்புதல்வி
மும்முலைக் கன்னி பொன்னின்
முடிசூடி அடிமரபின் முறைநெறித் திசைவென்றி
முன்னிப் படர்ந்தஞான் று

மாப்பாண்ட வாதியர்தம் மரபாண்ட கோண்டல்முதல்
மற்றுள்ள கடவுளர்எ லாம்
வான்ஓங்கு மீனக் கொடிக்குச் சிரம்சாய்ப்ப
வலன்ஏந்து மாலைசூட் டும்

தேப்பாண் டரங்கற்கு முடிசூட்டி என் அம்மை
திருவயிறு வாய்த்தளித் த
திறல்ஓங்கும் உக்கிரப் பெருவழுதி ஆகிஅத்
திருமரபில் வந்துதித் த

கோப்பாண் டியற்கும்ஒரு குலதெய்வம் ஆனவன்
கொட்டிஅருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணி யே.

(அ - ரை.) மூப்பு ஆண்ட - பழமை அல்லது முதுமையை மேற்கொண்ட. கூடல் - மதுரை. மும்முலைக்கன்னி - மூன்று கொங்கைகளுடன் மலையத்துவச பாண்டியன் மகளாகத் தோன்றிய தடாதகைப் பிராட்டியாரென்ற அங்கயற்கண்ணி. திசை வென்றி - திக்குவிசயம். படர்ந்த ஞான்று - சென்றபொழுது. மா பாண்டவ ஆதியர் தம்மரபு - பெரிய பாண்டவர்கள் முதலியவர்கள் பிறந்த சந்திரகுலம். வலன் ஏந்துமாலை - வெற்றிக்குறியான மாலை. தே - தெய்வத்தன்மை. பாண்டரங்கற்கு - பாண்டரங்கம் என்னும் கூத்தாடும் சிவபெருமானை சோமசுந்தரபாண்டியனுக்கு. திருவயிறு வாய்த்து - கருப்பமடைந்து. திறல் - வெற்றி, வீரம். கோப்பாண்டியற்கு - பாண்டிய மன்னனுக்கு. (௩௭)

வீண்போறை கிடந்தஎன் மனப்பாண் குருக்கத்தை
மெய்ப்பதம் அமைத் தமைபடா
வேதநூற் பகட்டினை உயர்த்தற நுகம்சேர்த்து
வெல்வினைக் கோரைபோக் கித்

தூண்போறை கிடந்திட்ட சஞ்சிதக் குத்தியை
துத்திப் பரிந்துழுது நீர்த்
தூளிபட லஞ்செய்யும் அவுத்திரி கன்புரம்
சூழ்ந்துதவ வேலிகோ லிக்

காண்பொறை நெல்வித்திப் பிராரத் துவப்பெருங்
களைபறித் தாகாமி யக்
கருநோய் வராதருட் புனல்வார்த்து ஞானக்
கரும்புவிளை வித்துநிமி ரா
கோண்பொறை நிமிர்த்தவெண் பிறைமுடிக் குருமதலை
கொட்டிஅருள் சப்பாணி யே
கொழிதமிழ் இலஞ்சிவரு குமரகுரு பரமுருக
கொட்டிஅருள் சப்பாணி யே.

(அ - ரை.) குருக்கம் - வயல். வேதநூற் பகட்டினை - வேதசாத்திரமாகிய எருதை. அறநுகம் - தருமமாகிய நுகத்தடி. சஞ்சிதக் குத்தி - அனுபவியாமல் ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கும் வினைத் தொகுதியாகிய குடுவை. கோலி - அமைத்து. வித்தி - விதைத்து. பிராரத்துவம் - எடுத்த பிறப்பில் நுகர்ந்து வரும் வினை. ஆகாமியம் - எடுத்த பிறப்பிற்செய்த வினைக் கூட்டம். அருட்புனல் - அருளாகிய நீர். கோண் - வளைந்த. பொறை - பாறை. பிறைமுடிக் குரு மதலை - சந்திரனைச் சூடியுள்ள சிவபெருமானுக்குக் குருவாக விளங்கிய குழந்தையே. இதனால் சாமிநாதன் என்ற பெயர் முருகனுக்கு ஏற்பட்டது. மெய்ஞ்ஞானம் இனிமை பயப்பதாகலின் ஞானக்கரும்பு என்றார். (கஅ)

மன்றுதோ றுடல் உவந்தவர் கயிலையும்
மணிமா டக்கந் த
மாதன பூதா மும்பொன் மயில்கள்
மலர்க்கா விற்கார் கள்
துன்றுதோ றுடல் உவந்த பரங்கிரி
மலையும் தோலையா த
சூரலை வாய்விடு சீரலை வாயும்
தொழுதிரு வேரக மும்
நன்றுதோ றுடலும் வந்தருள் செல்வி
நயக்குந் திருஆவி
னன்குடி யும்பழ முதிர்சோ லைப்பழ
நாகமும் ஆகநே டும்

குன்றுதோ றாடலும் வந்தருள் சேவக
கோட்டுக சப்பா ணி
குறுமுனி பரவும் இலஞ்சிக் குருபர
கோட்டுக சப்பா ணி.

(அ - ரை.) மன்றுதொறு ஆடல் உவந்தவர் - அம்பலங்கள் எல்லாம் நடனமிடவிரும்பியவர். பூதரம் - மலை. கார்-மேகம். துன்று - நெருங்கு. சூர்அலைவாய்விடும் - சூரபத்மனை அலைத்தல் செய்யும். சீரலைவாய் - திருச்செந்தில். ஏரகம் - சுவாமி மலை. ஆவினன்குடி - பழனிமலை. பழமுதிர்சோலை - திருமாலிருஞ் சோலைமலையாகிய அழகர்மலை. நாகம் - மலை. குன்றுதொறு ஆடலும் - எல்லாக் குன்றுகளிலும் (பொருந்தி). (௧௩)

உரவு கிடந்த நெடும்புனல் ஆடை
உவந்து கிடந்துடை யாள்
உபய பயோதர மீதுகிடந்த பொன்
உத்தரி கம்போ லப்

பரவு கிடந்த தடங்கிரி அருவிப்
பாங்கர் கிடந்ததி னைப்
பரணி நடந்து பரித்த பசுந்தளை
கட்டிய பட்டுடை நேட்

டரவு கிடந்த அகன்பேர் அல்குல்
அணங்கு கனங்குழை போல்
ஆசை கிடந்த கருங்கட் குவளையின்
அருகே முருகவிழ் பூங்

குரவு கிடந்த தடம்புய பூதர
கொட்டுக சப்பா ணி
குறுமுனி பரவும் இலஞ்சிக் குருபர
கொட்டுக சப்பா ணி.

(அ - ரை.) உரவு - பரப்பு, வலிமை. உபயபயோதர மீது - இரண்டுகொங்கைகள்மேல். உத்தரிகம் - மேலாடை. தினைப்பரண் - தினைப்பயிரைக் காக்க அமைத்த பரண்இடம். அரவுகிடந்த - பாம்பை ஒத்த. முருகு அவிழ் - மணம் விரி

*கின்ற. புய பூதர - தோள்களாகிய மலைகளையுடையவனே!. குறுமுனி - அகத்திய முனிவர். பரவும் - போற்றும்.* (௪0)

அழகு குறவர்தம் மகளிர் திருநுதல்
அப்பிய கத்தூ ரி
அணியும் முலைகளில் இழுகு புழுகுடன்
மணந்த திருப்பா ணி

ஒழுகு நவமணி ஒளிவிடு கடகமும்
உத்தரி கத்தோள் மேல்
உதய கிரிகளில் உலவிய பரிதிகள்
ஒத்த குழைக்கா தும்

மழலை வரிஅணி முரல முகைஅவிழ்
கடப்ப மலர்த்தா ரும்
மரகத கலவநி ருபகுல துரக
வட்டமும் முட்டா த

குழைவும் அழகிய குழல்மொழி குலமணி
கோட்டுக சப்பா ணி
குமர குருபர! சரவண! பவகுக!
கோட்டுக சப்பா ணி.

*(அ - ரை.) நுதல் - நெற்றி. இழுகு - ஒழுகு. புழுகு - புனுகு. பாணி - கை. கடகம் - காப்பு. அளி - வண்டு. முகை - மொட்டு. மரகத கலவ - பச்சை நிறம் பொருந்திய தோகைமயில் வாகன. துரககுலம் - குதிரைக்கூட்டம். குழல்மொழி குலமணி— குழல் மொழியம்மையின் குலத்துக்கு மாணிக்கம் போன்றவனே. 'குழல்வாய்மொழி மங்கை' - திருக்குற்றாலத்துத் தேவி பெயர் (திருக்கோவையார் - 94.)* (௪௧)

———

## ௫. முத்தப்பருவம்

நெகிழா வரிவண் டினமுரலா
நிரலா இருந்து விருந்தருந்தும்
நெய்தற் கருங்கா னலந்துறைவெண்
நிலவுக் குடவால் வளைமுத்தும்

திகழ்ஆர் கலியின் கொழும்பவளச்
செழுங்கா டடர்ந்து படர்ந்தேறித்
தெற்றும் பணைமா மருதவயற்
செங்கட் கரும்பிற் செறிமுத்தும்

இகழாப் புறவத் திழிகான்யாற்
றிறங்கும் இபக்கோட் டிழிமுத்தும்
இலஞ்சிக் குறிஞ்சிக் கிளைமுத்தும்
ஏந்தேம் நின்பால் இரந்தேமால்

முகிழா மலர்ப்பூங் கடம்பாநீ
முத்தம் தருக முத்தமே
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே.

*(அ-ரை.) முத்தப் பருவம்:—இது, பதினோராவது திங்களில் நிகழ்வது. இது பிள்ளையை முத்தமிடும்படி வேண்டிக் கூறும் பருவம். முத்தம் - உதடு, கொஞ்சுதல். நெகிழா முரலா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள் செய்து என்னும் பொருளில் வந்துள்ளன. நெகிழ்ந்து முரன்று என்று பொருள் படும். குடவால்வளை - குடம்போல் வளைந்த ஒள்ளிய சங்கு. ஆர்கலி கடல்; நிறைந்த முழக்கமுடையது. தெற்றும் - அலைக்கும், தடைப்படுத்தும். பணை - வயல். செறி - பொருந்திய. இபக்கோட்டிழி முத்தும் - யானைக் கொம்பினின்றும் ஒழுகும் முத்தும். இரந்தேம் - வேண்டினேம். கடம்பா - கடப்பமாலையணிந்தவனே!* (௪௨)

கடவுட் பொருநைக் கடற்றுறையும்
கன்னித் துறையும் பொன்னிநதிக்
கடலந் துறையும் பொங்குபுனற்
கங்கைத் துறையும் தங்குகழி

தடவுங் குடவால் வளைமுத்தம்
சலாகைப் பருவத் தடைபட்டாம்
சலாபத் திகளாம் சமுதாயத்
தரவாம் போதி தணவாமல்

குடமுட் கனியின் சுளைபிதிர்ந்து
கொழுந்தேன் ஒழுகிச் செழுந்தேமாங்
குவவுக் கனியைச் சுழித்தரம்பைக்
குலத்தைப் பழித்து மணங்கொழிக்கும்

மூடவுப் பலவின் முளைத்தவன்சேய்
முத்தம் தருக முத்தமே.
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே.

*(அ - ரை) கடவுட்பொருநை - தெய்வத்தன்மையமைந்த தண்பொருநை என்னும் தாம்பிரபருணி. கன்னித்துறை - தென் கடல்முனையாக விளங்கும் கன்னியா குமரி. பொன்னி - காவிரி. சலாகை - அகன்மணி. சலாபத்திகள் - முத்துக் குளிப்பவர்கள். தணவாமல் - நீங்காமல். போதி - மலை. முட்கனி - பலாப்பழம். பிதிர்ந்து - சிதறி. தேமா - இனிய மாமரம். அரம்பைக் குலம் - வாழைக் கூட்டம். மூடவு - வளைவு. பலவின் முளைத்தவன் சேய் - திருக்குறும்பலா ஈசன் குமாரனை முருகன். (௪௧)*

சத்தம் இருந்த முதுமறையோன்
தண்அம் கயிலைத் தடம்சாரல்
தடங்கோட் டிடபம் தனைத்தாழ்ந்து
தனக்கென் றன்னம் இரந்திட்டான்

அத்தம் இருந்த சுடர்ஆழிப்
பெருமான் அன்று மாவலிபால்
ஆழிப் புவனம் இரந்திட்டான்
அருமா தவத்துக் கன்னியர்தம்

சித்தம் இரந்தான் எம்பெருமான்
சிறியேம் இரத்தல் பிழையாமே
தெய்வத் தமிழ்தேர் தென்இலஞ்சிச்
சைவக் கொழுந்தே தீங்கனிவாய்

முத்தம் இரந்தேம் நின்பாலாய்
முத்தம் தருக முத்தமே
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே.

(அ - ரை.) *சத்தம் - முழக்கம், ஒலி. தடம்சாரல் - பெரிய மலையடிவாரம். இடபம் - நந்தி. அத்தம் - கை. சுடர் ஆழிப்பெருமான் - விளங்குகின்ற சக்கரத்தையுடைய திருமால். ஆழிப்புவனம் - கடலாற் சூழப்பட்ட பூமி. கன்னியர் - கலியாணமாகாத இளம் பருவப் பெண்டிர். சிறியோம் - சிறியவர்களாகிய நாங்கள். இரத்தல் - வேண்டுதல். தீங்கனி - இனிய பழம். கனி - கண்டு கோவைப் பழம்.* (சச)

தென்னர் இலஞ்சிப் பெருமான்நின்
திருத்தா மரைக்கைக் கோடைக்குடைந்து
செல்லும் செல்லும் திருத்தாதைத்
திருமா மறுகுக் குடைந்தசங்கு

மன்னர் மறைகள் முறையிடுநின்
மலர்த்தாட் குடைந்த கமலமுநின்
மதுரம் துளிக்கும் சிறுகுதலை
மழலைக் குடைந்த வான்கரும்பும்

மின்னிற் குடைநுண் இடைக்குறப்பெண்
வெருவப் புகுந்துன் வேற்குடைந்த
வேழப் பொருப்பும் தருமுத்தம்
விழைந்தால் கிடைக்கும் வேண்டகிலேம்

முன்னர்க் குருமா முனிபணிசேய்
முத்தம் தருக முத்தமே
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே.

(அ - ரை.) *திருத்தாமரைக் கைக்கொடைக்கு உடைந்து - அழகிய செந்தாமரை மலர்போன்ற கைவழங்குங் கொடைக்குத் தோற்று. செல்லும் - மேகமும். மாமறுகு - பெரியதெரு. 'குதலை - மழலை மொழி. வான்கரும்பும்-சிறந்த கரும்பும். மதுரம்-இனிமை.*

மின்னிற்கு உடை - மின்னலுக்குப் பின் வாங்கு. வெருவ - அஞ்சும்படி. வேழப்பொருப்பும் - யானையாகிய மலையும். விழைந்தால் - விரும்பினால். வேண்டகிலேம் - விரும்புகின்றிலம். குருமாமுனி பணிசேய் - குருவாக விளங்குகின்ற சிறந்த அகத்திய முனிவனும் வணங்குகின்ற முருகக்கடவுளே! (௫௭)

செக்கச் சிவந்த செழுங்கமலச்
சிமிழ்வாய் திறந்த திருமுத்தும்
செந்நெற் படப்பை செறியலஞ்சிக்
கன்னற் றிரளில் திரள்முத்தும்

எக்கர்ப் படுகர் இழிகான்யாற்
றிறங்கும் இபக்கோட் டிமிழ்முத்தும்
எங்கோன் இருக்கும் திரிகூடத்
தேலாப் புறத்திற் கிளைமுத்தும்

மைக்குள் குளிக்கும் படிகுளிக்கும்
மலைவாணர் சலா பத்துமுத்தும்
வந்தாற் குறப்பெண் நகைஉறைக்கு
வைத்து மதுரத் துளிதுளும்ப

முக்கட் கனிக்கும் இனிக்குநின்வாய்
முத்தம் தருக முத்தமே
முருகா குமரா முத்தையா
முத்தம் தருக முத்தமே.

(அ - ரை.) செக்கச் சிவந்த - மிகச் சிவந்துள்ள. சிமிழ் - செப்பு. முத்து - முத்துப்போன்ற பல். படப்பை - வயல். கன்னல் திரள் - கரும்புக் கூட்டம். எக்கர்ப் படுகர் - மணல் மேட்டை உடைய மருத நிலத்து அல்லது மணல் மேட்டை உடைய ஆற்றங்கரையை அடுத்த வயல். இபக்கோடு - யானைத் தந்தம். மைக்குள் - மேகத்துள். துளும்ப - ததும்ப. (௫௮)

கழிபிறப்பும் தொலைய நிற்கும்
கவிஞர்சித்தம் பெருகவே
கயிலைவெற்பும் பொதிகைவெற்பும்
கடவுள்வெற்பும் தகையவே

தழுவு பொற்குங் குமமுலைக்கண்
தனிசுவைக்கும் பவளவாய்
தனைமுகக்கும் செவி லிகைக்கும்
தளிர்அடிக்கும் தகையவே

பொழி மதத்தன் புகர்முகத்தன்
புடையில் நிர்த்தம் புரியவே
புனல்முடிக்குங் கடவுள்அப்பன்
புதுநகைக்கும் குமரகவே

குழல்மொழிப்பெண் கயிலிருக்கும்
குழவிமுத்தம் தருகவே
குறுமுனிக்கன் றருள்சுரக்கும்
குமரன் முத்தம் தருகவே.

(அ - ரை.) கழிபிறப்பு - எத்தனையோ பிறப்பு. தகைய - இலைப்படைய. சுவைக்கும் - ருசிபார்க்கும், உண்ணும். யானைக்குக் கன்னமதம், கபோலமதம், பீசமதம் என மூன்று மதங்கள் உண்டாதலின் பொழிமதத்தன் என்றார். புகர்முகத்தன் - புள்ளி உள்ள முகத்தையுடைய யானைமுகக்கடவுள். புடை - பக்கம். நிர்த்தம் புரிய - நடனம் செய்ய. புனல் - கங்கை நீர். நகை - சிரிப்பு. (௪எ)

கழை சுழிக்கும் கயமு கத்தேம்
கடவு ளைக்கண் டடவிசூழ்
கடிபு னத்தன் றேருகு றப்பெண்
கரம்நே ரித்தஞ் சினவளாய்த்

தழைஉ டுத்தங் கயல்வ ரச்சங்
தனம ணக்கும் தனகடாம்
தழுவி முத்தம் தருகெனத்தந்
துருகி நிற்கும் தலைவநீ

பொழிம தச்சென் பகவ னத்தேம்
புனிதன் முத்தும் பொழுதெலாம்
புயவ ரைக்கண் பதிய வைக்கும்
புதும லர்ச்சேஞ் சரணன்நீ

கோழித மிழ்த்தேன் புலிபு ரக்கும்
குரிசில் முத்தம் தருகவே
குறுமு னிக்கன் றருள்சு ரக்குங்
குமரன் முத்தம் தருகவே.

*(அ - ரை.) கழை - கரும்பு. சுழிக்கும் - வளைக்கும். கய முகம் - யானைமுகம். தழை உடுத்து - இலை உடை அணிந்து. புயவரைக் கண் - தோளாகிய மலையில். புனிதன் - தூயன். கோழி - வடி தெளி.* (சஅ)

கன்னலங் காடுதேன் மோய்த்தவெண் முத்தம்
கருப்பாலை புக்கரை படும்
கழனித் தடஞ்சாலி வெண்முத் தெருத்தின்
கவைக்கால் மிதித்துடை படும்
துன்னலஞ் சுடர்முத் திபக்கோட்டில் உண்டது
துரக்குபு மடங்கல் ஏறு
துத்திக் குருத்தொடு பிடுங்கச் சிதர்படும்
துளைகோள்நாள் முளரி முத்தம்
பன்னலங் காட்டினும் பாய்ந்தளறு படுநெடும்
பரவைக் கழிக்கானல் வாய்ப்
பணிலமுத் தெல்லாம் புலால்படுந் தெய்வப்
பதிக்கெலாம் பழையபதி ஆம்
தென்இலஞ் சிப்பதித் தேவசேனுபதி
திருப்பவள முத்தம்அரு ளே
சேணோங்கு மாடத்ரி கூடச் சிலம்பன்
திருப்பவள முத்தம் அருளே.

*(அ - ரை.) கன்னலங்காடு - கரும்புக்காடு. அரைபடும் - அரைக்கப்படும். கழனி - வயல். சாலிவெண்முத்து - நெல்லில் பிறக்கின்ற வெள்ளிய முத்து. எருத்தின் கவைக்கால் - எருதின் பிளவு பட்ட கால். துரக்குபு - துரத்தி. சிதர்படும் - சிதறும். துளை கொள் நாண்முளரி - துளையைக்கொண்ட அன்றலர்ந்த தாமரை. பரவை - கடல். கழிக்கானல் - கழிக் கடற்கரையுள்ள சோலை. பணிலம் - சங்கு. புலால்படும் - புலால் நாற்றம் உண்டாகும். தேவ சேனுபதி - தேவர்கள் படைக்குத்தலைவன். சேண் ஓங்குமாடம் - விண்ணளவு உயர்ந்துள்ள மாடங்கள். திரிகூடச் சிலம்பு - திருக்குற்றாலமலை.* (சகூ)

வானோங்கு முப்புடைப் பைங்காய்க் குலைத்தெங்கின்
மடல்வீழ்ந்து நெற்றுவீழ்ந்து
வாள்அர வுடன்திங்கள் முரிபட்டு வீழ்ந்ததென
மருதமுரு டிடறிமது ரக்

கான்ஓங்கு வெள்ளிமுறி கல்என் றொலித்தலும்
கருவிரல்வெள் உகிர்வளைக் காற்
காய்த்திட்ட செம்பிட்ட நெடியவற் கூன்புறக்
களியுடற் குளிகட் குறும்

பேன்ஓங்கு சிறுநரைப் புன்தலைக் கடுவன்
பிணவீழ்ந்த தென்றுபத றிப்
பேதுற் றிமைத்திமைத் தலமருதல் கண்ணுற்றுப்
பிணவுந் திணங்குபு தழீஇத்

தேன்ஓங்கு மணம்உயர் இலஞ்சிவள நாடன்
திருப்பவள முத்தம்அரு ளே
சேண்ஓங்கு மாடத்ரி கூடச் சிலம்பன்
திருப்பவள முத்தம்அரு ளே.

*(அ - ரை.) முப்புடைப் பைங்காய் - மூன்று பகுதியாகப் புடைத்திருக்கின்ற இளந் தேங்காய். வாள்அரவு - ஒளிபொருந்திய பாம்பு. திங்கள் - சந்திரன். வெள்ளிமுறி - வெள்ளியின் முறி. கருவிரல் வெள் உகிர்வளைக்கால் - கறுத்தவிரலும் வெள்ளிய நகமும் வளைந்த காலும். கடுவன் - ஆண்குரங்கு. நரைபுன்தலை - நரை மயிரை உடைய சிறிய தலை. பிணா-பெண் குரங்கு. பேதுற்று - கலங்கி. அலமருதல் - வருந்துதல். (௧௦)*

கைப்பவள மாணிக்கக் கடகம் சிலம்பு பொற்
காறைகை வங்கி காப்பு
கனககோக் தளஓலை வெண்முத்து மாலிகை
கலந்தொளி நெருங்கிடமருங்

கேய்ப்பவள ருந்தனக் குன்றும் குழற்காடும்
ஏந்திழை நலார் கிளைஞர்
இனியமடல் எழுதுதேன் காசிக்கு முத்தமிழ்
இலஞ்சிப் பதிக்கும்எங் கோன்

வைப்பவள ருஞ்சுபர மணிய புரத்திற்கும்
வளர்ஆறு முகநகர்க் கும்
மருதத் தடஞ்சாலி சூழ்பிரான் ஊருக்கு
மன்னுபோன் உலகம்என் று

செப்பவளம் ஓங்குநன் னகர்க்கும்ஒரு வேந்தன்
திருப்பவள முத்தம் அருளே
சேண்ஓங்கு மாடத்ரி கூடச் சிலம்பன்
திருப்பவள முத்தம்அரு ளே.

(அ - ரை.) கடகம் - காப்பு. சிலம்பு - காலணி. பொற்காறை - கழுத்தில் அணியும் பொன்கம்பி அணி. வங்கி - முழங்கைமேல் அணியும் வளைவணி. கனககொந்தள ஓலை - பொன்னால் ஆகிய மயிர் குளிர்ச்சி ஓலை. மாலிகை - மாலை. மருங்கு எய்ப்ப - இடை தளர. நலார் கிளைஞர் - அழகு சிறந்தவராகிய பெண்கள் உறவினர். மடல் - மடலில் எழுதுதல். கோன் - வேந்தன்: கோ என்ற சொல் னகரச்சாரியை பெற்றது. (௰௧)

## ௬. வாரானைப்பருவம்

கண்டாய் இல்லைப் போலும்இது
கரத்துக் கிசைந்த குறுந்தொடிநின்
காதுக்கிசைந்த மாணிக்கக்
கதிர்ப்பூங் குழைமற் றிதுகாற்காம்

தண்தா ரகைபோல் மணிகிடந்த
சதங்கை வடமற் றிதுநினக்குத்
தரவேண் டாவோ வந்தால்இத்
தனையும் புனையும் தரம்ஆமே

விண்டா ரணங்கள் வழுத்தரிய
விழுத்தாள் இணையும் அருள்பழுத்த
வெண்மூ ரலுமூ விருமுகமும்
விளங்கப் புகுந்தேன் மனக்கோயில்

கோண்டாய் வருக தமிழ்இலஞ்சிக்
குமரப் பெருமான் வருகவே
குடுமிச் சுடர்வேற் படைஉடைய
கோமான் வருக வருகவே.

(அ - ரை.) வாரானைப் பருவம்: இது பதின்மூன்றுவது திங்களில் நிகழ்வது. இது தோழியர்கள் பிள்ளை நடந்து வருதலை விரும்பி அழைக்கும் பருவம். வாரானை - வருகை. ஆனை: தொழிற்பெயர் விகுதி. கரத்துக்கிசைந்த குறுந்தொடி - கைக்குப்பொருத்தமான சிறு வளையல். தண்தாரகை - குளிர்ந்த நட்சத்திரம். இத்தனையும் புனையும் தரம் ஆம் - இவற்றை எல்லாம் அணியும் தகுதி உண்டாம். ஆரணங்கள் - வேதங்கள். விண்டு - வாய்திறந்து. வழுத்தரிய விழுத்தாள் இணை - புகழ்தற்கு முடியாத இரண்டு திருவடிகள். மனக்கோயில் - உள்ளமாகிய கோயில். கோமான் - தலைவன்: மான் ஈற்றுப் பெயர்ச் சொல். (௫௨)

ஆர்க்குங் கனகத் தாள்பந்தத்
தழுத்தும் வயிரச் சுட்டிகிடந்
தசைந்தே இசைந்த மலர்க்கடம்பத்
தலங்கற் குடுமி ஒடுமேலங்கச்

சேர்க்குங் குரல்வாய்ச் சிறுசதங்கை
சில்என் றலம்பப் பொலஞ் சிலம்பு
சிலம்பச் சிலம்பிற் சிங்கத்தின்
சிறுகன் றென்னச் சிற்றடியார்

பார்க்குந் தவம்போல் நடைபழகிப்
பழகு மடவார் தளிர்க்கைவிரல்
பாய்ந்து பிடித்து நடந்திளைத்துப்
பனிவேர் வரும்பிச் செவிலிமுகம்

கூர்க்குங் குறிப்பும் குறுநகையும்
குழைவும் அறிந்தேம் வருகவே
குடுமிச் சுடர்வேற் படைஉடைய
கோமான் வருக வருகவே.

(அ - ரை.) *வயிரச்சுட்டி - வைரத்தால் ஆகிய நெற்றிச் சுட்டி. கடம்பத்தலங்கல் - கடப்பமாலை. அலங்க - அசைய. குரல்வாய்ச் சிறுசதங்கை - ஒலியைச் செய்யும் வாயினையுடைய சிறிய சதங்கை யென்னுங் காலணி. சில் என்று அலம்ப - சில் என்று ஒலியைச் செய்ய. பொலம்சிலம்பு - பொன் சிலம்பு. பனிவேர்வு அரும்பி - குளிர்ந்த வேர்வை தோன்றி. செவிலி - வளர்ப்புத்தாய். கூர்க்கும் - நிறையும்.* (௯)

அமளிக் கலவிக் கோடும்போரில்
அவிழ்ந்த குழலும் இடைநெரிந்த
அங்கச் சரியும் செங்குமுத
அதரச் சிவப்பும் கருங்குவளைச்

சமரக் கடைக்கண் சிவப்பும்இடை
சரிந்த உடையும் தளர்நடையும்
தழுவுங் கொழுநர் தடம்புயம்பூ
தரலே பனசந் தனச்சாந்தம்

திமிரத் திமிரத் திமிர்ந்தசெப்பில்
சின்னப் பிறைபோற் கிடந்தநக
சின்னங் களுமாய்த் துயில்எழுந்தார்
செப்பா மொழியைச் சேடியர்க்குக்

குமரிக் கிளிகள் புகழ்இலஞ்சிக்
குமரப் பெருமான் வருகவே
குடுமிச் சுடர்வேற் படையுடைய
கோமான் வருக வருகவே.

(அ - ரை.) அமளி - மெத்தை. கலவி - புணர்ச்சி. குழல் - கூந்தல். அங்கச்சரி - ஒட்டியாணம். செங்குமுத அதரம் - செவ்வாம்பல் போன்ற உதடு. சமரம் - போர். புயம் பூதர லேபன - தோளாகிய மலையில் பூசப்பட்ட வாசனைத் தைலம். திமிர - பூச. செப்பாமொழி - சொல்லாதமொழி. சேடி - தோழி. குமரிக்கிளி - இளங் கிளி. (௪௪)

அடிமை வழிக்கோர் ஆள்எனக்கொண்
டருட்பால் புகட்டி மருட்பிறவி
அறக்கும் படிவந் தெழுத்தறிவித்
தஞ்சா றேழெட் டெனும் பருவத்

துடைமைப் படுத்தி அஞ்செழுத்தும்
உபதே சித்தென் உயிர்க்குயிராய்
உணர்வுக் குணர்வாய்ப் பயின்றறியும்
உருவிற் குருவாய் உடன்கலந்து

மடமை தவிர்த்து வழிபாடு
திருத்தி மழலைத் திறம்திருத்தி
மதுரக் கவிநா வரத்திருத்தி
வலியப் பிடிசோ றமுதருத்திக்

குடுமி திருத்தி எனைவளர்த்த
குருவே வருக வருகவே
குடுமிச் சுடர்வேற் படை உடைய
கோமான் வருக வருகவே.

(அ - ரை.) அடிமை வழிக்கு - தொண்டு செய்யும் வகைக்கு. அருட்பால் - அருளாகியபால். மருட்பிறவி - மயக்கத்தை உடைய பிறப்பு. பருவத்து - காலத்து. அஞ்செழுத்து - ஐந்து எழுத்துக்களாகிய நமசிவாய மந்திரம். உணர்வுக் குணர்வாய் - அறிவுக்கு அறிவு. 'உயிர்க்குயிராய். பயின் றறியும் உருவில் குருவாய் உடன்கலந்து' என்ற அடியில் கடவுள் உயிருடன் ஒன்றாயும், வேறாயும் உடனாயும் இருப்பதன் உண்மை

புலப்படுகின்றது. மடமை தவிர்த்து - அறியாமையை ஒழித்து. மழலைத்திறம் - குதலைமொழி கூறும் தன்மை. மதுரக்கவி - நால்வகைக் கவியுள் ஒன்றாகிய மதுரப் பாடல். வலியபிடி சோறமுதருத்தி - வற்புறுத்துதலாக பிடிசோறாகிய அமுதத்தை உண்பித்து. குடுமி திருத்தி - நல்ல அலங்கரித்து. (௯௦)

புறம்சுற் றியதெண் திரைஆழிப்
புவனப் பரப்பெ லாந்தேரிந்து
பொருள்தேர்ந் தருள்தேர்ந் தவர்க்குதவார்
புதையல் இருக்கும் இடம்தேடி

மறம்சுற் றியவேற் குறுநிலமா
மன்னர் புகுந்து துன்னுவபோன்
வாரிப் பெருங்கா வடிசேர்த்து
வழங்கா நெறிபோம் வழக்கேபோல்

அறம்கற் றறியார் குலவேடர்
அருங்கோட் டடுக்கற் புறத்துவைத்த
ஆய்பூஞ் சிறகர் ஈஇஅகற்றி
அளிதேன் கவர்ந்து கொடுபோதும்

குறிஞ்சிக் கிழவா தமிழ்இலஞ்சிக்
குமரா வருக வருகவே
குடுமிச் சுடர்வேற் படைஉடைய
கோமான் வருக வருகவே.

(அ - ரை.) புறம் - பக்கம். ஆழிப்புவனப் பரப்பு - கடலால் சூழப் பெற்ற புவனமாகிய பரந்த இடம். பொருள் தேர்ந்து அருள் தேர்ந்தவர் - தெளிந்து அவர் அருளை அடைந்த உண்மை உணர்வுடையவர். உதவார் புதையல் - ஈயாத லோபிகள் புதைத்த புதையல் (சேமிப்பு.) மறம் சுற்றிய - வீரம் சூழ்ந்த; பாவம் பற்றிய. துன்னுவபொன் - பொருந்துவன வாகிய பொன்னை. சேர்த்து - கட்டி. வழங்காநெறி - மக்கள் பயிலாத வழி. அருங்கோட்டு அடுக்கற் புறத்து - அரிய உச்சியை உடைய மலைப்பக்கம். ஆய் பூஞ்சிறகர் - வாய்ந்த மென்மையான சிறகுகளை உடைய. ஈஇ - தேனீ. அளிதேன் - குளிர்ந்த தேன். கொடுபோதும் - கொண்டுபோகும். குறிஞ்சிக் கிழவா - குறிஞ்சித் தலைவனே. (௯௧)

அப்பன் வருக எனைஆண்ட
ஐயன் வருக அமர்உலகுக்
கதிபன் வருக கயிலாயத்
தரச குமரன் வருகஎங்கள்

வைப்பன் வருக குழல்மொழித்தாய்
மைந்தன் வருக கலவமயில்
மகிழ்வோ டேறித் தேவர்தொழ
வருவான் வருக அறநெறிக்குத்

துப்பன் வருக மெய்ஞ்ஞானத்
துறைவன் வருக புலம்புகுதும்
தொடியன் வருக மணிச்சுடிகைத்
தோளான் வருக துலங்குமனக்

கோப்பன் வருக மாணிக்கக்
குழையன் வருக வருகவே
குடுமிச் சுடர்வேற் படையுடைய
கோமான் வருக வருகவே.

*(அ-ரை.) ஐயன் - தலைவன், அழகன். வைப்பன் - சேம நிதியாயிருக்கின்றவன். கலவமயில் - தோகையுடைய மயில். துப்பன் - வலிமையுடையவன். மெய்ஞ்ஞானத்துறைவன் - உண்மை ஞானத்து ஒளிர்கின்றவன். சுடிகை - உச்சிக்குடுமி. மனக்கோப்பன் - மனதுக்கு ஒத்தவன் : மனதுக்கு என்பது மனக்கு என விகாரப்பட்டது* (எ)

தேந்துணர் அலங்கல்முடி இமையவர் குழாம்தொழச்
சிங்கா சனத்திருக் கும்
தேவேந் திரன்வரக் குமாரத்தி கணவனைத்
தேடித் திகைத்திருப் பக்

காந்தள்அம் சாரலில் கடிபுனம் காக்குமான்
கண்ணிக்கோர் கண்ணிவைத் துக்
களிறுதரு புணர்வினுல் புணர்தந்து பின்வரும்
களநாடி யுள்மயங் கி

ஏந்திளங் கோங்கைமார் இடைவினவி உடைவினவி
என்போக்கி நின்றுடன் போக்
கிடையீடு கைவந் தரத்தோடு நிறுத்தேயினர்
ஏற்றபடி ஆற்றுவது வைக்

கூந்தல்அம் பிடியுடன் புதுமணக் கோலமும்
கொண்டுவந் தவன்வருக வே
கும்பமுனி தஞ்சம்என நம்புதேன் இலஞ்சிவரு
குமரநா யகன்வருக வே.

(அ - ரை.) தேங்துணர் அலங்கல் - தேன் அமைந்த பூங் கொத்துக்களால் ஆகிய மாலை. இமையவர் குழாம் - தேவர்கள் கூட்டம். வரு - மேம்பட்ட, வரத்தையுடைய. காந்தள் - காந் தட் பூவுடைய. கடிபுனம் - காவற்கொல்லை (தினைப்புனம்.) மான் கண்ணிக்கோர் கண்ணி வைத்து - மான்போன்ற கண்களை யுடைய வள்ளியைக் கவரும்பொருட்டு ஒரு வலையை அமைத்து. புணர்வினால் - புணர்ச்சியினால். களிறுதரு புணர்ச்சியானது களவை வெளிப்படுத்தக் கருவியாகும். தலைவி ஒருநாள் புனத் திற்குச் செல்லுங்கால் ஒரு மதயானை பயிரை அழித்து அவளையும் கையகப்படுத்த நெருங்குங்கால் அரற்றினளாக, ஆங்குத் தோன்றல் ஒருவன் விரைந்துதோன்றி யானையின் கையிற்புகுதா வகை அவளைத் தன் கையால் எடுத்து ஒருபால் அணைத்துக் கொண்டு அவ் யானையைத் தன்கைவேலால் எறிந்து காத்தனன். அங்ஙனம் மெய்யுற்றதனால், அவர்க்கே மணம் நேரக்கருதி வருந்தினாள் என்று கூறிக் குறிப்பால் உணரச்செய்தல். இது பாங்கி அறத்தொடு நிற்றலின்வகை. களம் - இடம். ஆற்று வதுவை - செய்கின்ற கலியாணப்பெண். தஞ்சம் - அடைக்கலம். (௪௮)

ஒத்தசிவ பத்தர்பரி சுத்தர்இத யத்தினின்
றுதயஞ்சேய் பாநுவருக
உத்தேச லட்சண பரிட்சையின் அகப்படா
ஒளியின் ஒளி உருவன் வருக

அத்துவா வைத்துடக் கறநின்று சோதித்
தரங்கைதீர்த் தவன்வருக வந்(து)
அறிவதொரு குறிதன்ன தருளில்அறி வித்தென்னை
ஆட்கொண்ட குரவன் வருக




பத்திவலை யிற்படும் பரமஓதி மம்வருக
பழையவா தனைஅகற் றம்
பரமபர மாதீத பரமுத்தி நல்குவர
பாரிசா தம்வருக நின்

கோத்தடியர் கூட்டத்தில் என்னையும் இருத்திக்
குறித்தபெரு மான்வருக வே
கும்பமுனி தஞ்சம்என நம்புதேன் இலஞ்சிவரு
குமரநா யகன்வரு கவே.

(அ - ரை.) இதயத்தில் - மனத்தில். உதயஞ்செய் பானு - உதிக்கின்ற சூரியன். லட்சண பரீட்சை - இலக்கண சோதனை. ஒளிஉருவன் - சோதிவடிவன். அத்துவா - வழி. தொடக்கு - பற்று. அரந்தை - துன்பம். குரவன் - ஆசிரியன். ஓதிமம் - அன்னம். பழைய வாதனை - பழைய வாசனை, முன் உணர்ச்சி. வரபாரிசாதம் - மேன்மையான பாரிசாதம் போன்றவனே.(௬)

அநிர்வசன மாயப் பெருஞ்சலதி ஆடும்அடி
யேங்கள்உனை அடைய மாட்டேம்
அடிகளும் அனைத்தும்உடை யவனும்உடை
மைப்பொருளும் ஆதலால் அடியரேமும்

தனதுபொரு ளுடைமையில் தீராமை தேறிஒரு
தண்அளி சுரக்க வருக
தற்காக்க வருககை தரவருக வற்றாத
தண்கருணை வெள்ளம் வருக

வனசநிதி வருகவர பாரிசா தம்வருக
வளர்சுரபி வருக சிந்தா
மணிவருக எனதிருகண் மணிவருக என்ஐயன்
வருகஎன் அப்பன் வருக

குனிசிலைப் புருவத் திருந்திழை அருந்தவக்
குழவிஇள மதிவருக வே
கும்பமுனி தஞ்சமெ்என நம்புதேன் இலஞ்சிவரு
குமரநா யகன்வருக வே.

(அ - ரை.) அநிர்வசனம் - வசனத்திற்கு (சொல்லுதற்கு) இயலாத இல்பொருள். சலதி - கடல். உடைமையில் தீராமை - அடியவர் இருக்கிறதன்மையில் நீங்காமை. வனசநிதி - பதுமநிதி. சுரபி - காமதேனு. சிந்தாமணி - எண்ணியவற்றையெல்லாம் கொடுக்கும் மாணிக்கம். ஐயன் - தலைவன். குனிசிலைப்புருவம் - வளைத்த வில்லைப்போன்ற புருவம். குழவி - குழந்தை. (௯௦)

ஏருத உச்சியில் இருக்கும் பசுந்தேனை
இருமுடவன் ஒருதனி கிடந்
தேக்கற்றும் அங்காந்தும் நின்நிலையும் என்நிலையும்
இன்னிலை எனக்கிடந் தேற்
காருத சிந்தா குலப்புன்மை தனையுமே
ஆற்றிஒரு படிதேற்று வித்
தானந்த சலதிநீர் ஆட்டிப் பராஅமுதம்
ஊட்டித்தன் அளவைகாட்டி
மாருத சீவாநு பூதி அருள் சீவானு
பூதிகமும் ஆக மன்னும்
மன்னுபசு கரணமும் சிவகரண மாக்கி அருள்
மறையின் பெரும்பொரு ளையும்
கூருது கூறிஎன் மனப்பெருங் கோயிலில்
குடிகொண் டவன்வருக வே
கும்பமுனி தஞ்சமென நம்புதென் இலஞ்சிவரு
குமரநா யகன்வருக வே.

(அ - ரை.) ஏருதஉச்சி - எவராலும் ஏறமுடியாத உச்சி. இரு முடவன் ஒரு தனி கிடந்து - காலும் கையும் முடமான ஒருவன் துணை ஒருவருமில்லாது தனித்து இருந்து. ஏக்கற்றும் - ஏங்கியும். அங்காந்தும் - வாய் திறந்தும். சிந்தாகுலப்புன்மை - மனவருத்த மாகிய குறைவு. ஒருபடி - ஒருவிதம். ஆனந்த சலதி - இன்பக் கடல். ஊட்டி - உண்பித்து. அனுபூதி - தானே கண்டறிந்ததும் பிறருக்குச் சொல்ல இயலாததுமான அறிவு பசுகரணம் - உயிர்க் கருவி. கூருதுகூறி - சொல்லாமல் சொல்லி, அஃதாவது யோகத்திலிருந்து சின்முத்திரை காண்பித்து. (௯௧)

செங்கையில் இலங்கிய குறுந்தொடி புலம்பஒளிர்
திகழும்வெயில் இருள் பருகவே
செஞ்சரண பங்கய சிலம்பொலி முகந்தடியர்
செனனசா கரம் ஒழியவே

அங்கரை வடங்களொடு கோம்புமணி யுங்குலவ
அருணமே கலைஇசைய வே
அங்கதபு யங்களில்வி ளங்குபனி ரண்டிரவி
அனையவார் குழையசைய வே

கங்குல்பகல் இன்றிமலர் கண்கள்பனி ரண்டும்எழு
கருணைவா ரிதிசெறிய வே
கங்கைமக ளுஞ்சயில மங்கைஅர சுந்தமது
கயல்கள்போல் விழிகுளிர வே

கொங்குகமழ் தென்கயிலை முன்றினில் நடந்துவரு
குழவிவா ரணம்வருக வே
கும்பமுனி தஞ்சம்என நம்புதென்இ லஞ்சிவரு
குமரநா யகன்வருக வே.

(அ - ரை.) புலம்ப - ஒலிக்க. வெயில்-ஒளி; பிரகாசம். செனனசாகரம் - பிறவிக்கடல். அருணமேகலை - சிவந்த மணி மேகலை. அங்கதம் - தோள் அணி. இரவிஅனைய - சூரியனை ஒத்த. வார்குழை - நீண்ட குழையணிகள். கங்குல் - இரவு. கருணைவாரிதி செறிய - அருட்கடல் பொருந்த. சைலமங்கை - பார்ப்பதி. கொங்கு - மணம், தேன். (௬௨)

## ௭. அம்புலிப்பருவம்

எண்இரண் டேந்துகலை வாய்ந்தும்ஒரு கார்த்திகை
இளம்பயோ தரம்உகந் தும்
எம்பிரான் சடிலகோ டீரப் பெருங்கங்கை
ஆற்றிடை வளர்ந்தும்எங் கோன்

திண்நலம் பெருகும்ஒரு கண்ணனைத் தந்தும்இந்
தீவரச் சுனைவியந் தும்
சிகரவரை இடறியும் பூச்சக்கர வாளச்
சிலம்புசுற் றித்திரிந் தும்

விண்நலம் தருமாலை வேலைநின் றேங்கமர்
வேட் கவிகை தந்தும் இவைஓர்
விகடதட மணிமகுட நிரைபழகு சரணார
விந்தனை நிகர்த்தி அந்தோ

அண்ணல்அம் சேவற் பதாகைப் பிரதாபனுடன்
அம்புலீ ஆட வாவே
அந்தண்மரு தஞ்சேறி இலஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே.

(அ - ௭.ர.) அம்புலிப்பருவம்: இது பதினைந்தாந் திங்களில் நிகழ்வது. இது பிள்ளையை மங்கையர்கள் இடுப்பில் வைத்துக்கொண்டு அப் பிள்ளையுடன் சந்திரனை விளையாட வரும்படி, சாம, பேத, தான, தண்டமுறை கூறி அழைக்கும் பருவம். சாமம் - இனியமையாகக் கூறல். பேதம் - ஒவ்வாமை கூறல். பேதம் - வேற்றுமை. தானம் - ஈகை கூறல். தண்டம் - வழக்கினும் ஒழுக்கினும் வழுவினுரை வழியில் நிறுத்தத் தண்டித்தலைக் கூறுதல். எண் இரண்டேந்துகலை - பதினாறு கலை. இளம்பயோதரம் - இளமுலை. சடிலகோடீரம் - பெருஞ்சடை. இந்தீவரம் - கருங்குவளை. பூச்சக்கர வாளச்சிலம்பு - பூமியிலுள்ள சக்கரவாளமலை (மேரு.) விகடம் - கூத்து. சரணாரவிந்தன் - பாதபங்கயன். பதாகை - கொடி. அம்தண் மருதம் செறி - அழகிய குளிர்ந்த மருதநிலம் பொருந்திய. (௬௨)

ஓராயி ரங்கோடி தோட்டுநெட் டோடைமட்
டுமிழ்புண்ட ரீகம்என் றே
உம்பர்கடை யுந்திருப் பாற்கடல் தாழியின்
உருட்டுதேள் அமுதம்என் றே

கார்ஆழி விடம்உண்ட கண்டன் சடாடவி
கட்டுமலர் இண்டைஎன் றே
கற்பகா டவிமகளிர் கத்தூரி தீட்டுகைக்
கண்ணாடி என்றெண்ணி யோ

தாரா கணக்கயலின் இரைதேர் தரப்புக்க
சக்ரவா கப்புள்என் றே
தன்அன்னை தந்தபாற் கிண்ணம்என் றேகொண்டு
தம்மின்கள் தம்மின்கள் என்

றுராயும் மறைமுடிவில் ஆடும்இவன் ஆடுமால்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தம்சேறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே.

(அ - ரை.) தோடு-இதழ். நெட்டோடை-நீண்ட குளம். மட்டு - தேன். புண்டரீகம் - தாமரை. தாழி - பெரும் பாண்டம். கார்ஆழிவிடம் - கடலில் தோன்றிய நஞ்சு. இண்டை - மாலை. தீட்டும் - அணியும். தாரா கணக்கயலின் இரை - நட்சத்திரக் கூட்டங்களின் அமுததாரை. புள்-பறவை. தம்மின்கள் - கொடுங்கள். மறை - வேதம். (௧௪)

தேனும் துவர்த்திடத் தித்திக்கும் மதுரவாய்த்
தெய்வப் பிணைக்கள் கூம்பச்
செம்பொற் படாமுலை ததும்பத் ததும்பச்
செழுந்துணர்ப் பாரி சாதக்

கான்உந்து பூந்தொடை கவின்பெறச் சூட்டிக்
கலந்தணைத் தாங்கிருப் பார்
காதற்ப்ர பாகம்வந் தலைமோத வந்தநின்
காட்சிஒரு காட்சிஅன் றே

மோனம் தரும்பெரிய பரமாநு பூதிஇள
முலைமுகை ததும்ப ஞான
மோய்ம்மணத் தார்சூட்டு முத்திப் பெருந்திரு
மோகம்உறு சரச மான

ஆனந்த வெள்ளம்எனும் ஆறுமுக நாதனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்சேறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே.

(அ-ரை.) தேனும் துவர்த்திட - தேனும் துவர்ப்பாகும்படி. பிணுக்கள் - பெண்கள். பொற்படாம் - பொற்றுயில். கான் - வாசனை. உந்து - வீசுகின்ற. ப்ரபாகம் - பெருக்கம். தார் - மாலை. (௧௦)

வீரம் கிடந்தவாட் சூரபன் மன்ஆதி
மேவார் தமைக்குமைக் கும்
மிக்கான வேள்விகள் அனைத்தினும் தலைமைபெற்
றுன்வித்யா பாண்டித் திய

பாரங் கதப்பட்டம் உள்ளவன் கடவுளர்
பழஞ்சிறை விடுத்திறைவ னை
பட்டா ரகப்பெரும் பட்டணம் கைக்கொள்ளப்
பட்டாபி டேகம்வைத் தான்

வாரம் கிடந்தகுற வள்ளிநா யகிஇட்ட
மட்டவிழ் குராங்தொடைக் கு
மாதரசி சேர்த்திய மடற்பாரி சாதமா
லைக்கும் இடையேம தாணி

ஆரம் கிடந்துலவு பன்னிரு புயாசலனொ
டம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்சேறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே.

(அ-ரை.) மேவார் - பகைவர். குமைக்கும் - அழிக்கும். பட்டாரகப் பெரும்பட்டணம் - அரசர் இருக்கின்ற பெருநகரம். வாரம் - அன்பு. தொடை - மாலை. மதாணி - பதக்கம். புயாசலம் - புய அசலம், தோள்மலை. (௧௧)

நாடகப் புரவிப் பசுந்தேர் உருட்டும்இள
ஞாயிறுத யம்புரிந் து
நாட்கொண்டு படரிய கதிர்க்கெதிர் எறித்தவயி
ரப்பொடி நகைப் பதேய்ப் பப்

பாடகத் துறைமிடற் றுக்கருவி மாக்கள்இசை
பயில்மகதி யாழ்மொழியு டன்
பதினெண் பெரும்பண்ணும் ஏழிசை வடித்திசைப்
பஃறுளைப் பத்திசான் ற

மாடகம் முறுக்கிமணி வார்த்திவவு தைவந்து
வள்உகிர் வடிம்புவரு டி
மகரயாழ் வாசிக்கும் இன்னிசை உடன்பழகி
மழகதிர் எறிக்குமணி வாய்த்

தாடகக் குழைகிடந் தாடுவடி காதனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தம்செறி இ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே.

(அ - ரை.) *நாடகப்புரவி-நடனமாடும் குதிரை. படரிய-படர்ந்த. ஏய்ப்ப - நிகர்ப்ப. பாடகத்துறைமிடற்றுக் கருவி - பாட்டின் பகுதிகளை எல்லாம் எடுத்துரைக்கும் மிடற்றுக் கருவியை உடையவர்கள். மாடகம்-வீணைமுறுக்காணி. திவவு - வீணைவலிக்கட்டு. வள் உகிர்வடிம்பு -கூரிய நகநுனி. மழகதிர்-இளவெயில். ஆடகக்குழை - பொற்குண்டலம். வடிகாது - தொங்குகின்ற காது.* (௬௭)

மேவு துங்க மயூரம் உண்டுநின்
வீர வெம்பகை களைய லாம்
வேரி தங்குதிரி கூடம் உண்டுடு
மீனுடன்தனி தவழ லாம்

பாவி என்றொரு பேரொழிந் துசெய்
பாத கங்களும் ஒழியலாம்
பானலங்கிரி வாவி தங்கிய
பாய்த டம்புனல் படிய லாம்

மூவி ரண்டுச ரோருகங்களின்
மூரல் கண்டுளம் மகிழலாம்
மோனம் ஒன்றுப தேச முன்செயும்
மூல மந்திரம் அறியலாம்
ஆவி னன்குடி மேவு கந்தனோ
டாட அம்புலி வருக வே
ஆழ் இலஞ்சியில் வேளோ டின்றினி
தாட அம்புலி வருகவே.

*(அ - ரை.) துங்கமயூரம் - தூய மயில். களையலாம் - நீக்கலாம். வேரி - தேன். உடுமீன் - நட்சத்திரமீன்; மீன் - மின்னுவது. பானலம் - குவளை. படியலாம் - மூழ்கலாம். மூவிரண்டு சரோருகங்கள் - ஆறுதாமரை மலர்போன்ற முகங்கள். மூரல் - சிரிப்பு. மூலமந்திரம் - பிரணவம். ஆவினன் குடி - பழநி. வேள் - முருகன். (கஅ)*

கோடகப் படஎழும் கோய்உளைப் புரவிக்
கொடிஞ்சித் தடந் தேரின் மேல்
குலவிவலம் வரும்ஒருபன் னிருபரிதி மண்டல
கோடிகம் எழுந்ததே போல்
பாடலைக் குங்கதிர்க் கோமே தகத்திரள்
பதித்துவயி ரந்துறுத் திப்
பத்மரா கக்கோடி கோடான கோடிநிரை
படஅழுத் திக்கோழுங் கால்
மாடேழு சுடர்க்கற்றை வயிடூரி யத்தகடு
வாரித் துவன்றிவிர வும்
மரகதம் அமைத்துரக மணிகள்பதி தந்துபுய
வரைமுகம் மோய்ப்பவலம் வந்
தாடகக் குழைகிடந் தாடும்வடி காதனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்சேறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே.

*(அ - ரை.) கோடகம் - குதிரை, புதுமை. கொய்உளைப் ரவி - கத்தரித்த பிடரிமயிரையுடைய குதிரை. கொடிஞ்சி -*

*தேர்மொட்டு. கோடிகம் - பூந்தட்டு. துறுத்தி - செலுத்தி. துவன்றி - நெருங்கி.* (௬௯)

குறுமுய லகன்பிடித் தாட்டாது தீர்ப்பன்உன்
கொடியகய நோய்தணிப் பன்
கோள்அராப் பகையுமுன் குரவனிலி டந்தநல்
குரவும்இர வுந்தவிர்ப் பன்

செறிபுனற் கடலில் தடந்தேர் மிசைத்தோன்று
சேட்டிளம் பரிதி போலச்
சித்தம் தழைக்குமற் றனையும்ஒரு தன்மையில்
தீராது செல்லவைப் பன்

புறவும்இப் படியுள்ள நன்மைகள் எலாம்தரும்
புன்மைகள் எலாம்தவிர்க் கும்
பொன்அடித் தாமரை அளிக்கும்நலம் ஒன்றன்று
பொந்தவர்க் கேந்திழைந லார்

அறுவர்முலை உண்டபால் மணம்அரு வாயனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்சேறியி லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே.

(அ - ரை.) *முயலகன் பிடித்து - முயல் உள்ளே பற்றி; முயலகன் என்னும் நோய்பற்றி. கயநோய்-எலும்புருக்கிநோய். கோள் அரா - இராகு கேதுக்கள். குரவன் - ஆசிரியன். சேட்டிளம் பரிதி - அழகிய இளஞ்சூரியன். புன்மை - தீமை. அரு - நீங்காத.* (௭0)

செம்புவழி இட்டனைய தீழுடைக் காழ்மந்தி
சென்றேருக் காலும்அறி யாச்
சேண்கிளர் மரம்பயில் அருங்கோட்டின் இடைவைத்த
செந்தேன் இறல்கிழித் து

வம்புவழி சாரலில் இதைப்புனம் காக்குமட
மகள்இருந் தமுதம்உண் ண
வண்ணப் பசுந்தினையின் நன்னிலாக் கொழுங்கதிர்
வானதி கொழித்துமருள் மாக்

கோம்புவழி குத்திப் பதந்தந் திடித்துக்
கொழுந்தேக் கிலேப்படுத் திக்
குழையளவும் வாங்கிக் குழைக்குந் தடச்சிலேக்
குன்றவர் திருத்திவிடு கெட்

டம்புவழி தேன்அருவி பாயுமலே நாடனுடன்
அம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்சேறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே.

(அ - ரை) தீம்ப்பு - மேன்மை. காம்மந்தி - முதிர்ந்த மந்தி. இளர் - விளங்குகின்ற. வம்பு - தேன். மருள்மாக் கொம்புவழி - யானையின் கொம்பால். கெட்டம்பு - நெடிய அம்பு. (௭௧)

பருவரைப் படர்சினைப் பாரிசா தப்போதும்
பரின்நின் றுலாவுகட வுள்
பாகசா தனன்விழி குறுந்துளி உரைத்துழி
பார்த்துநின் றிருவர்அறி யா

ஒருவரைப் பங்கில்உடை யவள்பால் சுரந்தமுலே
உண்டசெங் கனிவாய் மலர்ந்
தோடவிடு தூதுவர் உரைக்குந் திருக்குறிப்
புணராத சூரபட லம்

கருவரை அறுத்துத் திரும்பினேன் எங்கோன்
கடைக்கணிக் குங்குறிப்புக்
கண்டுபணி கேளாத வர்க்கேது தஞ்சம்எதிர்
காணுக் கடைக்கண் சிவங்

தருவரை துளங்கநின் றயில்வேல் எறிந்தவனே
டம்புலீ ஆடவா வே
அந்தண்மரு தஞ்சேறிஇ லஞ்சிவடி வேலனுடன்
அம்புலீ ஆடவா வே.

(அ - ரை) பாகசாதனன் - இந்திரன். இருவர் - மால் அயன். சூரபடலம் கருவரை - சூரன் கூட்டமாகிய கரியமலே. பணிகேளாதவர் - ஆணைப்படி நடவாதவர். காணு-கண்டு. (௭௨)

## ௮. சிற்றிற்பருவம்

மருக்காற் புன்னைப் புதுநிழல்வெண்
மணற்கால் மருங்கு நிலவெறிப்ப
மாடம் சமைத்துக் குடிபுகுந்து
மணிக்கால் இப்பி அடுப்பேற்றிக்

குருக்கால் செம்பொற் சிறுசுளகால்
கொழிக்குந் தளந்தேன் உலைப்பெய்து
குடவால் வளைவெண் குழிசிபொங்கக்
குழற்கால் ஆம்பல் நெருப்பமைத்து

முருக்கால் வெல்ல முடியாவாய்
முகிழ்த்துக் கவிழ்த்துக் கிடந்தூதி
முகம்வேர்த் தனம்நீ குறும்பிழைத்தால்
முற்றும் தராமோ முக்காலும்

திருக்கால் பிடித்துக் கும்பிட்டேம்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(அ-ரை.) *சிற்றிற் பருவம் ஆவது, சிறுமியர் கட்டிய சிறு வீடுகளைச் சிதைத்தல். பதினோராந் திங்களில் நிகழ்வது. மருக்கால் புன்னை - வாசனை பொருந்திய காலையுடைய புன்னை மரம். மருங்கு - பக்கம், அயல். நிலவு எறிப்ப - நிலவொளி வீச. மணிக்கால் இப்பி - மாணிக்கக் கால்களையுடைய சிப்பி. தேன் - தேனை. உலைப் பெய்து - உலையிலூற்றி. முருக்கால் - முருக்கம் பூவினால். முகிழ்த்து - மூடி. திருக்கால் - மாறுபாட்டினால். சிதையேல் - அழியாதிருப்பாய்; எதிர்மறை ஏவல் வினை முற்று.* (௭௬)

அம்பொற் சிறுவீட் டணிகாண
அன்னை வருவாள் பின்னையும்என்
ஆவி அனைய தோழியருண்
டவரும் வருவார் அன்னையரைக்

கும்பிட் டிறைஞ்சித் தோழியரைக்
கூடித் தழுவிக் கொண்டன்னை
கொணர்ந்த வரிசை அத்தனையும்
கைக்கொண் டெமது குலமனையின்

சம்பத் தவர்க்குக் காட்டிஉள்ளம்
தழைக்கும் படிக்கு விருந்தளித்துத்
தமியேங் களுமுண் டினிப்பாயும்
தனையும் சதியேல் சதியேல்உன்

செம்பொன் திருத்தாள் சென்னிவைத்தேம்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) *சிறுவீட்டு அணி - சிற்றிலின் அழகு. ஆவி அனைய - உயிரொத்த. சம்பத்து - வாழ்க்கைப் பொருள், செல்வம். பெரியோரைக் கைகூப்பி வணங்குதலும், ஒத்த நிலையினரைத் தழுவுதலும் வழிபடு முறையென்பது 'அன்னையரைக் கும்பிட்டு இறைஞ்சித் தோழியரைக் கூடித் தழுவிக்கொண்டு' என்ற அடியால் விளங்கும். என்ஐ - என்தந்தை. 'உள்ளம் தழைக்கும்படி - மனம் மகிழும்படி' தமியேங்கள் - தனித்தவர்கள்: தாழ்மையைக் குறிக்குஞ் சொல். தமி - தனி தமிழ் - தனித்தது, ஒப்பற்றது. சதியேல் - அழிவு செய்யாதே. சதி - அழிவு, கேடு. செம்பொன் திருத்தாள் - சிவந்த பொற் சதங்கையணிந்த திருவடிகள். சென்னிவைத்தேம் - தலைமேற் கொண்டேம்.* (௭௪)

கங்கைத் திருத்தாய் திருத்தனமும்
கவுரி குழல்வாய் மொழித்தாய்தன்
கதிர்ப்பூண் முலையும் கார்த்திகைத்தாய்
கனகா சலப்ப யோதரமும்

தங்கக் குடம்போல் மணிக்குடம்போல்
தாளக் குடம்போல் குடியாப்பால்
ததும்பத் ததும்பப் பிதிரோடத்
தாரோ டசையுந் திருஅரைஞாண்

பொங்கச் செறித்த மணிநெகிழ்ந்து
புலம்பப் புலம்பிற் சிறுபண்டி
புலரப் புலர விளையாடல்
புகுந்தாய் பயந்தார் பொறுப்பாரோ

திங்கட் சடையான் கண்மணியே
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) கங்கைத் திருத்தாய் - கங்கையாகிய அழகிய தாய். தனம் - முலை, பயோதரம். தரளம் - முத்து. ததும்ப - வழிய, அரும்ப. பிதிர் - துளி. தார் - மாலை. பண்டிபுலர - வயிறு வாட. பயந்தார் - பெற்றவர்கள். திங்கட் சடையான் கண்மணியே - பிறையைச் சடையிற் சூடிய சிவபெருமான் நெற்றிக் கண்ணில் தோன்றிய மாணிக்கமே. (எ)

முந்திப் பிறந்த இளங்களிற்று
முகத்தெம் பெருமான் கணத்தினுக்கு
முன்னே சிறுதே ருடன்போந்து
முதிரா முகிழ்மென் முலைஎம்பால்

புந்திக் களிப்பால் விளையாடப்
புகுந்து புழுதி யாட்டயராப்
பொன்அம் சிலம்பார் அடிமுடியில்
புனைந்தே மழலைக் கிரங்கிவரம்

தந்திப் பொழுதெம் மறுகடைந்தான்
தளங்கொண் டிளங்கோ மகன்ஈயும்
தண்டைத் திருத்தாள் வணங்கும்எம்பால்
தயவு புரியுந் தன்மைத்தால்

சிந்தித் திடில்அன் றேன்றறியேம்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) முந்திப்பிறந்த - முன்னர்த் தோன்றிய. களிற்று முகத்தெம் பெருமான் - யானை முகத்தையுடைய விநாயகப் பெருமான். புழுதி ஆட்டு அயரா - புழுதியில் விளையாடி. பொன்அம் சிலம்பர் அடி - பொற்சிலம்பை அணிந்த திருவடி (சிலம்பு - சிலம்பர்: போலி. புனைந்தே மழலைக்கு - சூடியவர்களாகிய எங்கள் மழலை மொழிக்கு. மறுகு - வீதி. தளம் - படை. இளங்கோமகன் - இளவரசனாகிய முருகன். நயவு - அருள். (எக)

கச்சு மரம்தான் ஆனாலும்
நட்ட மரம்காண் தோன்றுதோட்டு
நாங்கள் அடிமை நீங்கள்எம்மை
நடத்தும் தலைமைப் பெருமான்காண்

வைச்சு மரம்தண் ணீர்வார்த்து
வளர்ப்போர் குறைக்க நினைப்பாரோ
மற்றோர் குறைவந் துற்றாலும்
மாற்றிப் புரக்க வழக்கன்றோ

கச்சை முனிந்து முகம்கறுத்துக்
கனத்துச் சினத்துக் கடக்களிற்றின்
கதிர்வாள் மருப்பை முனைமடக்கிக்
கதிர்க்குங் கதிர்ப்பூண் முலைக்குறத்தி

செச்சை செறிக்குந் திருமார்பா
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) கச்சுமரம் - விடவிருட்சம். நட்டமரம் - நடப்பட்ட மரம். தொன்றுதொட்டு - ஆதிமுதல். நாங்கள் அடிமை நீங்கள் எம்மை நடத்தும் தலைமைப் பெருமான் - உயிர்களாகிய நாங்கள் என்றும் உமக்கு அடிமையே, தாங்கள் எங்களைக்காக்கும் தலைவரே. இதனால் ஆண்டார் அடிமைத் திறமை சித்தாந்த முடிவென்றுணர்க. குறைக்க - வெட்ட. மாற்றிப் புரக்க - திரும்பக் காக்க. முனிந்து - வெறுத்து '...கச்சை முனிந்து பூண்முலை' என்ற அடியில் தனத்தின் இயல்பு குறிக்கப்படும். கதிர்ப்பூண் - ஒளி அணி. செச்சை - செஞ்சாந்தின் குழம்பு. (எஎ)

வேறு

அறல்பாய்ந் திட்ட மணல்ஊடே
அடியேம் கட்டு சிறுவீடே
குறைதீர்ந் திட்ட பணியோடே
குடிபூந் திட்ட குறைபாடோ
இறைவாங் கச்சம் மதியாய்நீ
இடைபோந் தெற்றி விடலாமோ
திறலோன் சித்ர சபைவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே
செறிதேன் செச்சை மலர்மார்பா
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) அறல் - கருமணல். குடிபூந்திட்ட - குடி புகுந்திட்ட. குறைபாடோ - குறையோ. இறை - வரி. இடைபோந்தெற்றி விடலாமோ - நடுவே வந்து மோதிவிடுதல் ஆகுமா? (௭௮)

வரப்பட் டவர்எண் மரில்நால்வர்
மாற்றம் குறியாக் கோத்தடியார்
மற்றோர் நால்வர் யாங்கள்புது
மழலைத் திறத்தேம் வழிஅடியார்
தரப்பட் டவரா தலினொருத்தர்
தகையார் என்னும் வகைதேறித்
தடந்தேர் மறுகில் விளையாடல்
சமைந்தேம் சமைத்த சிறுவீடு
பொரப்பட் டெழுந்த போர்அவுணர்
புழைமா ளிகையும் சூரபன்மா
பொன்மா ளிகையும் கோடிமதிபூம்
பொலந்தேர் மறுகும் வீரமயேந்
திரப்பட் டணமும் அன்றுகண்டாய்
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) எண்மரில் நால்வர்-எட்டுப் பேரில் நாலுபேர். மாற்றம் - சொல். கொத்தடியார் - கூட்டடியார். வழி அடியார் - வழி வழியடியார். தகையார் - தடைசெய்யார். சமைந்தேம் - ஒருப்பட்டேம். சமைத்த - அமைத்த. புழை - குகை. சூரபத்மனுகிய பகை அவுணன் தங்கும் மாளிகையும் தெருவும் மயேந்திர நகரும் அல்ல என்று சொல்லி, தம் சிறு வீட்டை அழிக்கவேண்டா என்றது குறிக்கத் தக்கது. (எக)

எந்தை இடப்பால் இருந்துலகுக்
கெம்பி ராட்டி அறம்புரக்கும்
இலங்கு கயிலா யப்பொருப்பும்
இளங்கோ மகன்நீ இனிதிருக்கும்

கந்த மாமா தனப்பொருப்பும்
காண்கிற் புரமன் றதனுல் நீ
காலால் அமைத்த பணிஎல்லாம்
கையாற் செய்யக் கடவோம்யாம்

முந்தி இமவான் திருப்புதல்வி
முதல்வி வருஞான் றிருபுடையும்
மோய்பூங் கவரி காளாஞ்சி
முதலாய் ஏந்திப் புகுந்தவழி

சிந்தித் திரங்க வேண்டாவோ
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) எந்தை இடப்பாலிருந்து - எம் தந்தையாகிய சிவபெருமானின் இடப் பாகத்திலிருந்து. பிராட்டி - இறைவி. அறம்புரக்கும் - அறம்வளர்க்கும். கயிலாயப் பொருப்பு - கயிலாயமலை. கந்தமாமா தனப்பொருப்பு-கந்தமாமாதன மலை. காண்கிற்ற புரமன்று - காணுமிடத்து இஃது ஒரு நகரன்று. காலால் அமைத்த பணி எல்லாம் கையாற் செய்குவோம்-நீங்கள் காலால் செய்யும்படி இட்ட பணியை நாங்கள் தலைமேற் கொண்டு கையாற் செய்யும் கடமை உடையவர்கள். முந்தி - முன்னர். இமவான் திருப்புதல்வி முதல்வி - இமயமலை அரசனுகிய இமவான் தவத்தாற்பெற்ற பார்ப்பதி என்னும் தலைவி. வருஞான்று-வரும்பொழுது. புடை-பக்கம். காளாஞ்சி-தாம்பூலத் தட்டு. சிந்தித்து - எண்ணி. (அ0)

வார்க்குன் றிரண்டு சுமந்தோசியு
மருங்குற் கருங்கோ வலர்மகளிர்
மணிநீர் ஆடுஞ் சுனைக்கயல் போய்
மாமன் குறும்பு விளைத்தான்முன்

கூர்க்கும் பலிக்கன் றுழன்றுசென்று
குலமா தவத்துக் கன்னியர்பால்
குறும்பு புரிந்தான் திருத்தாதை
குனிக்குங் கருப்புச் சிலையுடன்சென்

றார்க்குந் திருமைத் துனன்ஒருவன்
ஆசைக் கொழுநர் தமைப்பிரிந்த
அணங்க னார்பாற் குறும்பிழைப்பான்
அல்லும் பகலும் அடிகள்யாம்

சேர்க்கும் சிறுவண் டலிற்குறும்போ
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறுயேஞ் சிற்றில் சிதையேலே.

*(அ - ரை.) வார்க்குன்று இரண்டு - கச்சணிந்த சிறுமலையாகிய தனங்கள் இரண்டு. ஒசியு மருங்குல் - தளரும் இடை. கோவலர் மகளிர் - இடைச்சியர். நீர் ஆடுஞ்சுனைக்கு அயல் போய் - குளிக்கும் குளத்தின் அருகேபோய். மாமன் - உன் மாதுலனாகிய கண்ணன். பலிக்கு - பிச்சைக்கு. திருத்தாதை - உன் அழகிய தந்தை. குலமாதவத்து கன்னியர்பால் - சிறந்த பெருந்தவத்து முனிவர்களுடைய இளம் பெண்களிடத்து. குனிக்கும் கருப்புச்சிலை - வளைக்கும் கரும்புவில். ஆர்க்கும் - முழக்கும். மைத்துனன் - மன்மதன். ஆசை - காதல். கொழுநர் - கணவர், நாயகர். அணங்கனார்பால் - அழகிய பெண்களிடத்து. சேர்க்கும் சிறுவண்டல் - அமைத்துள்ள சிறு மணல்வீடு. இதில் தந்தை, மாமன், மைத்துனன் இவர்கள் செய்த குறும்புத் தொழில் உம்மிடத்தும் வழிவழி அமைந்ததோ என்று கூறியபடி காண்க.* *(௧௧)*

பைஎந் தியபன் மணிஅல்குல்
பட்டத் தரசி மாருடன்நீ
பரிக்கும் தவிசின் பக்கம்நின்று
பணிசெய் கிற்பேம் பூங்கவரி

கைஏந் திற்பேம் காளாஞ்சி
கழற்கால் திருப்பா துகைஎடுப்பேம்
காலம் கருதித் திருஅந்திக்
காப்பும் எடுப்பேம் கருத்தாலும்

பொய்யேம் பிறிதோர் கடவுளரைப்
பொருள்என் றுணரேம் அருள்பழுத்த
பொன்னங் கிரியே உன்இரண்டு
பொற்றாட் பணிக்குங் குற்றேவல்

செய்யேங் கள்எனக் குறியேல்நீ
சிறியேம் சிற்றில் சிதையேலே
தேவே இலஞ்சிச் சினவேலோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) பைஏந்திய - படம் தாங்கிய. பரிக்கும் தவிசின் - தாங்கும் இருப்பிடம். உமக்குப் பணிசெய்வேம் - சாமரை இரட்டுவேம், காளாஞ்சிதாங்குவேம், பாதுகையும் சுமப்பேம், அந்திக் காப்பும் எடுப்பேம், மறந்தும் பிறகடவுளைப் பரம் பொருள் என்று கருதேம். செய்யேங்கள் எனக்குறியேல் - செய்யமாட்டோம் என்று கருதாதிர். (அஉ).

அலம்போந்து பல்பிறவி ஆழியில்தாழ்ந் துள்ளக்
கலம்பாழ் படாதுகரை காட்டுமீ காமா
இலம்பாடு தீர்ந்தொழிய எம்மனோர் ஏத்தும்
சிலம்பார் அடிபுனைந்தேம் சிற்றில் சிதையேலே.

(அ - ரை.) பல பிறவி ஆழியில் - பல பிறப்புக்கடலில். உள்ளக்கலம் - மனமாகிய தோணி. தாழ்ந்து - அழுந்தி. மீகாமா - மரக்கலம் ஓட்டியே. இலம்பாடு - வறுமை. எம்மனோர் - எம்போன்ற அடியார். ஏத்தும் - துதிக்கும். சிலம்பார் அடி - சிலம்பணிந்த திருவடி. (அங)

---

## க. சிறுபறைப்பருவம்

நங்கள்கோண் மூவிரு முகங்களி னுலும்வித்
தேந்திநத் தேந்து வேலை
நளினக் குடங்கையில் அடக்கும்உர வோன்சந்த
னுசல வரைப்பின் வித்தி
எங்கள்பன் னிருகுரவ ருந்தனி வளர்த்திட
எழுத்துமுதல் ஐந்தி யற்பேர்
இயல்முதல் முக்கோடி படர்ந்துதோண் ணூற்ரூறு
இசைப்பனுவல் பூத்துவறிஞர்
தங்களுக் குதவாத பதகர்பாற் காய்தந்து
சாரம் குறித்து நல்கும்
தலைவர்அவர் பாற்கனிந் துணர்ந்தவர்க் கருமருந்
தாகிநாற் பொருள்பயக்கும்
செங்கழக முத்தமிழ் முழங்கும்வள நாடனே
சிறுபறை முழக்கிஅருளே
தென்னிலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கிஅருளே.

*(அ-ரை.) சிறுபறைப் பருவமாவது, சிறுபறையாகிய ஓசைக் கருவிமீது ஒலியிட்டு மகிழ்தல். இது பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வது. நங்கள்-நாங்கள் விரும்புகின்ற ஆறுமுகங்களினுலும். நாங்கள் : நங்கள் எனக்குறுகிற்று. நத்துஏந்து வேலை-சங்கைத் தாங்கும் கடலை. நளினக் குடங்கையில் அடக்கும் உரவோன் - தாமரை மலர் போன்ற உள்ளங்கையில் குடித்து அடக்கிய வலியவன் ஆன அகத்தியன். அசலம் - மலை. வரைப்பின் - நிலத்து. வித்தி - விதைத்து. பன்னிருகுரவர் - அகத்தியர் மாணவராகிய தொல்காப்பியர் முதலியவர்கள். எழுத்து முதல் ஐந்து இயற்பேர் இயலமுதல் முக்கொடி - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணத்தையுடைய பெரிய இயல் இலக்கணம், இசை இலக்கணம், நாடக இலக்கணம் ஆகிய மூன்று கொடிகள். தொண்ணூற்ருறு இசைப்பனுவல் - தொண்ணூற்ருறு இசைப் பிரபந்தங்கள். வறிஞர் - வறுமையுடையோர். உதவாத*

பதகர் - உதவாத பாவிகள். கனிந்துணர்ந்தவர்க்கு - இனிதாய் அறிந்தவர்க்கு. நாற்பொருள்-அறம் பொருளின்பம் வீடு. செங் கழகம் - செம்மையான சங்கம். பன்னிருகை மேகமே - பன்னிரண்டு கைகளையுடைய மேகமே. (அச)

குலைக்காந்தள் அங்கைக் குறுந்தொடி புறங்கொளக்
கொவ்வைமணி வாய்துடிப் பக்
கூர்வேற் கருங்கண் பொருந்திமை சிவப்புறக்
கொடிநெடும் புருவம்நெ றத்

தலைக்காதல் வந்தநாள் எத்தனை விருப்பம்அத்
தனைவெறுப் புந்துலங் கித்
தண்நிலா அமுதொழுகு சந்த்ரமண் டலமுகம்
தபனமண் டலம்நிகர்ப் ப

முலைக்காம்பில் முத்தம் கொடுத்தெரியும் மடநலார்
முதியபுல விப்புலவி யால்
மொய்பா சறைக்களத் தாடவர் அகப்பட்ட
எத்திசை முகத்தும்அமை யச்

சிலைக்கா மரங்கள் முழக்குவய லூரனே
சிறுபறை முழக்கிஅரு ளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கிஅரு ளே.

(அ - ரை.) காந்தள் அம்கை - காந்தள் மலர் போன்ற அழகிய கை. கொவ்வை - கோவைப்பழம் போன்ற. கூர் - கூர்மை. கொடி - ஒழுங்கு. தபனமண்டலம்-சூரியமண்டலம். புலவி - ஊடல். பாசறைக் களம் - படைவீடு. சிலைக்கா மரங்கள் - ஒலிக்கின்ற வண்டுகள்.

முதலடியில் புணர்ச்சிக்காலத்து நிகழும் மெய் வேறுபாடுகள் கூறப்பட்டன. (அரு)

கந்தர முழக்கமும் கந்தரத் திடைபுக்க
கண்டீர்வப் பெருமுழக் கும்
கதிர்இளம் திங்கள்அம் கண்ணியனை முன்னிக்
கடிந்தோர் இயற்றுவேள் வி

மந்தர முழக்கமும் சுனைஆடு கன்னியர்
வளம்கெழு முழக்கங் களும்
மடப்பிடி நடைச்சிறு கொடிச்சியர் குழாம்கூடி
மன்றல்அங் குன்றம்எதிர் கூடம்

சுந்தர முழக்கமும் வெறியாட்டு முருகியம்
துவைப்படு முழக்கங்களும்
தும்பிக்கை நீர்தூம் துருத்தியென் றருவித்
தடாகம் துதைந்த குளிறும்

சிந்துர முழக்கமும் தீராத தமிழ்வெற்ப
சிறுபறை முழக்கிஅரு ளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கிஅரு ளே.

(அ - ரை.) கந்தரம் - மேகம். கந்திரத்திடைபுக்க கண்டீர வம் - மலைக் குகையிடத்துப் புகுந்த சிங்கம் அல்லது புலி. முன்னி - நினைத்து. கடிந்தோர் - வெறுத்தோர். சுனைஆடு - சுனையில் நீராடு. கொடிச்சியர்குழாம் - குறிஞ்சிநிலப் பெண்கள் கூட்டம். எதிர்கூடம் - எதிர் ஒலிக்கும். வெறியாட்டு முருகு இயம் - வெறியாடல் காலத்து முருகனைக் குறித்து முழக்கப் படும் வாத்தியம். நீர்தூம் - நீரைத் தூவும். துதைந்த - நெருங்கிய. சிந்துரம் - யானை. குளிறும் - பேரொலியும். செய்யுளில் பல்வகை முழக்கங்களும் குறிக்கப்பட்டன. பல வகை முழக்கங்களும் நிறைந்த தமிழ்மலையில் எழுந்தருளிய பெருமானே அம்முழக்கங்களோடு நீ சிறுபறையையும் முழக்கிப் பெருமுழக்கஞ் செய்வாயாக. (அஅ)

சாவதும் திரியப் பிறப்பதும் தொடராது
தண்அளி சுரந்தபெரு மான்
சயிலத் தடஞ்சாரல் புக்குநின் றேக்கறும்
சமயத்தில் வந்துதோன் றி

ஏவதும் கொண்டுட்பு லம்புவதும் நனிதீர்மின்
என்னும் குறிப்புமொழி தந்
தேந்தும் குறுந்தொடி அரற்றவெற் றிப்பறை
எறிதனின் இச்சூர னைக்

காவதம் பலகோடி ஓடினும் ஒறுப்பன்
கருங்கழற் கச்சுவீக் கிக்
கைவேலும் ஏந்தினன் காண்மின்கள் என்றுபல
கடவுளர்போன் மலர்மழையோ டும்

தேவதுந் துபிஒரு புறத்தினின் முழக்கநீ
சிறுபறை முழக்கிஅரு ளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கிஅரு ளே.

(அ - ரை.) *தொடராது - தொடராமல். தண்அளி - இன் அருள். ஏக்கறும் - தாழ்ந்து நிற்கும்; தலைகுனிந்தும். ஒறுப்பன் - தண்டிப்பன். பறை எறிதல் - பறை முழக்குதல். காவதம் - பத்து மைல்.* (எ)

வெண்கண் சிவந்துடல் குறுக்கிவயி றெக்கிநெடு
வேடிவால் முறுக்கி நோக்கி
விண்ணுடு நமனுள் வெரூஉக்கோள வெகுண்டண்ட
கோளமும் வெடிப்ப உதறிப்

பங்கம் படுக்குமதக் களிறலறி வீழ்ந்துழப்
பப்பாய்ந் தடித்து டைத்துப்
பருமத் தகம்பிளந் தீர்ங்கோட்டு வெண்தரள
பந்திசிந் தித்தெ றிப்பப்

பொங்குங் கடற்குருதி புழைபடுங் கைமடைப்
புகர்முகர் துறைமடுத் தோர்
பொற்றையிற் சுற்றும் குலிங்கம் குழிக்கொளப்
போந்துகடை வாய்தடவி வெண்

சிங்கம் தியங்கும்வரை செல்வமுத லாளியே
சிறுபறை முழக்கி அருளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கி அருளே.

(அ - ரை.) *நமனுள் - எமனுடைய தூதர். எக்கி - வற்றச்செய்து. பங்கம் படுக்கும் - குறைவு உண்டாக்கும்.*

*தரளபந்தி - முத்துவரிசை. புழைப் படுங்கை - தும்பிக்கை. பொற்றை - பாறை, மலை. தியங்கும் - திகைக்கும். (அஅ)*

முறுகிக் கதிர்க்கும் செருத்தற் பகட்டேருமை
மோட்டுவெங் கோட்டுநுதி யால்
முள்வேலி கோலிக் குறுங்கால் நறுங்குவளை
முருகுசித றப்பே யர்த்துக்
குறுகிக் கருப்பங் குருத்தைக் கறித்துக்
குதட்டிக் குதட்டி மேய்ந்து
கொழுமலர்த் தேன்ஊற விரவிவரு புனலுண்டு
குறுநடை பயின்று மறுகி
மறுகிற் புகுந்துபணை மருதநிழ லில்தூங்கி
மாங்கனி படைப்ப வாங்கி
வாங்கிச் சுழிப்புறத் துண்என் றெழுந்துதன்
மழக்கன்றி னுக்கி ரங்கிச்
சிறுகக் கனைத்துவரு தென்ஆரி நன்னாட
சிறுபறை முழக்கி அருளே
தென்இலஞ் சிப்பதிப் பன்னிருகை மேகமே
சிறுபறை முழக்கி அருளே.

*(அ - ரை.) செருத்தல் - மடி. மோட்டுவெங்கோட்டு - உச்சியிலுள்ள கொடிய கொம்பில். முருகு-வாசனை. கருப்பங் குருத்தை - கரும்புக் குருத்தை. கறித்து - கடித்து. குதட்டி - மென்று. மறுகி - மயங்கி. மறுகில் - தெருவில். மழக்கன்று - இளங்கன்று. (அக)*

கைத்தலை வைத்த விருப்புடன் அற்பர்
கடைத்தலை தோறும்உ ழல்வோர்
கற்றச ரக்கை விலைச்செயும் அற்ப
கவித்துவம் இழிவெனவே
யிற்றலை பத்ம பதத்தை வழுத்தும்
எனக்கருள் புரிகுவைநீ
எய்த்தவ ருக்கும் இளைத்தவ ருக்கும்
இரக்கம துடையவன்நீ

நத்தலே சித்ரங தித்தலே நிற்கும்
நடைப்பிடி தருமகன்நீ
நச்சர வத்தில் நடித்தருள் பச்சைமு
கிற்கோரு மருமகன்நீ

முத்தலே யத்ரன் அளித்தருள் புத்திரன்
முழக்குக சிறுபறையே
முக்குடு மிக்கிரி யிற்கும ரப்பன்
முழக்குக சிறுபறையே.

(அ - ரை.) விலேசெயும் - விலே செய்கின்ற. நத்து அலே - சங்குகள் அலேகின்ற. நடைப்பிடி - நடையிற் பெண் யானே போன்ற உமா தேவி. பச்சை முகில் - பச்சை மேகம்போன்ற திருமால். (௧0)

அகத்தினில் நினேப்பவர் பிறப்பையும் இறப்பையும்
அகற்றிடும் அருள் மலேயே
அகத்தியன் வழுத்திட இலக்கண இலக்கியம்
அமைத்தருள் குருபரனே

பகைத்திறம் ஒடுக்கிஎன் மனத்திடை அருட்கதிர்
பரப்பிய படர் ஒளியே
படைப்பவன் முடித்தலே புடைத்துல கினேத்தனி
படைத்திடும் இறையவனே

நிகழ்த்திய படிக்கித சுகத்தினில் எனத்தொழில்
நிரப்பிய நிருமலனே
நினேப்பொடு மறப்புவி கற்பவி கற்பமும்
நிறுத்திடு நியதிஉளாய்

முகிழ்த்தபு னகைச்சிறு குறத்தியோ டிருப்பவன்
முழக்குக சிறுபறை யே
முதற்பிறை நுதற்குழல் மொழிக்கொரு மழக்குக
முழக்குக சிறுபறையே.

(அ - ரை.) அகம் - மனம். திறம் - வகை. புடைத்து - தாக்கி. நியதி - முறை. புன்னகை - புன்சிரிப்பு. (௧௧)

இதயமணி முத்தம்நிறை சததள மலர்த்தவிசின்
இடைஒரு கிழத்திபயில் வாள்
எறிகடல் முகட்டில்எழு தினகர ரவிப்பிரபை
யிற்காட்சி நற்ப்ரபையும் ஆய்

உதயகிரி அத்தமன கிரிகள்என மிக்குயரும்
உபயபுய வெற்பின்மிசை போய்
ஒளிர்பணில சக்ரநில வொருபுடை எறிப்பவெயில்
ஒருபுடை எறிப்பமலர் மேல்

மதலைஎழும் அச்சுழியில் எழுபுவி படைப்பவரும்
மரகத மணிக்குவடு போல்
வரிஅர வணைக்குள்விழி வளரும்ஒரு பச்சைமுகில்
மருமகன் ஒருத்திகுற மான்

திதலைமுலை யிற்களப மெழுகிடு திருக்கைகொடு
சிறுபறை முழக்கிஅருளே
திரிகுடுமி வெற்புடைய குழல்மொழி திருக்குமர
சிறுபறை முழக்கி அருளே.

*(அ - ரை.) இதயம் - உள்ளிடம். சததளம் - நூறு இதழ். தவிசினிடை - இருக்கையில். உபயபுயவெற்பு - இரண்டு தோள் மலைகள். மதலை - குழந்தை. மரகதமணிக்குவடு - பச்சை மாணிக்கச் சிகரம். வரி அரவணைக்குள் - பாம்புப் படுக்கையில். திதலை - சுணங்கு, தேமல். களபம் - சந்தனம். திரிகுடுமி வெற்பு - திரிகூடமலை.* (௧௨)

இடைச்சியர் புனைதுகில் எடுத்தொரு தருவினில்
இருப்பவன் மருமகனே
இருட்டுறை உழும்இள முளைக்கும ரியும்என
இலக்கினில் வருபவனே

படைப்பவர் தொகுதிகள் படைப்பவன் எனும்இறை
பழிச்சிய பழையவனே
பகுத்திடு பலகலை தொகுத்திடு நிலைபெறு
பரப்ரம ஒளிஉருவே

உடைத்தெழு மதசலம் உவட்டெழு கயமுக
ஒருத்தர்பின் வருபவனே
உருத்திர பசுபதி எனத்தொழு மறையவர்
உளத்திலும் உறைபவனே

முடித்தலை இமையவர் கெடித்தலம் உரியவ
முழக்குக சிறுபறையே
முடப்பல வடியினில் முளைத்தவன் மழவிடை
முழக்குக சிறுபறையே.

(அ-ரை.) தரு - மரம். இலக்கு - குறி. பழிச்சிய - போற்றிய. ஒளிஉருவே - சோதி வடிவே. மதசலம் உவட்டு எழு - மதநீர் பெருகி வடிகின்ற. கயமுக - யானைமுகம். முடப்பல வடியினில் முளைத்தவன் - வளைந்த குறும்பலா அடியில் தோன்றிய சிவபெருமான். மழவிடை - இளங்காளை போன்றவனே. (கஉ)



## ௧௦ சிறுதேர்ப்பருவம்

வெண்தேர் உருட்டிவரும் வேதாளம் இட்டஅடி
பாதாளம் முட்டவிரவும்
வீரசக் ராயுதப் பகழியும் புட்டிலும்
வெரிங்கொண் டெருத்தலைப்ப

மொண்டேர் உருட்டிவைத் தால்அனைய நவரத்ந
முடிமுக டளாவிநிற்கும்
மூதண்ட வேதண்ட கோதண்ட கணபணு
முடிஅராச் சிறுநாண்எறிக்

தொண்தேர் உருட்டிவரு சேட்டிளம் பரிதிமதி
உபயசக் கரங்களாக
உபநிடப் பரிபூட்டி முப்புரம் கனலிகூட்
டுண்ணவான் தரணிவட்டத்

திண்தேர் உருட்டும்ஒரு சேவகன் திருமதலை
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅருளே.

(அ - ரை.) *சிறுதேர்ப் பருவம் ஆவது: சிறுதேர் என்னும் நடைவண்டி உருட்டி மகிழ்தல். இஃது இருபத்தொன்றாந் திங்களில் நிகழ்வது. பாதாளம் முட்ட - பாதாளம் வரை. பகழியும் புட்டிலும் - அம்பும் அம்பறாத் தூணியும். வெரிங் - முதுகு. எருத்து அலைப்ப - பிடரியை வருத்த. மூதண்ட - பழையவுலகம். வேதண்டம் - மலை. கோதண்டம் - வில். கணபணு முடி - திரண்ட படங்கள். ஒண்தேர் - ஒள்ளிய தேர். பரிதிமதி - சூரிய சந்திரர். உபய சக்கரங்களாக - இரண்டு உருளைகளாக. திண்தேர் - வலிய நிலையாகிய தேர். சேவகன் - வீரன்.* (௧௪)

மன்றற் கருங்குழற் செய்யவாய் வெண்ணகை
வளர்க்குங் கலாபமயில் போல்
மடப்பிடி நடைச்சியர் கோடிப்படை எடுப்பநெடு
வான்மதிக் குடைகவிப்ப

அன்றிற் கருங்கா களங்கறங் காநிற்ப
அதிர்கடல்மும் முரசம்ஆர்ப்ப
அலைப்பல கையும்துயில் கொளுங்கங்குற் காடயானை
அழிமதக் கலுழிகோட்பக்

குன்றிற் பணைத்தகுவ வுத்தடந் தோள்மதன்
கோலம் சமைந்துகன்னல்
கோதண்டம் ஏந்திக் குறும்பெறி சனற்கிளிக்
கோய்உளைப் புரவிபூட்டும்

தென்றற் றடந்தேர் உருட்டும் பரங்கிரிய
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅருளே.

(அ - ரை.) மன்றல் - மணம். மடப்பிடி - இளைய பெண் யானை. வான்மதிக்கொடை - உயர்ந்த சந்திரனாகிய குடையைப் பிடிக்க. அன்றிற்கருங்காகளம் - அன்றிலாகிய கரிய எக்காளம். கறங்கா நிற்ப - ஒலிக்க. அலைப்பலகை - அலையாகிய பலகையும். கங்குற் கடாயானை - இருளாகிய மதயானை. கலுழி - பெருக்கு. கொட்ப - சுழல. குன்றிற் பணைத்த - சிறுமலை போல் பருத்த. குவவு - திரட்சி. கோல் ஐந்து - ஐவகை மலர் அம்பு. கன்னற் கோதண்டம் - கருப்பு வில். பரங்கிரிய ஃ திருப்பரங்குன்றிலுள்ளவனே! செய்யவாய் வெண்ணகை: முரண் தொடை. தோள் பருத்திருத்தல் ஆடவர்கட்குச் சிறப்பாகையால், "குன்றிற் பணைத்த குவவுத்தடக்தோள்" என்றார்.
(க௦)

தூங்குங் கமஞ்சூற் கருங்கோண்டல் மஞ்சுகண்
துஞ்சும் தடஞ்சாரலில்
சுழல்கின்ற பைங்கண் கரும்பொரைச் சேக்கர்வாய்ச்
சூர்உகிர்ப் போர்வேங்கையும்

தாங்குஞ் சிவப்புண்ணி வேள்ளிக் குழற்படி
சாரங்க பந்தாள மும்
தங்களில் பகைமைதீர்ந் தொருதுறைப் புனலுண்டு
சஞ்சரிக் குந்த்ரிகூடப்

பூங்குங் குமக்குவட் டடவிக் கொடிச்சியர்
புனத்திதழ் அமைத்ததுருமப்
புதுவெள்ளம் எறியச் செறித்தபால் முத்தனூர்
புலவியிற் கொழுநர்பதிபோல்

தேங்குதோ றும்பரவு சித்ரா நதிக்கிறைவ
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅருளே.

*(அ - ரை.) தூங்கும் - தங்கும், தொங்கும். கமஞ்சூற் கருங்கொண்டல் - சிறந்த சூலைக்கொண்ட கரிய மேகம். துஞ்சும் - தூங்கும். செக்கர் - சிவப்பு. சூர் - அச்சம். வேங்கை - புலி. குவடு - முடி, சிகரம். துருமம் - குங்குமம். சித்திரா நதிக்கு இறைவா - சிற்றாறு என்னும் சித்ரா நதித் தலைவா.* (கக)

இருவிரலின் நீளத்தில் ஒருவிரலின் ஆழத்தில்
இட்டஒரு களம்நிரைத்த
ஈர்ம்பள்ளை யாட்டின் மயிர்த்தொகை பல்லம்என்
றெண்ணுங் கணக்கின்வகை போல்

ஒருபெருங் களிறும்ஓர் பெருந்தேரும் வெம்படை
உழவர்ஐ வரும்கவின்மா
ஒருநான்கும் ஆகிய பதாதிமுதல் மும்மடித்
தோங்குசே னைமுகமும்மேல்

மருவிடும் கும்பியும் கண்டமும் வாகினியும்
மன்உயிர் தனையும்அப்பால்
வாய்த்தசமு கம்மனிக மூங்கடந் தக்ரோணி
மாசேனை நேளியவிசையன்

செருவலித் திண்தேர் உருட்டும் பிரான்மருக
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅருளே.

*(அ - ரை.) களம் - கண்டம். பள்ளை யாட்டின் - வயிறு பருத்த வெள்ளாடு. பல்லம் - அம்பு. ஒரு பெருங் களிறு......*

*சேனுமுகமும் - இதில் கரி, பரி, தேர், காலாள் ஆகிய நாற்படைகளும் குறிக்கப்பட்டுள்ளன. அனிகம் - படை. அக்ரோணி - உகஅஎ0 யானையும், சுகூசுகO குதிரையும், உகஅஎO தேரும், கOகூகூ௦O காலாளும் கொண்ட ஒரு சேனைத்தொகை. செரு - போர். பிரான் - திருமால். (கஎ)*

எண்ணெய்க் குடங்கள்என் றிறுமாந்து நீலவடம்
ஏந்திள முலைக்கடைசி மார்
எடுத்துக் குடத்தோடும் அடுத்தநற வங்குரவை
இடுசெருக் கிற்கவிழ்த்த
பண்ணைச் செறும்பில்விளை யாடுங் கருஞ்சிறார்
பற்றும்வாற் செங்கன்று போய்ப்
பாய்ந்திடு முட்பல வடிக்குடக் கனிசிதறு
படுபழச் சேதகத் தின்
மொண்ணைக் கரும்பக டுரிஞ்சுகுலை வாழையின்
முப்பழச் சேறிழிந் து
மோய்என்று படுசேற்றில் வாய்த்தசெஞ் சாலிசொரி
முத்தைவா ரிக்குவித் த
திண்ணைக்கு வெண்ணில வெறிக்கும் பிரானூர
சிறுதேர் உருட்டிஅரு ளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅரு ளே.

(அ - ரை.) *நீலவடம் - நீல மாலை. கடைசிமார் - பள்ளியர். நறவம் - கள். செருக்கு - களிப்பு. பண்ணைச் செறும்பு - வயற்சேற்றில். குரவை இடு - குரவை ஒலி யிடுகின்ற. வாற்செங்கன்று - வாலையுடைய ஆன் கன்று. முள்பல அடிக்குடக்கனி - முள்ளையுடைய பலா மரத்தின் அடியிலுள்ள குடம்போன்ற பலாப்பழம். சேதகம்-செஞ்சேறு. மொண்ணை - பருத்த. கரும்பகடு - எருமைக் கடா. திண்ணைக்கு - திண்ணையில். (கஅ)*

இரைக்கும் சுரும்பறுக் குங்குமக் கோடிடறி
இபநெடுங் கோடு சாடி
இல்லக் கொடிச்சியரின் இதயப் புனத்திதண்
ஏற்றிப் பளிக்கறையில்இட்

டரைக்கும் செழுஞ்சாந்தோ டகில்முரு டுருட்டிநெட்
டரவுமிழும் மணிவரன்றி
அண்டர்அண் டங்களும் அளக்கும்நெடு மூங்கில்முத்
தரியிட் டரித்துவிரவிக்

கரைமிருக மதகலவை துன்றுசிவ மதுகங்கை
செண்பகக் காடுபோங் கு
கடல்கடந் தருவித் தடாகம் கடந்திரு
கரைக்குறும் பெறிய மோதித்

திரைக்கும் திரைப்புனற் சித்ரா நதிக்கிறைவ
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅருளே.

(அ - ரை.) சுரும்பு - வண்டு. கோடு - கொம்பு. இதயப் புனத்து - மனக்காட்டில். இதண் - பரண். அகில் முருடு - அகில் கட்டை. அரவு உமிழும் மணி - பாம்பு உமிழுகின்ற இரத்தினத்தை அள்ளி. மிருகமதகலவை - கத்தூரிக் கலவை. துன்று - பொருந்திய. திரைக்கும் - மடங்கும். குறும்பு - அரண். (கக)

கம்பவள வாரணக் கடல்வந் திரங்கக்
கறங்குந் திரைக்கானல் வாய்க்
கரியசிறு முட்கவிழ் மடக்கிலை முடக்கேத
கைக்காவின் விழுதுபற் றி

வம்பவிழும் வெண்மடல் தலைமிசை படர்ந்தோடி
மணற்குன்று தன்னைமுடி
மதுமலர்ப் புன்னைக் கருகோ டுலாயதன்
மருங்கோ டொருங்கோடியே

கும்பவள மென்முலைக் கடைசியர் குழாம்பயில்
கொழும்பணைக் கதலிநுதலிக்
கோல்லைக் குருந்தேறி முல்லையோடு பின்னிக்
குறிஞ்சிக் கவட்டினும் போய்ச்

சேம்பவள வல்லிபடர் தென்குமரி வளநாட
சிறுதேர் உருட்டி அருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டி அருளே.

*(அ - ரை.) இரங்கக்கறங்கும் - இரங்கும்படி ஒலிக்கும். கேதகைக்கா - தாழஞ்சோலை. மருங்கோடி ஒருங்கோடி - பக்கத்தில் ஒருசேர ஓடி. கும்பம் - குடம். நுதலி - சொல்லி.*
**(௯00)**

மகவான் மனைக்கிறைவி மகராசி பெற்றமகள்
மயில்போல் இருக்கஅயல் போய்
மகடூஉ ஒருத்திமிகு முகடு டௗக்குமலை
வினைகாவ லுக்குவரு வாள்

முகலா ளிதத்தரள முகிழ்மூர லுக்குருகி
முனைவேல் எடுத்துவரு வாய்
முருகா மருத்துழவன் மருகா திருத்தணியில்
முதல்வா ஒருத்திபுதல் வா

உகளா முயற்பிறையை முடிமேல் முடிக்கும்எமை
உடையான் வலச்செவியிலே
உறைவான் உரைப்பரிய ஒருதா ரகப்பிரம
உபதேசம் வைத்தகுருவே

சிகரா சலத்தில்உயர் திரிகூட வெற்பன்ஒரு
சிறுதேர் உருட்டிஅரு ளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅரு ளே.

*(அ - ரை.) மகவான்-இந்திரன். மகள் - தெய்வயானை. மகடூஉ - பெண். முகடுடௗக்கு மலை - வானளாவிய மலை. வினை காவல் - விளைகின்ற தினைப்புனத்திற்குக் காவலாக. லாளிதம் - அழகு. தரள முகிழ்மூரலுக்கு - முத்துப்போல் குவிந்திருக்கின்ற பல்லின் நகைக்கு. மருத்துழவன் - மணம் பொருந்திய துளப மாலையை அணிந்த கண்ணன். உகளாமுயல் - தாவாத முயல்; இது பாயா வேங்கை போன்ற குறிப்பு மொழி. எமை உடையான் - எங்களை ஆளுதல் உடையவனாகிய சிவபெருமான்.*

*தாரகப்பிரம உபதேசம் - ஓங்காரமாகிய பிரணவப்பொருள் உண்மை. சிகராசலம் - குடுமிமலை.* (கoக)

பணிகொண்ட தாரைகன் மணித்தேரும் அர்ச்சுனன்
பாழித் தடங்தேரு மே
பருவமும் செல்வதில்லை ஒருபெருஞ் சேடனே
பரூஉச்சுடிகை நேற்றிமுற்றத்

தணிகொண்ட கல்லோல வரதமனே கரமேக
லாபார மணிநெடுந் தேர்
அன்றே நடக்குநில நின்றுதை நகைசெய்வ
தாழியோன் றுதவன் றேர்

கணிகொண்ட வையமும் காண்பதிற் கங்குலில்
காமன் கறங்குபோற் றேர்
காற்றேர்அ லாதில்லை மேல்தேர் உரைப்பதேன்
கவனவாம் புரவியின் மேல்

திணிகொண்ட செல்வஉன் தேர்அலா தில்லையால்
சிறுதேர் உருட்டிஅரு ளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டிஅரு ளே.

(அ - ரை.) *பாழி - வலி. பரூஉச்சுடிகை - பருத்த கொண்டை. கணி - மதிப்பு. காற்தேர் - காற்றாகிய தேர். கவனவாம்புரவி - வேகத்துடன் தாவுகின்ற குதிரை.* (கoஉ)

மருள்வந்த பிறவிக் கடற்படிந் துள்ஆசை
மகரம் புடைத்த டிப்ப
மாள்கின்ற சிற்றுயிர்க் குற்றிடத் துதவிசெய்
வருமரக் கலமேமுகந்

தருள்வந்த மெய்அன்பர் ஆர்வம் தழைக்கின்ற
அகநெக்கு நெக்குருகி னே
ஞலமுகன் நனவினுக் கெதிரிட் டுவட்டேறியும்
ஆனந்த மாப்பெருக் கே

பொருள்வந்த கடவுட் பழம்பாடல் ஏந்தும்ஒரு
பொன்மாளி கைக்குள்வைத்த
புனைமணி விளக்கமே அநுபூதி தந்துபர
போகம்விளை கின்றவிளைவே

தெருள்வந்த மணிமன்றம் உடையவன் செல்வமே
சிறுதேர் உருட்டிஅருளே
செந்தமிழ் இலஞ்சிநகர் வந்தகந் தசுவாமி
சிறுதேர் உருட்டி அருளே.

*(அ - ரை) மருள்வந்த - மயக்கமுற்ற. படிந்து - மூழ்கி. ஆசை மகரம் - ஆசையாகிய மகரமீன். ஆர்வம் - அன்பு. நெக்கு நெக்குருகி - மிகநெகிழ்ந்து உருகி. அநுபூதி - அழுந்தி அறிந்துணர்ந்த அறிவு. தெருள்வந்த - அறிவுற்ற, தெளிவுற்ற.*
(க0க)

திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ்

முற்றிற்று.

---

# பொருட் குறிப்புக்கள்

[எண் : செய்யுள் எண்]

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]

---

உ

திருச்சிற்றம்பலம்

# மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

குமரகுருபர சுவாமிகள்

அருளியது



பேராசிரியர், பெருநாவலர்,

பு சி புன்னைவனநாத முதலியார் அவர்களின்

சொற்பொருள், விளக்கவுரை



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.

1976

கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : ௧௧௮

முதற் பதிப்பு : டிசம்பர் 1959
மறு பதிப்புகள் : டிச. 1962; பிப். 1965;
சன. 1970; மே 1976.



MATHURAI
MEENATCHIAMMAI PILLAITHTHAMIZH

அப்பர் அச்சகம், சென்னை-600001. (1/6)

# பதிப்புரை

செந்தமிழ்ச் சிற்றிலக்கிய நூல்களுட் சிறந்தது பிள்ளைத் தமிழ் என்னும் நூல். இதுகாறும் பல புலவர்கள் இயற்றிய பிள்ளைத்தமிழ் நூல்களுள் குமரகுருபர சுவாமிகள் இயற்றிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழே முன்வைத் தெண்ணப்படுவது. இதன் சிறப்புக் கருதியே வித்துவான் வகுப்பு, புலவர் வகுப்புக் களுக்குரிய பாடங்களில் ஒன்றாக அரசியலார் அமைத்து வரு கின்றனர். உரையின்றி மாணவர் இதனைக் கற்றுப் பயன் பெறுவது அரிது. கற்பிக்கும் ஆசிரியர்க்கும் இந்நூற் கவிகளிற் பொருள் விளங்காத இடங்களும் சிலவுள. இஃது உரையுடன் கற்கத் தகுந்த நூலாகும்.

இதன் அருமையும் பெருமையும் ஆய்ந்து முன்னர்க் குறிப்புரையுடன் வெளியிட்டோம். அக் குறிப்புரையினும் பொருள் விளக்கமாகத் திரு. பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்களைக் கொண்டு சொற்பொருளும் விளக்கவுரையும் எழுது வித்துப் புதிதாக வெளியிடுகின்றோம். கழகப் புலவர் தி. சங்குப் புலவர் ஆராய்ச்சி முன்னுரையும் அமைந்துள்ளது. விளக்க வுரையாசிரிய ரவர்கட்குக் கழகத்தார் நன்றி உரித்தாகுக.

இந்நூல் கற்பார்க்குச் செவ்விதிற் பொருள் விளங்கும் என்பது ஒருதலை. ஆசிரியர் கருத்துக்களும், உவமை உருவகம் முதலிய அணிகளும் மேற்கோள்களும் இவ்வுரையில் விளக்கப் பட்டுள்ளன. ஆதலால், தமிழ் பயிலும் மாணவரும் கற்பிக்கும் ஆசிரியர்களும் வாங்கிக் கற்றுப் பொருள் அறிந்து பயனடை வார்கள் என்று நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# ஆராய்ச்சி முன்னுரை

[கழகப் புலவர் பண்டித, வித்தவான், தி. சங்குப்புலவர்.]

குமரகுருபர சுவாமிகள் பாடுஞ் செய்யுட்கள் தனிச் சிறப்பு வாய்ந்தவை. பாட்டொலி கேட்டவர் இவர் பாடல்தான் இது என்று துணிந்து கூறுவதற்கேற்ற இன்னோசை யமைந்திருக் கும். இவர் பிறந்த நாட்டுப் பொருநைநதி ஓட்டம் போலத் தோன்றும். படிப்பார் மனத்தையே யன்றிக் கேட்பார் மனத் தையும், தன்பால் ஈர்க்கும் இனிமையுடையது. சந்தம், மோனை, எதுகை முதலிய தொடையும், தொடை விகற்பமும் அமைத்துப் பாடுவதே இவர் இயல்பு. தன்மை உவமை முதலிய அணிகளும் சார்ந்திருக்கும். தற்குறிப்பேற்றம் என்ற கற்பனை யணியே கவின் பெற்றுப் பல கவிகளினும் நிற்கக் காணலாம். கற்பனைக் களஞ்சியம் என்றுதான் இவர் பாடிய நூல்கள் ஒவ் வொன்றையும் உரைத்தல் வேண்டும்; ஆயினும் இவர் பாடிய மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் என்னும் இந்நூலில் அமைந் துள்ள சொன்னயம், பொருணயம் வேறு நூலிற் காண்டல் அரிது. அதனாலன்றோ பிள்ளைத்தமிழ் நூல்களிற் சிறந்தது எனப் பெயர் பெற்றது இந்நூல்.

## தமிழ்ப்பற்று

ஆசிரியர் குமரகுருபரர், தமிழ்ப்பற்றுடையவர் என்பதை அவர் பாடிய நூல் பலவும் நன்கு விளக்கும். இந் நூலில் இவர் தமிழ்மொழியைப் பல செய்யுட்களில் விதந்து கூறியிருப்பதைக் காணலாம். அதனைக் கூறும் இடமெல்லாம் தக்க அடைமொழி கொடுத்தே கூறுகின்றார். மீனாட்சியம்மையை "முது தமிழ் உததியில் வருமொரு திருமகள்" (௰௨) என்றும், "நறை பழுத்த துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ் சுவையே" (௬௧) என்றும், "தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி"

(கக) என்றும், "மதுர மொழுகிய தமிழினியல் பயின் மதுரை மரகதவல்லி" (க) என்றும் போற்றி யிருப்பதே தக்க சான்றாகும் தமிழ்ப்பற்றைக் காட்டுவதற்கு.

காப்புக்கு முன்னெடுக்கும் பெருமையுடைய திருமாலைச் சிறப்பாகப் பாடத் தொடங்கியவர், "பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலே" என்றார். "பின் சென்றான்" என்று மட்டும் இழிவாகக் கூறினார் அல்லர். "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீயிங் கிராதே" என்று புலவன் புனைந்த தமிழ்ப் பாடல் கேட்டான்; விரைவாகப் பின்றொடர்ந்தான். அவன் புனைந்த துளசிமாலைகள் சரிந்து அசைந்து துவண்டு புரண்டன. தேன் ஒழுகி வழியெல்லாஞ் சேறாயிற்று. அச் சேற்று வழியில் அவன் காதலி திருமகளும் பின்றொடர்ந்தாள். தொடர்ந்துவர இயலாதது கண்டு தன் கையை யணையாகப் பற்றிவரும்படி கைகொடுத்தான். தான் படுத்திருந்த ஆயிரம் படப்பாம்புப் பாயையும் சுருட்டித் தோளில் தொங்கும்படி விடுத்தான். இம் முறையில் பின் தொடர்ந்தனன் எனத் திருமாலை மிகவும் இழிவுபடக் கூறித் தமிழை மிகவுயர்த்திக் காட்டுகிறார். இதன் மேலும் தமிழ் மொழிக்குப் பெருமை கூறல் வேண்டுமோ? காப்புச் செய்யுளைப் படித்துக் காண்க.

மேலும் தமிழ்மொழியைக் கூறும் இடமெல்லாம் பைந் தமிழ் (உ) வடிதமிழ் (க) மதுர மொழுகிய தமிழ் (உ) தெளி தமிழ் (உஉ) தென்னன் தமிழ் (உக) தெய்வத்தமிழ் (சஅ) முது தமிழ் (௬உ) செஞ்சொற்றமிழ் (௬க) தெள்ளித் தெளிக்கும் தமிழ் (சு) தெளித்த பசுந்தமிழ் (கச) இவ்வாறே தக்க அடை கொடுத்துக் கூறுவதும் அப் பண்பினை விளக்கும்.

## சொன்னயம்

### சந்தம்

(1) "சிகர வடவரை குனிய நிமிர்தரு செருவி
லொருபொரு வில்லெனக் கோட்டினர்"

(2) "பமர மடுப்பக் கடாமெடுத் தூற்றுமோர்"

(3) "கடகளி றுதவுக பாய்மிசைப் போர்த்தவள்"

(4) "அமரில் வெங்கிடும வுதியர் பின்னிடுமோ
ரபயர் முன்னிடுவ னத்தொக்க வோடவும்"

(5) "குருமணி வெயில்விட மரகத நிழல்விரி
குன்றே நின்றாதும்"

(6) "சங்குகி டந்தத டங்கைநெ டும்புய
றங்காய் பங்காயோர்"

(7) "முதுசொற் புலவர் தெளித்தப சுந்தமிழ்
நூல்பாழ் போகாமே"

இவை போன்ற சந்தம் அமைந்த கவிகளைப் படித்துச் சொன்னயம் காண்க.

## தொடை விகற்பம்

மோனை முதலிய தொடையும், இணை முதலிய தொடை விகற்பமும் நாற்சீர் கொண்ட அளவடிக் கண்ணே அமைக்கப் பெறும் என யாப்பருங்கலக்காரிகை உரையாசிரியர் கூறினர். ஆயினும் மற்றையடிகளிலும் அவை எங்கும் பயின்றுவரக் காண்கின்றோம். மோனை, எதுகை இல்லாத பாடல் யாண்டும் பிற்காலத்தார் பாடியவற்றில் காண்பது அரிது; ஈண்டு ஆசிரிய விருத்தத்தில் ஆசிரியர் அமைத்திருக்கும் விதத்தையும் காண்போம்.

## மோனை

"கரைக்கும் கடாமிரு கவுட்குட முடைந்தூற்று"
(மூன்று சீர்மோனை)

"மூலத்தலத்து முளைத்தமுழு முதலே முத்தம் தருகவே"
(நான்குசீர் மோனை)

"கன்னற் பெருங்காடு கற்பகக் காட்டுவளர் கடவுண்மா
கவளங்கொள" (ஐந்துசீர் மோனை)

## எதுகை

"கங்குன்ம தங்கய மங்குல டங்கவி டுங்கா மன்சேம"
(ஐந்துசீர் எதுகை)

"வாளிகள் கூளிகள் காளிகள் ஞாளியி லாளியென"
(நான்குசீர் எதுகை)

"தொங்திச ரிங்திட வுந்திக ரங்தொளிர் குளுடையாய்"
( ,, )

"பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளுமொரு பாண்டிப் பிராட்டி" (மூன்றுசீர் எதுகை)

"இரைத்துத் திரைத்து நுரைத்தொரு" ( ,, )

"மூதண்ட வேதண்ட கோதண்டமோடு" ( ,, )

"விக்கிடக் கக்கிடத் தொக்கிடர்ப் படுதி" ( ,, )

## முரண்

"குனிய கிமிர்தரு" (இரண்டுசீர்முரண்)

"செஞ்சூட்டு வெள்ளோதிமம்" ( ,, )

"பெருநா ணெய்தச் சிறுநாண்" ( ,, )

"வெண்புயலும் கரும்புயலும்" ( ,, )

"செங்கயல் கிடக்கும் கருங்கட் பசுந்தோகை"
(மூன்றுசீர் முரண்)

"கார்க்கோல நீலக் கருங்களத் தோடொருவர் செங்களத்து" (நான்குசீர் முரண்)

## இயைபு

கடகளிறுதவுக பாய்மிசைப் ... போர்த்தவள்
கவிகுவி ... ... ... ... தூர்த்தவள்
கடல்வயி றெரிய ... ... ... பார்த்தவள்
கடிகமழ்தரு ... ... ... சேர்த்தவள்

இவை போன்ற தொடை விகற்பம் பல செய்யுட்களில் அமைந்து சொற்சுவை பயப்பதைக் காணுங்கள்.

காப்புப் பருவத்தில் திருமகள் மென்மைத்தன்மையை விளக்குகின்றார். "திருமகள், திருமால், மார்பில் வீற்றிருப்பவள் என்பது தெரியும் புலவர் அனைவர்க்கும். அவர் மார்பில் கௌத்துவமணியொன்று புனைந்திருப்பதும் தெரியும். திருமகளுக்கு அம் மணி பருக்கைக் கல்லாக உறுத்தியது; பஞ்சூட்டிய சிற்றடி பதைத்து வருந்தினள்; அம் மணியின் ஒளிவெயில் அவள் உடலை வருத்தியது. ஒதுங்குவதற்கு நிழல் தேடினள்; துளசிமாலையின் தொகுதி கண்டாள்; அத் தண்ணிழலில் தங்கினள். அவ்வாறு தங்கி வாழும் மெல்லியல்பு வாய்ந்த திருமகளை வணங்குகின்றேம்" என்றனர். இஃது ஒரு புதுமைக் கற்பனையன்றோ?

பிரமன் பெற்றி பேசுகின்றார்; "நாகத்து மீச்சுடிகை நடுவட்கிடந்த மடநங்கையைப் பெற்று மற்றந், நாகணைத் துஞ்சுதன்றந்தைக் குவந்துதவு நளினக்குழந்தை காக்க" என்றனர். நளினக்குழந்தை என்பது தாமரைப்பூவிற் பிறந்த குழந்தை எனப் பொருள்பட்டுப் பிரமனையுணர்த்தியது. அக் குழந்தை பாம்பின் உச்சி நடுவிற் படுத்துக் கிடந்த ஓர் இளமங்கையைப் பெற்றது, அம் மங்கையை யார்க்குக் கொடுப்பதென ஆய்ந்தது; பாம்புப் படுக்கையிற் படுத்துறங்குவோனே பொருத்தமானவன் எனத் துணிந்தது. தன் தந்தையாயினும் அவனுக்கே கொடுப்பது நலம் என மகிழ்ந்து கொடுத்தது. இத்தகைய கூரறிவு வாய்ந்த குழந்தை அது. அக் குழந்தையே மீனுட்சியாகிய குழந்தையைக் காக்க என்ற கருத்துப்படக் கூறினர். உட்பொருளை ஆயாது வெளிப் பொருளை மட்டும் ஆய்ந்தால் வியப்பும் நகைப்புந்தானே விளையும்?

ஒரு குழந்தை மடமங்கையைப் பெற்றுத் தன் தந்தைக்குக் கொடுக்குமா? தந்தை மணவாளனுவானு தன் மைந்தன் பெற்ற பெண்ணுக்கு? உலகியலுக்குப் பொருந்திய செய்தியா? என்று வியந்து நகைத்துப் பின் உட்பொருளை யுணர்ந்து

கண்டபின் மனம் அமைதியுறும். பிரமன் பூமியைப் படைத்தான்; அப் பூமகளைத் தன் தந்தைக்குக் கொடுத்தான்; அவர் அப் பூமகளைக் காத்தும் உண்டும் உமிழ்ந்தும் கண்டு மகிழ்ந்தும் மனைக்கிழத்தியாகக் கொண்டும் வாழ்கின்ருர் என்ற பொருளைக் கண்டவுடன் புலவர்க்கு வருங் களிப்புப் புகலற்பாலதோ? மயங்கித் தெளியும் வகை கருதியே, அவ்வாறு வைத்தனர் போலும்.

செங்கீரைப் பருவத்தில், "நீராட்டி" என்ற பாடலில் முதலில் தாய்மார் குழந்தையையெடுத்து நீராட்டுவர்; பின் துடைத்துச் சுண்ணம் பூசுவர்; நெற்றியிற் பொட்டிடுவர்; வெண்ணீறு பூசுவர்; நெற்றிச்சுட்டி சாத்துவர்; உச்சிக் கொண்டை முடிப்பர்; தலையிற் பல பணி புனைவர்; செவியிற் குதம்பையும் கொப்பும் அணிவர். இவ்வாறு கோலஞ் செய்தபின் கொங்கைப் பாலை யூட்டுவர்; பாலூட்டிய பின் வாயிற் கனிந்தூறும் எச்சில் பட்டாடையை நனைக்கும்படி மடியில் வைத்துப் பாராட்டுவர் என முறையே அவர் செயலை விளக்கியிருப்பது குமரகுருபரர் உலகியற் காட்சியின் திறத்தை எடுத்துக் காட்டுகின்றது.

"அண்டமீன்றளித்த கன்னி" என அம்மையைப் போற்றுவதற்கு ஏற்ப மீனுட்சியம்மை உலகத்தைச் சிற்றிலாக அமைப்பாள் என்றும், அழிக்குங் கடவுள் எனச் சிவபெருமானைத் துதிப்பதற்கு ஏற்ப அச் சிற்றிலை அழித்து விடுவன் அவன் எனவும் நயம்படக் கூறியிருப்பதைக் காண்போம். அவள் அமைக்கும் சிற்றிலுக்குச் சக்கரவாளகிரியே சுற்றுச்சுவர். அச் சுவர்க்குக் கால்கள் எட்டுத் திக்கிலுள்ள மலைகள்; தூண் இமயமலை; முகடு வான்வெளி; ஞாயிறும் திங்களும் விளக்கு; அண்டமெல்லாம் பழைமையான கலங்கள்; புதுக்கூழ் இன்னமுதம் என்று உலகம் அமைந்து நிற்கும் நிலையையுணர்த்தும் விதம் வான்வெளியாராய்ச்சிவல்லாரும் கண்டு மயங்கத் தக்கதே. உலகத் தோற்றம் ஒடுக்கம் கண்ட தொன்முனிவர் போலும் இவர்.

தாலப்பருவத்தில் மருதநிலச் சிறுமியர் மணல் வீடு கட்டி விளையாடும் மாண்பு கூறுகின்ருர். அச் சிறுமியர் மணலை

வளைத்துச் சிற்றில் கட்டிக் குடிபுகுவார்; சூட்டடுப்பு வைப்பார்; பவளக்கொடிகளை விறகாகப் பரப்பி அடுப்பில் வைப்பார். மாணிக்கத்தைத் தீயாக வைத்து ஊதிப் பற்றியதாகப் பாவிப்பர். குடம்போன்ற பெரிய சங்குகளைக் கொண்டுவந்து பானையாக அடுப்பின்மேல் வைப்பர். தேனைப் பிழிந்து உலை நீராக அப் பானையிற் பெய்வர். முத்துகளைப் பொறுக்கி அரிசியாகப் பெய்து சோறட்டு உண்டு விளையாடுவர். இத்தகைய வளம் பொருந்தியது மருதநிலம் என்பது அவர் கூறுவது. சிறுமியர் விளையாடலை எங்ஙனம் சென்று அறிந்தனரோ இவர்? கண்டது போலக் கொண்டு கூறுவது பாராட்டத் தக்கதே!

"பொய்வந்த நுண்ணிடை" (கச) என்ற கவியில் மீனாட்சியம்மையை உள்ளப் புணர்ச்சியுற்று உவகை யெய்தி நின்ற ஓர் உயிரோவியமாக வரைந்து காட்டுகின்றார். "தடாதகைப் பிராட்டியார் எட்டுத்திக்கினும் தம் வெற்றியை நிலைநாட்டக் கருதிப் போர்க்கோலம் பூண்டு தேர் ஏறிச் சென்றார்; வடகயிலை மலைப்பக்கம் வந்து நின்றார்; எதிரேற்ற சிவகணங்களையெல்லாம் வென்றார்; இவர் செயலறிந்து சிவபெருமான் வந்து கண்டார்; கண்டபோது மூன்று நகில்களில் ஒன்று மறைந்தது. மறைந்தவுடன் தம் காதலன் என அறிந்தார்; மறைந்த நகிலைப் பார்ப்பதுபோலத் தலை வளைத்து நின்றார். கடைக்கட்பார்வை காதலன்மேற் சென்றது; அஃது அவருக்கு அமுதவூற்றாக உயிர்தரும் மருந்தாக ஒளி வீசியது. நாணம் மேலெழுந்தது. தலை நிமிர்ந்து பார்த்திலர். நெற்றியில் வெயர்வை நீரரும்பியது; ஏக்கத்தாற் பெருமூச்சு எழுந்தது. தம்மை மறந்து தனி நின்றார். வளைத்த வில்லை மாநிலத்தில் ஊன்றினார்; வில்நுனியை விரல்நுனி தடவியது; உயிரோவியம்போல் உணர்ச்சியுடன் நின்றார்" என்றார் ஆசிரியர். காமம் என்ற சுவைக்குரிய மெய்ப்பாட்டு நிலை கண்டவர்போல விண்டனர். என்னே இவர்தம் புலமை!

தாயர் தந்தையர் தம் மக்கள் மெய்தீண்டுவதே உடற்கின்பம் என்றும், அவர் சொற்கேட்பதுவே செவிக்கின்பம் என்றும் மனங்கொள்வர். ஐம்புலநுக்கர்ச்சியால் அடையும் எவ்வின்பங்களும் மக்களைக் கண்டு மகிழ்வதால் வரும் இன்

பத்திற்கு இணையாகாது என்பது யாவரும் அறிந்ததொன்றே. வள்ளுவரும் ;"மக்கண் மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர், சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு" என்றார். இக் கருத்து விளங்க இவ்வாசிரியர் முத்தப்பருவத்தில் (சு௬) மேகத்தி னின்று விழு முத்தமும், கரும்பின் கணுவிற்றெறித்த முத்த மும், செந்தாமரை வெளியிற் சிந்து முத்தமும், சங்கமும் கமுகும் தந்த முத்தமும், மூங்கிற்கணுவின் வெடித்த முத்த மும், யானைத் தந்தத்தின் வந்த முத்தமும் அருமையான முத்தங்களேயாயினும் நின் செங்கனி வாய்த்திரு முத்தத்தில் ஒரு முத்தத்திற்கிணையாகா" என்று கூறி "நின் கூந்தல் முதலிய உறுப்புகட்குத் தோற்ற பொருள்கள் அவை" என்று மேலும் இழிவுபடுத்திக் கூறுகின்றார். பொருணயம் காண்க.

வருகைப்பருவத்தில் "தொடுக்குங் கடவுள்" (சுக) என்ற பாடலை ஆசிரியர் அரங்கேற்றும்போது மீனாட்சியம்மையார் ஒரு சிறுமியுருக் கொண்டுவந்து செவி மடுத்தனர் எனில் அதன் சொற்சுவையும் பொருட்சுவையும் சொல்லும் பான்மை யதோ? பழம் பாடற்றொடையின் பயனே! தமிழின் ஒழுகு நறுஞ்சுவையே! தொழும்பர் உளக்கோயிற் கேற்றும் விளக்கே! இளமென் பிடியே! உயிரோவியமே! வஞ்சிக்கொடியே! மலயத் துவசன் பெற்ற பெருவாழ்வே ! என்ற விளிகள் ஒவ்வொன்றும் உவமையாகுபெயராய் அம்மையார் தெய்வத் திருவருட் செயலைத்தெற்றென விளக்குகின்றன. அக் கவியில் "அகந்தைக் கிழங்கை யகழ்ந்தெடுக்கும் தொழும்பர்" என அடியாரைச் சிறப்பித்ததே பாராட்டற்பாலது. அகந்தை என்பது ஆணவம் என்று பொருள்படும். அது "நான்" என்றும் "எனது" என்றும் கருதி மயங்குவது; மூலமலம் என்றும் முன்னோர் கூறுவர். மக்கள் உள்ளமாகிய பள்ளத்தில் வேரூன்றிக் கிழங்குபோற் பருத்து இடங்கொண்டிருப்பதனால் அதனைக் கிழங்கு எனவும், அக் கிழங்கினை வேருடன் பறித்தெறிந்தவரே தொண்டராவர் என்றும், அவருள்ளமே தெய்வத்திற்குத் திருக் கோயில் ஆகும் என்றும் சுட்டிக்காட்டியது அவரது நுண்மா ணுழைபுல வண்மைக்கு எடுத்துக் காட்டாகும்.

"காசினியிற் பிள்ளைக்கவிக் கம்புலி புலியாம்" எனப் பேசிய பெருமை வாய்ந்த அம்புலிப் பருவத்தை ஆய்வோம். "சந்திரனே! நீ பதினாறு கலை வேறுபாடு உடையவன்; அம்மையும் அறுபத்து நான்கு கலை வேறுபாடுடையவள். அக்கலைகட்கு உறையுளாக இருப்பவன் நீ; அம்மையும் அக்கலைகட்கு உறையுளாக இருப்பவள். பாண்டியர் குல முதல்வன் நீ; அக்குலத்தின் வழி வந்தவள் இவள். சிவபெருமான் சடைமுடியில் இருக்கின்றனை நீ, இடப்பாகம் இருக்கின்றாள் இவள். நீ திருமகளுடன் பிறந்தனை; அத் திருமகளை ஆருயிர்ப் பாங்கியாக அண்மையில் வைத்திருப்பவள் இவள். ஆதலால் பல வகையிலும் ஒப்புடையை எனக் கருதி உன்னை யழைக்கின்றனள் இவள்" என ஒற்றுமை என்ற உபாயங் காட்டுகின்றார்.

இனி, வேற்றுமை காட்டும்போது "தெய்வக்குழாம் குலத்தோடு கூடிப்பிழிந்து ஊற்றிக் குடித்துச் சுவைத்து உமிழ்ந்த கோது என்றும், நச்சுப்பாம்பின் எச்சில் என்றும், களங்கமுடைய கயநோயன் என்றும் இழிவுபடுத்திக் காட்டுகின்றார். மேலும் அம்மை வீற்றிருக்கும் கூடற்பதி கொடும்பாவங்களைப் போக்கிய தலம் என்றும், நீ குரவற் கிழைத்த கொடும்பாவமும், தக்கனாகிய மாமன் உனக்குத் தந்த சாபமும், உன் களங்கம், நரை, திரை, கூன் முதலிய பிறவும் இப்பதிக்கு வரின் மாறும் என்றும் கூறுகின்றார்.

மற்றும் அம்புலியே! இளம்பருவத்தில் அம்மையின் நெற்றியழகைக் கவர்ந்து நிலவொளி வீசினை; அதனால் நிலா முற்றத்திற் கன்னியர் கூடி எருவிட்டு வணங்கும்போது பெற்றாய். இது நீ முதலிற்செய்த சிறுபிழை. பின் முழுமதியாக வானில் வந்தபோது அம்மையின் திருமுகத் தழகைக் கவர்ந்து சென்றாய். இது அதனினும் பெரும்பிழை. அம்மைக்கு மாற்றாளாகிய கங்கையுடன் கூடிக் கொண்கன் சடையில் அமர்ந்திருந்தாய் நீ. இப்பிழை பொறுக்கமுடியாத பெரும்பிழை; மறக்கமுடியாத பிழையும் ஆம். அதனையும் மறந்து உன்னையழைத்தனள் எனில் அம்மையின் பெருங்கருணை எம்மனோரால் கூறப்படுவதோ? பெருங்கருணைப் பெருமாட்டி

யுடன் விளையாடவா என அம்புலிக்குக் குற்றம் அமைத்த கற்பனைத்திறம் கவிஞர் வியக்கத் தக்கதன்றோ.

மேலும் இன்ன இன்ன தானம் பெறுவாய் என்றும வரா திருப்பின் இன்ன இன்ன தண்டம் பெறுவாய் என்றும் கூறி அம்புலியை விளிக்கும் முறை தனிச்சிறப்புடையதே. அம்புலிப் பருவப் பாடல்களை அறிஞர் ஆய்ந்து காண்க.

அம்மானைப் பருவத்தில் அம்மை முத்தாற் செய்த அம் மனையை எடுத்து வானில் எறிவது மணப் பந்தரில் சிவபிரான் மேல் அம்மையார் வெள்ளிய அமுதத்திரளையை எறிவது போலத் தோன்றுகின்றது (எ௭) என்றும்; செங்கையில் எடுத்தபோது சிவப்பு நிறமாகவும் கண்ணால் நோக்கியபோது கறுப்பு நிறமாகவும் நகைத்தபோது வெண்ணிறமாகவும் தோன்றுங்காட்சி, மக்கள் உயிர்க்குரிய இயற்கைக் குணத்தை இராசதம், தாமதம், சாத்துவிகம் என்ற முக்குணங்களும் பற்றுவதுபோலும் (எ௫) என்றும், முத்தாற்செய்த அம்மனை முன் செல்ல மாணிக்கத்தாற்செய்த அம்மனை பின் செல்வது தாமரைப்பூ ஆகிய தன் மனையாட்டியைத் தோய்ந்து சந்திரன் செல்ல அவனைப் பின்றொடர்ந்து செல்லும் சூரியன் போலத் தோன்றுகின்றது (எசு) என்றும் கற்பித்துக் கூறியது புலவர்க் குப் புது விருந்தாகும். ஆசிரியர் ஒரு துறவி; இல்வாழ்க்கை யறியா இளந்துறவி. இவர் ஒருவன் தன் மனையாளை மற்றொரு வன் தோய்ந்து செல்லக் கண்டால் அவனை ஒறுப்பதற்காகச் சினத்துடன் பின்றொடர்வான் என்பதைக் கண்டு கூறியது எத்துணையருமையான ஆராய்ச்சி! எவரும் போற்றத்தக்க புதுமையன்றோ? இது.

நீராடற் பருவத்தில் ஒரு நிகழ்ச்சி காணுங்கள். அம்மை நீராட வையைக்குச் சென்றாள். வாணியும் உடன் சென்றாள். "அம்மையே! நின் காதலர் முன்னாள் பிட்டுக்கு மண்சுமந்த பெருமைபெற்ற இடம் இதுதான்" என்று காட்டினள். அவள். கேட்டவுடன் மயங்கி வருந்திக் காதலாற் கசிந்து கண்ணீர்வார நெடிதுநின்றாள். அதனைக் கண்ட மற்றொருத்தி "அம்மே! இவ்வாறு கண்ணீர் வடித்தால் வையை வெள்ளம்பெருகி விடுமே.

வெள்ளங்கண்டால் நின் காதலர் மீண்டும் மண்சுமக்க வருவரே! அவர்க்கு வேலை கொடுப்பது நினக்குத் தகுமா? விழி நீர் வழிவதை நிறுத்தி விரைந்து நீராடவா'' என்றனள்.

மற்றொருத்தி "தாயே நீ விரைவாக நீராடு. ஆடினால் நின் கொங்கையிலணிந்த குங்குமச் சேறு வண்டலாகி மண்ணோடு கலந்து மணம் நிறைந்த மண்ணாகும். நின் காதலர் வறிதாய வண்டல் மண்ணையே கூடைகட்டி வாரிச் சுமந்தவர். மணம் பெற்ற மண்ணைக் கண்டால் விரும்பி வருவார். நின் காதலரைக் காண்பதற்கு நல்ல சூழ்ச்சிதான் இது. மண்ணைச் சுமக்க அடிக்கடி வந்தால் நின் மாற்றவள் ஆகிய கங்கைக்குச் சடையிற் குடியிருப்பும் ஒழியும். மற்றவள் தொலைந்தால் நினக்கு மனவமைதியும் உண்டாகும். நல்ல செயல்தான் நீ நீராடல்; ஆயினும், அவர் மண்சுமக்க வந்தால் பிட்டுச் சுட்டுக் கொடுப்பதற்கு ஒரு முதியவள் வேண்டுமே! அடித்து வேலை வாங்குவதற்கும் ஓர் ஆள் வேண்டுமே! இவ்விரண்டு குறையும் எப்படி நிறைவிப்பது? ஆய்ந்து செய்வோம். நீ நீராடு என்றாள்.

இதில் அருமைக் காதலரை அடிக்கடி மண்சுமக்க வரவழைப்பது பிழை என்பது ஒருத்தி கூற்று. வந்தால் நலம் என்பது மற்றொருத்தி கூற்று. நீராடாமல் நின்று கண்ணீர் வடித்தால் உன் காதலர் வருவார் என்பது ஒருத்தி கூற்று. நீராடினால்தான் வருவர் என்பது மற்றொருத்தி கூற்று. இவ்வாறு ஒன்றுக்கொன்று மாறுபட்டு வியப்பும் நகைப்பும் விளைக்குமாறு கூறியது ஆய்வார் மனத்திற்கு அரிய விருந்தாகும்; சிறுமியர் விளையாடும் போது இவ்வாறு அசதியாடல் இயற்கை என்பதை யுணர்ந்தே கூறினர் போலும்.

ஊசற் பருவத்தில் திருமகள் "மீனாட்சியம்மையின் திருவடிகளிற் பிறையழுத்திய தழும்பு கண்டனள் என்றும், அதனை வாணிக்குக் காட்டி வலம்புரிக் கீற்று இதுபார் என்று அசதியாடினள் என்றும் அதனைச் செவியேற்ற அம்மைநாணித் தலை கவிழ்ந்தனள் என்றும் சாற்றுகின்றார். இதன் உட்பொருள் யாது? அசதியாடுதற்குக் காரணம் என்ன? என்று ஆராய்வார்க்குப், புலனாகாது. மறைந்து நிற்கும் பொருள் எடுத்து

விளக்கினாலன்றி விளங்காது. வேறு சில இடங்களிலும் இக் கருத்தை இவர் வெளிப்படுத்துகின்றார். ஊடற்காலத்திற் சிவ பெருமான் முடி அம்மையின் அடியிற் படியும். அவ்வமயம் முடிமேல் அணிந்துள்ள பிறைக்கோடும் அழுந்தும். பன்னாளும் அவர் பணிந்து ஊடலைத் திருத்தும்போதெல்லாம் பிறைக் கோடு அழுந்தி அழுந்திச் சிவந்து வடுவாகும். அத் தழும்பைக் கண்டுதான் திருமகள் வலம்புரிக் கீற்றுப்போலும் இது என்று வாணிக்குக் காட்டி அசதியாடினள் என்று நாம் அறியவேண்டும். உலகியலில் நிகழும் ஊடலையும் கூடலையும் உணர்ந்து அம்மைக்கும் அப்பற்கும் கற்பித்தது புதுமைக் கற்பனை யன்றோ?

இவர் அமைத்திருக்கும் கற்பனையும் உயர்வு நவிற்சியும் உருவகமும் பிறவணிகளும் ஆங்காங்கே நின்று அணி செய்வன காணலாம்.

## உவமை

மரகதத் திருமேனி (கச) கொடி நுண்ணுசுப்பு (சச) மழ வேறு பொருவேலினைர் (உசு) பொய்வந்த நுண்ணிடை (கூச) துண்டுபடு மதிநுதல் (இச) கறையடி (அகூ) கிளிமொழி (அഖ) குடக்கனி (ഖ஖) இவை போன்ற பல வுவமைகள் காணலாம்.

## உருவகம்

கரடக்கரை, கடாமுடை கடல், சித்தமதா மொருதறி (ச) பவக்கடல் (சக) திருவருளமுது (சஉ) உயிராலவாலம், உணர்வு நீர், (சகூ) அகந்தைக் கிழங்கு, உளக்கோயில் (கக) முது தமிழுததி (ഖஉ) மருதத் தச்சன், கமலக்கோவில், தடங்கா மணப்பந்தர், மேகபடாம் (ഖக) இவை போன்ற பல உருவகங் களை இந் நூலிற் பரக்கக் காணலாம். உவமையினும் உருவகம் மிகப் பெருகி வருகின்றன. தற்குறிப்பேற்றம் அவற்றினும் சாலப்பெருகி யெங்குந் தழைத்திருக்கின்றன. தற்குறிப் பேற்றம்தான் கற்பனை. கற்பனைக்கு உறைவிடம் ஆயது இப்

பிள்ளைத் தமிழ் என்று துணிந்து கூறலாம். இன்னும் இந் நூலின் சிறப்பை எடுத்து விளக்கப் புகின் விரியும் எனக் கருதி விடுக்கின்றேன்.

இப் பிள்ளைத்தமிழ் ஒன்றைக் கற்றால் மற்றைப் பிள்ளைத் தமிழ் கற்பது மிகவும் எளிதாகும். ஆதலால் தமிழன்பர் யாவரும் இதன் அருமை பெருமை யுணர்ந்து உரையுடன் வாங்கிக் கற்றுப் புலமைபெறுக.



உ

திருச்சிற்றம்பலம்

# குமரகுருபர சுவாமிகள்

## வரலாற்றுச் சுருக்கம்

பாண்டி நாட்டிலேயுள்ள திருவைகுண்டத்திலே சைவ வேளாளர் குலத்திலே சண்முக சிகாமணிக் கவிராயரும் அவர் மனைவியார் சிவகாமியம்மையாரும் செய்த தவப்பயனாக ஒரு நன் மகனார் பிறந்தனர். அவர் ஐந்தாண்டளவும் பேசாதிருந்தமை கண்ட பெற்றோர், திருச்செந்தூர் சென்று முருகக் கடவுளை வழிபட அப்பெருமான் அருளால் அப்புதல்வர் ஊமை நீங்கிச் சைவசித்தாந்த சாத்திர சாரமாய் விளங்கும் '**கந்தர் கலிவெண்பா**' என்னும் பாடலை அப்பெருமான்மீது அருளிச் செய்தனர். முருகக் கடவுள் அவர் கனவிலே குமர வடிவங் கொண்டு "நீ குருபரனாகுக" என்றருளியதால் அன்று முதல் அவர் குமரகுருபரரென அழைக்கப்பட்டார்.

முருகக்கடவுள் ஆணைப்படி குமரகுருபரர் ஒரு சமயம் வட திசை செல்லும்போது "**மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்பாட**' அக்காலத் தரசராகிய திருமலை நாயக்கர் மீனாட்சியம்மையருளால் அதனைத் தெரிந்து அப் பிள்ளைத் தமிழை அம்பிகை திருமுன் அரங்கேற்றுவித்தனர். அப்பிள்ளைத் தமிழின் வருகைப்பருவத்து ஒன்பதாவது செய்யுளாகிய "தொடுக்குங் கடவுட் பழம் பாடற் றொடையின் பயனே' என்று தொடங்குஞ் செய்யுளுக்குக் குமர குருபரர் பொருளுரைக்கும் பொழுது மீனாட்சியம்மையார் அருச்சகரின் பெண்போன்று தோற்றம்கொண்டு அரசர் கழுத்திலணிந்திருந்த மணிவடத்தைக் கழற்றிக் குமரகுருபரர் கழுத்திலிட்டு மறைந்தருளினர். குமரகுருபரர் பின்னர் '**மீனாட்சியம்மை குறம்**' '**மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை**' '**மதுரைக் கலம்பகம்**' '**நீதிநெறிவிளக்கம்**' என்பனவற்றை இயற்றியருளினார்.

பின்பு திருவாரூர் சென்று தியாகராசப் பெருமானை வணங்கித் **'திருவாரூர் நான்மணிமாலை'** என்னும் நூலைக் குமரகுருபரர் பாடினார். அப்பால் தருமபுரஞ் சென்று அங்கே நான்காவது ஞான ஆசிரியராய் எழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிகரிடம் ஞானம் பெறவிரும்பி, அவராணைப்படி சிதம்பரஞ் செல்லப் புறப்பட்டு வைத்தீசுரன்கோவில் அடைந்து, குமரக் கடவுள்மீது **'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்'** என்னும் நூல் பாடினார். பின் சிதம்பரஞ் சென்று நடராசப் பெருமான்மீது **'சிதம்பரமும்மணிக்கோவை' 'சிதம்பரச்செய்யுட்கோவை'** என்னும் இரண்டு நூல்களையும், அம்பிகைமீது, **'சிவகாமியம்மை இரட்டைமணிமாலை'** என்னும் நூலையும் பாடினார். பின் தருமபுரம் சாரவும், மாசிலாமணி தேசிகர் அவருக்கு ஞானப்பேறெய்துவித்தனர். அக்கருணையை வியந்து தம்மாசிரியர் மீது 'பண்டாரமும்மணிக்கோவை' யென்னும் நூல் பாடி அதனை அவ்வாசிரியர்க்கு ஏற்பித்தனர்.

பின்னர் அம் மாசிலாமணி தேசிக ராணைப்படி தமக்குத் திருமலை நாயக்கராற் கொடுக்கப்பட்ட பொருளைக்கொண்டு காசிக்குப் போய், விசுவநாதப் பெருமான்மீது **'காசிக்கலம்பகம்'** என்னும் நூல் பாடினார். 'அந்நாட்டு மகம்மதிய அரசனிடம் இடம்பெற விரும்பிக் கலைமகள் மீது **'சகலகலாவல்லி மாலை'** பாடி இந்துத்தான் மொழியை யறிந்து, அரசனிடம் சென்று, பல சைவ மடங்களும், கேதாரநாதர் கோயிலும் அமைத்தனர்.

பின்னர் மூன்றுமுறை தருமபுரம் வந்து தம் ஆசிரியரை வணங்கிக் காசிக்குப் போய்ச் சைவசமய வளர்ச்சி கருதிப் பல காரியங்கள் செய்து, காசியில் ஒரு வைகாசித் திங்கள் தேய்பிறைப் பக்கத்து மூன்றாம் நாளில் வீடுபேறெய்தினர்.

---

# நூன்முகம்

மதுரையில் எழுந்தருளியிருக்கின்ற அங்கயற்கண் அம்மை எனும் மீனாட்சி அம்மைமீது 17 ஆம் நூற்றாண்டிற் சிறந்து விளங்கிய குமரகுருபர அடிகளால் பாடப் பெற்றது, இப் பிள்ளைத் தமிழ். இவ் வடிகள் புள்ளிருக்கு வேளூராகிய வைத்தீசுரன் கோயிலில் எழுந்தருளியிருக்கும் முத்துக்குமார சாமி மீதும் பிள்ளைக்கவி பாடியுள்ளார்கள். இவ் விரு பிள்ளைத் தமிழிலும் உள்ள சொல்நயம், பொருள் நயம், தொடை நயம், தொடர் நயம் முதலியன தனித்தனி படித்து இன்புறும் அன்பர்க்கு மேன்மேலும் அடிகள் நூல்களை முற்றும் படித்துச் சுவைத்து மகிழ்வுறும் பேற்றைப் பெரிதும் அளிப்பன.

கடந்த அரை நூற்றாண்டிற்கு மேலாக இப் பிள்ளைத்தமிழ் புலமையில் தேர்ச்சி பெறும் முறையில் பயில்வோர்க்குப் பாடப் புத்தகமாக இருந்த சிறப்புடையது. மதுரைத் தமிழ்ச் சங்கத் தில் யான் பயின்று வருங்காலத்து இப் பிள்ளைத்தமிழைக் காஞ்சிபுரம் வித்துவான் இராமசாமி நாயுடு இயற்றிய விரிவுரை யுடன் படித்துள்ளேன். அவ் வுரைநூலும் இற்றைநாள் எளிதிற் கிடைப்பதரிதாயிற்று.

சென்னைப் பல்கலைக் கழகத்தார் அடிகளார் பிள்ளைத் தமிழின் அருமை கருதி வித்துவான் முதனிலைத் தேர்வுச் செய்யுட் பாடப் பகுதியில், ஒன்றாய் அமைத்து வருவது குறிப் பிடத் தக்கது. இதனைச் சொற்பொருள் உணர்ந்து தெளியும் வண்ணம் விளக்கவுரை இயற்றுமாறு திருநெல்வேலி, தென் னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப் பொறுப் பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் என்னைப் பணித் தார்கள். அங்ஙனமே எனது பழைய உணர்வும், ஆசிரியத் தொழிலால் அமைந்த அழுந்திய அறிவும் இதனை இயற்றுங் காலத்து உதவி புரிந்தன. உரை வெளிவராத நூல்கட்கும் உரை எழுதும் உண்மை ஆற்றலை உதவிவரும் திருவருட்கு என்றும் கடப்பாடு உடையேன்.

இதற்குமுன் வெளியிட்ட பிள்ளைத்தமிழ் உரைநூலில் காணப்படும் பருவ விளக்கமும், நூற்பாகுபாடும் ஆங்காங்கு கண்டு தெளிதற்குரியன.

இவ் வுரைநூல் எழுதுங்காலத்து அச்சிட்டு வெளியாகியுள்ள திருப்பனந்தாள் மடத்து வெளியீடும், வேறுசில வெளியீடுகளும் ஒப்பு நோக்கித் தெளிவுபடுத்த உதவின. மாணவர்க்கு ஆங்காங்கு இன்றியமையாது வேண்டப்பெறும் இலக்கணக் குறிப்புகளும் சேர்க்கப்பட்டுள்ளன. மூலபாடமும் செய்யுள் நிலைபெயராத முறையில் சந்தி பிரித்து எழுதப்பட்டுள்ளது.

கலை வளர்க்கும் கட்டுப்பாடுடைய ஆசிரியப் பெருமக்களும் மாணவ நண்பர்களும் இவ்வுரையில் காணும் குணம் கொண்டு போற்றுவார்களாக!

புலவரகம், நெல்லை.
1—9—1959

அன்புள்ள,
பு. சி. புன்னைவனநாதன்



# மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

பிள்ளைத்தமிழ் என்பது தமிழ்மொழியிலுள்ள தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றாகவுள்ளது. இது தாம் வழிபடும் தெய்வங்களையேனும், பெரியார்கள் மன்னர்கள் வள்ளல்கள் முதலியோருள் ஒருவரையேனும் பிள்ளையாகப் பாவித்துத் தம் அன்புடைமை தோன்றப் பத்துப் பருவங்களமைத்து நூறு ஆசிரிய விருத்தத்தால் பாராட்டிப் பாடப்படுவதாகும். இஃது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படும். ஒவ்வொன்றும் பத்துப் பத்துப் பருவங்களுடையத். முதல் ஏழு பருவங்கள் இருபாற் பிள்ளைத் தமிழுக்கும் பொது. ஆண்பாற் பிள்ளைத்தமிழாயின் இறுதி மூன்று பருவங்கள் சிறுபறை 'முழக்கல், சிற்றில் சிதைத்தல், சிறுதேர் உருட்டல் என அமையும். பெண்பாற் பிள்ளைத் தமிழாயின் இறுதி மூன்று பருவங்கள் அம்மானை, நீராடல், ஊசற் பருவங்களாய் அமையும்.

## பருவ விளக்கம்

(க) காப்புப் பருவம்: *பிள்ளைத்தமிழ் பாடும் இடத்து இரண்டாம் திங்களிற் பிள்ளையைக் காக்க என்று காத்தற்கடவுள் முதலிய தேவர்களை வணங்கி வேண்டுவது.*

(உ) செங்கீரைப் பருவம்: *ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலை நிமிர்த்து முகம் அசைய ஆடுதல். இஃது ஐந்தாம் திங்களில் நிகழும்.*

(ங) தாலப் பருவம்: *தாலாட்டைக் கவனிக்கும் பருவம். தாலாட்டு-ஒருவகை காவசைப்பு. தாலாட்டையேல் தாலாட்டையேல் என்னும் அடுக்கு, தாலோ, தாலேலோ என இங்ஙனம்*

தால் எனத் தனித்தும் மரீஇயிற்று. ஏழாந் திங்களில் நிகழ்வது. எட்டாந் திங்களில் நிகழும் என்றும் கூறுவர்.

(௪) சப்பாணிப் பருவம்: இருகையும் ஒருங்கு சேர்த்துக் கொட்டும் பருவம். இஃது ஒன்பதாந் திங்களில் நிகழ்வது.

(௫) முத்தப் பருவம்: குழந்தையை, முத்தம் தருமாறு தாய் தந்தை முதலியோர் வேண்டிக்கொள்ளுதல். இது பதினொன்றாந் திங்களில் நிகழ்வது.

(௬) வருகைப் பருவம்: சிறுநடை யெய்தும் பருவம். இது பதின்மூன்றாம் திங்களில் நிகழ்வது. பன்னிரண்டாம் திங்களில் நிகழும் எனவும் கூறுவர்.

(௭) அம்புலிப் பருவம்: வானத்திலுள்ள நிலவைக் குழந்தையுடன் விளையாடுதற்குச் செவிலித்தாயர் முதலியோர் அழைக்கின்ற பருவம். பதினைந்தாந் திங்களில் நிகழ்வது. பதினெட்டாந் திங்களில் நிகழ்வது எனவும் கூறுவர்.

(௮) அம்மானைப் பருவம்: பிள்ளையை நோக்கி மாதர்கள் மூத்தம்மானை முதலிய அம்மானையை யெடுத்தாடியருள வேண்டுமெனக் கூறும் பருவம்,

(௯) நீராடற் பருவம்: பிள்ளையை நோக்கி மகளிர் ஆற்று வெள்ள நீராட வேண்டிக் கூறும் பருவம்.

(௧0) ஊசற் பருவம்: குழந்தையை ஊஞ்சலேற்றி மகளிர் அவ் ஊஞ்சலை ஆடச் செய்கின்ற பருவம். இறுதியில் உள்ள மூன்று விளையாடல்களும் ஐந்து ஆண்டு முதல் ஒன்பது ஆண்டு வரை நிகழும் செயல்களாகக் கூறப்படும்.

### விநாயகக் கடவுள்

கார்கொண்ட கவுள்மதக் கடைவெள்ள முங்கட்
கடைக்கடைக் கனலும்எல்லை
கடவாத தடவுக் குழைச்செவி முகந்தெறி
கடைக்கால் திரட்டஎங்கோன்
போர்கொண்ட எண்டோட் பொலன்குவடு பொதியும்வெண்
பொடிதுடி யடித்துவைத்துப்
புழுதியாட் டயராவோர் அயிராவ ணத்தலைவு
போர்க்களிற் றைத்துதிப்பாம்

**தார்கொண்ட மதிமுடி ஒருத்தன் திருக்கண்மலர்**
**சாத்தக் கிளர்ந்துபொங்கித்**
**தவழுமிள வெயிலுமழ நிலவுமள வளவலால்**
**தண்ணென்று வெச்சென்றுபொன்**
**வார்கொண் டணிந்தமுலை மலைவல்லி கர்ப்பூர**
**வல்லியபி ராமவல்லி**
**மாணிக்க வல்லிமர கதவல்லி அபிடேக**
**வல்லிசொல் தமிழ்தழையவே.**

(**சொற்பொருள்.**) தார்கொண்ட மதிமுடி ஒருத்தன் திருக்கண் மலர்சாத்த-மாலையை அணிந்திருக்கின்ற பிறை யைச் சடைமுடியில் கொண்டுள்ள ஒருவனை சிவபெருமான் திருக்கண்களைச் சாத்துதலால், கிளர்ந்து பொங்கித் தவழும் இளவெயிலும் மழ நிலவும் அளவளாவலால் - மேலெழுந்து நிறைந்து தவழ்கின்ற இளமையான வெயிலும் இளமையான நிலவும் கலத்தலால், தண் என்று வெச்சு என்று பொன் வார் கொண்டு அணிந்த முலை மலைவல்லி - குளிர்ச்சியுடையதாகவும் வெப்பமுடையதாகவும் காணப்படும் அழகிய கச்சணிந்த கொங்கைகளையுடைய மலைமகளும், கர்ப்பூரவல்லி அபிராம வல்லி மாணிக்கவல்லி மரகதவல்லி அபிடேகவல்லி - கர்ப்பூர வல்லி அபிராமவல்லி மாணிக்கவல்லி மரகதவல்லி அபிடேக வல்லி என்றழைக்கப்படுகின்றவளுமாகிய அங்கயற்கண் அம்மைமீது, சொல்தமிழ் தழைய - பாடப்படுகின்ற பிள்ளைத் தமிழ் நூல் தழைத்துச் சிறக்கும்படி, கார்கொண்ட கவுள்மதக் கடை வெள்ளமும் கண் கடைக்கடைக் கனலும் எல்லை கடவாது - கருநிறம் பொருந்திய கன்னத்தினின்றும் பெருகு கின்ற ஊழிமதப் பெருக்கும் கண்களினின்றும் பிறக்கின்ற ஊழிக்காலத் தீயும் தத்தம் வரம்பைத் தாண்டாதபடி, தடவுக் குழைச் செவி முகந்து எறிகடைக்கால்திரட்ட - விசாலமான குழைவுற்ற காதுகளால் எடுத்து வீசப்படுகின்ற ஊழிக்காற்றுத் தடுக்க, எம்கோன் - எம் சிவபெருமானது, போர்கொண்ட எண்தோள் பொலன்குவடு பொதியும் வெண்பொடி துடி அடி துவைத்துப் புழுதி ஆட்டு அயரா ஒர் அயிராவணத்து உலவு -

போர்த் தொழிலைச் செய்கின்ற எட்டுத் தோள்களிலும் அணிந் திருக்கின்ற வெண் திருநீற்றை மேன்மையான திருவடிகளால் மிதித்துப் புழுதியாக்கி விளையாடுகின்ற ஒப்பற்ற அயிராவணம் என்னும்படி உலவுகின்ற, போர்க்களிற்றைத் துதிப்பாம்-போர் செய்யவல்ல யானைமுகக்கடவுளின் திருவடிகளை வணங்குவாம்.

(விளக்கம்.) கடை - ஊழிக்கடை. விநாயகப் பெருமான் தம் கன்னங்களினின்று ஒழுகும் மதநீர்ப் பெருக்கமும், கண்களி னின்று பெருகும் நெருப்பும் தம் தம் வரம்பைக் கடந்து செல் லாதபடி காதுகள் அசைந்து எறிகின்ற பெருங்காற்றால் தடுத்துக் கொள்கின்றார் என்க. பொலங்குவடு - பொன்மலை, வெண் பொடி - வெண்சாந்து, திருநீறு. அயர் - செய். அயிராவணம் - பக்கத்திற்கு ஆயிரங் கொம்புகளைக் கொண்ட சிவபெருமானது யானை, அயிராவதம் - பக்கத்திற்கு இரண்டு கொம்புகளுடன் கூடிய இந்திரனது யானை; சிவபெருமான் முக்கண்ணன் எனப் படுவன். சூரியன் வலக்கண்ணாகவும் சந்திரன் இடக்கண்ணாகவும் நெருப்பு நெற்றிக்கண்ணாகவும் கொண்டிருப்பவன். சிவபெருமா னின் திருக்கண்கள் மூன்றும் அன்பு அறிவு ஆற்றல்களின் அடை யாளமாகவும் ஞாயிறு திங்கள் தீக்களின் அடையாளமாகவும் குறிக்கப்படும். வலக்கண், ஞாயிறு ஆற்றல்கள் எனப்படும்; நெற்றிக்கண் அறிவும் தீயும் எனப்படும்; இடக்கண், அன்பும் திங்களும் எனப்படும். இவற்றுள் வலக்கண்ணும் இடக்கண்ணும் அம்மையின் திருமார்பின்மேற் படுதலால் ஒருகாலத்தே வெம் மையும் தண்மையும் ஓரிடத்துத் தோன்றுவவாயின. அக் குறிப்பே 'தண்ணென்று வெச்சென்று' என்பதனால் பெறப்படும்.

உமாதேவியார், மலையரசன் மகளாகத் தோன்றியதனால் மலைவல்லி என்றும், அபிடேக பாண்டிய மன்னன் பச்சைக் கர்ப் பூர நீரால் மூழுக்காட்டுச் செய்ததனால் கற்பூரவல்லி என்றும், மிகுந்த அழகுடைமையால் அபிராமவல்லி என்றும், மாணிக்க நிறமும் மரகத நிறமும் கொண்டமையால் மாணிக்க வல்லி மரகத வல்லி என்றும் அழைக்கப் படலாயினர். (க)

---






## க. காப்புப் பருவம்

### திருமால்

**மணிகொண்ட நெடுநேமி வலயஞ் சுமந்தாற்ற**
**மாசுணச் சூட்டுமோட்டு**
**மால்களிறு பிடர்வைத்த வளரொளி விமானத்து**
**வாலுளை மடங்கல் தாங்கும்**
**அணிகொண்ட பீடிகையின் அம்பொன்முடி முடிவைத்தெம்**
**ஐயனொடு வீற்றிருந்த**
**அங்கயற் கண்ணமுதை மங்கையர்க் கரசியையெம்**
**அம்மனையை இனிதுகாக்க**
**கணிகொண்ட தண்துழாய்க் காடலைத் தோடுதேம்**
**கலுழிபாய்ந் தளறுசெய்யக்**
**கழனிபடு நடவையில் கமலத் தணங்கரசோர்**
**கையணை முகந்துசெல்லப்**
**பணிகொண்ட முடவுப் படப்பாய்ச் சுருட்டுப்**
**பணைத்தோள் எருத்தலைப்பப்**
**பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற**
**பச்சைப் பசுங்கொண்டலே.**

(சொ - ள்.) கணி கொண்ட தண்துழாய்க் காடு அலைத்து ஓடு தேம் கலுழி பாய்ந்து அளறு செய்ய - கண்ணியாகக் கட்டப்பட்ட குளிர்ந்த துளபக் கூட்டம் அலைபெற்று ஓடுகின்ற தேன் வெள்ளம் பரவிச் சேற்றைச் செய்ய, கழனிபடு நடவையில் கமலத்து அணங்கு அரசு ஒர் கை அணைமுகந்து செல்ல - அதனால் வயல் ஆகிய நெறியில் தாமரை மலரில் தங்கி யிருக்கின்ற பெண் தெய்வமாகிய திருமகள் ஒரு கையை அணையாகக் கொடுத்து அடுத்துச் செல்லவும், பணிகொண்ட முடவுப் படப்பாய்ச் சுருட்டு பணைத்தோள் எருத்து அலைப்ப - பாம்புகொண்ட வளைவாகிய படங்கள் அமைந்த பாயின் சுருள் திரட்சியையுடைய தோள் பிடரியை வருத்தவும், பழ மறைகள் முறையிட-பழமையான வேதங்கள் முறையிட்டுப் பின் செல்லவும், பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்

கொண்டல்-இனிய தமிழ்ப் பாடலின் பின்னர்ச் சென்ற மிகுந்த பசுமை நிறம் வாய்ந்த மேகம் போன்ற திருமால், மணிகொண்ட நெடுநேமி வலயம் சுமந்து ஆற்று மாசுணச் சூட்டு - பலவகை மணிகளைத் தன்னுட்கொண்ட நீண்ட கடலாற் சூழப்பட்ட பூமண்டலத்தைத் தாங்கி நிற்கின்ற ஆதி சேடனாகிய பாம்பின் உச்சிமேல், மோட்டு மால்களிறு பிடர் வைத்த வளர்ஒளி விமானத்து - பெருமையும் மயக்கமும் பொருந்திய ஆண் யானைகளின் எருத்தங்களால் தாங்கப்படும் பெருகிய ஒளியுடைய இந்திர விமானத்தில், வால்உளை மடங்கல் தாங்கும் அணிகொண்ட பீடிகையின் - வெள்ளிய பிடரிமயிரையுடைய சிங்கங்கள் தாங்கும் அழகிய பீடத்தில், அம் பொன்முடி முடிவைத்து எம் ஐயன் ஒடு வீற்றிருந்த அம் கயல்கண் அமுதை - அழகிய பொன்னாலாகிய கிரீடத்தைத் தன் திருமுடியிற் கவித்து எம் இறைவனாகிய சிவபிரானுடன் அரசு வீற்றிருந்த அழகிய கயல்மீன்போன்ற கண்களையுடைய அமுதம்போல்வாளை, மங்கையர்க்கு அரசியை எம் அம் மனையை இனிது காக்க - பெண் அரசியை எம் அன்னையை இனிமையாகக் காத்தருள்க.

(விளக்கம்.) மாசுணம் - பாம்பு. சூடு - உச்சி. மோடு - பெருமை. இந்திரன் எட்டு யானைகள் தாங்கிய விமானத்தை விண்ணுலகிலிருந்து விடுத்தனன். அவ் விமானத்தில் அங்கயற் கண்ணியும் சொக்கரும் வீற்றிருந்தனர் எனத் திருவிளையாடற் புராணம் கூறுவதால் "களிறு பிடர்வைத்த......விமானத்து" என்றார். அம்மனை - தாய். கணி கொண்ட-(யாவரும்) கருது தலைக்கொண்ட; கருதுகின்ற. தேம்கலுழி-தேனாகிய காட்டாறு. நடவை-வழி. துளசி மாலையிலிருந்து தேன் அருவியாக வழிந்து பெருகி வழியெல்லாம் வயல் போல இருந்தது என்பது கருத்து. பணி-பாம்பு. முடவுப் படங்கொண்ட பணிப்பாய்ச் சுருட்டு என மாற்றிப் பொருள் கொள்க. பழமறைகள் முறையிட்டுப் பின் செல்லும் மகிமை வாய்ந்த கடவுள் பைந்தமிழ்ப் பின் சென்றனர் எனத் தமிழ்மொழியின் பெருமையை விளக்கினர். பின் இரண் டடிகளிற்கூறியது திருமழிசையாழ்வார் வரலாற்றிலுள்ளது.

திருமழிசை யாழ்வார் காஞ்சிபுரத்தில் இருந்தார். கணி கண்ணன் என்ற மாணவனும் அவருடன் இருந்தார். திருவெஃகா வித் கோவிற்பணி புரிந்து வரும் ஒரு கிழவியை ஆழ்வார் இள மைப் பருவமுடையவ ளாக்கினர். இதனையறிந்த அந் நகர்ப்

*பல்லவ மன்னன் கணிகண்ணரை யழைத்து 'உங்கள் ஆசிரியரிடம் கூறி என்னை இளமைப் பருவமுடையவன் ஆகச் செய்யும்' என வேண்டினான். கணிகண்ணன் 'என்னால் இயலாது' என்றான். அரசன் சினந்து நாடு கடக்கும்படி ஆணை தந்தான். ஆசிரியரிடம் அதனைத் தெரிவித்துச் சென்றான் கணிகண்ணன். ஆழ்வார் திருவெஃகாவிற் சென்று திருமாலிடம் செய்யுள் பாடி நின்று புறப்பட்டனர். 'கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீகிடக்க வேண்டா - துணிவுடைய, செந்நாப் புலவன் யான் செல்கின்றேன் நீயுமுன்றன், பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்' என்பது அப்பாடல்; இதனைக் கேட்ட திருமால் உடனே அக் கோயிலை விட்டு நீங்கி ஆழ்வார் பின் சென்று தங்கினார். பல்லவவரசன் கோயிலில் விக்கிரகம் இல்லாமை கண்டு வருந்தி ஆழ்வார் இருக்குமிடஞ் சென்று வேண்டி யழைத்து வந்தான். ஆழ்வார், 'கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீ கிடக்க வேண்டும்—துணிவுடைய, செந்நாப் புலவன் யான் செல்லொழிந்தேன் நீயு முன்றன், பைந்நாகப் பாய் படுத்துக்கொள்' என்று பாடினர். திருமால் மீண்டு வந்து அக் கோயிலில் வீற்றிருந்தார்.* (உ)

சிவபெருமான்

(வேறு)

சிகர வடவரை குனிய நிமிர்தரு
செருவில் ஒருபொரு வில்லெனக் கோட்டினர்
சேடிகொள பறிதலை அமணர் எதிரெதிர்
செலவோர் மதிலைசோல் வைகையிற் கூட்டினர்
திருவும் இமையவர் தருவும் அரவொலி
செயவ லவர்கொள நல்குகைத் தீட்டினர்
சிறிய எனதுபுன் மொழியும் வடிதமிழ்
தெரியும் அவர்முது சொல்லெனச் சூட்டினர்
பகரும் இசைதிசை பரவ இருவர்கள்
பயிலும் இயல்தெரி வேள்வலைத் தோட்டினர்
பசிய அறுகொடு வெளிய நிலவிரி
பவள வனமடர் பல்சடைக் காட்டினர்
பதும முதல்வனும் எழுத அரியதோர்
பனுவல் எழுதிய வைதிகப் பாட்டினர்
பரசும் இரசத சபையில் நடமிடு
பாத பதயுகம் உள்ளம்வைத் தேத்துதும்

தகரம் ஒழுகிய குழலும் நிலவுமிழ்
தரள நகையும்எம் ஐயனைப் பார்த்தெதிர்
சருவி அமர்பொரு விழியும் மறுகிடை
தளர வளர்வதோர் செவ்விமுற் றுக்கன
தனமும் மனனுற எழுதி எழுதரு
தமது வடிவையும் எள்ளிமட் டூற்றிய
தவள மலர்வரும் இளமி னொடுசத
தளமின் வழிபடு தையலைத் தூத்திரை
மகரம் எறிகடல் அமுதை அமுதரு
மழலை பழகிய கிள்ளையைப் பேட்டன
மடவ நடைபயில் பிடியை விரைசெறி
வரைசெய் புயமிசை வையம்வைத் தாற்றிய
வழுதி யுடையகண் மணியோ டுலவுபெண்
மணியை அணிதிகழ் செல்வியைத் தேக்கமழ்
மதுரம் ஒழுகிய தமிழின் இயல்பயில்
மதுரை மரகத வல்லியைக் காக்கவே.

(சொ - ள்.) தகரம் ஒழுகிய குழலும் நிலவு உமிழ் தரள நகையும் - மயிர்ச்சாந்து அணிந்து ஒழுகுகின்ற கூந்தலும் முத்துப்போன்ற பற்களும், எம் ஐயனைப் பார்த்து எதிர் சருவி அமர்பொருவிழியும்-எம் இறைவனாகிய சோமசுந்தரக் கடவுளை நோக்கி எதிராக நின்று போர் செய்யும் கண்களும், மறுகு இடை தளர வளர்வது ஓர் செவ்வி முற்றுக் கனதனமும் - வருந்தும் இடையானது தளர்ச்சியடையும்படி வளர்ந்திருக்கின்ற ஒப்பற்ற பருவம் நிரம்பாத கனத்த கொங்கைகளும், மனன்உற எழுதி எழுதரு தமதுவடிவையும் எள்ளி - மனம் பொருந்த எழுதிப்பார்த்தும் எழுத முடியாத தம் வடிவங்களையும் இகழ்ந்து, மட்டு ஊற்றிய தவள மலர் வரும் இளமின் ஒடு சததள மின் வழிபடு தையலை - தேனை ஒழுக்குகின்ற வெண்டாமரையில் தங்கியிருப்பவளான நாமகளும் நூற்றிதழ்த் தாமரையான செந்தாமரை மலரில் தங்கியிருக்கும் இலக்குமியும் வழிபடுகின்ற மங்கையை (அழகுடையவளை), தூத்திரை மகரம் எறிகடல் அமுதை - தாவுகின்ற அலைகளையுடைய மகர மீன்கள் மோதுகின்ற திருப்பாற் கடலிற் தோன்றிய அமுதம்

போல்வாளை, அமுது உகு மழலை பழகிய கிள்ளையை - அமுதம் ஒழுகின்ற இளங்குதலைச் சொற்கள் பழகுகின்ற கிளியை, பேடு அனம் மடஅம் நடை பயில் பிடியை - பெண் அன்னம் போல இளமையான அழகிய நடையைப் பழகுகின்ற பெண் யானையை, விரைசெறி வரைசெய் புயமிசை வையம் வைத்து ஆற்றிய வழுதியுடைய கண்மணி ஒடு உலவு பெண்மணியை - மணம் நிறைந்த மலையை ஒத்த தோளில் பூமியைத் தாங்கி ஆட்சி செய்த பாண்டியனுடைய கண்மணியுடன் விளங்குகின்ற பெண்மணியை, அணிதிகழ் செல்வியை-அழகு விளங்குகின்ற செல்வமுடையவளை, தேம்கமழ் மதுரம் ஒழுகிய தமிழின் இயல்பயில் - தேன்போல் மணக்கின்ற இனிமை முதிர்ந்த தமிழ் மொழியின் இயல்புடன் பழகியிருக்கின்ற, மதுரை மரகத வல்லியைக் காக்க - மதுரை மரகதவல்லியைக் காக்கும் பொருட்டாக, சிகர வடவரை குனிய நிமிர் தரு செருவில் ஒருபொரு வில்லெனக் கோட்டினர் - உச்சியையுடைய வடமலையாகிய மேரு (வில்லாக) வளையும்படி நேர்ந்த போரில் ஒப்பற்ற போர் செய்யத்தக்க வில்லாக வளைத்தவர் (திரிபுரத்தை அழித்தவர்), செடி கொள் பறிதலை அமணர் எதிர் எதிர் செல ஓர் மதலை சொல் வைகையிற் கூட்டினர் - நாற்றங்கொண்ட பறிக்கப் பெறும் தலைமயிரையுடைய சமணர்கட்கு எதிராகச் சொற்போர் புரியத் திருஞான சம்பந்தர் ஆகிய இளைஞரின் திருப் பாசுரத்தை வைகை ஆற்றுப் பெருக்கில் நீரை எதிர்த்துச் செல்லும்படி செய்தவர், திருவும் இமையவர் தருவும் "அர" ஒலி செயவலவர் கொள நல்கு கைத்தீட்டினர்-திருவின் பெருக்கையும் தேவர்களுடைய கற்பக தருவையும் அரநாமத்தை உச்சரிக்கத் திறமுள்ளவர்களுக்குக்கொடுக்கின்ற கையெழுத்து உடையவர், சிறிய எனது புன்மொழியும் வடிதமிழ் தெரியும் அவர் முதுசொல் எனச் சூட்டினர் - அற்பமான என் சிறு சொற்களையும் ஆய்ந்து எடுத்த தமிழ் முழுவதும் தெரிந்த புலவருடைய பழைமையாகிய சொற்களைப்போலத் தலைமேற் கொண்டவர், பகரும் இசைதிசை பரவ இருவர்கள் பயிலும் இயல் தெரி வெள்வளைத் தோட்டினர் - படிக்கும் இசையானது (சங்கீதம்) எல்லாத் திக்கிலும் பரவும்படி அசுவதரன் கம்பளன்

ஆகிய இருவரும் பயில்கின்ற இசையிலக்கணம் அறிந்த வெண்ணிறம் பொருந்திய சங்கக் குழையினையுடையவர், பசிய அறுகொடு வெளிய நிலவிரி பவள வனம் அடர் பல்சடைக் காட்டினர் - பச்சை அறுகம்புல்லுடன் வெள்ளிய நிலவை விரிக்கின்ற செம்பவளக் காடுபோல நெருங்குகின்ற பல சடைக் கூட்டங்களையுடையவர், பதும முதல்வனும் எழுத அரியதொர் பனுவல் எழுதிய வைதிகப் பாட்டினர் - தாமரை நாயகனாகிய பிரம்மனாலும் எழுத முடியாத ஒப்பற்ற நூல் எழுதிய வேத நெறியோடு கூடிய பாடலையுடையவர், பரசும் இரசத சபையில் நடமிடு பரத பதயுகம் உள்ளம் வைத்து ஏத்துதும் - துதிக்கப் பெறுகின்ற வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடும் பரத நாட்டியத்தோடு கூடிய இரண்டு திருவடிகளையும் மனத்தில் பதித்துத் துதிப்போம்.

(வி - ம்.) வடவரை குனிய-மேருமலை வளைய. செரு-போர். கோட்டினர் - வளைத்தவர். செடி-நாற்றம். பறிதலையமணர்-தாமே தம் மயிரினைப் பறித்துக் கொள்ளும் இயல்புடைய சைனர், மயிர் பறித்துக் கொள்ளுதல், சமணரின் இயற்கை. மதலை-பிள்ளை; இது திருஞானசம்பந்தரையுணர்த்தியது. வளைத்தோடு-சங்கத்தோடு. பவளவனம் அடர்-பவளக் காட்டைப்போல் அடர்ந்த, பனுவல்-நூல்; இது இறையனார் அகப் பொருளை யுணர்த்தும். திருவாயில் வருவன எல்லாம் வேதம் ஆதலின் 'கொங்குதேர்' என்ற பாடலை வைதிகப் பாட்டு என்றார். சததளமின்-நூற்றிதழ்த் தாமரை மலரிலிருக்கின்ற திருமகள். வழுதி-மலயத்துவச பாண்டியன். தேங்கமழ் மதுரம்-தேனிற் கலந்த இனிமை. மதுரை மரகத வல்லியைக் காக்கப் பரத பதயுகம் உள்ளம் வைத்து ஏத்துதும் என வினை முடிவு செய்க. (க

சித்திவிநாயகக் கடவுள்

(வேறு)

**கைத்தல மோடிகு கரடக் கரைத்திரை**
**கக்குக டாமுடைக் கடலிற் குளித்தேமர்**
**சித்தம தாமோகு தழியில் துவக்குற**
**சித்தி விநாயகன் இசையைப் பழிச்சுதும்**

புத்தமு தோவருள் தழையத் தழைத்தவோர்
பொற்கொடி யோவென மதுரித் துவட்டெழு
முத்தமிழ் தேர்தரு மதுரைத் தலத்துறை
மூத்தன மேவுபெண் அரசைப் புரக்கவே.

(சொ - ள்.) புத்தமுதோ அருள்தழையத் தழைத்தது ஓர் பொற்கொடியோ என-புதிய அமுதமோ அல்லது அருள் தழைத்து ஓங்கும்படி தளிர்த்திருப்பதான ஓர் அழகிய கொடியோ என்று கூறும்படி, மதுரித்து உவட்டு எழு முத்தமிழ்-இனிமையாகப் பெருக்கெடுத்து ஓடுகின்ற மூவகைத் தமிழ் மொழியையும், தேர்தரு மதுரைத் தலத்து உறை-தெளிந்து உணர்கின்ற மதுரைப் பதியில் எழுந்தருளியிருக்கின்ற, மூத்தனம் மேவு பெண்ணரசைப் புரக்கவே-மூன்று முலைகள் பொருந்திய பெண்ணரசியாகிய மீனுட்சியம்மையைக் காக்கும் பொருட்டு, கைத்தலம் ஒடு இரு கரடம் கரை திரை கக்குகடாம் உடைக்கடலிற் குளித்து - துதிக்கையுடன் இரண்டு செவியடிகளிலும் உள்ள சுவட்டில் அலை பெருகுகின்ற மத நீரையுடைய கடலிற் குளித்து, எமர்சித்தப் அது ஆம் ஒரு தறியில் துவக்குறு சித்திவிநாயகன் இசையைப் பழிச்சுதும் - எம்போன்ற அடியார்களின் மனம் என்று சொல்லப்படுகிற கட்டுத்தறியில் கட்டப்படும் சித்திவிநாயகப் பெருமானது புகழினைச் சிறப்பாய்ப் பேசுவாம்.

(வி - ம்.) கரடம்-மதம் பாயும் சுவடு. கடாம்-மதம். சித்தமதாம் தறியில் துவக்குறு-'உள்ளமெனுங் கூடத்தில் ஊக்கம் எனும் தறி நிறுவி' என்ற பரஞ்சோதி வாக்கினடியை ஒத்திருப்பது கவனிக்க. மதுரித்து-இனிமையாகிய, தனம்-கொங்கை. பெண்ணரசைப் புரக்கச் சித்தி விநாயகரது இசையைப் பழிச்சுதும் என வினைமுடிவு செய்க. (௨)

முருகக்கடவுள்

(வேறு)

பமர மடுப்பக் கடாமெடுத் தூற்றுமோர்
பகடு நடத்திப் புலோமசைச் சூற்புயல்
புருகூ யிடக்கற் பகாடவிப் பாற்பொலி
பரவை யிடைப்பத் மமாதேனைத் தோற்றிய

குமரி யிருக்கக் கலாமயிற் கூத்தயர்
குளிர்புன மொய்த்திட் டசாரலிற்போய்ச்சிறு
குறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு
குமரனை முத்தக் குமாரனைப் போற்றதும்
இமிழ்திரை முற்றத் துமேருமத் தார்த்துமுள்
எயிறுகு நச்சுப் பணாடவித் தாப்பிசைத்
திறுக இறுக்கித் துழாய்முடித் தீர்த்தனோ
டேவரு மதித்துப் பராபவத் தீச்சுட
அமுதுசெய் வித்திட் டபோனகத் தாற்சுடர்
அடரும் இருட்டுக் கிரீவமட் டாக்கிய
அழகிய சொக்கற் குமால்செயத் தோட்டிகல்
அமர்செய் கயற்கட் குமாரியைக் காக்கவே.

(சொ - ள்.) இமிழ்திரை முற்றத்து மேரு மத்து ஆர்த்து-ஒலிக்கின்ற அலைகளையுடைய திருப்பாற்கடலில் மேருமலையை மத்தாக நிறுத்தி, முள் எயிறு உகு நச்சுப் பணாடவித் தாப்பு இசைத்து - முள்ளைப்போன்ற பற்களினின்று சிந்துகின்ற நஞ்சுடைய படக்கூட்டத்தைக் கொண்ட வாசுகி என்ற பாம்பாகிய கயிற்றைக் கட்டி, இறுக இறுக்கித் துழாய்முடித் தீர்த்தனொடு எவரும் மதித்து-நெருங்கும்படி இறுகக் கட்டித் துளபமாலையை முடித்திருக்கின்ற திருமால் முதலிய தேவர்கள் யாவரும் கடைதலால், பராபவத் தீச்சுட-அவமதிப்படையும்படி ஆலகாலம் என்னும் நஞ்சு சுடுவதற்கு வர, அமுது செய்வித்திட்ட போனகத்தால் சுடர் அடரும் இருட்டுக் கிரீவம் மட்டு ஆக்கிய-(தேவர்கள் முதலியவர் அச்சத்தைப் போக்கிக் காப்பான்) அந் நஞ்சை உணவாகக் கொள்ள (பக்கமிருந்த உமையினால் தடுக்கப்பட்டுக் கழுத்தில்) சூரியன் சந்திரன் ஒளியை அடர்க்கும் இருளையுடையதாகக் கழுத்தளவில் நின்றுவிடும்படி அருளிய, அழகிய சொக்கற்கு மால்செய-அழகிய சொக்கலிங்கப் பெருமானுக்கு ஆசையை விளைப்பதற்கு. தோட்டுஇகல் அமர்செய் கயற்கண் குமாரியைக் காக்க-அந்தக் காதில் அணிந்த தோட்டுடன் பகைபூண்டு போர் செய்கின்ற கயல்

மீன் போன்ற கண்களையுடைய மீனாட்சியம்மையான குழந்தையைக் காக்கும் பொருட்டு, பமரம் அடுப்ப கடாம் எடுத்து ஊற்றும் ஓர் பகடு நடத்தி-வண்டுகள் மொய்க்கும்படி மதம் பெருகி ஊற்றுகின்ற ஒப்பற்ற ஐராவதம் என்ற யானையைச் செலுத்தி, புலோமசைச் சூற்புயல் பருகியிடக் கற்பகாடவிப் பால் பொலி-இந்திராணியாகிய கருக்கொண்ட மேகம் பருகும்படி கற்பகச் சோலையில் நிறைந்திருக்கின்ற பரவை இடைபத்ம மாது எனத் தோற்றிய குமரி இருக்க-கடலில் தாமரையில் தங்கும் இலக்குமி போலத் தோன்றினவளான தெய்வயானை என்னும் இளம் பெண் மணம் பெற்றிருக்கவும், கலாமயிற் கூத்து அயர் குளிர்புனம் மொய்த்திட்ட சாரலில் போய்-தோகையையுடைய மயில்கள் கூத்து ஆடும் குளிர்ச்சியான தினைப் புனம் நிறைந்த மலைச்சாரலிற் சென்று, சிறு குறவர்மகட்குச் சலாம் இடற்கு ஏக்கறு குமரனை முத்துக் குமாரனைப் போற்றுதும்-சிறிய குறவர் குடியிற் றோன்றிய வள்ளி நாயகியான பெண்ணுக்கு வணக்கம் செய்ய ஏங்கி நின்ற குமரனை முத்துக் குமரனை வணங்குவோம்.

*(வி - ்.) பமரம்-வண்டு. வண்டு யானையின் மதநீரை யுண்ணும். பகடு - யானை; ஐராவதத்தை யுணர்த்தியது. புலோமசை - இந்திராணி; சூர்ப் புயல் என்றும் பாடம் உண்டு. அதற்குத் தெய்வமகளாகிய மேகம் எனப் பொருள் கொள்க. பரவை-கடல்; இது பருகியிடக் கற்ப காடவிப் பாற்பொலி என்ற குறிப்பால் இந்திரனை யுணர்த்தியது. இந்திரனிடத்துத் தெய்வயானை தோன்றினள் என்பது உபசார வழக்கு. இமிழ்தல்-முழங்குதல். மந்தரத்தை மத்தாகக் கூறுவதே வழக்கமாயினும் அது மேருவின் வட சிகரமாதல் பற்றி மேரு வென்றே கூறுதல் மரபு. ஆர்த்து-கட்டி; விறுத்தி. இகலுதல்-பொருதல். கிரீவம் - கழுத்து.* **(௭)**

பிரமதேவர்

(வேறு)

**மேகப் பகங்குழவி வாய்மடுத் தண்ணவும்**
**விடபுலம் விருந்த யரவும்**
**வெள்ளமுதம் வீசும் கருந்திரைப் பைந்துகில்**
**விசித்துடுத் துத்தி விரியும்**

நாகத்து மீச்சுடிகை நடுவட் கிடந்தமட
நங்கையைப் பெற்று மற்றந்
நாகனைத் துஞ்சுதன் றந்தைக்கு வந்துதவு
நளினக் குழந்தை காக்க
பாகத்து மரகதக் குன்றொன்றோர் தமனியக்
குன்றொடு கிளைத்து நின்ற
பவளத் தடங்குன் றுளக்கண்ண தென்றப்
பரஞ்சுடர் முடிக்கு முடிமூன்
றாகத் தமைத்துப்பின் ஒருமுடிதன் முடிவைத்
தணங்கரசு வீற்றிருக்கும்
அபிடேக வல்லியை அளிக்குல முழக்குகுழல்
அங்கயற் கண்ண முதையே.

(சொ - ள்.) பாகத்து மரகதக்குன்று ஒன்று ஓர் தமனியக் குன்றொடு கிளைத்து நின்ற பவளத் தடங்குன்று உளக்கண்ணது என்று-பக்கத்தில் பச்சைமலை ஒன்று ஒரு பொன் மலையுடன் சேர்ந்து நின்ற பவளப் பெருமலை தன் மனத்திடத்ததாகக் கருதி, அப்பரஞ்சுடர் முடிக்கு முடி மூன்று ஆகத்து அமைத்து - அந்தப் பரஞ்சோதியின் தலைக்கு அறிகுறியாக மூன்று முடிகளைத் தன் மார்பில் அமைத்துக் கொண்டு, பின் ஒரு முடி தன் முடி வைத்து அணங்கு அரசு வீற்றிருக்கும் அபிடேகவல்லியை-பின்னர் வேறொரு முடியைத் தனது தலையில் தரித்துத் தெய்வ அரசியாக வீற்றிருக்கின்ற அபிடேகவல்லியை, அளிக்குலம் முழக்கு குழல் அங்கயற்கண் அமுதை-வண்டுக் கூட்டங்கள் ஒலிக்கின்ற கூந்தலையுடைய அங்கயற் கண்ணியாகிய அமுதை; மேகப் பசுங்குழவி வாய் மடுத்து உண்ணவும் விண்புலம் விருந்து அயரவும்-மேகமாகிய இளங்குழந்தை வாய்வைத்துக் குடிக்கவும் தேவர்கள் விருந்துண்ணவும், வெள் அமுதம் வீசும் கருந்திரைப்பைந்துகில் விரித்து உடுத்து-வெண்ணிறம் பொருந்திய அமுதத்தை எறிகின்ற கரிய அலைகளையுடைய கடல் ஆகிய பச்சை உடையை விரித்து உடுத்தி, உத்தி விரியும் நாகத்து மீச்சுடிகை நடுவண் கிடந்த மடநங்கையைப் பெற்று - படப் பொறி விரிகின்ற

ஆதிசேடன்மேல் உச்சிக்கு நடுவில் தங்கிய இளநங்கையான பூமிதேவியைப் பெற்று, மற்று அம் நாகனைத்துஞ்சு தன் தந்தைத்கு உவந்து உதவு-பின் அழகிய ஆதிசேடனுகிய பள்ளியில் துயில் கொள்கின்ற தன் தந்தையாகிய திருமாலுக்கு மகிழ்ந்து கொடுத்த, நளினக் குழந்தை காக்க-தாமரையில் தங்கி யிருக்கின்ற குழந்தையான பிரமதேவன் காப்பாளுக.

*(வி - ரை.) காகம் - பாம்பு. ஆதிசேடனைக் குறித்தது இஃது. மீ சுடிகை: இதனை சுடிகை மீ என மாற்றுக; உச்சிமேல் என்பது பொருள். உத்தி - படப்பொறி. மரகதக் குன்று: திருமால். பவளத் தடங்குன்று: சிவபெருமான். தமனியக் குன்று: பிரமதேவர். சிவபெருமானது வலப்புறத்தில் பிரமதேவனும் இடப்புறத்தில் திருமாலும் தோன்றுவாராதலின் இங்ஙனம் குறித்தனர். (௫)*

தேவேந்திரன்

(வேறு)

கழியும் கருங்கட் குண்டகழி
சுவற்றும் சுடர்வேல் சிரித்த
தோன்றற் களித்துச் சுறவுயர்த்த
சோக்கப் பெருமான் சேக்கர்முடி
பொழியும் தரங்கக் கங்கைவிரைப்
புனல்சால் பாய்ச்சத் தழைக்கவிசி
புவனம் தனிபூத் தருள்பழுத்த
பொன்னங் கொடியைப் புரக்கவழிக்
திழியுக் துணர்க்கற் பகத்தினற
விதழ்த்தேன் குடித்துக் குமட்டியெதிர்
எதேக்குஞ் சிறைவண் டுவட்டுறவுண்
டிரைக்கக் கரைக்கும் மதக்கலுழிக்
குழியுஞ் சிறுகண் எற்றகுமுக்
குரல்வெண் புயலும் பசும்புயலும்
குன்றம் குலைய உகைத்தேறும்
குலிசத் தடக்கைப் புத்தேளே

(சொ - ள்.) வழிந்து இழியும் துணர்க்கற்பகத்தின் நறவு இதழ்த்தேன் குடித்து - வடிந்து ஒழுகுகின்ற பூங்கொத்துகளையுடைய கற்பக மரத்தின் மணம் பொருந்திய மலரிதழில்

உள்ள தேனைப் பருகி, குமட்டி எதிர் எடுக்கும் சிறைவண்டு உவட்டு உற உண்டு இரைக்கக் கரைக்கும் மதக்கலுழி-குமட்டு தலைச் செய்து வாந்தி பண்ணும் சிறகுகளையுடைய வண்டுகள் வெறுக்கக் குடித்து ஒலிக்கும்படி கரையப்பண்ணுகிற மதநீர்ப் பெருக்கமும், குழியும் சிறுகண் ஏற்று உரு ம குரல் வெண் புயலும் கரும்புயலும் - ஆழ்ந்திருக்கின்ற சிறிய கண்களையும் இடியேற்றின் ஒலியையும் உடைய வெண்மேகம் போன்ற ஐராவதத்தையும் கரியமேகத்தையும், குன்றம் தலைய உகைத்து ஏறும் குலிசம் தடக்கைப் புத்தேள்-மலைகள் நடுங்கும்படி ஏறிச் செலுத்துகின்ற வச்சிரப் படையைத் தாங்கும் இந்திரனாகிய தேவன்; சுழியும் கருங்கண் குண்டு அகழி சுவற்றும் சுடர்வேல் கிரிதிரித்த தோன்றற்கு அளித்து - சுழி யெறிகின்ற கரிய இடமகன்ற ஆழமான கடலை வற்றும்படி செய்த ஒளிர்கின்ற வேற்படையை மேருமலையைச் செண்டினால் மாறுபடுத்திய அண்ணலாகிய முருகப் பெருமானுக்குக் கொடுத்து, சுறவுயர்த்த சொக்கப் பெருமான் செக்கர்முடி பொழியும் தரங்கக் கங்கை விரைப்புனல் கால் பாய்ச்ச - மகர மீன் கொடியை உயர்த்தியுள்ள சொக்கலிங்கப் பெருமானின் சிவந்த முடியினின்று வழியும் கங்கையாகிய வாசனை (வேகம்) நீரைக் கால்வாய் வழி பாய்ச்சுதலால், தழைந்து விரிபுவனம் தனிபூத்து அருள் பழுத்த பொன் அம் கொடியைப் புரக்க - செழித்துப் பரந்த பூவுலகத்தைத் தானே படைத்து அருள் கனிந்த பொற்கொடியாகிய மீனாட்சியம்மையைக் காப்பானாக.

(வி - ரை.) கற்பகத்தின் தேன் குடித்து வெறுத்த வண்டுகட்கு, மதம் புதிய மணம் பொருந்தியதாக இருத்தலால் பின்னும் உவட்ட உண்டது என்றார். கலுழி-நீர்ப் பெருக்கம். ஏற்றுஉருமு - இடியேறு. இடியேறு போன்ற குரல் என்க. மதக்கலுழியையும் சிறு கண்களையும் உருமுக் குரலையும் உடைய வெண்புயல் என்று கூட்டுக. வெண்புயல் என்பது முன் வந்த அடைமொழிகளால் ஐராவதம் என்ற யானையை உணர்த்தியது. இந்திரனுக்கு மேகமும் வாகனம் ஆதலால் கரும்புயலும் உகைத்து ஏறும் என்றார். இந்திரன் முன் மலையின் சிறகினை வச்சிராயுதத்தால் அறுத்தவன் ஆதலால் அவன் வாகனங்களில் ஏறும்போது மலைகள் அஞ்சி நடுங்கும் என்பது தோன்ற, 'குன்றம் தலைய' என்றார். குலிசம் - வச்சிரம். புத்தேள் - தெய்வம். உமை, முரு

கனுக்குத் தன் பெயர் வைத்து வேல் கொடுத்தனள், அதனால் சக்தி என்று பெயர் பெற்றது வேல். இதனை, 'அமையாப் பேரளி யுமைகண் ணின்று தற்பெயர் புணர்த்திக் கற்பினொடு கொடுத்த அமையா வென்றி யரத்த நெடுவே லோய்' என்ற கல்லாடச் செய்யுள் அடிகளும் காட்டும். கிரி - மலை. இது மேருவை யுணர்த் தியது. திரித்த - திரியும்படி செய்த; சுழலும்படி செய்த. சிவ பெருமான் வேல் வளை செண்டு கொடுத்தார் என்பதும், அவற் றிற் செண்டு கொண்டு மேருவை யடிக்க அம் மலை நடுங்கியது என்பதும் திருவிளையாடலிற் காண்க. பூத்து - படைத்து; உண் டாக்கி. 'புவன முழுது ஒருங்கு ஈன்றாள்' என்றும், 'அண்டமீன் றளித்த கன்னி' என்றும் வருவன காண்க. குலிசத் தடக்கைப் புத்தேள் பொன்னங் கொடியைப் புரக்க எனக் கூட்டுக. (எ)

திருமகள்

(வேறு)

வெஞ்சூட்டு கேட்டுடல் விரிக்கும் படப்பாயல்
மீமிசைத் துஞ்சு நீல
மேகத்தின் ஆகத்து விடுசுடர்ப் படலைமணி
மென்பால் உறைத்த கோக்கு
பஞ்சூட்டு சீறடி பதைத்துமதன் வெங்கதிர்ப்
படுமிள வெயிற்கு டைந்தும்
பைந்துழாய்க் காடுவிரி தண்ணிழல் ஒதுங்குமோர்
பசுங்கொடியை அஞ்ச லிப்பாம்
மஞ்சூட்ட கட்டுநெடு வான்முகடு துருவுமொரு
மறையோ திமஞ்ச லிக்க
மறிதிரைச் சிறைவிரியும் ஆயிர முகக்கடவுள்
மந்தா கினிப்பெ யர்த்த
செஞ்சூட்டு வெள்ளோ திமங்குடி யிருக்கும்வளர்
செஞ்சடைக் கருமி டற்றுத்
தேவுக்கு முன்னின்ற தெய்வத்தை மும்முலைத்
திருவைப் புரக்க வென்றே.

(சொ - ள்.) மஞ்சு ஊட்டு அகட்டு நெடுவான் முகடு துருவும் ஒரு மறை ஓதிமம் சலிக்க - மேகங்களைச் செறித்த

உள் இடத்தையுடைய வானத்தின் உச்சியை ஊடுருவித் தேடிய வேதம் ஓதும் ஓர் அன்னமான பிரமதேவன் காண முடியாமல் தவிக்க, மறிதிரை சிறை விரியும் ஆயிர முகக் கடவுள் மந்தாகினிப் பெயர்த்த செஞ்சூட்டு வெள் ஓதிமம் குடியிருக்கும் - மடங்கி எறிகின்ற அலைகளாகிய சிறகுகள் விரியப்பெற்ற ஆயிரம் முகங்களையுடைய தெய்வமாகிய மந்தாகினி என்ற பெயரையுடைய சிவந்த உச்சியை யுடைய வெண்ணிற அன்னமானது குடிகொண்டிருக்கின்ற, வளர்செஞ்சடை கருமிடற்றுத் தேவுக்கு முன்நின்ற தெய்வத்தை - வளர்கின்ற சிவந்த சடையையும் கரிய கழுத்தையும் உடைய தேவனை சிவபெருமானுக்கு முன் போரில் எதிர்த்து நின்ற தெய்வத்தை, மும்முலைத் திருவைப் புரக்க என்று-மூன்று முலைகளையுடைய செல்வியைக் காப்பாற்றுக என்று, வெஞ்சூட்டு நெட்டுடல் விரிக்கும் படப் பாயல் மீமிசைத் துஞ்சு - வெவ்விய உச்சியையும் நீண்ட உடம்பையும் விரிக்கின்ற படத்தையும் உடைய பாம்பாகிய படுக்கையின்மீது துயிலுகின்ற, நீலமேகத்தின் ஆகத்து விடுசுடர் படலை மணிமென்பரல் உறுத்த நொந்து - நீலநிறமுள்ள மேகம் போன்ற திருமாலின் மார்பில் அணிந்துள்ள மிகுந்த ஒளியை யுடைய மாலையாகிய கௌத்துவத்தில் உள்ள மணிகளாகிய மெல்லிய பருக்கைக் கற்கள் அழுத்துதலால் வருந்தி, பஞ்சு ஊட்டு சீறடி பதைத்தும் - செம்பஞ்சுக் குழம்பு பூசப்பட்ட சிறிய அடிகள் துடித்தும், அதன் வெங்கதிர் படும் இளவெயிற்கு உடைந்தும் - அதனுடைய கொடிய கிரணங்களில் உண்டாகும் இளவெயிலுக்கு வருந்தியும், பைந்துழாய்க் காடு விரி தண்ணிழல் ஒதுங்கும் ஓர் பசுங்கொடியை அஞ்சலிப்பாம்- பசிய துளபமலர் மாலையின் தொகுதி பரப்புகின்ற குளிர்ந்த நிழலில் சென்று தங்கும் ஒரு பசுங்கொடிபோல்வாளான திருமகளை வணங்குவாம்.

(வி - ரை.) துருவும் - தேடிய. மறை - வேதம். ஓதிமம் - அன்னம். வேதத்தை யுணர்ந்த அன்னம் என்ற குறிப்பால் பிரமனை யுணர்த்தியது. கங்கையை வெள்ளோதிமம் என்றார். மந்தாகினி - கங்கை. கங்கையின் அலையைச் சிறகுகளாக உருவகஞ் செய்தார். பிரமனாகிய அன்னம் முடியைக் காணாமல் அலைய மந்தாகினியாகிய அன்னம் கண்டு குடியிருக்கின்ற செஞ்

சடை எனப் புகழ் தோன்றியது. தடாதகைப் பிராட்டியாராக மதுரையிற் பிறந்து திக்கு விசயம் செய்ய இமயமலைச் சாரல் சென்று சிவபெருமான் முன் போர் செய்ய நின்றதைக் கருதி, 'தேவுக்கு முன் நின்ற தெய்வத்தை' என்றார். 'சக்தி சிவம்' எனக் கூறும்போது 'சக்தி' என்ற பெயர் முன் நிற்பதையும் கூறலாம். படப்பாயல் எனவே பாம்பு வருவித்துப் பொருள் கூறப் பட்டது. நீலமேகம் என்பது உவமையாகுபெயராய்த் திருமாலை யுணர்த்தியது. படலையும் மணியும் எனக் கொள்க. படலை - மாலை. பரல் - பருக்கைக் கல். பஞ்சு+ஊட்டு, மஞ்சு+ஊட்டு, சிறுமை+அடி=சிறடி எனப் பிரிக்க. வெம்மை+சூட்டு, செம்மை+சூட்டு எனப் பிரித்துக் கொள்க. (அ)

கலைமகள்

வெள்ளித் தகட்டுநெட் டேடவிழ்த் தின்னிசை
விரும்பும் சுரும்பர் பாட
விளைநறவு கக்கும் பொலன்போதுட் டலர்கமல
வீட்டேக் கொழித்தெ டுத்துத்
தெள்ளித் தெளிக்கும் தமிழ்க்கடலின் அன்பினைத்
திணையென வெடுத்த இறைநூல்
தெள்ளமுது கூட்டுணுமோர் வெள்ளோதி மத்தினிரு
சீறடி முடிப்பம் வளர்பைங்
கிள்ளைக்கு மழலைப் பசுங்குதலை ஒழுகுதீங்
கிளவியும் களிம யிற்குக்
கிளரிளஞ் சாயலும் நவ்விக்கு நோக்கும்விரி
கிஞ்சுகச் சூட்ட ரசனப்
பிள்ளைக்கு மடநடையும் உடனுடு மகளிர்க்கோர்
பேதைமையும் உதவி முதிராப்
பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளுமொரு பாண்டிப்
பிராட்டியைக் காக்க வென்றே.

(சொ - ள்.) வளர்பைங் கிள்ளைக்கு மழலைப் பசுங்குதலை ஒழுகு தீங்கிளவியும் - தன்னிடம் வளர்கின்ற பச்சைக்கிளிக்கு இளமையாகிய இனிய திருந்தாச் சொல்லாக வெளிவருகின்ற இனிய சொல்லையும், களிமயிற்கு கிளர் இளம் சாயலும் - களிப்

புடன் கூடிய மயிலுக்கு விளங்குகின்ற இளமையான சாயலேயும் (நிறத்தையும்), நவ்விக்கு நோக்கும் - மானுக்குப் பார்வையையும், விரிகிஞ்சுகச் சூட்டு அரச அன்னப்பிள்ளைக்கு மடநடையும் - மலர்ந்த முருக்கம்பூப் போன்ற உச்சிக்கொண்டையை யுடைய அரச அன்னப் பிள்ளைக்கு இள நடையையும், உதவி முதிராப் பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளும் ஒரு பாண்டிப் பிராட்டியைக் காக்க என்று - கொடுத்து முதிர்ச்சியுறாத பிள்ளைப் பருவத்திலேயே ஈகைத் தன்மையும் கொண்டுள்ள ஒப்பற்ற பாண்டிமாதேவியைக் காப்பாயாக என்று, வெள்ளித் தகட்டு நெட்டேடு அவிழ்த்து இன்இசை விரும்பும் சுரும்பர் பாட - வெள்ளி நிறமுள்ள தகட்டு வடிவுற்ற நீண்ட இதழ்களை விரியச் செய்து இனிய இசை பாட விரும்பும் வண்டுகள் பாடலால், விளைநறவு கக்கும் பொலன் பொகுட்டு அலர் கமல வீட்டு - விளைந்த தேனைச் சொரியும் பொன் மயமான கொட்டையையுடைய மலர்ந்த தாமரையாகிய வீட்டிலிருந்து, கொழித்து எடுத்து தெள்ளி தெளிக்கும் தமிழ்க்கடலின் - கொழித்தெடுத்துத் தெள்ளிப் புடைக்கும் தமிழாகிய கடலின், ஐந்திணை என எடுத்த இறைநூல் தெள் அமுது கூட்டு உணும் - "அன்பின் ஐந்திணை" என்று தொடங்கும் இறையனார் அகப்பொருள் ஆகிய தெளிந்த அமுதினைக் கொள்ளைகொண்டு உண்கின்ற; ஓர் வெள்ஓதிமத்தின் இரு சீறடி முடிப்பம் - ஒப்பற்ற வெள்ளையன்னமான கலைமகளின் இரண்டு சிறிய அடிகளையும் நம் தலைமேல் வைத்து வணங்குவாம்.

(வி - ம்.) அவிழ்த்து - மலர்த்தி. கக்கும் - சொரியும். அன்பின் ஐந்திணை என எடுத்த இறைநூல் - அன்பினைந்திணை என்னும் தொடக்கத்தையுடைய இறையனார் அகப்பொருள் என்னும் நூல். நவ்வி - மான். வெள்ளோதிமம், உவமையாகு பெயராய்க் கலைமகளை யுணர்த்தியது. சூட்டு - உச்சிக் கொண்டை. பிள்ளைமை - இளமைப் பருவம். கிஞ்சுகம் - முருக்கு; இஃது ஆகு பெயராய் அதன் மலரை யுணர்த்தியது. கிள்ளைக்குத் தன் கிளவியும், மயிற்குச் சாயலும், நவ்விக்கு நோக்கும், அன்னப் பிள்ளைக்கு நடையும், மகளிர்க்குப் பேதைமையும் உதவியதனுல் "பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளும் பிராட்டி" என்றார். வள்ளன்மை - கொடைத் தன்மை, கமல வீட்டிலிருந்து தமிழ்க்கடலில் வடித்

*தெடுத்த இறைநூல் தெள்ளமுதத்தை யுண்ணும் வெள்ளோதிமம் என்பது குறிப்பால் கலைமகளாகிய தெய்வத்தைக் காட்டியது. வெள்ளித் தகடு என்பது வெள்ளைத் தாமரையைக் குறிப்பால் உணர்த்தியது. நெடுமை+ஏடு=நெட்டேடு. சுரும்பு, சுரும்பர் எனப் போலியாயிற்று.* (௯)

## துர்க்கை

வடிபட்ட முக்குடுமி வடிவேல் திரித்திட்டு
வளைகருங் கோட்டு மோட்டு
மகிடம் கவிழ்த்துக் கடாங்கவிழ்க் குஞ்சரகண்
மால்யானை வீங்க வாங்கும்
இடிபட்ட கொடிநுண் நுசுப்பிற் குடைந்தேனச்
சுடுகடைக் கனலி னூண்டும்
சுழல்கண் முடங்குளை மடங்கலை உகைத்தேய
சூரிப் பிணவு காக்க
பிடிபட்ட மடநடைக் கேக்கற்ற கூந்தற்
பிடிக்குழாம் சுற்ற ஒற்றைப்
பிறைமருப் புடையதோர் களிற்றினைப் பெற்றெந்தை
பிட்டுண்டு கட்டுண்டுநின்
றடிபட்ட திருமேனி குழையக் குழைத்திட்ட
அணிமணிக் கிம்பு ரிக்கோ
டாகத்த தாகக் கடம்பா டவிக்குள்விளை
யாடுமோர் மடப்பிடி யையே.

(சொ - ள்.) பிடிபட்ட மடநடைக்கு ஏக்கற்ற கூந்தற் பிடிக்குழாம் சுற்ற - பிடிபோன்ற இள நடைக்கு ஒத்திலேம் என்று தாழ்ந்து வருந்திய கூந்தலையுடைய பெண்கள் கூட்டம் சுற்றவும், ஒற்றைப் பிறை மருப்பு உடையது ஓர் களிற்றினைப் பெற்று - ஒன்றாகிய பிறைபோல் வளைந்த கொம்பையுடையதாகிய ஓர் ஆண் யானையைப் பெற்று, எந்தை பிட்டு உண்டு கட்டுண்டு நின்று அடிபட்ட திருமேனி குழைய குழைத்திட்ட - எம்பிரான் ஆகிய சோமசுந்தரக் கடவுள் (வந்தி அளித்த)

பிட்டினை வாங்கி யுண்டு அவள் அன்பிற் கட்டுப்பட்டு நின்று (பாண்டிய மன்னன்) பிரம்பின் அடியைப் பொறுத்த அழகிய உடம்பு (கச்சிக் கம்பை நதியில் சிவலிங்க பூசை செய்யுங் காலத்து வெள்ளம் வந்தமையின் இறுகத் தழுவிய காரணத் தால்) குழையும்படி செய்த, அணிமணிக் கிம்புரிக்கோடு ஆகத்து அது ஆக - அழகிய மணிகள் அழுத்திச் செய்த கிம்புரி என்னும் பூணை அணிந்த யானைக் கொம்பு ஆகிய தனங்கள் மார்பில் இருக்க, கடம்ப அடவிக்குள் விளையாடும் ஓர் மடப்பிடியை - கடம்பவனத்தில் விளையாடுகின்ற ஒப்பற்ற இளம் பெண் யானையாகிய மீனாட்சியம்மையை; வடிபட்ட முக்குடுமி வடிவேல் திரித்திட்டு - கூர்மை பொருந்திய மூன்று தலையுடன் கூடிய வடித்த சூலப்படையைச் சுழற்றி, வளை கருங் கோட்டு மோட்டு மகிடம் கவிழ்த்து - வளைந்திருக்கின்ற கொம்பின் சிறப்புடைய எருமைக்கடா ஆகிய அசுரனைத் தொலைத்து, கடாம்கவிழ்க்கும் சிறுகண்மால் யானை வீங்க வாங்கும் துடிபட்ட கொடி நுண் நுசுப்பிற்கு உடைந்து என - மதம் கொழிக்கும் சிறிய கண்களையுடைய மயக்கத்தைச் செய் கின்ற யானையாகிய தனங்கள் பருத்ததனால் விளைந்த துடி (உடுக்கை) போன்றதும் கொடி போன்றதுமான சிறிய இடைக்குத் தோற்றதென்று கருதி, சுடுகடைக் கனலி தூண் டும் சுழல்கண் முடங்கு உளை மடங்கலை உகைத்து ஏறு - சுடு கின்ற கடையூழி நெருப்பைத் தூண்டுகின்ற சுழல்கின்ற கண் களையும் வளைந்த பிடரிமயிரையும் உடைய சிங்கத்தை ஏறிச் செலுத்துகின்ற, சூர் அரிப்பிணவு காக்க - அச்சத்தைத் தரு கின்ற பெண் சிங்கமாகிய துர்க்காதேவி காக்கக் கடவள்.

(வி - ம்.) முக்குடுமி வடிவேல் - முத்தலைச் சூலம். வடித் தல் - கூர்மையாக்கப்படுதல். மோட்டு மகிடம் - பெரிய உடம் பையுடைய எருமைக்கடா. முடங்கு உளை - வளைந்த பிடரி மயிர். சூர் அரிப் பிணவு - அச்சத்தைத் தரும் பெண் சிங்கம். மடங்கல் - சிங்கம். வென்றாரைத் தோற்றார் சுமத்தல் மரபு. பிடிபட்ட மடநடை - பிடியைப் போன்ற மெல்லிய நடை, பிடி யானையானது அழிக்தொழிதற்கு ஏதுவாகிய நடை எனலுமாம். ஒற்றைப் பிறை மருப்புடைய களிறு - விநாயகர். மணிக் கிம்புரிக் கோடு என்றது கொங்கையை மடப்பிடியாக உருவகம் செய்தமை யின் இங்ஙனம் கூறினர். கடம்பாடவி - கடப்பங்காடு, மதுரை.

*அடவியிற் பிடி விளையாடுவது இயற்கை. மடப்பிடியை அரிப் பிணவு காக்க என்றியைக்க.* (௧0)

## சத்தமாதர்கள்

(வேறு)

**கடகளிறுதவுக பாய்மிசைப் போர்த்தவள்**
**கவிகுவி துமகலின் வாரியைத் தூர்த்தவள்**
**கடல்வயி றெரியவோள் வேலினைப் பார்த்தவள்**
**கடிகமழ் தருமலர் தார்முடிச் சேர்த்தவள்**
**இடியுக அடலரி ஏறுகைத் தூர்த்தவள்**
**எழுதரு முழுமறை நூலினிற் கூர்த்தவள்**
**எயிறுகோ டேழுதேழு பாரினைப் பேர்த்தவள்**
**எனுமிவர் எழுவர்கள் தாள்முடிச் சூட்டுதும்**
**குடமொடு குடவியர் பாணிகைக் கோத்திடு**
**குரவையும் அலதோர்ப ணுமுடிச் சூட்டருள்**
**குதிகொள நடமிடும் ஆடலுக் கேற்பவோர்**
**குழலிசை பழகளி பாடிடக் கேட்டுடை**
**மடலவிழ் துளபந ருவெடுத் தூற்றிட**
**மழகளி றெனஎழு கார்முகச் சூற்புயல்**
**வரவரும் இளையகு மாரியைக் கோட்டையில்**
**மதுரையில் வளர்கவு மாரியைக் காக்கவே.**

(**சொ - ள்.**) குடம் ஒடு குடவியர் பாணிகைக் கோத்திடு குரவையும் அலது - குடக்கூத்தும் இடைப் பெண்களின் கைகளைக் கோத்தாடுகின்ற குரவை என்கின்ற கூத்தும் அல்லாமல், பணு முடிச்சூட்டு அருள் குதிகொள நடம் இடும் ஆடலுக்கு ஏற்ப ஓர் குழல் இசை பழகு அளி பாடிட கேட்டு - படத்தையுடைய தலையின் உச்சியில் நின்று கருணைமேல் எழும்படி நடம் புரியும் ஆட்டத்துக்குத் தகுதியாக ஒப்பற்ற குழலோசையைப் பழகிய வண்டுகள் பாடக் கேட்டு, உடை மடல் அவிழ் துளபம் நறு எடுத்து ஊற்றிட - உடைந்து மடல்கள் விரிகின்ற துளசி மாலையானது தேனை மிகுத்துச்

சொரியும்படி, மழகளிறு என எழு கார்முகச் சூற் புயல் வர - இளங்களிறுபோல் எழுகின்ற கார்காலத்துக் கருப்பங்கொண்ட மேகம் ஆகிய திருமால் தோன்ற வரும், இளைய குமாரியை கோட்டு எயில் மதுரையில் வளர் கவுமாரியைக் காக்க - அவன் பின் வந்த இளம் கன்னியைச் சிகரங்கொண்ட மதில்சூழ்ந்த மதுரையில் வளர்கின்ற அங்கயற்கண்ணியைக் காக்கும் பொருட்டு; கடகளிறு உதவு கபாய் மிசைப் போர்த்தவள் - (தாருகாவன முனிவர்கள் கொல்ல அனுப்பிய) மத யானை தந்த தோல் ஆகிய நிலை அங்கியை மேலே போர்த்தவள், கவிகுவி துறுகலின் வாரியைத் தூர்த்தவள் - குரங்குகள் குவித்த சிறு கற்களினால் மன்னுர் குடாக்கடலை மேடாக்கியவள் (அணையிட்டவள்), கடல் வயிறு எரிய ஒள் வேலினைப் பார்த்தவள் - கடலினது வயிறு எரியும்படி ஒள்ளிய வேற்படையைப் பார்த்து ஏவியவள், கடிகமழ் தருமலர் தார்முடிச் சேர்த்தவள் – மணங் கமழ்கின்ற கற்பகத் தருவின் மலரை மாலையாகப் புனைந்து முடியிற் சேர்த்தவள், இடி உக அடல் அரி ஏறு உகைத்து ஆர்த்தவள் - இடியும் சிதறும்படி வலியுற்ற ஆண்சிங்கத்தினைச் செலுத்தி முழக்கம் புரிந்தவள், எழுத அரு முழுமறை நூலினில் கூர்த்தவள் - எழுதுதற்கருமையான வேத நூல்களில் நிறைந்த அறிவுள்ளவள், எயிறுகொடு உழுது எழு பாரினைப் பேர்த்தவள் - வராகம் ஆகிக் கொம்பினால் உழுது ஏழுலகங்களையும் போர்த்தெடுத்தவள், எனும் இவர் எழுவர்கள்தாள் முடிச் சூட்டுதும்-என்று சொல்லப்படுகின்ற ஏழு மாதர்களின் திருவடிகளையும் நம்தலைமேற் கொண்டு பணிவோம்.

(வி - ரை.) *கபாய் - சட்டை. கவி - குரங்கு. துறுகல் - நெருக்கமான மலைகள். வயிறு - நடு இடம். அரி ஏறு - ஆண் சிங்கம். கூர்த்தவள் - மிக்க ஊக்கத்தை யுடையவள், அபிராமி. குடமொடு - குடம் என்னுங் கூத்துடன். இது திருமாலுக்குரிய கூத்து. குடவியர்-கோவியர். குழல்-வேய்ங்குழல். அம்பிகையைத் திருமாலுக்குத் தங்கை என்றல் மரபு. எழுமாதராவார் :— (க) மாகேசுவரி, (உ) நாராயணி, (ங) கௌமாரி, (ச) இந்திராணி, (ரு) காளி, (சா) அபிராமி, (எ) வராகி என்பவர்.*

*சிவபெருமான் யானைத்தோல் போர்த்தவர் ; அவரது செயல் மாகேசுவரியின் செயலாகக் கூறப்பட்டது. வாரியைத் தூர்த்தது*

நாராயணன் செயல்; அது நாராயணியின் செயலாயிற்று. கடல் வயிறெரிய வேல் ஏவியது குமரன் செயல்; இது கௌமாரியின் செயலாகக் கூறப்பட்டது. கற்பகத் தருவின் மலர் மாலையணிதல் இந்திராணியின் செயல். சிங்கத்தை ஊர்தியாகக் கொண்டு ஏறி நடத்தியது காளியின் செயல். வேத நூல்களிற் கூர்மையான அறிவு பெறுதல் அபிராமியின் செயல். வராக வுருவமாகிக் கொம் பிறைற் பூமியைப் பெயர்த்தது திருமால் செயல்; அது வாராகியின் செயலாயிற்று. இவ்வாறு அவ் வேழுமாதர்கள் செயலும் இங்குக் கூறப்பட்டன. குடக் கூத்து, குரவைக் கூத்து, காளிங்கன் மேல் ஆடிய கூத்து ஆகிய இவற்றுக்குத் தக்கபடி புள்ளாங்குழல் ஊதினர் என்பதும் அவ்விசையைக் கேட்டு அதுபோல வண்டினங்கள் பாடினவென்றும் பாடிய வண்டுகட்குப் பரிசாகத் துளசி தேனை வார்த்தன என்றும் இயைபு படுத்தியிருக்கும் நயம் காண்க. சுற்புயல் - திருமால். வர - முதலில் தோன்ற. வரும்-பின் தோன்றிய. இளைய குமாரி - தங்கை. சிவபெருமான் இடப் பாகத்திலிருந்து முதலில் திருமாலும் அவருக்குப் பின் உமையும் தோன்றினர் என்று புராணங் கூறும். (கக)

முப்பத்துமூவர்

(வேறு)

அமரில் வெந்நிடுமவ் வுதியர் பின்னிடுமோர்
அபயர் முனைனிடுவ னத்தோக்க ஓடவும்
அளவும் எம்முடைய திறையி தென்னமுடி
அரசர் எண்ணிலரோர் முற்றத்து வரடவும்
அகில மன்னரவர் திசையின் மன்னரிவர்
அமரர் என்னுமுறை திக்கேட்டும் முடவும்
அமுத வெண்மதியின் மரபை உன்னிஉனி
அலரி அண்ணல்முழு வெப்பத்து முழ்கவும்
குமரி பொன்னிவைகை பொருநை நன்னதிகள்
குதிகொள் விண்ணதியின் மிக்குக் குலாவவும்
குவடு தென்மலையின் சிகர திண்மைசுரர்
குடிகொள் பொன்மலைது தித்துப்ப ராவவும்
குமரர் முன்னிகுவர் அமரர் அன்னையிவள்
குமரி இன்னமுமே னச்சித்தர் பாடவும்
குரவை விம்மஅர மகளிர் மண்ணிலெழில்
குலவு கன்னியர்கள் கைக்கொக்க ஆடவும்

கமலன் முன்னிவிடும் அரச அன்னமெழு
கடலில் அன்னமுடன் நட்புக்கை கூடவும்
கரிய செம்மலோடும் இளைய செம்மல்விடு
கருடன் மஞ்ஞையோடோர் கட்சிக்குள் ஊடவும்
கடவி விண்ணரசு நடவும் வெம்முனைய
களிறு கைம்மலைசெல் சோப்பத்து வீழவும்
கனக மன்னுதட களினி துன்னியிரு
கமல மின்னுமொரு பத்மத்துள் மேவவும்
இமயம் என்னமனு முறைகோள் தென்னருமெம்
இறையை நன்மருகே னப்பெற்று வாழவும்
எவர்கோல் பண்ணவர்கள் எவர்கோல் மண்ணவர்கள்
எதுகோல் பொன்னுலகே னத்தட்டு மாறவும்
எழில்செய் தென்மதுரை தழைய மும்முலையோ
டெழுமென் அம்மனைவ னப்புக்கோர் காவலர்
இருவர் எண்மர்பதி னொருவர் பன்னிருவர்
எனுமவிண் ணவர்கள் முப்பத்து மூவரே.

(**சொ - ள்.**) அமரில் வெந்இடும் அவ் உதியர் - போரில் முதுகுகாட்டி ஓடும் அந்த வலியற்ற சேரர், பின் இடும் ஒர் அபயர் முன்னிடு வனத்து ஒக்க ஓடவும் - இவரை அடுத்து முதுகு காட்டும் சோழ மன்னர்கள் இவர்கள் தாங்கள் கருதிய காட்டில் ஒரு சேர ஓடவும், அளவும் எம் உடைய திறை இது என்ன முடி அரசர் எண்ணிலர் ஓர் முற்றத்து வாடவும் - எங்கள் திறைப்பணம் இதோ உள்ளது அளந்து எடுத்துக் கொள்ளுங்கள் என்று கூறி அளவில்லாத முடிமன்னர்கள் அரண்மனை வாயிலில் வாடி நிற்கவும், அகில மன்னர் அவர் திசையின் மன்னர் இவர் அமரர் என்னும் உரை திக்கு எட்டும் மூடவும் - பூவுலக மன்னர்கள் அவர்கள் திசை காக்கும் காவலர்கள் இவர்கள் தேவர்கள் இவர்கள் என்று கூறும் சொல் எட்டுத் திக்கிலும் நிறையவும், அமுத வெண்மதியின் மரபை உன்னி உனி அலரி அண்ணல் முழு வெப்பத்து மூழ்கவும் - அமுத கலையை யுடைய வெண்திங்களின் குலத்தை நினைத்து நினைத்துச் சூரியனாகிய தேவன் முழுவெம்மையுள் மூழ்கவும், குமரி பொன்னி வைகை பொருநை நன்னதிகள் குதிகொள்

விண் நதியின் மிக்குக் குலாவவும் - கன்னியாகுமரி, காவிரி, வைகை, தாம்பிரபர்ணி என்னும் நல்ல ஆறுகள் குதித்தலைக் கொண்ட ஆகாய கங்கையிலும் மிகுந்து உலாவவும், குவடு தென்மலையின் நிகரது இன்மை சுரர் குடிகொள் பொன்மலை துதித்துப் பராவவும் - பொதிய மலையின் குவட்டுக்கு மற்ற மலைகளின் குவடு ஒப்பில்லாமையைக் கூறித் தேவர்கள் வாசஞ் செய்கின்ற பொன்மலை (மேரு) போற்றித் துதிக்கவும், குமரர் முன் இருவர் அமரர் அன்னை இவள் குமரி இன்னமும் எனச் சித்தர் பாடவும் - பிள்ளையார் முருகரை முன் பெற்றவள் தேவர்களையும் பெற்ற தாய் இவள் இன்னமும் குமரி (கட்டழியாதவள்) யாகவே விளங்குகின்றாள் என்று சித்தர்கள் பாடவும், குரவை விம்ம அரமகளிர் மண்ணில் எழில் குலவு கன்னியர்கள் கைக்கு ஒக்க ஆடவும் - தெய்வ மாதர்கள் குரவைப் பாட்டுப் பெருகப் பூவுலகிலுள்ள அழகு வாய்ந்த கன்னியர்களுடன் கைகோத்து ஆடவும், கமலன் முன்னிவிடும் அரச அன்னம் எழுகடலின் அன்னமுடன் நட்புக் கைகூடவும் - பிரமன் கருதிச் செலுத்துகின்ற அரசவன்னமானது (மதுரையிலுள்ள) எழுகடலின் அன்னத்துடன் நட்புக் கொண்டொழுகவும், கரிய செம்மலொடும் இளைய செம்மல்விடு கருடன் மஞ்ஞையொடு ஓர் கட்சிக்குள் ஊடவும் - கரிய செம்மலான திருமாலும் இளைய செம்மலான முருகப் பெருமானும் விடுகின்ற கருடனும் மயிலும் ஒரு கூட்டில் இருந்து விளையாடவும், கடவி விண்ணரசு நடவும் வெம்முனைய களிறு - இந்திரன் செலுத்தி நடாத்துகின்ற கொடிய போர்முனையிலுள்ள ஐராவதம் என்ற யானை, கைம்மலை சொல் கொப்பத்து வீழவும் - மற்றை யானைகள் விழுகின்ற பள்ளத்தில் வீழவும், கனக மன்னுதட நளினி துன்னியிரு கமலமின்னும் ஒரு பத்மத்துள் மேவவும் - பொற்றாமரை பொருந்திய அகன்ற தீர்த்தத்திற் படிந்து திருமகள், கலைமகள் ஆகிய தாமரை மலர் மகளிர் இருவரும் ஒரு தாமரைப் பூவில் வசிக்கவும், இமயம் என்ன மனுமுறைகொள் தென்னரும் எம் இறையை நன்மருகு எனப் பெற்று வாழவும் - இமயமலையரசனைப் போல மனுமுறையின்படி அரசுபுரியும் பாண்டிய மன்னரும் எம் இறைவனைச் சிறந்த மருமகனாக அடைந்து வாழவும், எவர்கொல் பண்ணவர்கள் எவர்கொல் மன்னவ

வர்கள் எதுகொல் பொன் உலகு எனத் தட்டு மாறவும் - தேவர்கள் யாவர், பூமியிலுள்ளவர்கள் யாவர் தேவருலகம் எது, பூவுலகம் எது? என்று பிரித்தறிய முடியாது தட்டுமாறி நிற்கவும் (தடுமாறி நிற்கவும்), எழில் செய் தென் மதுரை தழைய மும்முலையொடு எழும்என் அம்மனை வனப்புக்கு ஓர் காவலர் - அழகுகொண்ட தென்மதுரை தழையும்படி மூன்று முலைகளுடன் தோன்றியருளிய என் அன்னையின் அழகுக்கு ஒப்பற்ற காவல் புரிகின்றவர்கள், இருவர் - அசுவினிதேவர் இருவரும், எண்மர்-வசுக்கள் எட்டுப் பேரும், பதினொருவர் - உருத்திரர் பதினொருவரும், பன்னிருவர் - சூரியர் பன்னிருவரும், எனும் அ விண்ணவர்கள் முப்பத்து மூவர் - என்று சொல்லப்படுகின்ற அம் முப்பத்து முக்கோடி தேவர்களுமாவார்களாக.

*(வி - ம்.) அலரி - சூரியன். தென் மலையின் குவடு என மாற்றுக. எழுகடல் - மதுரையிலுள்ள ஒரு சிவதீர்த்தம். இளைய செம்மல் - முருகக் கடவுள். கமலன் - பிரமதேவன். கட்சி - கூடு. கனக மன்னுதட நளினி - பொற்றாமரைத் தடாகம். தடம் - அகலம். பண்ணவர் - தேவர். தடாதகைப் பிராட்டியார் மதுரையிற் பிறந்தபோது இவ்வாறு பல பொருள்களும் செயல்களும் மாறின எனக் காண்க. (கஉ)*

---

## உ. செங்கீரைப் பருவம்

நீராட்டி ஆட்டுபோற் சுண்ணந் திமிர்ந்தள்ளி
நெற்றியில் தோட்டிட்டவெண்
நீற்றினொடு புண்டரக் கீற்றுக்கும் ஏற்றிடவோர்
நித்திலச் சுட்டிசாத்தித்
தாராட்டு சூழியக் கொண்டையும் முடித்துத்
தலைப்பணி திருத்திமுத்தின்
தண்ணொளி ததும்பும் குதம்பையோடு காதுக்கோர்
தமனியக் கோப்புமிட்டுப்
பாராட்டு பாண்டிப் பெருந்தேவி திருமுலைப்
பாலமுதம் ஊட்டியோகுநின்
பால்காறு குமுதம் கனிந்தூறு தேறல்தன்
பட்டாடை மடிநனைப்பச்
சீராட்டி வைத்தமுத் தாடும் பசுங்கிள்ளை
செங்கீரை ஆடியருளே
தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை ஆடியருளே.

(சொ - ள்.) நீர்ஆட்டி ஆட்டுபொன் சுண்ணம் திமிர்ந்து- நீரில் முழுக்காட்டிப் பூசத்தக்க அழகிய வாசனைப்பொடி பூசி, அள்ளி நெற்றியில் தொட்டுஇட்ட வெண் நீற்றினொடு புண்டரக் கீற்றுக்கும் ஏற்றிட - நெற்றியில் அள்ளித் தொட்டிட்ட வெண் நீற்றினொடு திரிபுண்டரமாக இடப்பட்டுள்ள வரைகட்கும் ஏற்ற படியாக, ஓர் நித்திலச் சுட்டி சாத்தி - ஒரு முத்துச் சுட்டியை அணிந்து, தார் ஆட்டு சூழியக் கொண்டையும் முடித்து தலைப் பணி திருத்தி-மாலையணிந்த உச்சிக் கொண்டையும் முடித்துத் தலைக்குரிய அணியையும் சிறப்புடன் அமைத்து, முத்தின் தண்ஒளி ததும்பும் குதம்பைஒடு காதுக்கு ஒர் தமனியம் கொப்பும் இட்டு - முத்தின் குளிர்ந்த ஒளி பெருகுகின்ற குதம்பை என்னும் அணியுடன் காதுக்கு ஒரு பொற்கொப்பும் அணிந்து, பாராட்டு பாண்டிப் பெருந்தேவி திருமுலைப்பால்

அமுதம் ஊட்டி - பாராட்டுதலைச் செய்கின்ற பாண்டியன் பெருந்தேவியானவள் தன் திருமுலைப்பாலை உண்பித்து, ஒரு நின் பால்நாறு குமுதம் கனிந்து ஊறுதேறல் தன் பட்டாடை மடி நனைப்ப - ஒப்பற்ற உனது பால்மணக்கின்ற செங்குமுத மலர் போன்ற செவ்வாயிற் கனிந்து ஊறுகின்ற தேன் தனது பட்டாடையின் மடியை நனைக்க, சீராட்டி வைத்து முத்து ஆடும் பசுங்கிள்ளை செங்கீரை ஆடியருள் - சிறப்புச் செய்து முத்தம் இடுகின்ற பச்சைக்கிளியே! செங்கீரை ஆடியருள்க, தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒரு செல்வி - மலையத்துவச பாண்டியனுக்கும் இமயமலை மன்னனாகிய இமவானுக்கும் ஒப்பற்ற திருமகளாகத் தோன்றியவளே! செங்கீரை ஆடியருள்க.

(வி - ரை.) முத்தாடுதல் - முத்தமிடுதல். பாண்டிப் பெருந்தேவி - மலையத்துவச பாண்டியன் மனைவியாகிய காஞ்சன மாலை. குமுதம்-அல்லி; இஃது உவமையாகு பெயராய் வாயை யுணர்த்தியது. பெருந்தேவி சீராட்டித் திமிர்ந்து சாத்தி முடித்துத் திருத்தி இட்டு ஊட்டிச் சீராட்டி முத்தாடும் கிள்ளை ஆடியருள் என்று வினைமுடிவு செய்க.

உண்ணிலா உவகைப் பெருங்களி துளும்பநின்
றன்றிருத் தாதைநின்னை
ஒருமுறை கரம்போத்தி வருகென அழைத்திடுமுன்
ஓடித் தவழ்ந்துசென்று
தண்ணுலா மழலைப் பசுங்குதலை அமுதினிய
தாய்வயிறு குளிரவூட்டித்
தடமார்ப நிறைதுங் குமச்சே றளைந்துபொன்
தாள்தோய் தடக்கைபற்றிப்
பண்ணுலா வடிதமிழ்ப் பைந்தாமம் விரியும்
பணைத்தோள் எருத்தமேறிப்
பாசொளிய மரகதத் திருமேனி பச்சைப்
பசுங்கதிர் ததும்பமணிவாய்த்
தெண்ணிலா விரியநின் றருடும் பசுந்தோகை
செங்கீரை ஆடியருளே
தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை ஆடியருளே.

(சொ - ள்.) உள் நிலா உவகைப் பெருங்களிதுளும்ப நின்று உன் திருத்தாதை - உள்ளத்தில் ஒளிர்கின்ற பெரு மகிழ்ச்சி ததும்ப நின்று உன் சிறந்த தந்தையார், நின்னை ஒருமுறை கரம் பொத்தி வருக என அழைத்திடுமுன் ஓடித் தவழ்ந்து சென்று-உன்னை ஒரு தடவை கையை வளைத்து வருக என்று அழைப்பதன்முன் தவழ்ந்து ஓடிப் போய், தண்உலாம் மழலை பசுங்குதலை அமுது இனியதாய் வயிறு குளிர ஊட்டி - குளிர்ச்சி நிலவுகின்ற இளமையாகிய இனிய குதலைச் சொல் ஆகிய அமுதை இனிய தாயினது வயிறு குளிரும்படி ஊட்டி, தடமார்பம் நிறை குங்குமச் சேறு அளைந்து-பெரிய மார்பில் அணிந்துள்ள குங்குமக் குழம்பிற் படிந்து, பொன்தாள் தோய் தடக்கை பற்றி-அழகிய முழங்காலளவு படிகின்ற பெரிய கையைப் பிடித்து, பண்உலாம் வடி தமிழ்ப் பைந்தாமம் விரியும் பணைத்தோள் எருத்தம் ஏறி-இசை யுலவுகின்ற வடித்த தமிழாலாகிய மாலை படர்ந்துள்ள பருத்த தோளின் வழி பிடரியில் ஏறி, பாசொளிய மரகதத்திருமேனி பச்சைப் பசுங்கதிர் ததும்ப-பச்சை ஒளியுடைய மரகதத்தினை யொத்த திருமேனியின் மிகப் பசுமையான ஒளிநிறையும் படி, மணிவாய்த் தெள்நிலா விரிய நின்று ஆடும் பசுந்தோகை - முத்துகள் போன்ற பற்களை யுடைய வாயில் தெளிந்த நிலவு பேன்ற நகை பரவ நின்று ஆடுகின்ற பச்சை மயிலே !, செங்கீரை ஆடியருள்-; தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒரு செல்வி! செங்கீரை ஆடியருள்-;

(வி - ம்.) உவகை-மகிழ்ச்சி. பொத்தி-கொட்டி. கரம்-கை. மழலை-இளமை. துளும்ப-ததும்ப. குதலை-எழுத்துவடிவம் பெறாத சொல். தாய் : காஞ்சனமாலை. தாள்தோய் தடக்கை-முழந்தாளைத் தோய்ந்த பெரிய கை. தாமம் - மாலை. தோள் எருத்தம் - தோளை யடுத்த பிடரி. (௧௬)

சுற்றுநெடு நேமிச் சுவர்க்கிசைய எட்டுச்
சுவர்க்கால் நிறுத்திமேருத்
தூணென்று நடுநட்டு வெளிமுகடு மூடியிரு
சுடர்விளக் கிட்டுமுற்ற

எற்றுபுன லிற்கழுவு புவனப் பழங்கலம்
எடுத்தடுக் கிப்புதுக்கூழ்
இன்னமுத முஞ்சமைத் தன்னைநீ பன்முறை
இழைத்திட அழித்தழித்தோர்
முற்றவெளி யில்திரியும் மத்தப் பெரும்பித்தன்
முன்னின்று தொந்த மிடவும்
முனியாது வைகலும் எடுத்தடுக் கிப்பெரிய
மூதண்ட கூடமூடும்
சிற்றில்விளை யாடுமொரு பச்சிளம் பெண்பிள்ளை
செங்கீரை ஆடியருளே
தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை ஆடியருளே.

(சொ - ள்.) சுற்று நெடு நேமிச் சுவர்க்கு இசைய எட்டுச் சுவர்க்கால் நிறுத்தி-சூழ்ந்திருக்கின்ற நெடிய சக்கரவாள மலையாகிய சுவருக்குப் பொருத்தமாக அடை சுவர்களாக எட்டு மலைகளை நிறுத்தி, மேருத்தூண் ஒன்று நடுநட்டு-மேருமலையாகிய தூணை நடுவில் நிலை பெறுத்தி, வெளி முகடு மூடி - ஆகாயமாகிய வெளியுச்சியை மூடி, இருசுடர் விளக்கு இட்டு-சூரியன் சந்திரன் ஆகிய இரண்டு ஒளி விளக்குகள் அமைத்து, முற்றஎற்று புனலில் கழுவு புவனப் பழங்கலம் எடுத்து அடுக்கி-முழுவதும் மோதுகின்ற ஊழி வெள்ளத்தில் கழுவப்படும் புவனங்களாகிய பழைய பாண்டங்களை வரிசைப்பட அடுக்கி, புதுக்கூழ் இன்னமுதமும் சமைத்து அன்னை நீ பன்முறை இழைத்திட-புதிய உணவுப் பொருள் ஆகிய இனிய அமுதத்தையும் ஆக்கித் தாயாகிய நீ இங்ஙனம் பல தடவை செய்து வரவும்; அழித்து அழித்து ஓர் முற்றவெளியில் திரியும் மத்தப் பெரும் பித்தன் முன் நின்று தொந்தம் இடவும்-அவற்றை அடிக்கடி அழித்துவிட்டு ஒரு முற்ற வெளியாகிய சிதம்பரத்தில் திரிகின்ற மத்தம் அணிந்துள்ள பெரிய பித்தனாகிய சிவ பெருமான் உனது முன்னிலையில் நின்று கூத்தாடவும், முனியாது வைகலும் எடுத்து அடுக்கிப் பெரிய மூதண்ட கூடம் மூடும்-வெறுக்காமல் நாடோறும் அவற்றை மீண்டும் வரிசை-

யாக அமைத்துப் பெரிய பழைய அண்டத்தை (உலக வீட்டை) மூடுகின்றதாகிய, சிற்றில் விளையாடும் ஒரு பச்சிளம் பெண் பிள்ளை செங்கீரை ஆடியருள்-சிறுவீடு கட்டி விளையாடுகின்ற ஒப்பற்ற இளமையுடன் கூடிய பச்சைப் பெண் பிள்ளையே! செங்கீரை ஆடியருள், தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒரு செல்வி! செங்கீரை ஆடியருள்;-

*(வி - ம்.) நேமி - சக்கரவாளமலை. இம் மலை எல்லா உலகங்களையும் வளைத்து நிற்பதாக இலக்கியம் கூறும். எட்டுச் சுவர்க்கால்-எட்டுமலைகள் ஆகிய சுவர்களை அடுத்து நிற்கின்ற கால்கள். நடுநட்டு - இடையில் நிறுத்தி. இருசுடர் விளக்கு - சூரியன் சந்திரன் என்னும் இரண்டு ஒளி விளக்குகள். புனல் - கடல். புனலிற் கழுவுதலாவது - ஊழிவெள்ளத்தில் உலகு அமிழ்தலைக் குறித்தது. புவனப் பழங்கலம்-பூமியாகிய பழம்பாண்டம். தொந்தமிடல் - கூத்தாடுதல். மத்தம் - உன்மத்தம் : மயக்கம். அம்பிகை உலகத்தை அடிக்கடி ஆக்குதலும் அவற்றைச் சிவபெருமான் அழித்தலும் ஆகிய செய்கைகளைச் சிறுமியர் சிற்றில் இழைத்தலும் சிறுவர்கள் அவற்றை அழித்தலும் ஆகிய செய்கைகளாக உருவகித்துக் கூறினர்.* (கஉ)

மங்குல்படு கந்தரச் சுந்தரக் கடவுட்கு
மழகதிர்க் கற்றைசுற் றும்
வாள்நயன மூன்றும் குளிர்ந்தமுத கலைதலை
மடுப்பக் கடைக்கணோக்கும்
பொங்குமதர் நோக்கிற் பிறந்தவா னந்தப்
புதுப்புணரி நீத்தமையன்
புந்தித் தடத்தினை நிரப்பவழி அடியர்பால்
போகசா கரமடுப்ப
அங்கணெடு ஞாலத்து வித்தின்றி வித்திய
அனைத்துயிர் களுந்தளிர்ப்ப
அருள்மடை திறந்துகடை வெள்ளம் பெருக்கெடுத்
தலையெறிந் துகளவுகளும்
செங்கயல் கிடக்கும் கருங்கட் பசுந்தோகை
செங்கீரை ஆடியருளே
தென்னற்கும் அம்பொனமலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை ஆடியருளே.

(சொ - ள்.) மங்குல்படு கந்தரம் சுந்தரம் கடவுட்கு மழ கதிர்க்கற்றை சுற்றும் வாள் நயனம் மூன்றும்-இருள் பொருந் திய கழுத்தையுடைய சோமசுந்தரக் கடவுளுக்கு இளங்கதிர்த் தொகுதி சூழும் ஒளி யுருவமான கண்கள் மூன்றும், குளிர்ந்து அமுத கலை தலைமடுப்ப - குளிர்ச்சியுற்று அமுத கலையைத் தலைக்கொளலால், கடைக்கண் நோக்கும் பொங்கும் மதர் நோக்கிற் பிறந்த ஆனந்தப் புதுப் புணரி நீத்தம் - கடைக் கண்ணாற் பார்க்கின்ற மிகுந்த அழகினையுடைய பார்வையிற் றோன்றிய இன்பப் புதுக்கடல் வெள்ளமும், ஐயன் புந்தித் தடத்தினை நிரப்ப-நம் தலைவனது உள்ளக் குளத்தை நிறைப்ப, வழி அடியர்பால் போக சாகரம் அடுப்ப - வழிவழி வந்த தொண்டர்களிடம் இன்பக் கடல் பொருந்த, அம் கண் நெடு ஞாலத்து வித்து இன்றி வித்திய அனைத்து உயிர்களும் தளிர்ப்ப - அழகிய இடம் அகன்ற பூமியில் விதையில்லாமல் விதைத்த எல்லா உயிர்களும் தளிர்க்க, அருள்மடை திறந்து கடை வெள்ளம் பெருக்கு எடுத்து அலை எறிந்து உகள-அருளா கிய மடையைத் திறந்து ஊழிவெள்ளம் பெருகி அலைமோதிப் புரள; உகளும் செங்கயல் கிடக்கும் கருங்கண் பசுந்தோகை! செங்கீரை ஆடியருள் - புரள்கின்ற செம்மையான கயல்மீன் போன்ற பெரிய கண்களையுடைய பச்சை மயில் போன்றவளே! செங்கீரை ஆடியருள்! தென்னற்கும் அம்பொன்மலை மன்னற் கும் ஒரு செல்வி, செங்கீரை ஆடியருள்-;

(வி - ம்.) மங்குல் - இருள். கருமேகம் எனவும் கொள்ள லாம். கந்தரம் - கழுத்து. வாள் - ஒளி. நயனம் - கண். சூரியன், சந்திரன், நெருப்பு இவை மூன்றும் சிவபெருமான் கண்கள். சிவ பெருமான் போகியாக நிற்றலின் உயிர்களும் போகத்தை அடை யும் என்பது கருத்து. செங்கயல் போலக் கிடக்கும் என உவ மைத் தொகை; விழிகள் பதிந்திருக்கின்ற பசிய தோகைமயில் என்பது அம்மையைக் குறிப்பாலுணர்த்தியது. அமுதக்கலை தலை மடுப்ப, தடத்தினை நிரப்ப, சாகரம் அடுப்ப, உயிர்களும் தளிர்ப்ப, அருள் மடைதிறந்து கடைவெள்ளம் பெருக்கெடுத்து அலை யெறிந்து உகள உகளும் கருங்கண் எனவும், செங்கயல் கிடக்கும் கருங்கண் எனவுங் கூட்டுக. (கசு)

பண்ணரு வரிமிடற் றறுகால் மடுப்பப்
பசுந்தேறல் ஆறலைக்கும்
பதுமபீ டிகையும்முது பழமறை விரிந்தொளி
பழுத்தசெந் நாவுமிமையாக்
கண்ணரு மரகதக் கற்றைக் கலாமஞ்ஞை
கணமுகில் ததும்ப எங்கும்
சார்வரையும் வெள்ளெனவோர் கன்னிமா டத்துவளர்
கற்பூர வல்லிகதிர்கால்
விண்ணரு மதிமுயற் கலைகிழிந் திழியமுத
வெள்ளருவி பாயவெடிபோய்
மீளுந் தகட்டகட் டிளவாளை மோதமுகை
விண்டொழுகு முண்டகப்பூந்
தெண்ணரு அருவிபாய் மதுரைமர கதவல்லி
செங்கீரை ஆடியருளே
தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒருசெல்வி
செங்கீரை ஆடியருளே.

(சொ - ள்.) பண் அரு வரிமிடற்று அறுகால் மடுப்பப் பசுந்தேறல் ஆறு அலைக்கும் பதும பீடிகையும்-இசை நீங்காத வரிகளையுடைய கழுத்தினைக் கொண்ட வண்டுகள் உண்ணும் படி இனிய தேன் வெள்ளம் பெருக்கெடுத்தோடும் தாமரை யாகிய தவிசும், முது பழமறை விரிந்து ஒளி பழுத்த செந் நாவும் - மிகப் பழைய வேதங்கள் விரிந்து ஒளி முதிர்ந்த செம்மையாகிய (பிரமனுடைய) நாக்கும், இமையாக் கண் அரு மரகதக் கற்றைக் கலா மஞ்ஞை கணமுகில் ததும்ப ஏங்கும் கார்வரையும் - இமையாத கண்கள் நீங்காத மரகதம் போன்ற தொகுதியான பசுந் தோகைகளையுடைய மயில்கள் கூட்டமாகிய மேகத்தைக்கண்டு ஏங்குதற் கிடமான கரிய மலையும், வெள் என ஒர் கன்னி மாடத்து வளர் கற்பூரவல்லி - வெறுமையாயின என்று சொல்லும்படி ஒரு கன்னி மாடத்தில் வளர்கின்ற கற்பூரவல்லி, கதிர்கால் விண் அரு மதிமுயற் கலை கிழிந்து இழி அமுதவெள் அருவி பாய - ஒளியைத் தருகின்ற வானத்தில்

நீங்காத சந்திரனின் முயற்கலையைக் கிழித்து ஒழுகும் நிலவான வெள்ளிய அருவி பாயும்படி, வெடிபோய் மீளும் தகட்டு அகட்டு இளவாளை மோத - தாவிப் பின் மீள்கின்ற தகடுபோன்ற வயிற்றையுடைய இளமையுற்ற வாளைமீன்கள் மோதுதலால், முகைவிண்டு ஒழுகும் முண்டகப்பூந் தெள்நறு அருவி பாய் மதுரை மரகதவல்லி செங்கீரை ஆடி அருள் - மொட்டு விரிந்து தாமரைப் பூவின் தெளிந்த தேன் அருவி வழிகின்ற மதுரையில் வீற்றிருக்கும் மரகதவல்லி! செங்கீரை ஆடியருள், தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒரு செல்வி! செங்கீரை ஆடியருள்.

*(வி - ரை.) பண் - இசை. வரி - கீற்றுகள். அறுகால் - வண்டு. பீடிகை - ஆசனம். பதுமம் - தாமரை. செந்நா : இது பழமறை பழுத்த என்ற குறிப்பால் பிரமனது நாவை யுணர்த்திற்று. இமையாத கண் - மயிலின் தோகையிலுள்ள கண்கள்; கார்வரை-இமயமலை; கைலை எனவும் கூறலாம். வெள்ளென - வெற்றிடமாயிருக்க. மதுரையில் தடாதகையாக வந்து பிறந்ததால் பூமகளும் நாமகளும் தோழியாக மதுரைக்கு வந்தனர் என்பது குறிப்பாற் கொள்க. உமையிருந்த கைலைமலையும், பூமகள் இருந்த பதும பீடிகையும், கலைமகளிருந்த செந்நாவும் வறிதேயிருந்தன என்பது கருத்து. வெடிபோய் - தாவி. வாளை மீன் சந்திரன் முயற்களங்கத்திற் பாய்ந்து நடுவழியே சென்று மீண்டதால் நிலாவமுத வருவியும் மீண்டுவாரும்போது மேலிருந்து தாமரைப் பூவின் மோதுதலால் அப் பூவின் தேனருவியும் பாயும்; அத்தகைய சிறப்புடையது மதுரை என்க.* (௧௭)

(வேறு)

முகமதி யூடேழு நகைநில வாட
முடிச்சூ ழியமாட
முரிபுரு வக்கொடி நுதலிடு சுட்டி
முரிப்போ டசைந்தாட
இகல்விழி மகரமும் அம்மக ரம்பொரும்
இருமக ரமுமாட
இடுநூ புரவடி பெயரக் கிண்கிண்
எனுங்கிண் கிணியாடத்

துகிலோடு சோர்தரு கோடிநுண் மருங்குல்
துவண்டு துவண்டாடத்
தோந்தி சரிந்திட உந்தி கரந்தோளிர்
சூலுடை யாலடைமற்
றகில சராசரம் நிகிலமோ டாடிட
ஆடுக செங்கீரை
அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை.

(சொ - ள்.) முகமதி ஊடு எழு நகைநிலவு ஆடமுடிச் சூழியம் ஆட - முகமாகிய சந்திரனிடத்துத் தோன்றுகிற பற்களின் ஒளி விளங்கவும் முடியில் அணிகின்ற உச்சிக் கொண்டை ஆடவும், முரி புருவக்கொடி நுதல்இடு சுட்டி முரிப்பொடு அசைந்தாட - வளைந்த புருவமாகிய கொடியும் நெற்றியில் அணியப்பட்ட சுட்டி என்னும் நகையும் நெறிந்து அசைந்து ஆடவும், இகல்விழி மகரமும் அம் மகரம் பொரும் இரு மகரமும் ஆட - போர் செய்கின்ற கண்களாகிய மகரமீன்களும் அம் மகர மீன்கள் பொருகின்ற இரு மகர வடிவிற் செய்யப்பட்ட காதணிகளும் ஆடவும், இடுநூபுர அடி பெயரக் கிண்கிண் எனும் கிண்கிணி ஆட - அணிந்த சிலம்புத் திருவடிகள் பெயர்தலால் கிண்கிண் என்றொலிக்கின்ற கிண்கிணி எனும் அணிகளாடவும், துகிலொடு சோர்தரு கொடி நுண் மருங்குல் துவண்டு துவண்டு ஆட - ஆடையுடன் தளர்கின்ற கொடி போன்ற நுணுகிய இடையானது துவண்டு தளர்ந்து ஆடவும், தொந்தி சரிந்திட உந்திகரந்தொளிர் சூல்உடைஆல் அடை - வயிறு சரியக் கொப்பூழ் மறைந்து விளங்குகின்ற கருப்பமுற்ற ஆலிலைபோன்ற வயிற்றில், அகில சராசரம் நிகிலம் ஒடு ஆடிட ஆடுக செங்கீரை - உலகத்தில் உள்ள இயங்கும் பொருள் இயங்காப் பொருள் ஆகிய எல்லாம் ஆடும்படி செங்கீரை ஆடியருள்க, அவனி தழைந்திட மவுலி புனைந்தவள் ஆடுக செங்கீரை-உலகு தழைக்கும்படி முடிசூடி யருளிய மீனாட்சியம்மையே! செங்கீரை ஆடியருள்க.

(வி - ரை.) முகமதி-முகமாகிய சந்திரன்; இஃது உருவகம். முடிச்சூழியம் - உச்சிக் கொண்டை. முரி புருவக்கொடி - வளைந்த

புருவமாகிய கொடி, முரிப்பு - வளைவு. விழியை மகரம் என்றது பிறழுஞ் செயல்பற்றிய உவமம். இரு மகரம் - இரண்டுமகரவடிவமான குண்டலங்கள். நூபுரம்-காலணி. மருங்குல்-இடை. உந்தி. கொப்பூழ்; உந்தியிடத்தே பலவற்றையும் கரந்து ஒளிரும்-சூலையுடைய ஆலிலை போன்ற வயிறு. அகிலம் - உலகம். நிகிலம் - எல்லாம். சரம்+அசரம்-சராசரம்— இயங்கும் பொருளும் நிற்கும் பொருளும். சத்தி எல்லாப் பொருள்களிலும் கலந்துறையும் தெய்வமாதலின் ஆடும்போது எல்லாம் ஆடின எனக் காண்க. (கஅ)

**தசைந்திடு கொங்கை இரண்டல எனவுரை**
**தருதிரு மார்பாடத்**
**தாய்வரு கென்பவர் பேதைமை கண்டு**
**ததும்புபு னகையாடப்**
**பசைந்திடு ஞால மலர்ந்தமை வெளிறியோர்**
**பச்சுடல் சொல்லவுமோர்**
**பைங்கொடி ஒல்கவும் ஒல்கி நுடங்கிய**
**பண்டி சரிந்தாட**
**இசைந்திடு தேவை நினைந்தன என்ன**
**இரங்கிடு மேகலையோ**
**டிடுகிடை ஆட இயற்கை மணம்போதி**
**இதழ்வழி தேறலினோ**
**டசைந்தொசி கின்ற பசுங்கொடி எனவினி**
**தாடுக செங்கீரை**
**அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்**
**ஆடுக செங்கீரை.**

(சொ - ள்.) தசைந்திடு கொங்கை இரண்டு அல என உரை தரு திருமார்பு ஆட - தசையுடன் கூடிய கொங்கைகள் இரண்டல்ல (மூன்று) என்றுரைக்கப்படும் அழகிய மார்பு ஆடவும், தாய்வருகென்பவர் பேதைமை கண்டு ததும்பு புன்நகை ஆட - தாயே வருக என்றழைக்கின்றவரின் அறியாமையைக் கண்டு துளும்புகின்ற புன்சிரிப்பு ஆடவும், பசைந்திடு ஞாலம் மலர்ந்தமை வெளிறிஓர் பச்சுடல் சொல்லவும் - செழித்திருக்

கின்ற பூமியை ஈன்ற செயலே வெளுப்புற்று ஒரு பசுமையான உடம்பு காட்டவும், ஓர் பைங்கொடி ஒல்கவும் ஒல்கி நுடங்கிய பண்டி சரிந்து ஆட-ஒரு பசிய கொடி போன்ற இடை தளரவும் தளர்ந்து நுணுகிய வயிறு சரிவுற்றுடவும், இசைந்திடு தேவை நினைந்தன என்ன இரங்கிடும் மேகலையோடு இடுகு இடை ஆட-பொருத்தமான தமது தெய்வத்தை எண்ணின என்னும்படி ஒலிக்கின்ற மேகலாபரணத்துடன் கூடிய சிறுத்த இடை ஆடவும், இயற்கை மணம் பொதி இதழ்வழி தேறலினோடு அசைந்து ஒசிகின்ற பசுங்கொடி என இனிது ஆடுக செங்கீரை-இயற்கையான மணம் நிறைந்த உதட்டின் வழி ஒழுகுகின்ற எச்சிலாகிய தேனுடன் அசைந்து வளைகின்ற பசிய கொடிபோல இனிதாகச் செங்கீரை ஆடி அருள்க, அவனி தழைந்திட மவுலி புனைந்தவள் ஆடுக செங்கீரை-;

*(வி - ம்.) இரண்டல என்றது மூன்று என்னும் குறிப்பை. தாய்: இங்கு மகள் என்க. ததும்புதல்-மேல்வடிதல். பசைந்திடு ஞாலம்-தேவியின் அன்பைப் பெற்ற பூமி. பண்டி-வயிறு. இரங்கிடும் - ஒலிக்கும். மகவு ஈன்ற மகளிர் உடல் பசந்திருப்பது இயல்பு. உலகம் எல்லாம் ஈன்றவள் இவள் என்பதை அம்மையின் பச்சுடம்பு காட்டியது. அம்மையின் உறுப்புகள் எல்லாம் சிவபெருமானாகிய தம் தெய்வத்தை நினைந்தன வென்று கருதி மேகலைகள் புலம்பின என்று கற்பித்தார். (கக)*

**பரிமளம் ஊறிய உச்சியின் முச்சி**
**பதிந்தா டச்சுடர்பொன்**
**பட்டமு டன்சிறு சுட்டியும் வேயிலோடு**
**பனிவெண் ணிலவாடத்**
**திருநுதல் மீதெழு குறுவேயர் வாடத்**
**தெய்வம ணங்கமழும்**
**திருமே னியின்முழு மரகத ஒளியெண்**
**திக்கும்வி ரிந்தாடக்**
**கருவிளை நாறு குதம்பை ததும்பிய**
**காது தழைந்தாடக்**
**கதிர்வெண் முறுவல் அரும்ப மலர்ந்திடு**
**கமலத் திருமுக நின்**

**அருள்விழி யொடும்வளர் கருணை பொழிந்திட**
**ஆடுக செங்கீரை**
**அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்**
**ஆடுக செங்கீரை.**

**(சொ - ள்.)** பரிமளம் ஊறிய உச்சியின் முச்சி பதிந்து ஆட - நல்மணம் பெருகிய உச்சிக் கொண்டையின் தலைப் பாகம் அழுந்தி ஆடவும், சுடர் பொன் பட்டமுடன் சிறுசுட்டி யும் வெயிலொடு பனிவெண் நிலவுஆட - ஒளிர்கின்ற பொற் பட்டத்துடன் சிதறிய சுட்டியும் வெயிலுடன் குளிர்ச்சியுடைய வெள்ளிய நிலவைப் போல ஆடவும், திருநுதல்மீது எழு குறு வெயர்வு ஆட - அழகிய நெற்றியின்மேல் சிறு வேர்வைத்துளி அசையவும், தெய்வமணம் கமழும் திருமேனியின் முழு மரகத ஒளி எண்திக்கும் விரிந்து ஆட - தெய்வ வாசனை வீசுகின்ற அழகிய உடம்பின் நிறைந்த மரகதம் போன்ற பச்சை ஒளி எட்டுத் திசையிலும் படர்ந்து வீசவும், கருவிளை நாறு குதம்பை ததும்பிய காது தழைந்து ஆட - நீலோற்பலம் மணக்கின்ற குதம்பை என்னும் காதணி பொருந்திய காது தளிர்த்து ஆட வும், கதிர்வெண்முறுவல் அரும்ப மலர்ந்திடு கமலத் திருமுக நின் அருள்விழியொடும் வளர் கருணை பொழிந்திட ஆடுக செங்கீரை - ஒளி பொருந்திய வெள்ளிய நகை தோன்ற மலர் கின்ற தாமரை மலர் போன்ற சிறந்த நின்முகம் அருட்பார்வை யுடன் வளர்கின்ற கருணைமழையைப் பொழியும்படி செங்கீரை ஆடுக, அவனி தழைந்திட மவுலி புனைந்தவள் ஆடுக செங் கீரை-;

**(வி - ரை.)** *கருவிளை நாறு குதம்பை என்றது, கருவிழி களின் பார்வை தோயும் காதணியைச் சுட்டியது. குதம்பை - காதணி.* (உ0)

(வேறு)

**குருமணி வெயில்விட மரகத நிழல்விரி**
**குன்றே நின்றாடும்**
**குழலிசை பழகிய மழைமுகில் எழவெழு**
**கொம்பே வெம்பாச**

மருவிய பிணிகெட மலைதரும் அருமைம
ருந்தே சந்தானம்
வளர்புவ னமுமுணர் வருமரு மறையின்வ
ரம்பே செம்போதில்
கருணையின் முழுகிய கயல்திரி பசியக
ரும்பே வெண்சோதிக்
கலைமதி மரபிலோர் இளமதி யெனவளர்
கன்றே யென்றோதும்
திருமகள் கலைமகள் தலைமகள் மலைமகள்
செங்கோ செங்கீரை
தெளிதமிழ் மதுரையில் வளருமோ ரிளமயில்
செங்கோ செங்கீரை.

(சொ - ள்.) குருமணி வெயில்விட மரகத நிழல்விரி குன்றே-பலநிறம் பொருந்திய மணிகள் ஒளிவீச மரகதத்தின் குளிர்ந்த நிழல் பரவுகின்ற மலையே!, நின்று ஊதும் குழல் இசை பழகிய மழைமுகில் எழஎழு கொம்பே-நிலைத்து வேய்ங் குழலின் இசையை ஊதிப்பழகிய கார்வண்ணனாகிய திருமால் முதலில் தோன்ற அவன் பின் தோன்றிய பூங்கொம்பு போன்றவளே!, வெம்பாசம் மருவிய பிணி கெட மலைதரும் அருமை மருந்தே-கொடிய பாசம் (அழுக்கு) பொருந்திய பிறவிநோய் கெடும்படி மலையிற்றோன்றிய மருந்து போன்றவளே!, சந்தானம் வளர்புவனமும் உணர்வரும் அருமறையின் வரம்பே-அரிசந்தானம் என்ற தரு வளரும் பொன்னுலகத்தேவரும் உணர்தற்கருமையான அரிய வேதத்தின் எல்லையே!, செம் போதில் கருணையின் முழுகிய கயல்திரி பசிய கரும்பே-செம்மையான (முகமாகிய) தாமரை மலரில் அருளில் முழுகிய (கண்களாகிய) கயல்மீன்கள் உலவுகின்ற பசிய கரும்பு போன்றவளே!, வெண்சோதிக் கலைமதி மரபில் ஒர் இளமதி என வளர்கன்றே-வெள்ளொளியையுடைய கலைகளையுடைய சந்திரகுலத்தில் ஒர் இளமதி என்று சொல்லும்படி வளர்கின்ற கன்றே!, என்று ஓதும் திருமகள் கலைமகள் தலைமகள் - என்று துதிக்கின்ற, இலக்குமிதேவிக்கும் நாமகளுக்கும் தலைவியானவளே!, மலை

மகள் செங்கோ செங்கீரை-மலையரசனுன இமவான் மகளே செங்கோ செங்கீரை, தெளி தமிழ் மதுரையில் வளரும் ஒர் இளமயில் செங்கோ செங்கீரை-தெளிவான தமிழ் பயில்கின்ற மதுரை நகரில் வளர்கின்ற ஒப்பற்ற இளமயில் போன்றவளே செங்கோ செங்கீரை.

*(வி - ம்) திருமேனியில் அணிந்துள்ள ஆபரணங்களிற் பதித்திருக்கின்ற பலவகை மணிகளும் வெயில்போல ஒளி செய்ய மேனி மரகதத்தின் ஒளி பரப்ப என்க. குரு - நிறம். மழைமுகில் எழஎழு கொம்பே-கார்மேக வண்ணனுகிய திருமால் முன்னே தோன்றப் பின்னே தோன்றிய பூங்கொம்பே என்றது அவன் தங்கை என்பதைக் குறித்தது. மலைமகளாதலாலும் பிறவிப்பிணி கெடச் செய்பவளாதலாலும் "மலைதரு மருந்தே' என்றார். சந்தானம் - ஐந்தருக்களில் ஒன்று.*

*திருமகளுக்கும் கலைமகளுக்கும் தலைமகளாகிய மலைமகளே எனக் கொள்க. தலைமகளே! மலைமகளே! என இரண்டினையும் விளியாக்கினும் பொருந்தும். (உக)*

**சங்குகி டந்தத டங்கைநெ டும்புயல்**
**தங்காய் பங்காயோர்**
**தமனிய மலைபடர் கொடியென வடிவுத**
**ழைந்தா யெந்தாயென்**
**றங்கணெ டும்புவ னங்கள்தொ ழுந்தோறும்**
**அஞ்சேல் என்றேதும்**
**அபயமும் வரதமும் உபயமும் உடையவ**
**ணங்கே வெங்கோபக்**
**கங்குல்ம தங்கய மங்குல டங்கவி**
**டுங்கா மன்சேமக்**
**கயல்குடி புகுமொரு துகிலிகை யெனநின**
**கண்போ லுஞ்சாயல்**
**செங்கயல் தங்குபோ லன்கொடி மின்கொடி**
**செங்கோ செங்கீரை**
**தெளிதமிழ் மதுரையில் வளருமோ ரிளமயில்**
**செங்கோ செங்கீரை.**

(சொ - ள்.) சங்கு கிடந்த தடங்கை நெடும்புயல் தங்காய்! - பாஞ்சசன்யம் என்ற சங்கு தாங்கிய அகன்ற கரத்தினையுடைய நெடிய மேகம் போன்ற திருமாலுக்குத் தங்கையே !, பங்காய் ஒர் தமனிய மலைபடர் கொடி என வடிவு தழைந்தாய்! - சிவபெருமானுக்கு ஒரு பங்குடையவளாய் ஒப்பற்ற பொன்மலையிற் படர்ந்த பச்சைக் கொடிபோல வடிவம் தழைத்திருப்பவளே!, எந்தாய் - எம்தாயே!, என்று அம்கண் நெடும்புவனங்கள் தொழுந்தொறும் அஞ்சேல் என்று ஓதும் - என்று கூறி அழகிய இடம் அகன்ற பூமியிலுள்ளவர்கள் வணங்கும் பொழுதெல்லாம் பயப்படாதீர் என்று கூறுகின்ற, அபயமும் வரதமும் உபயமும் உடைய அணங்கே! - அபயக்கையும் வரதக்கையும் ஆகிய இரண்டு கைகளையும் உடைய தெய்வப் பெண்ணே!, வெங்கோபக் கங்குல்மத கயம் மங்குல் அடங்கவிடும் காமன் சேமக் கயல் குடி புகும் ஒரு துகிலிகை என - கொடிய சினத்தையுடைய இரவாகிய யானையை வான முழுவதிலும் செலுத்துகின்ற மன்மதனுடைய பாதுகாப்பாயுள்ள கயல்மீன் குடிபுகுவதான ஒரு கொடியென, நின்கண் போலும் சாயல் செங்கயல் தங்கு பொலன் கொடி மின்கொடி செங்கோ செங்கீரை - உன் கண்களைப் போலும் சாயலையுடைய செங்கயல் தங்கியிருக்கப் பெற்ற, அழகிய கொடியைத் தரித்த மின்கொடி போன்றவளே! செங்கோ செங்கீரை, தெளிதமிழ் மதுரையில் வளரும் ஓர் இள மயில் செங்கோ செங்கீரை!

(வி - ம்.) *புயல் : திருமால். முன்னர் 'மழைமுகில்' என்றார். தமனியமலை : சிவபெருமான். என் தாய் - என் தாயே! அஞ்சேல்: எதிர்மறை முன்னிலை ஒருமை வினைமுற்று. அம்கண் - அழகிய இடம், இங்குக் கண் என்ற ஏழனுருபு இடத்தை யுணர்த்துவதாயிற்று. அபயம் - பயப்படாதிருப்பது. வரதம் - வரமளிப்பது. உபயம் - இரண்டு செயல்கள். துகிலிகை - கொடி. 'மதகயம்' என வரவேண்டியது 'மதங்கயம்' எனச் சந்தம் நோக்கி ஙகரம் மிக்கது : விரித்தல் விகாரம். அடங்க-எல்லாம். அடங்க, தனக்கு அடங்கும்படி விடுகின்ற என்றும் பொருள் கொள்ளலாம். (உஉ)*

## க. தாலப் பருவம்

தென்னன் தமிழி னுடன்பிறந்த
சிறுகால் அரும்பத் தீயரும்பும்
தேமா நிழற்கண் துஞ்சுமிளஞ்
செங்கட் கயவாய்ப் புனிற்றெருமை
இன்னம் பசும்புற் கறிக்கல்லா
இளங்கன் றுள்ளி மடித்தலநின்
றிழிபா லருவி உவட்டெறிய
எறியுந் திரைத்தீம் புனற்பொய்கைப்
பொன்னங் கமலப் பசுந்தோட்டுப்
பொற்று தாடிக் கற்றைநிலாப்
பொழியும் தரங்கம் பொறைஉயிர்த்த
பொன்போல் தொடுதோல் அடிப்பொலன்சூட்
டன்னம் பொலியுந் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட அங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ.

*(சொ - ள்.)* தென்னன் தமிழின் உடன் பிறந்த சிறு கால் அரும்ப நீ அரும்பும் தேமா நிழற்கண் துஞ்சும் - பாண்டிய மன்னனால் வளர்க்கப்பட்ட தமிழ்மொழி தோன்றிய பொதியமலையில் ஒருசேரத் தோன்றிய தென்றற்காற்று வீசுதலும் நெருப்பைப் போன்ற சிவந்த தளிர்களைத் தோற்றும் இனிய மாமரங்களின் நிழலில் தூங்குகின்ற, இளம் செம்கண் கயவாய்ப் புனிற்று எருமை - இளமையான சிவந்த கண்களையும் பெரிய வாயையும் உடைய ஈன்றணிமையைக் கொண்ட எருமை மாடுகள், இன்னம் பசும்புல் கறிக்கல்லா இளங்கன்று உள்ளி மடித் தலம் நின்று இழிபால் அருவி உவட்டு எறிய - இன்னம் இளம்புல்லைக் கடித்தறியாத சிறிய கன்றை நினைக்கத் தம் மடியினின்று தானே ஒழுகுகின்ற பால் அருவியானது பெருக்கெடுத்து வீச, எறியும் திரைத்தீம் புனற் பொய்கைப்

பொன் அம் கமலப் பசுந்தோட்டு - வீசுகின்ற அலையையுடைய இனிய நீரையுடைய பொய்கையிலுள்ள அழகிய பொன்போற் சிவந்த தாமரை மலரின் இனிய இதழின், பொன்தாது ஆடி கற்றை நிலா பொழியும் தரங்கம் பொறை உயிர்த்த பொன் போல் - பொன்நிறமான மகரந்தங்களைப் பூசித் தொகுதியான நிலவைச் சொரிகின்ற திருப்பாற்கடல் பெற்றெடுத்த இலக்குமியைப்போல, தொடுதோல் அடிப்பொலன் சூட்டு அன்னம் பொலியும் தமிழ் மதுரைக்கு அரசே தாலோ தாலேலோ - தோலால் இணைந்த விரலுள்ளதும் பொன்மயமான உச்சிக் கொண்டையை உடையதுமான அன்னப் பறவை நிறைந்திருக்கும் வளம் பொருந்திய தமிழ் வளர்ந்த மதுரை நகரிலுள்ள அரசியே தாலோ தாலேலோ, அருள் சூல்கொண்ட அம்கயற் கண் அமுதே-அருளாகிய கருவைக்கொண்டுள்ள அழகிய கயல் போன்ற கண்களையுடைய அமுதம் போல்வாளே,! தாலோ தாலேலோ-;

(வி - ம்.) 'தென்னந்தமிழ்' என்று பாடங்கொண்டால் "தென் திசையிற் பிறந்த அழகிய தமிழ்" என்க. தென்+அம்+தமிழ். தென் தமிழ்-தெற்கிலுள்ள தமிழ் அல்லது அழகிய தமிழ் என்று கொள்க. சிறுகால் - தென்றல். கயவாய் - அகன்ற வாய். புனிறு - ஈன்றணிமையுடையது. கறிக்கல்லா - கடித்தலறியாத அல்லது கடிக்க முடியாத. உவட்டு எறிய - பெருக்கெடுத்து வீச. பசுந்தோட்டுப் பொற்றுகள்-இளைய இதழ்களிலுள்ள பொன் போன்ற மகரந்தம். தரங்கம் பொறை யுயிர்த்த பொன் - திருப் பாற்கடல் பெற்ற திருமகள். தரங்கம் - அலை; கடலுக்கு ஆகு பெயர். 'தாலோ தாலேலோ' என்பது குழந்தையைத் தாலாட்டுபவர் கூறும் ஒரு வாய்பாடு.

எருமை தன் கன்றை நினைந்து சொரிந்த பாலால் பொய்கை பாற்கடல்போலத் தோன்றத் தாமரைத் தாதினிடையே ஆடும் பொன்னிறம் பெற்ற அம் மலரிலேயிருந்த அன்னம் திருமகளைப் போலத் தோன்றியது. (உக)

வீக்குஞ் சிறைபைந் துகில்தோகை
விரியுங் கலாப மருங்கலைப்ப
விளையாட் டயரும் மணற்சிற்றில்
வீட்டிக் குடிபுக் கோட்டியிருள்

சீக்குஞ் சுடர்தூங் கழல்மணியின்
செந்தீ மடுத்த சூட்டடுப்பிற்
செழுந்தாட் பவளத் துவரடுக்கித்
தெளிக்கும் நறுந்தண் தேறலுலை
வாக்குங் குடக்கூன் குழிசியிலம்
மதுவார்த் தரித்த நித்திலத்தின்
வல்சி புகட்டி வடித்தெடுத்து
வயல்மா மகளிர் குழாஞ்சிறுசோ
றாக்கும் பெருந்தண் பணைமதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட அங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ.

(சொ - ள்.) வீக்கும் சிறு பைந்துகில் தோகை விரியும் கலாபம் மருங்கு அலைப்ப - கட்டப்படும் சிறிய பசுமையான ஆடையின் கொய்சகத்தின்மீது விரிந்த கலாபம் என்னும் இடையணி இடையை வருத்த, விளையாட்டு அயரும் மணற் சிற்றில் வீட்டுக் குடிபுக்கு - விளையாட்டுக்காகச் செய்யப்படும் மணலால் ஆகிய சிறிய வீட்டிற் குடி புகுந்து, இருள் ஓட்டிச் சீக்கும் சுடர்தூங்கு அழல்மணியின் செந்தீ மடுத்த சூட்டு அடுப்பில் - இருளைத் துரத்தி அழிக்கின்ற ஒளி தங்கப்பெற்ற நெருப்புப் போன்ற மாணிக்க மணியாகிய நெருப்பை மூட்டிய உச்சியையுடைய அடுப்பில், செழுந்தாட் பவளம்துவர் அடுக்கி- செழித்த அடிகளையுடைய பவளக்கொடியாகிய விறகை அடுக்கி, தெளிக்கும் நறும் தண் தேறல் உலைவாக்கும் குடக்கூன் குழிசியில் அம் மது வார்த்து-தெளிக்கப்பட்ட இனிய குளிர்ந்த தேனை உலையாக வார்க்கப்பட்ட குடம் போன்ற நத்தைக் கூடாகிய பானையில் அம் மதுவை ஊற்றி, அரித்த நித்திலத்தின் வல்சி புகட்டி வடித்து எடுத்து - அரித்து எடுத்த முத்தாகிய அரிசியை அவ்வுலையிற் போட்டு வடித்து எடுத்து, வயல்மா மகளிர் குழாம் சிறு சோறு ஆக்கும் பெருந்தண்பணை மதுரைக்கு அரசே - வயலில் வேலை செய்கின்ற உழவர் மகளிர்

கூட்டம் சிறு சோறு சமைக்கும் பெரிய குளிர்ந்த பண்ணைகளை யுடைய மதுரைக்கு அரசியே!, தாலோ தாலேலோ-; அருள் சூல் கொண்ட அங்கயற்கண் அமுதே தாலோ தாலேலோ-;

(வி - ம்.) வீக்கும் - கட்டும். துகில்தோகை - ஆடையின் தலைப்பு. கலாபம்-ஒருவகை மேகலை. ஓட்டி : பிறவினை யெச்சம். சீக்கும் - அழிக்கும், சீ : பகுதி. குட்டடுப்பு-ஒரு வகை அடுப்பு; உச்சியையுடைய அடுப்பு என லும் ஆம். தேறல்-தேன். கூன் - நத்தைக்கூடு. குழிசி - பானை. குடம்+கூன் - குடம்போன்ற நத்தை. குடம் என்பதைத் திரட்சி எனப் பொருள் கொண்டு திரட்சியாகிய நத்தை என்றுங் கூறலாம். வல்சி-அரிசி. வயல்மா மகளிர் குழாம்-உழவர் மகளிர் கூட்டம். தண்பணை-மருதநிலம். மருதநிலச் சிறுமியர், மணல் வீட்டிற் குடிபுகுந்து குட்டடுப்பில் பவளமாகிய விறகினை அடுக்கி மணியாகிய தீயைமூட்டி நத்தைக் கூடாகிய பானையில் தேனை உலையாக வார்த்துத் தேன் ஆகிய நீரால் முத்துகளாகிய அரிசியை அரித்துப் போட்டுச் சிறு சோறாக்கி விளையாடுவர் எனப் பொருத்துக. (உச)

ஓடும் படலை முகிற்படலம்
உவர்நீத் துவரி மேய்ந்துகரு
ஊறுங் கமஞ்சூல் வயிறுடைய
உகைத்துக் கடவுட் கற்பகப்பூங்
காடும் தரங்கக் கங்கைநெடுங்
கழியும் நீந்தி அமுதிறைக்கும்
கலைவெண் மதியின் முயல்தடவிக்
கதிர்மீன் கற்றை திரைத்துதறி
மூடும் ககன வெளிக்கூட
முகடு திறந்து புறங்கோத்த
மூங்கீ குழக்கிச் சினவாளை
முரிச் சுறவி னேடும்வினை
யாடும் பழனத் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட அங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ.

(சொ - ள்.) ஓடும் படலை முகிற்படலம் உவரி மேய்ந்து உவர்நீத்து-ஓடுகின்ற மாலை போன்ற மேகக் கூட்டம் கடல்

நீரையுண்டு அந்நீரிலுள்ள உவர்ப்பைப் போக்கி, கரு ஊறும் கமம்சூல் வயிறு உடைய உகைத்து-கருவாக வளரும் நிறைந்த கருப்பங்கொண்ட வயிறு பிளக்கும்படி தாவி, கடவுள் கற்பகப் பூங்காடும் தரங்கம் கங்கை நெடுங் கழியும் நீந்தி - தெய்வத் தன்மை பொருந்திய கற்பகப் பூஞ்சோலையும் அலைகளையுடைய கங்கையாற்றின் நீண்ட கழிமுகத்தையும் கடந்து, அமுது இறைக்கும் கலைவெண் மதியின் முயல் தடவி - அமுதத்தை இறைக்கின்ற வெள்ளிய கலைகளையுடைய சந்திரனிடத்துள்ள முயற் களங்கத்தைத் தடவி, கதிர்மீன் கற்றை திரைத்து உதறி- ஒளியுள்ள நட்சத்திரக் கூட்டத்தைச் சிதைத்து எறிந்து, மூடும் ககன வெளிக்கூட முகடு திறந்து-மூடியிருக்கின்ற வானமாகிய வெளிக்கூடத்தின் முகட்டைத் (உச்சியைத்) திறந்து. புறங் கோத்த முந்நீர் உழக்கிச் சினவாளை மூரிச் சுறவினோடும் விளையாடும் பழனத் தமிழ் மதுரைக்கு அரசே - பெரும்புறக் கடல் நீரைக் கலக்கிச் சினமுற்ற வாளை மீன்கள் (அங்குள்ள) வலி மிக்க சுறு மீன்களோடும் விளையாடும் வயல்களையுடைய தமிழ் வளர்ந்த மதுரைக்கு அரசே!, தாலோ தாலேலோ-; அருள்சூல் கொண்ட அங்கயற்கண் அமுதே தாலோ தாலேலோ-;

(வி - ரை.) மதுரைப் பழனத்துள்ள வாளைமீன் தாவி மேக மண்டலத்தைக் கிழித்து மேலே போய்க் கற்பகக் காட்டையும் கங்கைக் கரையையும் கடந்து சந்திர மண்டலத்தைத் தாக்கி விண்மீன்களைச் சிதைத்துப் பகிரண்டத்தைப் பிளந்து பெரும் புறக் கடலைக் கலக்கி அங்குள்ள சுறுமீனோடு விளையாடியது என மதுரையின் வளம் கூறியது இது. கமஞ்சூல் - நிறைந்த கரு. படலை மூகில் - மாலைபோல் அடுக்கடுக்காக இருக்கும் மேகங்கள்; இஃது உவமைத் தொகை. படலம் - கூட்டம். உவரி மேய்ந்து உவர் நீத்து என மாற்றிப் பொருள் கொள்க. உகைத்து - தாவி. கழி - கழிமுகம்; கங்கையாறு சென்று கழியும் இடம். முயல், அவ் வடிவாகிய களங்கத்தைக் குறித்தது. மூரி-வலிமை. பழனம்-வயல். ககனம்-ஆகாயம். (௨௫)

**ஊறுங் கரடக் கடத்துமுகந்**
**தூற்று மதமா மடவியர்நின்**
**றுதறுங் குழற்பூங் துகளடங்க**
**ஓட விடுத்த குங்குமச்சேஞ்**

சேறு வழுக்கி ஒட்டறுக்கும்
திருமா மறுகில் அரசர்பெருந்
திண்தேர் ஒதுங்கக் கொடுஞ்சிநெடுஞ்
சிறுதேர் உருட்டுஞ் செங்கண்மழ
ஏறு பொருவேல் இளைஞர் கட
விவுளி கடைவாய் குதட்டவழிந்
திழியும் விலாழி குமிழியெறிந்
திரைத்துத் திரைத்து நுரைத்தொருபே
ராறு மடுக்குந் தமிழ்மதுரைக்
கரசே தாலோ தாலேலோ
அருள்சூற் கொண்ட அங்கயற்கண்
அமுதே தாலோ தாலேலோ.

(சொ - ள்.) ஊறும் கரடக் கடத்து முகந்து ஊற்றும் மதமா-பெருகுகின்ற மதக்குழியாகிய குடத்தால் அள்ளி ஊற்றுகின்ற மதம் பொருந்திய யானையினது, மடவியர் நின்று உதறும் குழற் பூந்துகள் அடங்க ஓட - பெண்கள் கூந்தலினின்றும் இறைக்கின்ற பூந்தாதுகள் அடங்கும்படி ஓட, விடுத்த குங்குமச் செஞ்சேறு வழுக்கி ஒட்டு அறுக்கும் திருமா மறுகில் - விட்ட செம்மையான குங்குமச் சேறு வழுக்கி ஒட்டத்தைக் கெடுக்கும் அழகிய பெரிய அரச வீதியில், அரசர் பெரும் திண்தேர் ஒதுங்கக் கொடுஞ்சி நெடும் சிறு தேர் உருட்டும் - அரசர்களின் பெரிய வலிய தேர் ஒதுங்கும்படி கொடுஞ்சியையுடைய நெடிய சிறிய தேரை உருட்டுகின்ற, செங்கண் மழ ஏறு பொருவேல் இளைஞர் கடவு இவுளி கடைவாய் குதட்ட - சிவந்த கண்களையுடைய இளஞ்சிங்கம் போன்ற போர் செய்கின்ற வேற்படையையுடைய இளைஞர் செலுத்துகின்ற குதிரை கடைவாயை அசைக்க, வழிந்து இழியும் விலாழி குமிழி எறிந்து இரைத்துத் திரைத்து நுரைத்து ஒரு பேர் ஆறுமடுக்கும் - வடிந்து ஒழுகும் வாய்நுரை குமிழிகளை உண்டாக்கி ஒலி செய்து அலைவீசி நுரையுற்று ஒரு பெரிய ஆறாகச் செல்லுகின்ற, (வளமிக்க) தமிழ் மதுரைக்கு அரசே, தாலோ தாலேலோ-; அருள் சூல் கொண்ட அங்கயற்கண் அமுதே! தாலோ தாலேலோ-;

(வி - ை.) பெண்கள் கூந்தலினின்று விழுந்த பூந்துகள் அடங்குமாறு விடுத்த குங்குமச் சேறு வழுக்கி யானையை ஓடுதலைத் தடுக்கும் என்க. இளைஞர் செலுத்துகின்ற குதிரைகளின் வாய் நுரை குமிழி எறிந்து ஆரவாரித்து அலை எறிந்து நுரை வீசி ஒரு பேராறு போலச் செல்லும் மதுரை என்க.

*கரடம்-மதம்பாய் சுவடு. கடம்-குடம். மதமாசேற்றில் வழுக்கி ஓட்டறுக்கும் மறுகு. மதமாவானது சேற்றில் வழுக்குதலால் ஓடுதலைத் தவிர்க்கும் மறுகு. கடவு-செலுத்துகின்ற. விலாழி-குதிரையின் வாய் நுரை. இரைத்து-ஒலித்து. திரைத்து-அலையெறிந்து. கொடுஞ்சி-தேரின் உச்சி. ஓட்டு+அறுத்தல் எனப் பிரித்து ஓட்டத்தைத் தடுக்கும் எனப் பொருள் கொள்க.* (௨௬)

**வார்க்குன் றிரண்டு சுமந்தொசியும்**
**மலர்க்கோம் பனையார் குழல்துஞ்சும்**
**மழலைச் சுரும்பர் புகுந்துழக்க**
**மலர்த்தா துகுத்து வானதியைத்**
**தூர்க்கும் போதும்பின் முயற்கலைமேல்**
**துள்ளி உகளும் முசுக்கலையின்**
**துழனிக் கோதுங்கிக் கழனியினெற்**
**சூட்டுப் படப்பை மேய்ந்துகதிர்ப்**
**போர்க்குன் றேறுங் கருமுகிலை**
**வெள்வாய் மள்ளர் பிணையலிடும்**
**பொருகோட் டெருமைப் போத்தினொடும்**
**பூட்டி அடிக்க இடிக்குரல்விட்**
**டார்க்கும் பழனத் தமிழ்மதுரைக்**
**கரசே தாலோ தாலேலோ**
**அருள்சூற் கொண்ட அங்கயற்கண்**
**அமுதே தாலோ தாலேலோ.**

(சொ - ள்.) வார்க்குன்று இரண்டு சுமந்து ஒசியும் மலர்க்கொம்பு அனையார் - கச்சணிந்த இரண்டு முலைகளாகிய மலைகளைத் தாங்கித் துவள்கின்ற மலர்களையுடைய கொம்புபோன்ற பெண்களின், குழல் துஞ்சும் மழலைச் சுரும்பர் புகுந்து உழக்க-

கூந்தலில் தங்கியுள்ள மழலையிசையுடன் கூடிய வண்டுகள் நுழைந்து கலக்க, மலர்த் தாது உகுத்து வான்நதியைத் தூர்க்கும் பொதும்பின் - மலரினுள்ள மகரந்தப் பொடிகளைச் சிதறி ஆகாய கங்கையை மேடாக நிரப்புகின்ற பூஞ்சோலையில், முயற் கலைமேல் துள்ளி உகளும் முசுக்கலையின் துழனிக்கு ஒதுங்கி - முயலையுடைய சந்திரன்மேல் துள்ளிக் குதிக்கும் ஆண் குரங்கின் ஆரவாரத்துக்குப் பதுங்கி, கழனியில் நெற்சூட்டுப் படப்பை மேய்ந்து கதிர்ப்போர்க்குன்று ஏறும் கருமுகிலை - வயல்களிலுள்ள நெற்குவியலின் படப்பை மேய்ந்து கதிர்களையுடைய போரின் குன்றில் ஏறுகின்ற கார்மேகத்தை, வெள்வாய் மள்ளர் பிணையல் இடும் பொருகோட்டு எருமைப் போத்தினொடும் பூட்டி அடிக்க - வெள்ளை வாயையுடைய உழவர் பிணையலிடப்பட்டுள்ள போர்செய்யும் கொம்புகளையுடைய எருமைக்கடாவுடன் பிணைத்து அடிக்க, இடிக் குரல் விட்டு ஆர்க்கும் பழனத் தமிழ் மதுரைக்கு அரசே - வாய்விட்டு இடியின் ஒலியாகிய முழக்கம் புரியும் வயல்களையுடைய தமிழ் பயிலும் மதுரைக்கு அரசியே!, தாலோ தாலேலோ-, அருள் சூல்கொண்ட அங்கயற்கண் அமுதே! தாலோ தாலேலோ-;

(வி - ம்.) வார்-கச்சு. குன்று இரண்டு; இரண்டு நகில்கள். வண்டுகள் உழக்குதலால் பொதும்பர் மலர்த்தாதை உகுத்தது. முயற்கலை-முயலையுடைய சந்திரன். படப்பை-வைக்கோற் போர்; இது பாண்டி நாட்டு வழக்கு. கதிர்ப்போர்க்குன்று - நெற் கதிர்களை அடுக்கிப் போராக்கிய குன்று. முசுக்கலை ஒலிக்கு ஒதுங்கிக் கருமுகில் கதிர்ப் போர்க் குன்றில் ஏறியது. வெள்வாய் மள்ளர் - கள்ளை யருந்தினமையால் வெள்ளிய வாய் என்றார். கள்ளுண்ட மயக்கத்தால் முகிலை எருமையோடு பிணையலிட்டனர்; பிணைத்து அடித்தனர் எனக்கொள்க. சுரும்பு- சுரும்பர்; போலி. பொதும்பு- சோலை. துழனி - ஒலி. முசு - குரங்குகளில் ஒரு பிரிவு. கலை- ஆண். (௨௭)

(வேறு)

காரிற் பொழிமழை நீரிற் சுழியெழி
கழியிற் சிறுகுழியிற்
கரையிற் கரைபொரு திரையிற் றலைவிசி
கண்டலில் வண்டலினெற்

**போரிற் களநிறை சேரிற் குளநிறை**
**புனலிற் பொருகயலிற்**
**பொழிலிற் சுருள்புரி குழலிற் கணிகையர்**
**குழையிற் பொருகயல்போய்த்**
**தேரிற் குமரர்கள் மார்பிற் பொலிதரு**
**திருவிற் பொருவில்வரிச்**
**சிலையிற் றிரள்புய மலையிற் புலவி**
**திருத்திட வூழ்த்தமுடித்**
**தாரிற் பொருதிடு மதுரைத் துரைமகள்**
**தாலோ தாலேலோ**
**சங்கம் வளர்த்திட நின்ற பொலன்கொடி**
**தாலோ தாலேலோ.**

(சொ - ள்.) காரில் - மேகத்திலிருந்து, பொழி மழை நீரில் சுழிஎறி கழியில் - பெய்கின்ற மழைநீரிலும் சுழி எறிகின்ற கழிமுகத்திலும், சிறுகுழியில் கரையில் கரை பொருதிரையில் - சிறிய பள்ளத்திலும் கரையிலும் கரையை மோதுகின்ற அலையிலும், தலைவிரி கண்டலில் வண்டலில் நெற்போரில் - தலைவிரிந்திருக்கின்ற தாழையிலும் மகளிர் விளையாட்டிடத்திலும் நெற்போரினிலும், களம் நிறைசேரில் குளம் நிறை புனலில் பொரு கயலில் - நெற்களத்தினை யடுத்து நிறைந்த மள்ளர் மனையிற்சேர்ந்துள்ள நெற்கூடுகளிலும் குளம் நிறைந்த நீரிலும் போர்புரியும் கயல்மீனைப் போல, பொழிலில் சுருள்புரி குழலில் - சோலையைப் போலச் சுருள்புரிந்துள்ள கூந்தலையுடைய, கணிகையர் குழையில் பொரு கயல்போய் - பரத்தையர்கள் செவியிற் போர் புரியுங் கண்களாகிய கயல் சென்று, தேரில் குமரர்கள் மார்பில் - தேரில் செல்கின்ற இளைஞர்களுடைய நெஞ்சிலும், பொலிதரு திருவில் பொருவில் வரிச் சிலையில் திரள் புயமலையில் - விளங்குகின்ற செல்வத்திலும் ஒப்பில்லாத கட்டமைந்த வில்லிலும் திரண்ட தோள்களாகிய மலையிலும், புலவி திருத்திட ஊழ்த்த முடித்தாரில் - ஊடலைத் தீர்க்கின்ற முயற்சியில் உதிர்ந்த மாலையிலும், பொருதிடு மதுரைத் துரைமகள் தாலோ தாலேலோ - சென்று போர் செய்

கின்ற மதுரை அரசி தாலோ தாலேலோ, சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி - தமிழ்ச் சங்கம் வளரும்படி நிலைபெற்ற பொற்கொடியே!, தாலோ தாலேலோ-;

(வி - ரை.) கார்-மேகம். கழி-கழிநிலம்; நீர் சென்று தேங்கி நிற்கும் இடம். தலை-உச்சி. கண்டல்-தாழை. வண்டல்-மகளிர் விளையாட்டிடம்; வண்டலுள்ள இடமும் ஆம். நெற்போர்-நெல்லைச் சேர்த்துவைக்கும் கூடு. குழை-காது. குழையிற் பொருகயல்-குழையோடு பொருகின்ற கயல்போன்ற கண்கள். புலவி திருத்திட-ஊடலை நீக்கும் பொருட்டு, என்றது அவர் கணிகையர் காலிற் பணிதலைச் சூட்டியது. துரைமகள் - அரசி.

பொய்கையிலுள்ள கெண்டைமீன் காரிலும் நீரிலும் கழியிலும் குழியிலும் கரையிலும் திரையிலும் கண்டலிலும் வண்டலிலும் நெற் போரிலும் சேர் இல்லிலும் புனலிலும் துள்ளி விழுந்து போர் செய்யும். அதுபோலப் பொருட்பெண்டிர் கண்களாகிய கெண்டை மீன்களும் குமரர்கள் மார்பினும், திருவினும், சிலையினும், மலையினும், தாரினும் சென்று போர் புரியும் - இத்தகைய சிறப்புடைய மதுரை என்பது கருத்து. (௨அ)

சேனைத் தலைவர்கள் திசையிற் றலைவர்கள்
சேருவிற் றலைவர்களாற்
சிலையிற் றடமுடி தேரிற் கொடியொடு
சிந்தச் சிந்திடுஞ்
சோனைக் கணைமழை சொரியப் பெருகிய
குருதிக் கடலிடையே
தோந்த மிரும்பல் கவந்த நிவந்தொரு
சுழியிற் பவுரிகொள
ஆனைத்திரளொடு குதிரைத் திரளையும்
அப்பெயர் மீனமுகந்
தம்மனை யாடு கடற்றிரை போல
அடற்றிரை மோதவெழும்
தானைக் கடலொடு பொலியும் திருமகள்
தாலோ தாலேலோ
சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி
தாலோ தாலேலோ.

(சொ - ள்.) சேனைத் தலைவர்கள் திசையில் தலைவர்கள் செருவில் தலைவர்களால் - வேற்றரசர்களின் சேனைத் தலைவர்கள் திசைகளிலுள்ள அரசர்கள் தடாதகைப் பிராட்டியாரின் படைவீரர்கள் ஆகிய இவர்களால், சிலையில் தடமுடி தேரில் கொடியொடு சிந்தச் சிந்தியிடும் சோனைக் கணைமழை சொரிய- விற்களினால் செய்த மகுடங்கள் தேரிலுள்ள கொடிகள் இவை சிதறும்படி சிதறடிக்கும் வில்லினின்றும் விடாது சொரிகின்ற அம்புகளாகிய மழையினால், பெருகிய குருதிக் கடல் இடையே தொந்தம் இடும் பல் கவந்தம் நிவந்து ஒரு சுழியில் பவுரி கொள - பெருகியுள்ள இரத்தக் கடலில் கூத்தாடுகின்ற பல தலைகுறை பிணங்கள் மேல் எழுந்து ஒரு சுழியினில் சுழல, ஆனைத் திரளொடு குதிரைத் திரளையும் அப்பெயர் மீனை முகந்து அம்மனையாடு கடற்றிரை போல - ஆனைக் கூட்டத்துடன் குதிரைகளின் கூட்டத்தையும் அப் பெயர் கொண்ட யானை மீன் குதிரை மீன்களையும் அள்ளி அம்மனை ஆடுகின்ற கடலின் அலைபோல, அடல்திரை மோத எழும் தானைக் கடலொடு பொலியும் திருமகள் - வலியுள்ள அணிவகுப்பாகிய அலையானது மோத எழுகின்ற சேனைக் கடலின் நடுவில் விளங்குகின்ற சிறந்த பெண்ணரசியே!, தாலோ தாலேலோ-, சங்கம் வளர்த்திட நின்ற பொலன் கொடி தாலோ தாலேலோ-;

(வி - ம்.) செருவில் தலைவர்கள் - அம்பிகையின் படைத் தலைவர்கள். செரு-போர். இற்றிட-முடிசிந்த. சேனைத் தலைவர்கள், பகைப் படையில் தலைவர்களாக வந்த திசைத் தலைவர்களுடைய சிலை இற்றிடவும் முடிசிந்தவும் கணை மழையைச் சொரிய அதனால் பெருகிய குருதிக் கடல். சோனை - விடாமழை. தொந்தமிடல்- கூத்தாடல், பவுரி - சுழன்றாடல். அப் பெயர் மீன் - யானை மீன், குதிரை மீன். அடல்திரை என்றது குருதிக் கடலின் அலையை. செருவில் தலைவர்களாற் சிலையிற் சிந்தியிடுஞ் சோனைக் கணைமழை எனக் கூட்டுக. தடமுடி தேரிற் கொடியொடு சிந்தச் சிந்தியிட்ட என்று பொருத்துக. கடல், யானை மீனையும் குதிரை மீனையும் எடுத்தெறிந்து அம்மானை யாடுவது போலக் குருதிக் கடலும் யானையையும் குதிரையையும் எடுத்து எறிந்து அம்மானை யாடியது என்க. தானை - சேனை. (உக)

**அமரர்க் கதிபதி வெளிறக் களிறெதிர்**
**பிளிறக் குளிறியிடா**
**அண்ட மிசைப்பொலி கொண்டல் உகைத்திடும்**
**அமரிற் றமரினொடும்**
**கமரிற் கவிழ்தரு திசையிற் றலைவர்கள்**
**மலையிற் சிறகரியும்**
**கடவுட் படையொடு பிறகிட் டுடைவது**
**கண்டு முகங்குளிராப்**
**பமரத் தருமலர் மிலையப் படுமுடி**
**தொலையக் கொடுமுடிதாழ்**
**பைம்பொற் றடவரை திரியக் கடல்வயி**
**றெரியப் படைதிரியாச்**
**சமரிற் பொருதிரு மகனைத் தருமயில்**
**தாலோ தாலேலோ**
**சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி**
**தாலோ தாலேலோ.**

(சொ - ள்.) அமரர்க்கு அதிபதி வெளிறு அக்களிறு எதிர் பிளிறக் குளிறியிடா அண்டமிசைப் பொலிகொண்டல் உகைத்திடும் அமரில் - தேவர்களுக்குத் தலைவனை இந்திரன் வெள்ளை நிறமுடைய அந்த ஐராவதயானை எதிர் முழக்கஞ் செய்யும்படி இடியிடித்து அண்டத்தின் மேல் விளங்கிய மேகத்தை ஊர்ந்து செல்லும் போரில், தமரினொடும் கமரில் கவிழ்தரும் திசையில் தலைவர்கள் - சுற்றத்தார்களுடன் வெடிப்பிற் கவிழும் திக்கின் தலைவர்கள், மலையின் சிறகு அரியும் கடவுட் படைஒடு பிறகிட்டு உடைவது கண்டு முகம் குளிரா - மலைகளின் இறகுகளை வெட்டிய தெய்வப் படையான வச்சிரப் படையுடன் முறிந்து பின்னிடுவதைப் பார்த்து முகமலர்ந்து, பமரத் தருமலர் மிலையப் படுமுடி தொலைய - வண்டுகள் மொய்க்கின்ற கற்பகமலர் மாலை சூடப்படும் முடிகெட, கொடுமுடி தாழ் பைம்பொன் தட வரை திரிய-சிகரம் தாழ்ந்த பசிய பொன்னுலாகிய பெரிய மலை திரியவும், கடல்வயிறு எரியப் படை திரியா - கடலின் வயிறும்

எரிந்து வருந்தும்படி வேற்படையைத் திரித்து, சமரில் பொரு திரு மகனைத் தருமயில்-போரில் பொரக் கூடிய அழகிய உக்கிர பாண்டியனைப் பெற்ற மயில் போல்பவளே!, தாலோ தாலேலோ - சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி தாலோ தாலேலோ-;

*(வி - ம்.) அமரர்-தேவர். அதிபதி-அரசன் (இந்திரன்.) வெளிறு அக்களிறு-வெள்ளிய நிறமுடையதான அந்த யானை. கமர்-நிலப்பிளப்பு. திசையிற்றலைவர்கள் - இவர்கள் இந்திரன் படைத்தலைவர்களாய் வந்தவர்கள். மிலைதல்-சூடுதல். திரியா - திரித்து; சுழற்றி யெறிந்து. முகம் குளிரா - முகமலர்ச்சி யடைந்து. பமரம்-வண்டு. இந்திரன் முடிமேல் வளையையும் மேருமலைமேற் செண்டையும் கடல்மேல் வேலையும் ஏவினர். இவ் வரலாறு திருவிளையாடற் புராணத்திற் காண்க. அமரர்க் கதிபதி முடிதொலையப் பைம்பொற் றடவரை திரியக் கடல் வயிறு எரியப் படை திரியாச் சமரிற் பொரு திருமகன் எனக் கூட்டுக. இங்ஙனம் இப் பாட்டில் உக்கிர குமார பாண்டியனுடைய வெற்றிச் செயல்கள் கூறப்பட்டன. (௩0)*

முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ்
நூல்பாழ் போகாமே
முளரிக் கடவுள் படைத்த வசுந்தரை
கீழ்மே லாகாமே
அதிரப் பொருதூ கலிப்பகை ஞன்தமிழ்
நீர்நா டாளாமே
அகிலத் துயிர்கள் அயர்த்தும் அறங்கடை
நீணீர் தோயாமே
சிதைவுற் றரசியல் கற்றரு மங்குடி
போய்மாய் வாகாமே
சேழியர்க் கபயரும் ஒப்பெண வின்றுண
ரா தார் ஓதாமே
மதுரைப் பதிதழை யத்தழை யுங்கொடி
தாலோ தாலேலோ
மலயத் துவசன் வளர்த்த பசுங்கிளி
தாலோ தாலேலோ.

(சொ - ள்.) முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ் நூல் பாழ்போகாமே-பழைமையான சொல்லறிந்த புலவர்கள் தெளிவித்த இனிய தமிழ் நூல்கள் பாழாகப் போய் விடாமலும், முளரிக் கடவுள் படைத்த வசுந்தரை கீழ்மேல் ஆகாமே - தாமரை மலரில் தங்கியிருக்கும் பிரமதேவன் படைத்த பூமி கீழும் மேலும் ஆகாமலும், அதிரப் பொருது கலிப்பகைஞன் தமிழ்நீர் நாடு ஆளாமே-அதிரும்படி போர்செய்து கலியாகிய பகைவன் தமிழ் வழங்குந் தன்மையுடைய பாண்டிய நாட்டை ஆளாமலும், அகிலத்து உயிர்கள் அயர்த்தும் அறங்கடை நீள் நீர் தோயாமே - எல்லா உயிர்களும் மறந்தும் பாவமாகிய கடலில் மூழ்காமலும், சிதைவுற்று அரசியல் நற்றருமம் குடிபோய் மாய்வாகாமே-சிதறுண்டு அரசுமுறை நல்ல அறம் குடிவிட்டு மறைந்து போகாமலும், செழியர்க்கு அபயரும் ஒப்பு என நின்று உணராதார் ஓதாமே-பாண்டியர்க்குச் சோழரும் நிகரானவர் என்று நிலையான தன்மை யறியாதவர்கள் சொல்லாமலும், மதுரைப்பதி தழையத் தழையும் கொடி - மதுரைநகர் செழிக்கும்படி செழித்து வளர்ந்துள்ள பைங்கொடியாகிய மீனுட்சி, தாலோ தாலேலோ;-மலயத்துவசன் வளர்த்த பசுங் கிளி-மலயத்துவச பாண்டியன் வளர்த்த இளங்கிளி போன்றவளே!; தாலோ தாலேலோ;-

*(வி - ம்.) முதுசொற்......பசுந்தமிழ் என்றது தேவாரம் முதலியவற்றை. முளரி-தாமரைமலர். வசுந்தரை - பூமி. கலிப் பகைஞன்-கலியாகிய பகைவன்; வறுமை. தமிழ் நீர்நாடு-தமிழ் வழங்குந் தன்மையையுடைய பாண்டிநாடு, நீர் - தன்மை; இயல்பு. அகிலத்து-பூமியில். அயர்த்தும்-மறந்தும். சிதைவுற்று-சிதைந்து. நீள் நீர்-கடல்; பெருகிய நீரையுடையது என விரித்துக் கொள்க: இஃது அன்மொழித் தொகை. அறங்கடை - அறத்திற் கடைப்பட்டதான பாவம். உயிர்கள் மறந்தும் பாவக் கடலிற் படியாமல் என்க. அபயர் - சோழர். செழியர் - பாண்டியர். போகாமே, ஆகாமே முதலியவை 'மே' விகுதி பெற்ற எதிர்மறை வினையெச்சங்கள்: போகாமல், ஆகாமல் என்று பொருள் கொள்க. போகாமே, ஆகாமே, ஆளாமே, தோயாமே, மாய்வாகாமே......ஓதாமே மதுரைப்பதி தழையத் தழையும் கொடி எனக் கூட்டுக. உமையம்மை மதுரையிற் பிறந்ததால் பலவளமுஞ் சிறந்து பெருகின என்பது கருத்து. (கக)*

**தகரக் கரிய குழற்சிறு பெண்பிள்ளை**
**நீயோ தூயோன்வாழ்**
**சயிலத் தெயிலை வளைப்பவ ளென்றெதிர்**
**சீறு வீறோதா**
**நிகரிட் டமர்செய் கணத்தவர் நந்திபி**
**ரானோ டேயோடா**
**நிலைகெட் டுலைய உடற்றவு டைந்ததோர்**
**ஆனே றாகாமே**
**சிகரப் பொதிய மிசைத்தவ ழுஞ்சிறு**
**தேர்மே லேபோயோர்**
**சிவனைப் பொருத சமர்த்தன்உ கந்தருள்**
**சேல்போல் மாயாமே**
**மகரத் துவசம் உயர்த்தபோ லன்கொடி**
**தாலோ தாலேலோ**
**மலயத் துவசன் வளர்த்தப சுங்கிளி**
**தாலோ தாலேலோ.**

(சொ - ள்.) தகரக்கரிய குழற்சிறு பெண்பிள்ளை நீயோ - மயிர்ச்சாந்து அணிந்த கருமையான கூந்தலையுடைய சிறிய பெண்மகவாகிய நீயோ, தூயோன் வாழ்சயிலத்து எயிலை வளைப் பவள் என்று எதிர்சீறு - தூயவனாகிய சிவபெருமான் வாழும் கயிலைமலையின் மதிலை முற்றுகை யிடுபவள் என்று கூறிச் சீறி வீறு ஓதா நிகர் இட்டு அமர்செய் கணத்தவர் நந்திபிரானோடே ஓடா-பெருமிதம் பேசி எதிர்த்து நின்று போர் செய்தவரான சிவகணத்தவர்களும் கணத்தலைவரான நந்திப் பெருமானும் ஓடி, நிலைகெட்டு உலைய உடற்ற உடைந்தது ஓர் ஆன்ஏறு ஆகாமே - தாங்கா நின்ற நிலையானது கெட்டு அழியும்படி தாக்கவும் அதனால் முறிந்து சென்ற ஒரு விடைக்கொடியாகாம லும், சிகரப் பொதிய மிசைத் தவழும் சிறு தேர் மேலேபோய் - உச்சியையுடைய பொதிய மலையிலிருந்து தவழ்ந்து வரும் தென்றற் காற்றாகிய தேரின்மேல் ஏறிச்சென்று, ஓர் சிவனைப் பொருத சமர்த்தன் உகந்து அருள் சேல்போல் மாயாமே-ஒரு

சிவனைப் பொருத வலிமையுடைய மன்மதன் மகிழ்ந்தருளிய மீன் கொடிபோல் மாளாமலும், மகர துவசம் உயர்த்த பொலன் கொடி-மகர மீன் கொடியை உயர்த்திய பொற்கொடி போன்றவளே!, தாலோ தாலேலோ-; மலயத்துவசன் வளர்த்த பசுங் கிளி தாலோ தாலேலோ-;

*(வி - ம்.) தகரம்-மயிர்ச்சாந்து. பெண்பிளை!-பெண்பிள்ளை! தூயோன்-தூய்மையுடைய சிவபெருமான். சைலம்-மலை (கைலை). எயில்-மதில். சீறு-சீறி; ஓதா-ஓதி. வீறு-பெருமை. ஆன் ஏறு-ஏற்றுக்கொடி. நந்திகணத்தவர் உடைந்தமையின் அவர் உயர்த்த இடபக்கொடி பயனற்ற தாயிற்று. மீனக்கொடி - தடாதகைப் பிராட்டியார் திக்கு விசயத்தில் அனைவரையும் வென்றமையின் அவள் உயர்த்திய மீன் கொடி பயனுடையதாயிற்று என்க.*

*என்று சீறு ஓதா விகரிட்டு அமர்செய் கணத்தவர் நந்தி பிரானோடே ஓடா கெட்டு உடற்ற அப்போது உடைந்தது ஆனேறு; ஆனேறுகாமலும் சேல்போல் மாயாமலும் மகரத்துவசத்தை உயர்த்த கொடி எனக் கூட்டுக. நந்தி கணத்தவர் ஓடியதால் சிவபெருமானுக்குரிய விடைக்கொடி தோற்றது. மன்மதன் சிவனுடைய கண்ணுலெரிக்கப்பட்டதால் அவன் மீனக் கொடியும் தோற்றது. அவை போலத் தோல்வி யடையாது நின்ற தடாதகையின் கயற்கொடி என்பது கருத்து. (கஉ)*

## ௪. சப்பாணிப் பருவம்

நாளவட் டத்தளிம நளினத் தொடுந்துத்தி
நாகணையும் விட்டோரெட்டு
நாட்டத்த னும்பரம வீட்டத்த னுந்துஞ்சு
நள்ளிருளி னப்பணண்ட
கோளவட் டம்பழைய நேமிவட் டத்திெடு
குப்புற்று வெற்பெட்டுமேழ்
குட்டத்தி னிற்கவிழ மூதண்ட வேதண்ட
கோதண்ட மோடுசக்ர
வாளவட் டஞ்சுழல மட்டித்து நட்டமிடு
மதுமத்தர் சுத்தநித்த
வட்டத்தி னுக்கிசைய ஒற்றிக்க னத்ததன
வட்டத்தை ஒத்திட்டதோர்
தாளவட் டங்கோட்டு கைப்பாணி ஒப்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழோடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே.

(சொ - ள்.) நாளவட்டம் தளிமம் நளினத்தொடும் துத்தி நாக அணையும் விட்டு ஒர் எட்டு நாட்டத்தனும் பரம வீட்டத்தனும் துஞ்சு நள்இருளின் நாப்பண்-தண்டையுடைய வட்டமான தவிசு ஆகிய தாமரை மலரையும் புள்ளிகளை யுடைய பாம்புப் பள்ளியையும் விட்டுப் பிரிந்து எட்டுக் கண்களையுடைய நான் முகனும் பரமபதம் எனப்படும் வைகுந்தநாதனை திருமாலும் தூங்குதற்குரிய செறிந்த இருட்கால நடுவில், அண்டகோள வட்டம் பழைய நேமி வட்டத்திெடு குப்புற்று வெற்பு எட்டும் ஏழ் குட்டத்தினில் கவிழ - ஆகாயவட்டமும் பழைய நில மண்டலம் கவிழ்ந்து எட்டு மலைகளும் ஏழ்கடல்களிற் கவிழ, மூதண்ட வேதண்ட கோதண்ட மோடு சக்ரவாள வட்டஞ் சுழல-பழைய உலகுடன் கூடிய வில்லாகிய மேருமலையும் சக்கர வாளமலையும்[சுழற்சியுற, மட்டித்து நட்டம் இடு மதுமத்தர் சுத்த நித்த வட்டத்தினுக்கு இசைய-மண்டலித்து நடனம் புரிகின்ற

மதுவையுடைய ஊமத்தமாலையை அணிந்துள்ள சிவபெருமான் செய்யும் சுத்தமானபவுரிக்கூத்துக்கிணங்க, ஒற்றிக்கனத்த தனவட்டத்தை ஒத்திட்டது ஓர் தாளவட்டம் கொட்டு கைப்பாணி ஒப்ப-ஒன்று சேர்ந்து பருத்த வட்டத்தனத்திற்கு ஒப்பான ஒரு வட்டமாகிய தாளம் அடிக்கின்ற ஒழுங்கான ஒலிக்கு நேராக, ஒரு சப்பாணி கொட்டி அருளே - ஒப்பற்ற கைகொட்டியருள்வாய், தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி சப்பாணி கொட்டி அருள்-தமிழுடன் தோன்றிப் பழைமையான மதுரை நகரில் வளர்ந்த கொடிபோல்வாளே! சப்பாணி கொட்டி அருள்வாய்.

*(வி - ம்.) நாளம் - தண்டு. தளிமம் - தவிசு. நாட்டம் - தொழிலாகு பெயராய்க் கண்ணை யுணர்த்தும், நாடுதற்குக் கருவியாயிருப்பது. எட்டு நாட்டத்தன்-எட்டுக் கண்களையுடைய பிரமதேவன். பரமபதம்-வைகுந்தம். நள்-நடு. வேதண்டம்-மலை. மத்தம்-ஊமத்தம்: சிவனணியும் ஊமத்தப்பூ. நித்தம்-பவுரிக் கூத்து. சப்பாணி - கைசேர்த்துக் கொள்ளல். கொட்டல் - அடித்தல் தமிழொடு பிறந்த மதுரை என்ற பாடத்திற்குத் தமிழ்மொழி தோன்றிய நாள்முதல் விளங்கிவரும் பழமையான மதுரை என்க. 'ஒத்தி' என்று பாடங்கொண்டு கொட்டு என்பர். பாணி-தாளம். கைப்பாணி-ஒழுங்கான ஒலி. நாகணை-நாக அணை என்பதில் அகரம் தொகுத்தது: பண்புத்தொகை. நப்பண்-இடை; நடு. தனவட்டம் தாளவட்டம் இவற்றை மாற்றி வட்டத்தனம், வட்டத்தாளம் என்க. தாளக் கருவி கொங்கைக்கு உவமையாதலால் வட்டத்தனம் போன்ற வட்டத்தாளம் என்றார், அதனைக் கொட்டும் ஒலிபோல ஒலி எழக் கை கொட்டுக என்பது கருத்து. நள்ளிருள் - பிரளய கால இருள். "நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே" என்பது மணிமொழிப் பெருமான் அருளிய திருவாசகம் சிவபுராணத்திற் காணப்படுவது. சிவபெருமான் ஊழி முடிவில் திருக்கூத்தாடுகையில் உமாதேவியார் உடனிருந்து தாளங்கொட்டினர். நள்ளிருளின் நாப்பண் குப்புற்றுக் கவிழ, சுழல மட்டித்து நட்டமிடு மதுமத்தரது நித்த வட்டத்துக்கு இயையக் கொட்டு கைப்பாணி என்க. (௧௧)*

**போய்வந்த நுண்ணிடை நுடங்கக் கொடிஞ்சிப்**
**பொலந்தேரோ டமரகத்துப்**
**பொன்மேரு வில்லியை எதிர்ப்பட்ட ஞான்றம்மை**
**பொம்மல்முலை மூன்றிலொன்று**

கைவந்த கொழுநரோடும் உள்ளப் புணர்ச்சிக்
கருத்தான் அகத்தொடுங்கக்
கவிழ்தலை வணக்கொடு முலைக்கண்வைத் திடுமொரு
கடைக்கணேக் கமுதமூற்ற
மெய்வந்த நாணிைெடு நுதல்வந் தெழுங்குறு
வெயர்ப்பிைெ டுயிர்ப்புவீங்கும்
விம்மிதமு மாய்நின்ற உயிரோவம் எனவூன்று
விற்கடை விரற்கடைதழீஇத்
தைவந்த நாணிைெடு தவழ்தந்த செங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தமிழோடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே.

(சொ - ள்.) பொய் வந்த நுண் இடை நுடங்க கொடிஞ்சிப் பொலன் தேரொடு அமர் அகத்துப் பொன்மேரு வில்லியை எதிர்ப்பட்ட ஞான்று - இல்லை என்று சொல்லும்படியாகச் சிறுத்த இடை அசைய உச்சியுடன் கூடிய பொற்றேரில் போர்க் களத்தில் பொன்மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானை நேரிற் கண்டபொழுது, அம்மை பொம்மல் முலை மூன்றில் ஒன்று கைவந்த கொழுநரொடும் உள்ளப் புணர்ச்சிக் கருத்தான் அகத்து ஒடுங்க-அன்னையே! நின்பொலிவாகிய கொங்கைகள் மூன்றில் ஒன்று ஒழுக்கம் சான்ற கணவருடன் உள்ளம் புணர்ந்துள்ள கருத்தினால் நெஞ்சினுள் ஒடுங்கிவிட, கவிழ் தலை வணக்கொடு முலைக்கண் வைத்திடும் ஒரு கடைக்கண் நோக்கு அமுதம் ஊற்ற-குனிந்த தலை வணக்கத்துடன் முலை நுனியில் வைத்த கட்கடைப் பார்வை அமுதம் பெருக்க, மெய் வந்த நாணிைெடு நுதல்வந்து எழுங் குறுவெயர்ப்பிைெடு - உண்மையாகத் தோன்றிய நாணத்துடனும் நெற்றியில் புலப்பட்ட குறுவியர்வையுடனும், உயிர்ப்பு வீங்கும் விம்மிதமும் ஆய்நின்ற உயிர் ஓவம் என-பெருமூச்சுவிடும் வியப்புடனும் கூடி நின்ற உயிர்ச்சித்திரம்போல, ஊன்று விற்கடை விரற் கடை தழீஇ தைவந்த நாணிைெடு தவழ்தந்த செங்கைகொடு-

ஊன்றிய வில்லின் இடத்தை விரல்களின் நுனியால் தழுவி வில் நாணியோடு தடவித் தவழ்ந்த செங்கையைக் கொண்டு, சப்பாணி கொட்டி அருள்—, தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி! சப்பாணி கொட்டி அருள்-;

(வி - ம்.) பொய் வருதல்-அருமையாதல். நுடங்க-துவள, அசைய. கொடிஞ்சி - உச்சி; தேர் மொட்டு. மேருவில்லி - பொன்மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான். பொம்மல் - பூரிப்பு. ஒடுங்குதல்-மறைதல். மெய்வந்த நாண் - இயற்கை நாணம். உயிர்ப்பு-பெருமூச்சு. உயிர் ஓவம்-உயிருள்ள சித்திரம்; பேசும் படம் போல்வது. தைவரல்-தடவுதல். தைவா: பகுதி. விற்கடை-வில்லின் இடம்; கையாற் பிடிக்கும் நடு இடம் என்று கொள்க. கடை-இடம். விரற்கடை-விரல் நுனி, ஈண்டுக் கடை-இறுதி; கடைசி. நாண்-கயிறு. போர் நிறுத்தியபோது வில்லை யூன்றி அது கீழ் விழாமல் விரல் நுனியால் மெல்லத் தழுவி வில்நாணியையும் தடவிக் கொண்டு நின்றுன் என்பது கருத்து. விரலிடத்தில் எனக் கொள்ளினும் பொருந்தும். (௧௪)

பூமரு வெடிப்பமுகை விண்டதண் டலையீன்ற
புனைநறுந் தளிர்கள் கொய்தும்
பொய்தற் பிணக்களொடு வண்டற் கலம்பெய்து
புழுதிவிளை யாட்டயர்ந்தும்
காமரு மயிற்குஞ்சு மடவனப் பார்ப்பினெடு
புறவுபிற வும்வளர்த்தும்
காந்தள்செங் கமலத்த கழுநீர் மணந்தேனக்
கண்பொத்தி விளையாடியும்
தேமரு பசுங்கிள்ளை வைத்துமுத் தாடியும்
திரள்பொற் கழங்காடியும்
செயற்கையான் அன்றியும் இயற்கைச் சிவப்பூறு
சேயிதழ் விரிந்ததெய்வத்
தாமரை பழுத்தகைத் தளிரொளி துளும்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி
சப்பாணி கொட்டியருளே.

(கொ - ள்.) பூமரு வெடிப்ப முகை விண்ட தண்டலை ஈன்ற புனை நறும் தளிர்கள் கொய்தும்-பூக்கள் மணம் கமழும்

படி மொட்டுகள் விரிந்த சோலை அளித்த அழகிய நல்ல தளிர் களைப் பறித்தும், பொய்தற் பிணுக்களொடு வண்டற்கலம் பெய்து புழுதி விளையாட்டு அயர்ந்தும் - விளையாடும் பெண்க ளுடன் கூடி விளையாட்டுக்குரிய கலங்களிற் புழுதியைப் பெய்து மணற்சோருக்கி விளையாடியும், காமரு மயிற்குஞ்சு மடஅனப் பார்ப்பிெைடு புறவு பிறவும் வளர்த்தும்-அழகிய மயிலின் குஞ்சு களையும் இளமையான அன்னக் குஞ்சுகளையும் புறக்குஞ்சுகளை யும் வேறு பறவைக் குஞ்சுகளையும் வளரச்செய்தும், காந்தள் செங்கமலத்த கழுநீர் மணந்து எனக் கண்பொத்தி விளையாடி யும்-காந்தள் மலர்கள் செந்தாமரைப் பூவில் மலர்ந்திருக்கும் செங்கழுநீர்ப் பூக்களைச் சேர்ந்தது போலப் பெண்கள் கண் களைப் பொத்தி விளையாடியும், தேமரு பசுங்கிள்ளை வைத்து முத்து ஆடியும்-தெய்வத் தன்மையுற்ற பசிய கிளியைக் கையில் தாங்கி முத்த மிட்டும், திரள் பொற்கழங்கு ஆடியும் - திரண்ட அழகிய கழங்கு எடுத்து விளையாடியும், செயற்கையான் அன்றி யும் இயற்கைச் சிவப்பு ஊறு சேயிதழ் விரிந்த தெய்வத் தாமரை பழுத்த கைத்தளிர் ஒளி துளும்ப-மேற்கூறிய செயல்களால் அல்லாமலும் இயற்கையாகவே சிவப்பு நிறம் ஊறிய செம்மை யான இதழ்கள் விரிந்த தெய்வத் தன்மை பொருந்திய தாமரை மலர்போல் முதிர்ந்த கையாகிய தளிர் ஒளி ததும்ப, ஒரு சப் பாணி கொட்டி அருள்-, தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி சப்பாணி கொட்டி அருள்-;

(வி - ம்.) மருவெடிப்ப - வாசனை வீச. விண்ட - விரிந்த. புனை-அழகு. தண்டலை-சோலை. பொய்தல்-விளையாட்டு. பிணுக் கள்-பெண்கள். வண்டற்கலம் - விளையாட்டுக்குரிய கலங்கள். புழுதி விளையாட்டு-மணல் வீடுகட்டி விளையாடல். காமரு-அழகு. மடம் + அன்னம் = மடவன்னம்; இளமையான அன்னப் பறவை. ஒரு சிறுமியின் கண்களை மற்ரெருரு சிறுமி மறைவிலிருந்து வந்து பொத்திக் கொண்டு "நான் யார் சொல்" என்று கேட்பது "கண் பொத்தி விளையாடல்" ஆம். அன்றியும் ஒருத்தி கண்ணை மற் ெருருத்தி பொத்தி வேறு ஒரு பெண்ணை மறைந்து கொள்ளும் படி யேவி அவளைக் கண்டு பிடிக்க விடுவதும் அவ் விளையாடல் ஆம். காந்தள் மலர் கைக்கும், கமலப்பூ முகத்திற்கும், கழுநீர்ப்பூ கண்களுக்கும் உவமையாதலால், "காந்தள் செங்கமலத்த கழுநீர் மணந்தென" எனக் கூறினர். இல்பொருளுவமை இது. மணந்

*தது என என்பது மணந்தெனக் குறைந்துநின்றது தொகுத்தல் விகாரம். கழங்கு-கழற்சிக்காய். சிறுமியர் இக்காயை எடுத்தெறிந்து விளையாடுவர். இயற்கையாகக் கைகள் சிவப்புடையன. தளிர் கொய்தல் முதலிய செயற்கையாலும் மிகச் சிவப்பூறின. அத்தகைய கைகளிற் சிவப்பொளி பெருகும்படி கொட்டியருள் என்க. கைத்தளிர் : உருவகம். (கடு)*

**விண்ணளிக் குஞ்சுடர் விமானமும் பரநாத**
**வெளியில் துவாதசாந்த**
**வீடும் கடம்புபோதி காடும் தடம்பணை**
**விரிந்ததமிழ் நாடும்நெற்றிக்**
**கண்ணளிக் குஞ்சுந் தரக்கடவுள் பொலியுமறு**
**காற்பீட மும்மெம்பிரான்**
**காமர்பரி யங்கக் கவின்தங்கு பள்ளியங்**
**கட்டிலுந் தொட்டிலாகப்**
**பண்ணளிக் குங்குதலை அமுதொழுகு குமுதப்**
**பசுந்தேறல் ஊறலாடும்**
**பைங்குழவி பெருவிரல் சுவைத்துப் பருகிடப்**
**பைந்தேறல் ஊறுவண்கைத்**
**தண்ணளிக் கமலஞ் சிவப்பூற அம்மையொரு**
**சப்பாணி கொட்டியருளே**
**தமிழோடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி**
**சப்பாணி கொட்டியருளே.**

**(சொ - ள்.)** விண் அளிக்கும் சுடர் விமானமும் - விண்ணுலக வேந்தனை இந்திரன் ஆணையால் தேவர்கள் கொணர்ந்து கொடுத்த ஒளியுற்ற இந்திர விமானமும், பரநாத வெளியில் துவாதசாந்த வீடும்-பரநாத வெளியிடத்தில் அமைந்துள்ள துவாதசாந்த பீடமும், கடம்பு பொதிகாடும் தடம்பணை விரிந்த தமிழ் நாடும் - கடப்ப மரங்கள் நிறைந்த காடும் குளிர்ந்த பண்ணை யிடங்கள் பரந்த தமிழ்நாடும், நெற்றிக்கண் அளிக்கும் சுந்தரக் கடவுள் பொலியும் அறுகாற் பீடமும் - நெற்றிக் கண்ணுடன் அருள்புரியும் சோமசுந்தரக் கடவுள்

நிறைந்து விளங்கும் அறுகாற்பீடமும், எம்பிரான் காமர் பரியங்கக் கவின் தங்கு பள்ளியங்கட்டிலும் தொட்டிலாக - எம் இறைவனது அழகிய படுக்கையிடத்திலுள்ள அழகுற்ற பள்ளிக் கட்டிலும் தொட்டில் ஆகக்கொண்டு, பண் அளிக்கும் குதலை அமுது ஒழுகு குமுதப் பசுந்தேறல் ஊறல் ஆடும் பைங்குழவி-பண்ணைத் தருகின்ற (இசையுடன் கூடிய) மழலை மொழியான அமுதம் ஒழுகுகின்ற எச்சில் ஆகிய இனியதேன் பெருக்கிற் கிடந்து அசைகின்ற இளங்குழந்தையே, பெருவிரல் சுவைத்து நீ பருகிடப் பைந்தேறல் ஊறுவண்கைத்தண் அளிக்கமலம் சிவப்பூற-நீ பெருவிரலைச் சுவைபார்த்துப் பருகும்படி இனிய தேனது ஊறப் பெற்ற வளப்பமிக்க குளிர்ந்த வண்டுகள் தங்கப் பெற்ற தாமரைப் பூப்போன்ற கைகள் சிவப்புநிறம் பெறும்படி, அம்மை ஒரு சப்பாணி கொட்டி அருள்-தாயே! நீ ஒப்பற்ற சப்பாணியைக் கொட்டியருள்வாய், தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்த கொடி! சப்பாணி கொட்டி அருள்;- !

(வி - ம்.) *விண்-இடவாகு பெயராய்த் தேவர்களையுணர்த்தியது. பரநாத வெளி-மேலான அறிவொளியுள்ள இடம். துவாதசாந்தம் என்பது சிரசின்மேற் பன்னிரண்டங்குல அளவில் உள்ள ஓர் இடம். பரியங்கம்-துயிலும் இடம். பள்ளியங் கட்டில்: ஒரு பொருட் பன்மொழி. விமான முதலாகிய ஆறு இடங்களிலும் அம்மை நீங்காது இருப்பள் என்பது கருத்து. கமலம்: உவமையாகுபெயராய்க் கையை யுணர்த்தியது. விமானமும் வீடும் காடும் காடும் பீடமும் கட்டிலும் ஆகிய ஆறிடங்களையும் தொட்டிலாகக் கொண்டு ஆடுங்குழவி! அம்மை! நீ கொட்டியருள் என! வினை முடிவு செய்க.* (கசு).

**சேலாட்டு வாட்கட் கருங்கடற் கடைமடை**
**திறந்தமுதம் ஊற்றுகருணைத்**
**தெண்திரை கொழித்தெறிய வெண்திரை கெருப்பூட்டு**
**தெய்வக் குழந்தையைச்சேங்**
**கோலாட்டு நின்சிறு கணைக்காற் கிடத்திக்**
**குளிப்பாட்டி உச்சிமுச்சிக்**
**குஞ்சிக்கு நெய்போற்றி வெண்காப்பும் இட்டுவளர்**
**கொங்கையிற் சங்குவார்க்கும்**

**பாலாட்டி வாயிதழ் நெரித்தூட்டி உடலிற்**
**பசுஞ்சுண்ண முந்திமிர்ந்து**
**பைம்பொற்குறங்கினிற் கண்வளர்த் திச்சிறு**
**பரூஉமணித் தொட்டிலேற்றித்**
**தாலாட்டி ஆட்டுகைத் தாமரை முகிழ்த்தம்மை**
**சப்பாணி கொட்டியருளே**
**தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி**
**சப்பாணி கொட்டியருளே.**

**(சொ - ள்.)** சேல் ஆட்டு வாள்கண் கருங்கடல் கடைமடை திறந்து ஊற்று அமுதம் கருணை தெண்திரை கொழித்து எறிய-கயல்மீனை வாட்டுகின்ற வாள்போன்ற கண்கள் ஆகிய கரியகடல் மடைதிறந்து ஊற்றுகின்ற அமுதத்தைப்போன்ற கருணையாகிய தெள்ளிய அலையை மோதி வீச, வெண்திரை நெருப்பு ஊட்டு தெய்வக்குழந்தையை செங்கோல் ஆட்டு நின் சிறு கணைக்கால் கிடத்தி - வெள்ளிய அலைகளையுடைய கடலை நெருப்பூட்டிய தெய்வக் குழந்தையாகிய முருகனைச் செம்மையான திரண்ட அசையும் நின் சிறிய கணைக்காலிற் கிடத்தி (கிடக்கச் செய்து), குளிப்பு ஆட்டி உச்சி முச்சிக் குஞ்சிக்கு நெய் போற்றி வெண்காப்பும் இட்டு - நீராட்டி உச்சி மோந்து தலைமுடிக்கு எண்ணெய் பூசித் திருவெண்ணீறு பூசி, வளர் கொங்கையிற் சங்கு வார்க்கும் பால் ஆட்டி வாய் இதழ் நெரித்து ஊட்டி-வளர்கின்ற கொங்கையிலுள்ள பாலைச் சங்கில் வார்த்துப் பாலை அசைத்து வாயிதழை நெரித்து உண்பித்து, உடலில் பசுஞ்சுண்ணமும் திமிர்ந்து-உடம்பில் இனிய வாசனைப் பொடியும் பூசி, பைம்பொற் குறங்கினில் கண்வளர்த்திச் சிறு பரூஉ மணித்தொட்டில் ஏற்றி - பசும்பொன் நிறமான துடையில் தூங்க வைத்துப் பின் சிறியதும் பருத்த மாணிக்கங்கள் அழுத்தியதுமான தொட்டிலில் ஏற்றி, தால் ஆட்டி ஆட்டுகைத் தாமரை முகிழ்த்து அம்மை சப்பாணி கொட்டி அருள்-நாக்கையசைத்துப் பாடி ஆட்டுகின்ற கைத்தாமரை மலர்களைக் குவித்து அம்மையே! சப்பாணி கொட்டி அருள், தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்தகொடி! சப்பாணி கொட்டி அருள்-;

*(வி - ரை.) கண்ணைக் கடல் என்றமைக்கு ஏற்பக் கருணையைத் திரை என்றார். வெண்திரை நெருப்பூட்டு தெய்வக் குழந்தை : உக்கிர குமாரபாண்டியன். கிடத்தல்-வளர்த்தல். நெய் போற்றுதல்-எண்ணெய் பூசுதல். வெண்காப்பு - திருநீற்றுக் காப்பு. சுண்ணம்-மணப்பொடி. குறங்கு - தொடை. தாலாட்டுதல் - நா அசைத்தல். பால் ஆட்டி-பாலைக் குலுக்கி. செம்மை+கோல்= செங்கோல்-செம்மையான திரண்ட கோல். ஆட்டும்-அசையும். முச்சி-உச்சிக்கொண்டை. உச்சி-உச்சந்தலை. குஞ்சி-ஆண் தலை மயிர். பாலூட்டுபவர் பாலை அசைத் தூட்டுதல் வழக்கம். "நெய் பால் அடைக்கலம் தாய் வைத்து வாய்நெரித் தூட்டலும்" எனப் பிற நூலாசிரியரும் கூறுகின்றார்.*

*குழந்தையைக் கிடத்திக் குளிப்பாட்டிப் போற்றி இட்டு ஆட்டி நெரித்து ஊட்டித் திமிர்ந்து வளர்த்தி ஏற்றித் தாலாட்டி ஆட்டு கைத் தாமரை என வினையெச்சங்கள் ஒன்றை யொன்றடுக்கி ஆட்டு என்ற பெயரெச்ச முதனிலை கொண்டும், அப் பெயரெச்சம் கை என்ற பெயர் கொண்டும் முடிந்தன. (கஎ)*

(வேறு)

**வானத்துருமோ டுேத்திரள் சிந்த**
**மலைந்த பறந்தலையின்**
**மண்ணவர் பண்ணவர் வாளின் மறிந்தவர்**
**மற்றவர் போற்றேடியார்**
**பானற் கணையும் முலைக்குவ டும்போரு**
**படையிற் படவிமையோர்**
**பைங்குடர் மூளையோ டும்புதி துண்டு**
**பசுந்தடி சுவைகாணுச்**
**சேனப் பந்தரின் அலகைத் திரள்பல**
**குரவை பிணைத்தாடத்**
**திசையிற் றலைவர்கள் பெருநாண் எய்தச்**
**சிறுநாண் ஒலிசெய்யாக்**
**கூனற் சிலையி னெடுங்கணை தொட்டவள்**
**கொட்டுக சப்பாணி**
**குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்**
**கொட்டுக சப்பாணி.**

**(சொ - ள்.)** வானத்து உரும் ஒடு உடுத்திரள் சிந்த மலைந்த பறந்தலையில்-விண்ணிடமுள்ள இடியுடன் நட்சத்திரக் கூட்டமும் சிந்தும்படி போரிட்ட போர்க் களத்தில், பண்ணவர் வாளின் மறிந்தவர் மண்ணவர் மற்றவர் பொன் தொடியார் - தேவர்களின் வாளால் இறந்துபட்ட பூவுலக வீரர்கள் (சுவர்க்கம் அடைந்து ஆண்டுள்ள தேவர்களின்) பொன் வளையலை யணிந்த தேவமாதர்களின், பானற்கணையும் முலைக்குவடும் பொரு படையிற்பட - நீலோற்பலம் போன்ற கண்களாகிய அம்பினாலும் தனங்களாகிய மலைகளாலும் போர்செய்யும் சேனைகள் ஆகிய அரம்பையருடன் சேர்ந்து இன்பம் துய்க்கவும், இமையோர் பைங்குடர் மூளையோடும் புதிது உண்டு பசுந்தடி சுவைகாண - தேவர்களின் பெருங் குடலுடன் மூளையையும் புதிதாக உண்டு பசிய தசையின் சுவையைக் கண்டு, சேனப்பந்தரின் அலகைத் திரள் பல குரவை பிணைத்து ஆட - பருந்துப் பந்தரில் பேய்க் கூட்டங்கள் பல குரவைக் கூத்தைச் சேர்ந்து ஆடவும், திசையில் தலைவர்கள் பெருநாண் எய்தச் சிறுநாண் ஒலி செய்யா - எட்டுத் திக்குகளிலுமுள்ள காவற்றலைவர்கள் மிகுந்த நாணம் அடையவும் சிறிய நாணின் ஒலியைச் செய்து, கூனல் சிலையின் நெடுங்கணை தொட்டவள் கொட்டுக சப்பாணி-வளைந்த வில்லினால் நெடிய அம்பைத் தொடுத்தவளே! சப்பாணி கொட்டியருள், குடைநிழலில் புவி மகளை வளர்த்தவள் கொட்டுக சப்பாணி - (வெண்கொற்றக்) குடையின் நிழலிற் பூமிதேவியை வைத்து வளர்த்தவளே! சப்பாணி கொட்டி அருள்-;

**(வி - ரை.)** *மலைதல்-போர் புரிதல். பொருபடை: வினைத் தொகை. உடு-விண்மீன். பறந்தலை-போர்க்களம். தேவர்களின் வாளினால் மரித்த மண்ணுலகத்துள்ள சேனைவீரர் தடாதகைப் பிராட்டியார் படையைச் சார்ந்தவர்கள். இவ் வீரர்கள் வீரசொர்க்கம் பெற்று ஆண்டுள்ள தெய்வப் பெண்களோடு களிக்கின்றார் என்க. பொற்றொடியார்-இங்குத் தேவமாதர்கள். பானல்-நீலோற்பல மலர். படையினில் படசேனைகளில் போய்ச்சேர. பசுந்தடி - பசிய தசை. சேனம்-பருந்து. அலகைத்திரள்-பேய்க் கூட்டம். புதிது உண்டல்-முன்நிகழ்ந்த போர்களில் மண்ணவர் குடர் தடி மூளைகளைப் பெற்றன: இப்பொழுது தேவர்களது குடர் தடி முதலியவற்றை உண்ணக் கிடைத்தது அவற்றுக்குப் புதிது உண்ணுதலாயிற்று. குடர்-குடல் என்பதன் போலி.* **(௧அ)**

சமரிற் பிறகிடும் உதியரும் அபயரும்
எதிரிட் டமராடத்
தண்ட தரன்செல் கரும்பக டிந்திரன்
வெண்பக டோடுடையாத்
திமிரக் கடல்புக வருணன் விடுஞ்சுற
வருணன் விடுங்கடவுள்
தேரின் உகண்டெழ வார்வில் வழங்கு
கொடுங்கோல் செங்கோலா
இமயத் தொடும்வளர் குலவெற் பெட்டையும்
எல்லைக் கல்லினிறீஇ
எண்டிசை யுந்தனி கொண்டு புரந்து
வடாது கடற்றுறைதென்
குமரித் துறையென ஆடு மடப்பிடி
கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி.

(சொ - ள்.) சமரிற் பிறகிடும் உதியரும் அபயரும் எதிரிட்டு அமர் ஆட - பிராட்டியாருடன் போராடிய பொழுது புறங் கொடுத்தோடிய சேரரும் சோழரும் பின் (அம்மையார்க்குத் துணைவராய்) தேவர்களுடன் எதிர் நின்று போராட, தண்ட தரன் செல் கரும் பகடு இந்திரன் வெண்பகடு ஒடு உடையா - இயமன் ஏறி நடத்தும் எருமைக் கடாவுடன் இந்திரன் ஊரும் வெள்ளை யானையாகிய ஐராவதமும் உடைந்து, திமிரக்கடல் புக- இருட் கடலில் புகவும், வருணன் விடும் சுறவு அருணன் விடுங் கடவுள் தேரின் உகண்டு எழ-வருணதேவன் ஏறிச் செலுத்திய சுருமீன் அருணனாகிய சூரியன் சாரதி செலுத்துகின்ற சூரிய தேவனது தேர்மேல் குதித்து எழவும், வார்வில் வழங்கு கொடுங் கோல் செங்கோலா - நீண்ட வில்வழிச் செலுத்தப்படும் அம்பானது செங்கோலாகி, இமயத்தொடும் வளர்குல வெற்பு எட்டையும் எல்லைக் கல்லில் நிறீஇ எண்திசையும் தனிகொண்டு புரந்து - இமயமலையுடன் வளர்கின்ற குலகிரிகள் எட்டையும்

எல்லைக்கல்லாக நிறுத்தி எட்டுத் திசைகளையும் சிறப்பாகத் தனக்குரியனவாகக் கொண்டு காத்து, வடாது கடற்றுறை தென் குமரித்துறை என ஆடும் மடப்பிடி கொட்டுக சப்பாணி-வடக்கி லுள்ள கடற்றுறை எல்லாம் தெற்கிலுள்ள கன்னியாகுமரித் துறையாகக் கொண்டு ஆடுகின்ற இளம்பெண் யானை நடையை யுடையவளே! சப்பாணி கொட்டியருள், குடை நிழலிற் புவி மகளை வளர்த்தவள்! கொட்டுக சப்பாணி-;

*(வி - ரை.) முதலில் பிராட்டியாருக்குத் தோற்ற சேரரும் சோழரும் பின்பு நண்புபூண்டு திக்கு விசயத்தில் தேவரை எதிர்ப் பவரானார். தண்டதரன் - இயமன். கரும்பகடு - எருமைக்கடா. வெண்பகடு-வெள்ளையானை. வருணன் விட்ட சுறு அருணனாலே செலுத்தப்படும் சூரியனது தேரிற் பாய்ந்தது. சுறு-மகரமீன். இது வருணனுக்கு ஊர்தியாம். ஆதலால் வருணன் விட்ட சுறு என் றார். பிடி-உவமையாகு பெயராய் அம்மையைக் குறித்தது. இதனால் உலக முழுவதும் அடிப்படுத்தினமை கூறினாராயிற்று. கொடுங்கோல்-கொடிய அம்பு. செங்கோல்-மன்னர் கரத்தில் வைத்திருக்கும் நேரான தடி. நீதியரசன் என்பதற்கு அறிகுறி யாகக் கரத்தில் எடுப்பது மரபு. பகைவரை அம்பினால் கொன்று வென்றாலன்றி நீதியுடன் அரசு புரிவது இயலாதாகலின் "கொடுங் கோல் செங்கோலாகக் கொண்டு" என்றார். திக்கு விசயம் செய்தபோது குமரித் துறையைப் போல வடகடற்றுறைகளும் உரிமையாயின வாதலால் "வடாது கடற்றுறை......குமரித் துறை என ஆடும்" என்றார். (௩௧)*

**சென்றிடு வாளிகள் கூளிகள் காளிகள்**
**ஞாளியில் ஆளியெனச்**
**செருமலை செம்மலை முதலியர் சிந்தச்**
**சிந்திட நந்திபிரான்**
**நின்றிலன் ஓடலும் முன்னழ கும்மவன்**
**பின்னழ குங்காண**
**நிலவுவி ரிந்திடு குறுநகை கொண்டு**
**நெடுங்கயி லைக்கிரியின்**

முன்றிலி னாடன் மறந்தம ராடியோர்
மூரிச் சிலைகுனியா
முரிபுரு வச்சிலை கடைகுனி யச்சில
முளரிக் கணைதொட்டுக்
குன்றவி லாளியை வென்ற தடாதகை
கொட்டுக சப்பாணி
குடைநிழ லிற்புவி மகளை வளர்த்தவள்
கொட்டுக சப்பாணி.

(சொ - ள்.) சென்றிடு வாளிகள் - செலுத்தப்பட்ட அம்புகள், கூளிகள் காளிகள் ஞாளியில் ஆளி எனச் செருமலை செம்மலை முதலியர் சிந்தச் சிந்திட-பூதகணங்கள் காளிகள் நாய் மேலேறிவந்த சிங்கம் என்று சொல்லும்படி போர் புரிகின்ற தலைவன் ஆகிய வயிரவக் கடவுள் முதலியவர்களும் சிதறியோடும் படி அவர்கள் வலிமையைத் தொலைத்தலால், நந்திபிரான் நின்றிலன் ஓடலும் அவன் முன்னழகும் பின்னழகும் காணு நிலவு விரிந்திடு குறுநகை கொண்டு - நந்திபிரான் நில்லாமல் ஓடவே அவன் போர் செய்ய வரும்போதுகொண்ட முகமலர்ச்சியும் பின் புறங்காட்டி ஓடும்போது இருந்த உடல் தளர்ச்சியும் கண்டு நிலவுபோல விரிகின்ற புன்சிரிப்புக் காட்டி, நெடும் கயிலைக்கிரியின் முன்றிலின் ஆடல் மறந்து அமராடிஓர் மூரிச் சிலை குனியா-நெடிய கயிலைமலையின் முற்றத்தில் விளையாடுதலை மறந்து போரிட்டு ஒரு வலிய வில்லை வளைத்து, முரிபுருவச்சிலை கடைகுனியச் சில முளரிக் கணைதொட்டு - முரிந்த புருவமாகிய வில்லை வளைத்துச் சில தாமரை போன்ற கண்ணாகிய பாணத்தை எய்து, குன்றவிலாளியை வென்ற தடாதகை கொட்டுக சப்பாணி - இமயமலையை வில்லாகக் கொண்டவர் ஆகிய சிவபெருமானை முன்வென்ற தடாதகைப் பிராட்டியே! சப்பாணி கொட்டியருள், குடைநிழலில் புவிமகளை வளர்த்தவள்! கொட்டுக் சப்பாணி-;

(வி - ம்.) *கூளிகள்-பூதகணங்கள். ஞாளி-நாய். வயிரவக் கடவுளுக்கு நாய் வாகனம் ஆதலின் ''ஞாளியில்'' என்றார். ஞாளி*

யில் அமர்ந்து ஆளிபோலச் செருமலைந்த செம்மல் என்று பொருள் கொள்க. செம்மல்-தலைவன்; ஐ: சாரியை. இது வயிரவக் கடவுளை உணர்த்தியது. பின் அழகு-புறங்காட்டி ஓடும்போது இருந்த தோற்றம். (முன் அழகு-முதலில் இருந்த தோற்றம்.) சிவபெருமான் வலிய குன்ற வில்லியாதலின் அம்மையார் இருபுருவச் சிலையும் சேர்த்து வளைத்தார் என்றும் இருபுருவச் சிலைக்கேற்ப இரு தாமரைமலர் போன்ற கண்களாகிய அம்புகளை எய்தார் என்றும் கொள்க. வெல்லுதல் எளிதன்றென்பார் வென்ற என்றார். புருவங்களை நெரித்து இருகண்களாலும் காமக்குறிப்புத் தோன்ற நோக்கினார்: சிவபெருமான் காதல் கொண்டார் என்பது குறிப்பு. வாளிகள் சிந்திட ஓடலும் நாணு நகைகொண்டு புருவச்சிலை கடைகுனிய முளரிக்கணை தொட்டு வில்லாளியை வென்ற தடாதகை எனக் கூட்டுக. (௪0)

(வேறு)

**ஒழுகிய கருணையு வட்டெழ வைத்தவ ருட்பார்வைக்**
**குளநெகிழ் அடியர்ப வக்கடல் வற்றவ லைத்தோடிக்**
**குழையொடு பொருதுகொ லைக்கணை யைப்பிணை யைச்சீறிக்**
**குமிழொடு பழகிம தர்த்தக யற்கண்ம டப்பாவாய்**
**தழைகெழு பொழிலின்மு சுக்கலை மைப்புய லிற்பாயத்**
**தவழிள மதிகலை நெக்குகு புத்தமு தத்தோடே**
**மழைபொழி யிமயம யிற்பெடை கொட்டுக சப்பாணி**
**மதுரையில் வளருமடப்பிடி கொட்டுக சப்பாணி.**

(சொ - ள்.) ஒழுகிய கருணை உவட்டெழ வைத்த அருட்பார்வைக்கு - ஒழுகுகின்ற அருள் பெருக்கெடுத்தோடச் செலுத்திய அருட் பார்வையைக் கண்டு, உளம் நெகிழ் அடியர் பவக்கடல் வற்ற அலைத்து ஓடி - மனநெகிழ்கின்ற தொண்டர்களின் பிறவிக்கடல் வற்றும்படி கெடுத்து விரைந்து, குழைஒடு பொருது கொலைக் கணையைப் பிணையைச் சீறி - குழையணிந்த காதோடு மோதிக் கொலை செய்கின்ற அம்பையும் பெண்மானையும் சினந்து, குமிழொடு பழகி மதர்த்த கயற்கண் மடப்பாவாய்!-குமிழம் பூப்போன்ற நாசியுடன் நெருங்கிப் பழகுகின்ற செழித்த கயல்போன்ற கண்களையுடைய இளம்பாவை போல்வாய்!, தழைகெழு பொழிலில் முசுக்கலை மைப்புயலில் பாய -

தழைகள் பொருந்திய சோலையிலுள்ள ஆண் குரங்குகள் கரிய மேகமண்டலத்திற் குதிக்க, தவழ் இளமதி கலை நெக்குஉகு புத்தமுதத்தோடு - அங்குத் தவழ்கின்ற இளஞ்சந்திரனின் கலைகள் நெகிழ்ந்து சிந்துகின்ற புதிய அமுதத்துடன், மழை பொழி இமய மயிற்பெடை ! கொட்டுக சப்பாணி - மழையைப் பொழிகின்ற இமயமலையிற் றோன்றிய பெண்மயில் போல் வாளே ! சப்பாணி கொட்டுக, மதுரையில் வளரும் மடப்பிடி கொட்டுக சப்பாணி - மதுரையில் வளர்ந்துள்ள இளம் பெண் யானை நடையை யுடையவளே !, சப்பாணி கொட்டியருள்க-;

*(வி - ம்.) உவட்டு எழல்-பெருக்கெடுத்தல். நெகிழ்தல் - உருகுதல். பவம்-பிறவி. பிணை-பெண்மான். குமிழ்-ஆகுபெயராய் நாசியை உணர்த்தியது. முசுக்கலை-ஆண்குரங்கு. முசு மேக மண்டலத்திற் பாய்தலாலே அங்குள்ள சந்திரனினின்று வடியும் அமுதத்தோடு மழையும் பொழிந்தது என்க.* (சக)

**செழுமறை தெளியவ டித்தத மிழ்ப்பதி கத்தோடே**
**திருவரு ளமுதகு ழைத்துவி டுத்தமு லைப்பாலாற்**
**கழுமல மதலைவ யிற்றைநி ரப்பிம யிற்சேயைக்**
**களிறொடும் வளரவ ளர்த்தவ ருட்சேவி லித்தாயே**
**குழலிசை பழகிமு ழுப்பிர சத்திர சத்தோடே**
**குதிகொளு நறியக னிச்சுவை நெக்கபெ ருக்கேபோல்**
**மழலையின் அமுதகு சொற்கிளி கொட்டுக சப்பாணி**
**மதுரையில் வளரும டப்பிடி கொட்டுக சப்பாணி.**

(சொ - ள்.) செழுமறை தெளிய வடித்த தமிழ்ப் பதிகத்தோடு திரு அருள் அமுது குழைத்து விடுத்த முலைப்பாலால் - செழித்த வேதங்களைத் தெளிவாக உணர வடித்தெடுத்த தமிழ்ப் பதிகங்களுடன் திரு அருளமுதைக் குழைத்துச் சேர்த்த முலைப்பாலால், கழுமல மதலை வயிற்றை நிரப்பி மயிற் சேயைக் களிறொடும் வளர வளர்த்த அருள் செவிலித் தாயே !-சீர்காழியிற் பிறந்த குழந்தையாகிய திருஞானசம்பந்தமூர்த்தியின் வயிற்றை நிரம்பச் செய்து மயிலை ஊர்தியாகக் கொண்டுள்ள முருகப்பெருமானை யானைமுகப் பெருமானுடன் வளரும் படி வளர்த்த அருளையுடைய வளர்ப்புத் தாயே!, குழல் இசை

பழகி முழுப் பிரசத்து இரசத்தோடு குதிகொளும் - குழலின் இசையைப் பயின்று முற்றிய தேனின் சுவையோடு குதித்து வருகின்ற, நறிய கனிச்சுவை நெக்க பெருக்கேபோல் - இனிய பழத்தின் சுவை நெகிழ்ந்து வடியும் பெருக்கைப் போல, மழலையின் அமுது உகு சொற்கிளி! கொட்டுக சப்பாணி - குதலையாகிய இனிய அமுது வடிகின்ற சொற்பயில்கின்ற கிளி போன்றவளே! சப்பாணி கொட்டியருள்-;

(வி - ம்.) மறை-வேதம், உயர்ந்த அறங்களையும் விதிகளையும் இலைமறை காய்போல் தன்னிடத்திற் கொண்டிருப்பது, இங்கு மறைப்பொருள் என்க. மதலை-பிள்ளை. கழுமலம்-சீகாழி. கழுமல மதலை - கழுமலத்தில் தோன்றிய திருஞான சம்பந்த சுவாமிகள். வடித்த - வடித்து எடுத்த. பதிகம்-பத்து அல்லது பதினெரு பாடல்களால் ஒரு பொருள் குறித்துப் பாடப்படுவது. இதனுல் அரிதுணர் சிறப்பினையுடைய மறைப்பொருள்களைத் திருஞான சம்பந்த சுவாமிகள் எளிதுணர் பதிகமாக அருளிச் செய்தமை கூறினுர். செழுமறை வடித்த தமிழ்ப்பதிகம் என்றுர், அறிதற்கரிய மறைப்பொருளை எளிதில் அறியும்படி தேவாரப் பதிகங்கள் பாடப்பட்டு விளங்குகின்றன என்பதுபற்றி. (சஉ)

## ரு. முத்தப் பருவம்

காலத்தோடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடற்
கலைமாச் செல்வர் தேடிவைத்த
கடவுள் மணியே உயிராலவாலத் துணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க் கொளிபூத் தருள்பழுத்த
மலர்க்கற் பகமே எழுதாச்சொல்
மழலை ததும்பு பசுங்குதலைச்
சோலைக் கிளியே உயிர்த்துணையாம்
தோன்றாத் துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியில்
துரியங் கடந்த பரநாத
மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே முத்தம் தருகவே
முக்கட் சுடர்க்கு விருந்திடும்
முலையாய் முத்தம் தருகவே.

(சொ - ள்.) காலத்தொடு கற்பனை கடந்த கருவூலத்துப் பழம்பாடல் கலைமாச் செல்வர் தேடிவைத்த கடவுள் மணியே- காலத்தையும் கற்பனையையும் கடந்து நிற்கும் பொற்பேழையில் பழைய பாடல்களாகிய பலநூற் பொருள்களைச் சேர்த்த பெருஞ் செல்வர்கள் தேடிவைத்திருக்கின்ற தெய்வமணியே!, உயிர் ஆலவாலத்து உணர்வு நீர் பாய்ச்சி வளர்ப்பார்க்கு ஒளி பூத்து அருள் பழுத்த மலர்க் கற்பகமே-உயிராகிய பாத்தியில் அறிவு ஆகிய நீரைப் பாயவிட்டு வளர்க்கின்றவர்கட்கு ஒளியாகிய மலரைத் தோற்றுவித்து அருளாகிய பழம் பழுக்கின்ற மலர்களையுடைய கற்பகமே!, எழுதாச்சொல் மழலை ததும்பு பசுங்குதலைச் சோலைக்கிளியே - எழுதப்படாத சொல்லான (மறையாகிய) நிரம்பாத சொல்பெருகிய இளமையான குதலைச்

சொல் பேசுகின்ற சோலையிலுள்ள கிளியே!, உயிர்த்துணை யாம் தோன்றாத் துணைக்கு ஓர் துணையாகி - எவ்வுயிர்க்கும் துணையாயிருக்கின்றவரும் எவராலும் காணப்பெறாத துணைவருமான இறைவனுக்குத் துணைவியாகி, துவாதசாந்தப் பெருவெளியில் துரியம் கடந்த பரநாத மூலத்தலத்து முளைத்த முழுமுதலே முத்தம் தருக - துரிய நிலைக்கு அப்பாற்பட்ட பரநாத மூலத்தலமான துவாத சாந்தத் தானத்தில் தோன்றிய முழுமுதற் பொருளே! முத்தம் தருவாயாக, முக்கண் சுடர்க்கு விருந்திடும் மும்முலையாய் முத்தம் தருக - திங்கள் ஞாயிறு நெருப்பு என்ற மூன்று கண்களாகிய ஒளிகளுக்கு விருந்தளித் துதவும் மூன்று கொங்கைகளை யுடையவளே முத்தம் தருக.

*(வி - ம்.) கலைமாச் செல்வர் கருவூலத்து வைத்த தெய்வ மணி என்க. கருவூலம் - கரு கூலம், பொற்களஞ்சியம். பழம் பாடல்-பழைமையான பாட்டு. கலைமாச் செல்வர்-கலையைக் கற்றுணர்ந்த பெருஞ் செல்வரான அறிஞர். உயிர் ஆலவாலத்து - உயிராகிய பாத்தியில். உணர்வுநீர் : பண்புத் தொகை. பாத்தி என்பது பயிர் வைப்பதற்காகப் பகுக்கப்பட்ட நிலம். பாய்ச்சி : பிறவினை யெச்சம். எழுதாச் சொல்-எழுதப்படாத மொழியான வேதம். பசுங்குதலை - இனிய மழலை மொழி. தோன்றாத்துணை- உயிர்க்குயிராய் இருக்கும் துணையான சிவபெருமான். துவாத சாந்தம்-பிரமரந்திரத்துக்குப் பன்னிரண்டு அங்குல அளவில் மேம்பட்ட இடம். முக்கட்சுடர்-ஞாயிறு, திங்கள், நெருப்பு ஆகிய மூன்று ஒளிகள். முக்கட் சுடர் என்பதை மூன்று கண்களை யுடைய ஒளியாகிய சிவபெருமான் என்றும் பொருள் கொள்ளலாம். மும்முலை-மூன்று முலைகள். தடாதகைப் பிராட்டியார் தோன்றிய காலத்துத் தோன்றியவை. தருக : உடன் பாட்டு வியங்கோள் வினைமுற்று. (சுக)*

**உருகி உருகி நெக்குநெக்குள்**
**உடைந்து கசிந்திட் டகம்பூறும்**
**உழுவ லன்பிற் பழவடியார்**
**உள்ளத் தடத்தில் ஊற்றெடுத்துப்**
**பெருகு பரமா னந்தவெள்ளப்**
**பெருக்கே சிறியேம் பெற்றபெரும்**
**பேறே ஊறு நறைக்கூந்தற்**
**பிடியே கோடிநுண் ணுசுப்போசிய**

**வருகுங் குமக்குன் றிரண்டேந்து**
**மலர்ப்பூங் கொம்பே தீங்குழலின்**
**மதுரங் கனிந்த பசுங்குதலை**
**மழலை அரும்பச் சேதாம்பல்**
**முருகு விரியுஞ் செங்கனிவாய்**
**முத்தம் தருக முத்தமே**
**முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்**
**முலையாய் முத்தம் தருகவே.**

(சொ - ள்.) உருகி உருகி நெக்கு நெக்கு உள் உடைந்து கசிந்திட்டு அசும்பு ஊறும் உழுவல் அன்பிற் பழ அடியார் - இளகி இளகி நெகிழ்ந்து நெகிழ்ந்து உள்ளம் உடைந்து கசிவுற்று அக்கசிவு பெருகுகின்ற எழுமையும் தொடர்ந்த அன்பையுடைய அடியார்களின், உள்ளத் தடத்தில் ஊற்று எடுத்துப் பெருகு பரம ஆனந்த வெள்ளப் பெருக்கே! - மனம் ஆகிய குளத்தில் மிகுதியாகச் சுரந்து பெருகுகின்ற பேரின்பப் பெரு வெள்ளமே!, சிறியேம் பெற்ற பெரும் பேறே!- சிறியவர்களாகிய நாங்கள் அடைந்த பெரிய பேரு யிருப்பவளே!, ஊறு நறைக் கூந்தற்பிடியே! - பெருகுகின்ற மணமுடைய கூந்தலையுடைய பெண் யானையே!, கொடிநுண் நுசுப்பு ஒசிய வரு குங்குமக் குன்று இரண்டு ஏந்து மலர்ப்பூங் கொம்பே ! - கொடி போன்ற நுட்பமான இடை முறியும்படி தோன்றியுள்ள குங்குமச்சேறு அணிந்துள்ள மலைகள் போன்ற கொங்கைகள் இரண்டைத் தாங்குகின்ற மலர் பூத்திருக்கும் கொம்பு போல்வாளே!, தீங் குழலின் மதுரம் கனிந்த பசுங்குதலை மழலை அரும்பச் சேதாம் பல் முருகுவிரியும் செங்கனிவாய் முத்தம் தருக முத்தம்-இனிமையான குழலோசையினும் இனிமை முதிர்ந்த இளங்குதலையாகிய மழலைமொழி தோன்றுகின்ற சிவந்த ஆம்பல்மலர் மணம் விரிகின்ற செம்மையான கோவைப் பழம் போன்ற வாயின் முத்தத்தைத் தந்தருள்வாய் முத்துப் போன்றவளே!, முக்கட் சுடர்க்கு விருந்திடும் மும்முலையாய் முத்தம் தருக-;

(வி - ப.) உருகி உருகி, நெக்கு நெக்கு: அடுக்குத் தொடர்கள். அசும்பு - கசிவு. உழுவல்அன்பு - எழுபிறப்புந் தொடர்ந்துள்ள அன்பு. உள்ளத்தடம்-மனமாகிய குளம். ஊற்றெடுத்து-பெருகி. பரம+ஆனந்தம்-பேரின்பம். பேறே-பெறப் பட்டதான பொருளே! பேறு: முதனிலை திரிந்த தொழிற்பெயர். கறை - தேன், மணம். கொடி நுசுப்பு - கொடி போன்ற இடை. ஓசிய - முறிய. குங்குமக் குன்றிரண்டு: குங்குமக் குழம்பணிந்த இரண்டு தனங்களாகிய மலைகள். அரும்ப-தோன்ற. சேதாம்பல்-செம்மை நிறமான ஆம்பல் மலர்; இது வாய்க்கு உவமப் பொருள். செம்மை+ஆம்பல் என்பது மை கெட்டு முதல் நீண்டு மகரமெய் தகரமெய்யாகத் திரிந்து புணர்ந்தது. முத்தம் தருக முத்தமே என்ற சொற்றொடரில் இறுதியில் நின்ற முத்தமே என்பதை முத்துப் போன்றவளே என விளியாகக் கொள்ளாமல் தருக என்ற பயனிலையை வருவித்து முத்தமே தருக என அடுக்காகக் கொள்ளினும் அமையும். அடுக்காகக் கொள்வதுதான் சிறந்தது. (சச)

கோழுதி மதர்வண் டுழக்குகுழற்
கோதைக் குடைந்த கொண்டலுநின்
குதலைக் கிளிமென் மொழிக்குடைந்த
குறுங்கட் கரும்புங் கூன்பிறைக்கோ
டேழுத போலஞ்சி றடிக்குடைந்த
செந்தா மரையும் பசுங்கழுத்துக்
குடைந்த கமஞ்சூற் சங்குமொழு
கொளிய கமுகும் அழகுதொய்யில்
எழுது தடந்தோட் குடைந்ததடம்
பணையும் பணைமென் முலைக்குடைந்த
இணைமா மருப்புந் தருமுத்துன்
திருமுத் தொவ்வா இகபரங்கள்
முழுதுந் தருவாய் நின்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமம்
முலையாய் முத்தம் தருகவே.

(சொ - ள்.) கொழுதி மதர் வண்டு உழக்கு குழற் கோதைக்குஉடைந்த கொண்டலும் - மதர்த்த வண்டுகள்

கோதிக் கலக்குகின்ற மாலையணிந்த கூந்தலுக்குத் தோற்ற மேகமும், நின்குதலைக் கிளிமென் மொழிக்கு உடைந்த குறும் கண் கரும்பும் - மழலையாகிய கிளியின் சொல்லைப் போன்ற மெல்லிய உனது சொல்லுக்குத் தோற்ற சிறிய கணுக்களை யுடைய கரும்பும், கூன்பிறைக் கோடு உழுத பொலன் சீறடிக்கு உடைந்த செந்தாமரையும்-வளைந்த பிறைமதியின் நுனியினால் உழப்பட்ட பொன் போன்ற சிறிய அடிகளுக்குத் தோற்ற செந் தாமரை மலரும், பசுங்கழுத்துக்கு உடைந்த கமம் சூல் சங்கும் ஒழுகு ஒளிய கமுகும் - பசிய கழுத்துக்கு நிகராகாது தோற்ற நிறைந்த கருப்பமுற்ற சங்கும் வார்ந்த ஒளியையுடைய கமு கும், அழகு தொய்யில் எழுது தடம் தோட்கு உடைந்த தடம் பணையும் - அழகு பெறத் தொய்யில் எழுதுதற்கு இடமான பெரிய தோள்கட்குப் பின்வாங்கிய பெரிய மூங்கிலும், பணை மென்முலைக்கு உடைந்த இணைமா மருப்பும்-பருத்த கொங்கை களுக்கு ஒப்பாகாத இரண்டாகிய யானைத் தந்தங்களும், தரு முத்து உன் திருமுத்து ஒவ்வா - தருகின்ற முத்துகள் உனது அழகிய முத்தத்துக்கு ஒப்பாகா, இகபரங்கள் முழுதும் தரு வாய்! நின் கனிவாய் முத்தம் தருக முத்தம் - இம்மை மறுமை யின்பங்கள் யாவும் தருகின்றவளே! முத்துப் போன்றவளே! நினது கனி போன்ற வாயின் முத்தத்தைத் தந்தருள்க, முக் கட் சுடர்க்கு விருந்திடு மும்முலையாய்! முத்தம் தருக-;

(வி - ம்.) உழக்கு-கலக்கும். கோதைக் குழற்கு உடைந்த-மாலையணிந்த கூந்தலுக்குத் தோற்ற. குறுங்கண் - சிறிய கணுக்கள்: பண்புத் தொகை. பிறைக்கோடு-இளமதியின் நுனி. பொலன் சீறடி-பொன்போன்ற சிறிய அடிகள். சீறடி-சிறுமை+ அடி. கமம்சூற் சங்கு-நிறைந்த கருப்பத்தையுடைய சங்கு. தடம்-பெரிய. பணை - மூங்கில். பணை மென்முலை - பருத்த மெல்லிய நகில். இணைமாமருப்பு - இரண்டாகிய பெரிய கொம்புகள். இகபரம் - இம்மை மறுமை: உம்மைத் தொகை. ஒவ்வா - ஒப்பாகா. தொய்யில் - மகளிர் கொங்கைகளிலும் தோள்களி லும் செடி, கொடிகள், கரும்பு போலத் தீட்டுங் கோலம்.

மேகம், கரும்பு, தாமரை, சங்கு, கமுகு, மூங்கில், யானை மருப்பு இவற்றிலிருந்து முத்துப் பிறக்கும் என்பது இலக்கிய மரபு. முத்துப் பிறக்கும் இடங்கள் இருபது என்பதை அடியில் வரும் செய்யுளால் அறிக.

"தந்தி வராக மருப்பிப்பி பூகந் தனிக்கதலி
நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளின மின்னார்
கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகார்
இந்து வுடும்பு கராமுத்த மீனு மிருபதுமே."

உன் வாய்முத்தத்திற்கு இம் முத்துகள் ஈடாகா என்றவாறு. பிறைக்கோடு உழுத சீறடி என்றது இறைவன் ஊடல் தணிப்பான் இறைவி திருவடியில் வீழ்ந்து வணங்குகையில் அவன் முடியிலுள்ள பிறை அம்மை அடியில் அழுந்தியது குறித்தது. (சஞ)

மத்தமதமாக் கவுட்டோருநான்
மருப்புப் பொருப்பு மிசைப்பொலிந்த
வானத் தரசு கோயில்வளர்
சிந்தா மணியும் வடபுலத்தார்
நத்தம் வளர அளகையர்கோன்
நகரில் வளரும் வான்மணியும்
நளினப் பொகுட்டில் வீற்றிருக்கும்
நங்கை மனைக்கோர் விளக்கமெனப்
பைத்த சுடிகைப் படப்பாயற்
பதும நாபன் மார்பில்வளர்
பரிதி மணியும் எமக்கம்மை
பணியல் வாழி வேயீன்ற
முத்தம் உகந்த நின்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
முக்கட் சுடர்கடு விருந்திடும்
முலையாய் முத்தம் தருகவே.



(சொ - ள்.) மத்த மதமாக் கவுட்டு ஒரு நான் மருப்புப் பொருப்பு மிசைப் பொலிந்த வானத்து அரசு கோயில் வளர் சிந்தாமணியும் – களிப்புடைய மதம் பொருந்திய கன்னத்தையுடைய ஒரு நான்கு கொம்புகளையுடைய மலையாகிய ஐராவத யானைமீது விளங்கிய தேவர்கட்கு அரசனான இந்திரன் அரண்மனையில் இருக்கின்ற சிந்தாமணியும், வடபுலத்தார் நத்தம் வளர அளகையர் கோன் நகரில் வளரும் வான்மணியும் –

வடக்கேயுள்ள இயக்கர் நகர்கள் வளரும்வண்ணம் அளகைப் பதி இறைவனான குபேரன் நகரில் தங்கி யிருக்கும் பெருமை பொருந்திய சங்க நிதி பதுமநிதி என்ற மணிகளும், நளினப் பொகுட்டில் வீற்றிருக்கும் நங்கை மனைக்கு ஓர் விளக்கம் என- தாமரை மலர்ப் பொகுட்டில் எழுந்தருளி யிருக்கும் இலக்குமி தேவியின் வீட்டுக்கு ஒப்பற்ற விளக்கு என்று கூறும்படி, பைத்த சுடிகைப் படப்பாயல் பதுமநாபன் மார்பில் வளர் பரிதி மணியும் - விரிந்த உச்சியையுடைய பாம்பின் படப்பள்ளியில் துயில்கின்ற பதுமநாபனாகிய திருமாலின் மார்பில் அணிந் திருக்கின்ற ஒளி வாய்ந்த கௌத்துவமணியும், அம்மை எமக்கு பணியல் வாழி - தாயே எமக்குத் தந்தருளாதே, வேய்ஈன்ற முத்தம் உகந்த நின்கனிவாய் முத்தம் தருக முத்தம் - மூங்கி லில் முளைத்தருளிய முத்தரான சிவபெருமான் விரும்பிய நினது கோவைக்கனி போன்ற வாயின் முத்தத்தைக் கொடுத் தருள்வாய் முத்துப்போன்றவளே! முக்கட் சுடர்க்கு விருந்திடு மும்முலையாய் முத்தம் தருகவே-;

*(வி - ம்.) நால் மருப்புப் பொருப்பு - நான்கு கொம்புகளை யுடைய மலை, ஐராவதம் என்ற இந்திரனது யானையைக் குறித்தது. யானையைக் கைம்மலை, கராசலம், அசையுமலை என்பர். புலம் - இடம், ஊர். வான் - பெருமை; வால்+மணி எனப் பிரித்து, தூய மணிகள் எனவும் பொருள் கொள்ளலாம். நளினப் பொகுட்டில் வீற்றிருக்கும் நங்கை: திருமகள். பைத்த-படத்தை விரித்த; படமெடுத்த. சுடிகை - உச்சி. பரிதிமணி - கௌத் துவ மணி. பணியல்: அல்லீற்று எதிர்மறை வியங்கோள். வேய் ஈன்ற முத்தம் - வேணுவனம் ஆகிய திருநெல்வேலியில் மூங்கில் அளித்த முத்தான சிவபெருமான். (சுகூ).*

கோடுங் குவடும் பொருதரங்கக்
குமரித் துறையிற் படுமுத்தும்
கோற்கைத் துறையில் துறைவாணர்
குளிக்குஞ் சலாபக் குவான்முத்தும்
ஆடும் பெருந்தண் துறைப்பொருநை
யாற்றிற் படுதெண் ணிலாமுத்தும்
அந்தண் பொதியத் தடஞ்சாரல்
அருவி சொரியுங் குளிர்முத்தும்

வாடுங் கோடிநுண் ணுசுப்பொசிய
மடவ மகளிர் உடனூடும்
வண்டல் துறைக்கு வைத்துநெய்த்து
மணந்தாழ் நறுமென் புகைப்படலம்
மூடுங் குலழாய் நின்கனிவாய்
முத்தம் தருக முத்தமே
முக்கட் சுடர்க்கு விருந்திடுமும்
முலையாய் முத்தம் தருகவே.

(சொ - ள்.) கோடும் குவடும் பொருதரங்கக் குமரித் துறையில் படுமுத்தும் - இரு கரைகளையும் மரக்கொம்புகளையும் மோதுகின்ற அலைகளையுடைய குமரித்துறைமுகத்தில் உண்டாகின்ற முத்தும், கொற்கைத் துறையில் துறைவாணர் குளிக்கும் சலாபக் குவால் முத்தும்-கொற்கைநகர்த் துறைமுகத்தில் முத்துக்குளிக்கும் வாழ்க்கையர் மூழ்கிஎடுக்கும் சிப்பி முத்தும், ஆடும் பெரும் தண்துறைப் பொருநை ஆற்றில்படுதெள்நிலா முத்தும்-நீராடும் பெரிய குளிர்ந்த துறைகளையுடைய பொருநை என்கின்ற தாம்பிரபரணி ஆற்றில் உண்டாகின்ற தெளிந்த நிலவைச் செய்கின்ற முத்தும், அம்தண் பொதியத் தடம் சாரல் அருவி சொரியும் குளிர்முத்தும் - அழகிய குளிர்ந்த பொதிய மலைச்சாரலில் அருவி சொரிகின்ற குளிர்ச்சியான முத்தும், வாடும் கொடிநுண் நுசுப்பு ஒசிய மடவ மகளிர் உடன் ஆடும் வண்டல் துறைக்கு வைத்து - வாடுகின்ற கொடிபோன்ற சிறிய இடையானது ஒடியும்படி இளம் பெண்களுடன் விளையாடுகின்ற மணல் விளையாட்டிற்கு வைத்து, நெய்த்து மணம் தாழ் நறுமென் புகைப்படலம் மூடும் குழலாய்! - நெய்பூசி மணம் பொருந்திய இனிய மெல்லிய அகிற்புகையின் கூட்டம் மூடப் பெற்ற கூந்தலை யுடையவளே!, நின்கனிவாய் முத்தம் தருக முத்தமே - முக்கட் சுடர்க்கு விருந்திடு மும்முலையாய் முத்தம் தருக-;

(வி - ம்.) குமரித் துறையில் அலைகள் கரையிலும் மரக் கொம்புகளிலும் மோதும் என்க. தரங்கம் - அலை. கொற்கைத் துறை - இது பாண்டியன் தென் தலைநகர்; இங்குப் பாண்டியற்கு

இளவரசு தங்கிவருவது இயல்பு. தாம்பிரபரணி என்ற பொருநையாற்று நீர் கடலொடு கலக்கும் சங்கமத்துக்கு மேற்கே நான்கு மைல் தொலையிலிருப்பது. இதில் வெற்றிவேற் செழியன் கண்ணகிக்கு அமைத்த கோயில் உள்ளது. மேனாட்டு வணிகர்கள் இத்துறைமுகத்தில் இறக்குமதி ஏற்றுமதி செய்துள்ளார்கள். துறைவாணர் - துறை முகத்தில் வாழ்கின்றவர்கள். சலாபம் - நீர் மூழ்குதல். குவால் - குவியல், தொகுதி. நிலா - நிலவு, ஒளி. வண்டல் - விளையாட்டு. குழலாய் - குழலையுடையவளே: குழலாள் என்பதன் விளி.

மீனாட்சி பாண்டிய மன்னன் மகள் ஆதலால் அவன் நாட்டிலுள்ள குமரித்துறை முத்தும், கொற்கைத்துறை முத்தும், பொருநையாற்று முத்தும், பொதியமலையருவி முத்தும் விளையாடுதற்குரிய பொருளாய்ப் பயன்படும் என்பது கருத்து. அம்முத்துகளை யெல்லாம் நீயே வைத்துக்கொண்டு எமக்கு நின் கனிவாய் முத்தம் தருக என்க. (சஎ)

(வேறு)

பைவைத்த துத்திப் பரூஉச்சுடிகை முன்றிற்
பசுங்கோடி உடுக்கை கிழியப்
பாயிருட் படலங் கிழித்தெழு சுடர்ப்பரிதி
பரிதிக் கோடிஞ்சி மான்தேர்
மொய்வைத்த கோய்யுளை வயப்புரவி வாய்ச்செல்ல
முட்கோல் பிடித்து நெடுவான்
முற்றத்தை இருள்பட விழுங்கும் துசிற்கோடி
முனைக்கணை வடிம்பு நக்கா
மைவைத்த செஞ்சிலையும் அம்புலியும் ஓடநெடு
வான்மீன் மணந்து கந்த
வடவரை முகந்தநின் வயக்கோடி எனப்பொலியும்
மஞ்சிவர் வளாக நோச்சித்
தெய்வத் தமிழ்க்கூடல் தழையத் தழைத்தவள்
திருப்பவள முத்த மருளே
சேல்வைத்த ஒண்கோடியையவலம்வைத்தபெண்கோடி
திருப்பவள முத்த மருளே.

(சொ - ள்.) பைவைத்த துத்திப் பரூஉச் சுடிகை முன்றில் பசுங்கொடி உடுக்கை கிழிய-படம் அமைந்த பொறிகளையுடைய பருத்த உச்சியாகிய முற்றத்தில் இருக்கும் பசுங்கொடியான

பூமிதேவியின் உடையாகிய கடல் கிழியும்படி, பாய்இருள் படலம் கிழித்து எழுசுடர்ப்பரிதி பரிதிக்கொடிஞ்சி மான்தேர் - பரந்த இருட் கூட்டத்தைக் கிழித்து எழுகின்ற ஒளியையுடைய சூரியனுடைய வட்டமான மொட்டையுடைய குதிரை பூட்டிய தேர், மொய் வைத்த கொய் உளை வயப்புரவி வாய்ச்செல்ல - வலிமையமைந்த கத்தரிக்கும் பிடரிமயிரையுடைய வெற்றிக் குதிரையிடம் செல்லும்படி, முட்கோல் பிடித்து நெடுவான் முற்றத்தை இருள்பட விழுங்கும் துகிற்கொடி - தாற்றுக்கோல் பிடித்தது போல, நீண்ட ஆகாய முற்றத்தை இருள் கெடும்படி செய்யும் வெள்ளைச் சேலைக்கொடிகள் ஆனவை, முனைக்கணை வடிம்பு நக்கா மைவைத்த செஞ்சிலையும் அம்புலியும் ஓட நெடு வான் மீன் மணந்து - நுனியுடைய அம்புகளின் வடுப்படாத மேகத்திலமைந்த செம்மையான வான வில்லும் சந்திரனும் ஓடும்படி நெடிய விண்மீன்களைப் பொருந்தி நின்று, உகந்த வட வரை முகந்தநின் வயக்கொடி எனப்பொலியும் மஞ்சு இவர் வளாகம் நொச்சி - நீ விரும்பிய மேருமலைமேற் பொலியும் உனது வெற்றிக் கொடியைப் போல விளங்குகின்ற மேகம் தங்கிய வளைந்த இடங்களையுடைய மதில்சூழ்ந்த, தெய்வத்தமிழ்க்கூடல் தழையத் தழைத்தவள்! திருப்பவள முத்தம் அருளே - தெய்வத் தன்மைவாய்ந்த தமிழ்மொழி வழங்கும் நான்மாடக் கூடலாகிய மதுரை தழையும்படி தழைத்தவளே! அழகிய பவளம் போன்ற வாயின் முத்தம் அளித்தருள்க, சேல் வைத்த ஒண்கொடியை வலம்வைத்த பெண்கொடி! - சேல் மீன் எழுதிய கொடியை வெற்றிக்கொடியாக உயர்த்தியருளிய பெண் கொடியே! திருப் பவள முத்தம் அருள் -;

*(வி - ம்.) முன்றில் - இல் முன்: இலக்கணப்போலி; முற்றம். பசுங்கொடி: திலமகள். ஆதிசேடனால் அவள் தாங்கப்படுதலின் அவளை ஆதிசேடனது உச்சியாகிய முற்றத்தில் இருக்கிற பசுங் கொடி என்றார். சூரியன் கடலில் தோன்றுதலின் பசுங்கொடி உடுக்கை கிழிய என்றும், இருளை நீக்குதலின் இருட்படலம் கிழித்தெழு சுடர்ப் பரிதி என்றும் கூறினார். கொய் உளை - கத்தரித்த பிடரிமயிர். வாய் - வழி. துகிற் கொடிகள் தடாதகைப் பிராட்டியாரது வெற்றிக் கொடிகள் போல் மதிலிற் பொலிதல் கூறப்பட்டது. துகிற் கொடிகள் வானவில்லும் சந்திர னும் தாழ்ந்தோட விண்மீன்களை மணந்து மதிலிற் பொலிகின்றன.*

மஞ்சு-மேகம். வயம்-வெற்றி. வளாகம்-சூழ்ந்த இடம். வானவில் ஏனைய விற்கள் போன்று கணை வடிம்பு படாததாகலின் அதனைக் 'கணை வடிம்பு நக்காச்சிலை' என்றார். நொச்சி - மதில். (சஅ)

பின்னல் திரைக்கடல் மதுக்குடம் அறத்தேக்கு
பெய்முகிற் காரு டலவெண்
பிறைமதிக் கூன்குயக் கைக்கடைஞ ரோடுபுடை
பெயர்ந்திடை நுடங்க வொல்கு
மின்னல் தடித்துக் கரும்பொற் றொடிக்கடைசி
மெல்லியர் வெரீஇப் பெயரவான்
மீன்கணம் வெருக்கொள்ள வெடிவரால் குதிகொள்ளும்
விட்புலம் விளைபு லமெனக்
கன்னல் பெருங்காடு கற்பகக் காட்டுவளர்
கடவுள்மா கவளங் கொளக்
காமதே னுவுநின்று கடைவாய் குதட்டக்
கதிர்க்குலை முதிர்ந்து விளையும்
செந்நெல் படப்பைமது ரைப்பதி புரப்பவள்
திருப்பவள முத்த மருளே
செல்வைத்த ஒண்கொடியை வலம்வைத்த பெண்கொடி
திருப்பவள முத்த மருளே.

(சொ - ள்.) பின்னல் திரைக்கடல் மதுக்குடம் அறத்தேக்கு பெய்முகிற்கார் உடல வெண்பிறை மதிக் கூன் குயக்கைக் கடைஞரொடு புடைப்பெயர்ந்து - பின்னுதல்போன்ற அலைகளை யுடைய கடலாகிய கட்குடம் முழுவதும் வறிதாகக் குடித்து வயிறு நிரம்பிய மழை பொழிகின்ற மேகம்போன்ற கரிய உடம்பையும் வெள்ளிய இளமதிபோன்ற வளைந்த அரிவாளையும் கையிற்கொண்ட மள்ளர்களுடன் இடம்விட்டுப் பெயர்ந்து, இடை நுடங்க ஒல்கு மின்னல் தடித்துக் கரும்பொற்றொடிக் கடைசி மெல்லியர் வெரீஇப்பெயர-இடை அசையத் தளர்கின்ற ஒளியுடைய மின்னல்போன்ற கரிய பொன்வளை அணிந்த கடைசியராகிய பெண்கள் பயந்து விலகும்படியும், வான் மீன் கணம் வெருக்கொள்ள வெடிவரால் குதிகொள்ளும்

விண்புலம் விளைபுலம் என - நட்சத்திரக் கூட்டம் பயமடையத் துள்ளி வரால்மீன்கள் குதிகொள்ளுகின்ற விண்ணிடத்தை விளைநிலமென்று சொல்லும்படி, கன்னற்பெருங்காடு கற்பகக் காட்டுவளர் கடவுள்மா கவளம் கொள - கரும்புப் பெருங்காட்டில் கற்பகச் சோலையில் வளர்கின்ற தெய்வயானையாகிய ஐராவதம் கவளமாகக் கொள்ளவும், காமதேனுவும் நின்று கடைவாய் குதட்ட - காமதேனு என்னும் பசுவும் நெற்பயிரை மேய்ந்து தனது கடைவாயை அசைக்கவும், கதிர்க்குலை முதிர்ந்து விளையும் செந்நெல் படப்பை - நெற்கதிர்கள் முற்றி விளையப்பெற்ற செந்நெல் வயல்களையுடைய, மதுரைப்பதி புரப்பவள் திருப்பவள முத்தம் அருளே - மதுரைத் தலத்தைக் காக்கும் அரசியே! அழகிய பவளம் போன்ற வாயின் முத்தம் அளித்தருள்க!, சேல்வைத்த ஒண்கொடியை வலம்வைத்த பெண்கொடி திருப்பவளமுத்தம் அருள்—;

*(வி - ரை.) மதுரை வயலில் நிலத்துக்கு அணியாகிய நெல்லும் கரும்பும் விண் அளவும் உயர்ந்து வளர்ந்து காமதேனுவும் ஐராவதமும் விண்ணே நமக்கு உணவு விளை வயலெனக் கருதி உணவு கொள்ளுமாறு இருக்கின்றன என்பதாம். விளைபுலத்து வரால் குதிகொள்ளும்போது கட்குடம் வறிது ஆமாறு கள்ளை நிறைய உண்ட கரிய உடலையும் வளைந்த அரிவாள் பிடித்த கையையும் உடைய கடையர்களும் மின்னல் போன்ற கடைசியர்களும் அஞ்சிப் பெயர்வார்கள். மீன் கூட்டமும் வெருவும், அவ்வாறே விட்புலத்தில் வரால் குதிகொள்ளும்போது கடல் வறிதாமாறு நீரை நிறைய உண்டபிறையோடு தோன்றும் மேகமும் மின்னல்களும் அஞ்சிப் பெயர்கின்றன. நட்சத்திரங்கள் வெருவுகின்றன. மதுக்குடத்தைக் கடலாகவும் குடிப்பவர்களைக் காராகவும் கூறியதால் இஃது உருவகம். கடைவாய் குதட்டுதல் - கடைவாயிலிட்டு அசையிடுதல். கூன்குயம் - வளைந்த அரிவாள். ஒல்குதல் - அசைதல். தடித்து - மின்னல். கவளம் - ஒரு வாயளவு உணவு. படப்பை-வயல், தோட்டம். கரும்பொன் - இரும்பு. (சக)*

**சங்கோ லிடுங்கடல் தானைக்கு வேந்தே**
**தராபதிகள் முன்றில் தூர்த்த**
**தமனியக் குப்பையும் திசைமுதல்வர் தடமுடித்**
**தாமமும் தலைம யங்கக்**

**கொங்கோ லிடுங்கைக் கொடுங்கோ லொடுந்திரி**
**குறும்பன் கொடிச்சு றவுநின்**
**கொற்றப் பதாகைக் குழாத்தினொடும் இரசதக்**
**குன்றினும் சென்று லாவப்**
**பொங்கோல வேலைப் புறத்தினொ டகத்தினிமிர்**
**போராழி பரிதி யிரதப்**
**பொங்காழி மற்றப் பொருப்பாழி யில்திரி**
**புலம்பைப் புலம்பு செய்யச்**
**செங்கோல் திருத்திய முடிச்செழியர் கோமகள்**
**திருப்பவள முத்த மருளே**
**செல்வைத்த ஒண்கொடியை** வலம்வைத்த பெண்கொடி
**திருப்பவள முத்த மருளே.**

**(சொ - ள்.)** சங்கு ஒலிடும் கடல் தானைக்கு வெந்இடு *தராபதிகள் முன்றில் தூர்த்த தமனியக் குப்பையும்*-சங்குகள் ஒலிக்கின்ற கடல்போன்ற சேனைகளைக் கண்டு முதுகு காட்டிய நிலமன்னர்கள் (திறையாகக் கொண்டு வந்து குவித்து) முற்றங்களை நிரப்பிய பொற்குவியலும், திசை முதல்வர் தட்முடித் தாமமும் தலைமயங்க - திசை காவலர்களின் முடியி லணிந்த மாலைகளும் ஒன்றாகக் கலந்து கிடக்க, கொங்கு ஒலி டும் கைக்கொடுங்கோலொடும் திரிகுறும்பன் கொடிச்சுறவும் - மணம்வீசும் கொடிய மலரம்புகளுடன் கூடிய கையையுடைய சிற்றரசன் ஆகிய மன்மதன் உயர்த்திய கொடியிலுள்ள சுறு மீனும், நின் கொற்றப் பதாகைக் குழாத்தினொடும் இரசதக் குன்றினும் சென்று உலாவ - உனது வெற்றிக் கொடியாகிய கூட்டத்திலுள்ள மீனும் வெள்ளிமலையிலும் போய் உலவ, பொங்கு ஒல வேலைப் புறத்தினொடு அகத்தின் நிமிர் போர் ஆழி - மிகுகின்ற இரைச்சலையுடைய கடற்புலத்தினும் உட் பகுதியிலும் நிமிர்ந்து செல்லும் போர்த்த ஆணைச்சக்கர மானது, பரிதி இரதப் பொங்கு ஆழி மற்றப் பொருப்பு ஆழியில் திரிபுலம்பைப் புலம்பு செய்ய - சூரியன் தேரில் உள்ள உயர்ந்த சக்கரங்கள் அந்தச் சக்கரவாளகிரியிற் றிரிகின்ற தனிமையை வருத்தி நெருக்கி யிடம்பெறுமாறு, செங்கோல் திருத்திய

முடிச்செழியர் கோமகள்-நெறி முறையில் அரசுதிருந்த ஆட்சி செய்த முடியணிந்த பாண்டியனின் சிறந்த மகளே!, திருப் பவள முத்தம் அருள்-, சேல்வைத்த ஒண்கொடியை வலம் வைத்த பெண்கொடி! திருப்பவள முத்தம் அருள்-;

(வி - ம்.) ஒலிடல்-முழுங்கல், ஒலமிடல். கடற்றூனை-கடல் போற் பரந்தசேனை. வெங்-முதுகு. தராபதிகள்-அரசர்கள். தமனியம்-பொன். திசை முதல்வர்-திக்குப்பாலகர். இவர்கள் அணிந்த மாலை கற்பகமலரான் இயன்றதாகலின் தமனியத்தோடு மயங்குவதாயிற்று. கொங்கு-மணம். கொங்கு ஒலிடுங் கொடுங்கோல்-மலரம்பு. கொடுங்கோற் கையொடும் குறும்பன் எனக் கூட்டுக. குறும்பன்-சிற்றரசனாகிய மன்மதன். வெள்ளிமலையில் மன்மதனது மீனக்கொடி உலாவுதல் என்றது தடாதகைப் பிராட்டியாரைக் கண்ட சிவபெருமான் அவ்வம்மையாரை மணக்க விரும்பினமை பற்றி என்க. ஆழி-சக்கரம். அம்மையாரது ஆணைச்சக்கரம் சூரியனது தேர்ச்சக்கரம் செல்லும் இடமெல்லாம் சென்றது என்பது கருத்து. மீனாட்சியம்மை அரசு புரிவதற்குமுன் சக்கரவாளகிரியில் சூரியனுடைய தேர்ச்சக்கரம் மட்டும் தனிமையாக உலவியது. அம்மை ஆட்சி செலுத்தியபோது ஆணைச்சக்கரமும், சக்கரவாளகிரி வரை சென்றது. தனித்துச் செல்லும் சூரியன் சக்கரத்திற்கு அடுத்துச்சென்றது ஆணைச்சக்கரம் ஆதலாற் "புலம்பைப் புலம்பு செய" என்றார். புலம்பு-தனிமை. புலம்பு செய்தல்-வருத்துதல் வருத்தித் தானும் இடம் பெற்றது என்றார். (௬௦).

(வேறு)

பருவரை முதுபல அடியினின் நெடுநிலம்
நெக்கக டக்கனியிற்
படுநறை படுசேறை கடமுடை படுவக
டேப்பவு வட்டெழவும்
விரிதலை முதலொடு விளைபுலம் உலையவு
ழக்கிய முட்சுறவின்
விசையினின் வழிநறை மிட்டொருடி கமுகின்வி
மூக்குலை நெக்குகவும்
கரையெறி புணரியின் இருமடி பெருகுத
டத்தும டேத்தகடக்
களிறொடு பிளிறிட நிகலிய முகிலினி
ரட்டியி ரட்டியமும்

**முரசதிர் கடிநகர் மதுரையில் வளர்கிளி**
**முத்தம ளித்தருளே**
**முழுதுல குடையதோர் கவுரியர் குலமணி**
**முத்தம ளித்தருளே.**

(சொ - ள்.) பருவரை முதுபல அடியினின் நெடுநிலம் நெக்க குடக்கனியிற் படுநறை - பருத்த அடியை யுடைய முதிய பலாமரத்து வேரில் பழுத்த நெடிய தரையைப் பிளக்கும்படி செய்யும் குடம்போன்ற பழத்தில் உண்டாகிய தேன், படுநிறை கடம் உடை படுவ கடுப்ப உவட்டு எழவும்-கள் நிறைந்த குடம் உடைந்ததுபோலப் பெருக்கெடுத்து ஓடவும், விரிதலை முதலொடு விளைபுலம் உலைய - விரிந்த தலையுடன் கூடிய நெற்பயிரடியுடைய நன்செய் கெடும்படி, உழக்கிய முட்சுறவின் விசையினின் வழி நறை மிடறு ஒடி கமுகின் விழுக்குலை நெக்கு உகவும் - கலக்கிய முள்ளையுடைய சுறுமீனின் வேகத்தால் வழிந்த தேனனது கமுகமரத்தின் கழுத்து ஒடியச் சிறந்த குலை நெகிழ்ந்து விழவும், கரை எறிபுணரியின் இருமடி பெருகு தடத்து மடுத்த கடக்களிறொடு-கரையை மோதுகின்ற கடலின் இருமடங்கு பெருகுகின்ற தடாகத்தில் நீர்குடித்த மதயானையுடன், பிளிறிட இகலிய முகிலின் - மாறுபட ஒலித்த மேகத்தின் ஒலியின், இரட்டி இரட்டிய மும்முரசு அதிர்கடி நகர் மதுரையில் வளர்கிளி - இரண்டு மடங்கு மிகுதியாக ஒலிக்கின்ற மூவகை முரசங்களும் முழங்குகின்ற காவலையுடைய (சிறந்த) மதுரை நகரில் வளர்கின்ற கிளியே!, முத்தம் அளித்தருள்-, முழுதுஉலகு உடையது ஒர் கவுரியர் குலமணி முத்தம் அளித்தருள் - உலக முழுவதையும் தமதாகக் கொண்டுள்ள பாண்டியர் குலத்திற்கு ஒரு மணி போன்றவளே! முத்தம் அளித்தருள்.

(வி - ரை.) பருவரை-பருத்த அடி. குடக்கனி-குடம்போன்ற பழம். படு-கள். கடுப்ப - போல. முதல்-அடி. உழக்குதல்-கலக்குதல். எழவும் உகவும் பெருகுதடம் என்க. தடம்புணரியில் இரு மடங்கு பெருகுதற்குக் காரணம் பூமியின் கீழிருந்து பலாப் பழத்தின் தேன் உவட்டெழுதலும், பூமியின் மேலிருந்து வழி நறை கமுகின் விழுக்குலை நெக்கு உகுதலுமாம். அத்தடத்துநீர்

குடித்துப் பிளிறிய களிற்ருேடு எதிர்த்து முகில் முழங்க அம்முகி லுக்கு இருமடங்காக மதுரையில் முரசு முழங்குகின்ற தென்க. கவுரியர்-பாண்டியர். மும்முரசு-கொடை, வீரம், மங்கலம் இவை பற்றி முழங்கும் முரசுகள். கடி: உரிச்சொல். வளர்கிளி: வினைத் தொகை. கிளி: உவமையாகு பெயராய் மீனுட்சியம்மையை உணர்த்தியது. (௬)

புதையிருள் கிழிதர எழுதரு பரிதிவ
ளைத்தக டற்புவியிற்
பொதுவற அடிமைசெய் திடுவழி அடியர்பொ
ருட்டலர் வட்டணையில்
ததைமலர் பொதுளிய களியளி குமிறுகு
ழற்றிரு வைத்தவளச்
சததள முளரியின் வனிதையை உதவுக
டைக்கண்ம டப்பிடியே
பதுமமொ டொழுகொளி வளையுமி னளினமு
கத்துமி டற்றமுறப்
பனிமதி யொடுசுவை அமுதமும் நுதலொடு
சொற்குத லைக்கணிறீஇ
முதுதமிழ் உததியில் வருமொரு திருமகள்
முத்தம ளித்தருளே
முழுதல குடையதொர் கவுரியர் குலமணி
முத்தம ளித்தருளே.

(சொ - ள்.) புதை இருள் கிழிதர எழுதரு பரிதி வளைத்த கடற்புவியில் - மூடியிருக்கும் இருளைக் கிழிக்கும்படி உதயமான சூரியன் ஒளி பரவிச் சூழ்ந்த இப் பூமண்டலத்தில், பொது அற அடிமை செய்திடு வழி அடியர் பொருட்டு - பொதுவில்லாதபடி அடிமை செய்கின்ற வழி வழியாய் வரும் அடியவர்கள் பொருட்டாக, அலர் வட்டணையில் ததைமலர் பொதுளிய களி அளி குமிறு குழற்றிருவை - செந்தாமரைமலர் ஆகிய ஆசனத்தில் வீற்றிருக்கும் நெருங்கிய பூக்கள் நிரம்பிய களிப்பையுடைய வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையுடைய இலக்குமியையும்

தவள சததள முளரியின் வனிதையை உதவு கடைக்கண் மடப் பிடியே! வெண்மையான நூற்றிதழ்த் தாமரை மலரில் தங்கும் நாமகளாகிய பெண்ணையும் உதவியருளிய கடைக் கண்ணுடைய இளம்பிடியே!, பதுமம் ஒடு ஒழுகு ஒளிவளையும் நின் நளின முகத்தும் மிடற்றும் உற-பதுமநிதி யுடன் ஒழுகுகின்ற ஒளி வழிகின்ற சங்கநிதியும் நினது தாமரை போன்ற முகத்தும் கண்டத்தும் பொருந்த, பனிமதியொடு சுவை யமுதமும் - குளிர்ந்த சந்திரனுடன் சுவையுற்ற அமுதமும், நுதலொடு சொற்றதலைக் கண்நிறீஇ - நெற்றியிடத்தும் குதலைமொழியிடத்தும் நிறுத்தி, முதுதமிழ் உததியில் வரும் ஒரு திருமகள்-பழந்தமிழ்க் கடலில் தோன்றிய ஒப்பற்ற திருமகளே!, முத்தம் அளித்தருள்-, முழுதுலகு உடையதொர் கவுரியர் குலமணி! முத்தம் அளித்தருள்-;

(வி - ம்.) புதை இருள்-மிக்க இருள். பொது அற அடிமை செய்தல் ஏனைத் தேவரின் நீக்கிச் சிறப்பாய் வழிபாடு புரிதல். 'பொது நீக்கித் தனைநினைய வல்லார்க்கு என்றும் அருந் துணையை' என்பது திருநெறித்தமிழ். அலர் வட்ட அணை - தாமரையாகிய வட்டமான ஆசனம். ததைதல்-நெருங்குதல். தவளச் சததள முளரி வனிதை-வெண்ணிற முடைய நூறு இதழ்களையுடைய தாமரையிலுறையும் கலைமகள். உமாதேவியார் தமது வலக்கண்ணினின்று திருமகளையும் இடக்கண்ணினின்று கலைமகளையும் பிறப்பித்தனராதலின் "திருவை வனிதையை உதவு கடைக்கண் மடப்பிடி" என்றார். பதுமம்-பதுமநிதி. வளை-சங்கநிதி. இவ்விரண்டும் மீனாட்சியம்மையாரது முகத்தும் மிடற்றும் பொருந்தின என்க. தடாதகைப் பிராட்டியார் தமிழ்க்கடலில் தோன்றிய ஓர் இலக்குமி. இலக்குமியோடு பதுமநிதி, சங்கநிதி, சந்திரன், அமுதம் தோன்றியமை போலப் பிராட்டியாரோடு அவற்றை உவமைகளாகக் கொண்ட இவ்விவை தோன்றின என்க. (௬௨)

---

## ௬. வருகைப் பருவம்

அஞ்சிலம் பொலிட அரிக்குரற் கிண்கிணி
அரற்றுசெஞ் சீறடிபெயர்த்
தடியிடுந் தோறுநின் அலத்தகச் சுவடுபட்
டம்புவி அரம்பையர்கள் தம்
மஞ்சுதுஞ் சளகத் திளம்பிறையும் எந்தைமுடி
வளரிளம் பிறையுநாற
மணிநூ புரத்தவிழும் மென்குரற் கோவசையும்
மடநடைக் கோதொடர்ந்துன்
செஞ்சிலம் படிபற்று தெய்வக் குழாத்தினொடு
சிறையோதி மம்பின்செலச்
சிற்றிடைக் கொல்கிமணி மேகலை இரங்கத்
திருக்கோயில் எனவெனெஞ்சக்
கஞ்சமுஞ் செஞ்சொல் தமிழ்க்கூட லுங்கொண்ட
காமர்பூங் கொடிவருகவே
கற்பகா டவியில் கடம்பா டவிப்பொலி
கயற்கணா யகிவருகவே.

(சொ - ள்.) அஞ்சிலம்பு ஒலிட அரிக்குரல் கிண்கிணி அரற்று செஞ்சீறடி பெயர்த்து - அழகிய சிலம்பணி ஒலியைச் செய்ய மணிகளின் ஒலியமைந்த கிண்கிணி இரைகின்ற செய்ய சிறிய அடிகளைப் பெயர்த்து வைத்து, அடி இடும்தொறும் நின் அலத்தகச் சுவடுபட்டு அம்புவி அரம்பையர்கள் தம் மஞ்சு துஞ்சு அளகத்து இளம்பிறையும்-நீ நடக்கும் பொழுதெல்லாம் உனது செம்பஞ்சுக் குழம்பு தோய்ந்த அடித்தழும்பு பட்டு அழகிய பூமியில் வந்திருக்கும் அரம்பை மாதர்களுடைய மேகம் போன்ற கூந்தலில் அணிந்துள்ள இளம்பிறையிலும், எந்தை முடிவளர் இளம் பிறையும் நாற - எம்பிரான் சடை முடியில் அணிந்துள்ள இளம்பிறையிலும் (அத்தழும்பு), தோன்ற மணிநூபுரத்து அவிழும் மென்குரற்கோ அசையும் மட நடைக்கோ தொடர்ந்து உன் செஞ்சிலம்பு அடிபற்றும் - அழகிய சிலம்பினின்று வெளியாகும்மெல்லிய குரலைக்கருதியோ அல்லது தளர்கின்ற இள நடையைக் குறித்தோ தொடர்ந்து

உனது செய்ய சிலம்பணிந்த பாதத்தைப் பற்றி வருகின்ற, தெய்வக் குழாத்தினொடு சிறை ஓதிமம் பின் செல - தெய்வப் பெண்கள் கூட்டத்தினுடன் சிறகுகளையுடைய அன்னமும் பின் றொடர்ந்து வரும்படி, சிற்றிடைக்கு ஒல்கி மணிமேகலை இரங்க- சிறிய இடைக்காக வருந்தி மணிமேகலை என்னும் அரையணி ஒலிக்க, என் நெஞ்சக் கஞ்சமும் செஞ்சொல் தமிழ்க் கூடலும் திருக்கோயில் என கொண்ட - எனது மனமாகிய தாமரை மலரையும் அழகிய சொல்லையுடைய தமிழ்மொழி பழகும் கூடல்நகரையும் திருக்கோயில்களாகக் கொண்டிருக்கும், காமர்பூங்கொடி வருக - அழகிய மலர்க்கொம்பு போன்றவளே! வருக, கற்பக அடவியில் கடம்பாடவிப் பொலி கயற்கண் நாயகி வருக - கற்பகக்காடு போன்ற கடம்பவனத்தில் விளங்குகின்ற கயற்கண் அம்மையே! வருக-;

(வி - ம்.) அலத்தகம் - செம்பஞ்சு. அரம்பையர் வந்து வணங்கும்போது அம்புவியில் பிறை இரண்டு நாற, தெய்வக் குழாத்தினொடு ஓதிமம் பின்செல, மேகலை இரங்க வருக என முடிக்க.

அவர்கள் தலையிற் கால் படுவதால் "திருவும் பிறையும்" என்ற அணியிலும் படும் என்பது தோன்ற "பிறையும் நாற" என்றார். சிவபெருமான் ஊடற்காலத்து வணங்குவது குறித்து 'அவர் தலைமீதுள்ள இளம்பிறையிலும் தோன்றும்' என்றார். மீனாட்சியம்மையின் பாதச்சிறப்புக் கூறியபடி இது. கற்பகம் + அடவி = கற்பகாடவி - கற்பகக்காடு, கடம்பம் + அடவி = கடம் பாடவி - கடம்ப மரமுள்ள காடு. கற்பகக் காட்டைப் போன்ற கடம்பவனம் எனக் கொள்க. (௯௧)

குண்டுபடு பேரகழி வயிறுளைந் தீன்றபைங்
கோதையும் மதுரமொழுகும்
கொழிதமிழ்ப் பனுவல் துறைப்படியும் மடநடைக்
கூந்தலம் பிடியும் அறுகால்
வண்டுபடு முண்டக மனைக்குடி புகச்சிவ
மணங்கமழ விண்டதொண்டர்
மானதத் தடமலர்ப் பொற்கோயில் குடிகொண்ட
மாணிக்க வல்லிவில்வேள்

துண்டுபடு மதிநுதல் தோகையொடும் அளவில்பல
தொல்லுரு எடுத்தமர்செயுந்
தொடுசிலை எனக்ககன முகடுமுட் டிப்பூந்
துணர்த்தலை வணங்கி நிற்கும்
கண்டுபடு கன்னல்பைங் காடுபடு கூடற்
கலாபமா மயில்வருகவே
கற்பகா டவியில் கடம்பா டவிப்பொலி
கயற்கண் ணுமையேவருகவே.

(சொ - ள்.) குண்டுபடு பேர் அகழி வயிறு உளைந்து ஈன்ற பைங்கோதையும் - ஆழமான பெரிய திருப்பாற் கடல் வயிறு வருந்திப் பெற்ற கரிய கூந்தலையுடைய இலக்குமியும், மதுரம் ஒழுகும் கொழி தமிழ்ப்பனுவல் துறைப்படியும் மடை நடைக் கூந்தல் அம்பிடியும்-இனிமை சொரியும் தமிழ்மொழிக் கடலின் நூலாகிய துறையில் மூழ்கும் மெல்லிய நடையை யுடைய கூந்தலைக் கொண்ட பெண்யானையாகிய கலைமகளும், அறுகால் வண்டுபடு முண்டக மனைக்குடிபுக - அறுகால்களை யுடைய வண்டுகள் பொருந்தும் தாமரை மலராகிய வீட்டில் புகுந்து கொள்ள, சிவமணம் கமழ விண்ட தொண்டர் மானதத் தடமலர்ப் பொற்கோயில் குடிகொண்ட மாணிக்கவல்லி - சிவ மணமானது கமழும்படி விரிந்த தொண்டர்களுடைய மன மாகிய அகன்ற மதியாகிய மலர்பூத்த தடாகம் என்னும் அழ கிய கோயிலில் குடிபுகுந்துள்ள மாணிக்க வல்லியே!, வில்வேள் துண்டுபடு மதிநுதல் தோகையொடும் அளவு இல்பல தொல் உரு எடுத்து அமர்செயும் தொடுசிலை என - வில்லைப் பிடித்த மன்மதன் துணிபட்ட பிறையையொத்த நெற்றியையுடைய தன் மனைவியாகிய இரதியுடன் பலவகையான பழைய வடிவங்களைத் தாங்கிப் போர்புரிவதற்கு எடுத்திருக்கும் பல விற்களைப் போல, ககன முகடுமுட்டிப் பூந்துணர்த் தலைவணங்கி நிற்கும்-ஆகாய உச்சியை எட்டிப் பூங்கொத்துடன் தலையைவணங்கி நிற்கின்ற, கண்டுபடு கன்னல் பைங்காடுபடு கூடற்கலாப மாமயில் வருக- சர்க்கரை யுண்டாகின்ற கரும்பாகிய இனிய காடுகளையுடைய மதுரையில் எழுந்தருளியிருக்கின்ற தோகையுடைய சிறந்த

மயில் போல்வாளே! வருக, கற்பகாடவியில் கடம்பாடவிப் பொலி கயற்கண் நாயகி வருக-;

(வி - ரை.) பேர் அகழி - பெரிய கடல்; அகழி - அகழப் பட்டது. வயிறு உளைந்து ஈனுதல் - வயிறு வருந்திப் பெறுதல். பனுவல் துறைப்படியும் கூந்தலம் பிடி. நாமகள், விண்ட - விரிந்த. மானதத் தடம் - மனமாகிய குளம். தோகை அழகிய பெண்மயிலை யுணர்த்தியது. துண்டுபடு - துணியப்பட்ட. பிளவு பட்ட, மதிநுதல்: உவமைத் தொகை. ககன முகடு - ஆகாய உச்சி. பூந்துணர் - பூங்கொத்து. கண்டு படு கன்னல் - சர்க்கரை யுண்டாதற்கு ஏதுவான கரும்பு. (௬௪)

முயல்பாய் மதிக்குழவி தவழ்சூல் அடிப்பலவின்
முட்பொதி குடக்கனியொடு
முடவுத் தடந்தாழை முப்புடைக் கனிசிந்த
மோதிநீர் உண்டிருண்ட
புயல்பாய் படப்பைத் தடம்பொழில்கள் அன்றியேழ்
பொழிலையும் ஒதுங்கலைத்துப்
புறமூடும் அண்டச் சுவர்த்தலம் இடித்தப்
புறக்கடல் மடுத்துழக்கிச்
செயல்பாய் கடற்றானை செங்களங் கொளஅம்மை
திக்குவிச யங்கொண்டநாள்
தெய்வக் கயற்கொடிகள் திசைதிசை எடுத்தேனத்
திக்கெட்டு முட்டவேடிபோய்க்
கயல்பாய் குரம்பணை பெரும்பணைத் தமிழ்மதுரை
காவலன் மகள்வருகவே
கற்பகா டவியில் கடம்பா டவிப்பொலி
கயற்கணா யகிவருகவே.

(சொ - ள்.) முயல்பாய் மதிக்குழவி தவழ்சூல் அடிப் பலவின் முட்பொதி குடக்கனியொடு - முயற்கறை பரவிய இளஞ்சந்திரன் தவழ்கின்ற கருப்பம் தாங்கும் பலாமரத்தின் முட்கள் நிறைந்த குடம்போன்ற பழத்துடன், முடவுத் தடம் தாழை முப்புடைக்கனி சிந்த - வளைந்த பெரிய தென்னையின் மூன்று பக்கம் புடைத்திருக்கின்ற தேங்காய் சிந்தும்படி, மோதி

நீர் உண்டு இருண்ட புயல்பாய் படப்பைத்தடம் பொழில்கள் அன்றி - தாக்கி நீரைப்பருகி இருளடைந்துள்ள மேகம் பரவி நின்ற மருதநிலத்தின் பெரிய சோலைகள் அல்லாமலும், ஏழ் பொழிலையும் ஒருங்கு அலைத்துப் புறமூடும் அண்டச்சுவர்த் தலம் இடித்து - மேல் ஏழு உலகங்களையும் ஒரு சேர வருத்தி வெளியில் மூடியுள்ள அண்டச் சுவர்த்தலத்தையும் தகர்த்து, புறக்கடல் மடுத்து உழக்கிச் செயல் பாய்கடல் தானை செங்களங்கொள - வெளியிலுள்ள பெரும்புறக் கடல் நீரையும் உட்கொண்டு கலக்கிச் செயலிற் பரந்த கடல்போன்ற சேனைகள் போர்க்களத்தை யிடமாகக் கொள்ளும்படி, அம்மை திக்கு விசயம் கொண்ட நாள் - தாயாகிய நீ திசையெங்கும் வெற்றி யடைந்து வந்த நாளில், தெய்வக் கயற்கொடிகள் திசை திசை எடுத்தெனத் திக்கு எட்டும் முட்ட வெடி போய் கயல்பாய் - தெய்வத் தன்மையுடைய கயல்மீன் கொடிகளைத் திக்குகள் எங்கும் எடுத்தாற்போல எட்டுத் திக்கும் முட்டும்படி குதித்துக் கயல்மீன்கள் பாய்கின்ற, குரம்பு அணை பெரும்பணைத் தமிழ் மதுரை காவலன் மகள் வருக-வரம்புகள் நெருங்கிய பெரிய வயலிடங்களையுடைய தமிழ் வளர்ந்த மதுரைக் காவலனை பாண்டியன் மகளே! வருக; கற்ப காடவியில் கடம்பாடவிப் பொலி கயற்கண் நாயகி வருக-

(வி - ரை.) முயல் சந்திரனிடத்துள்ள களங்கம். சூல் அடி - காய்களையுடைய அடிமரம். முடவு - வளைவு. தாழை - தென்னை. முப்படைக்கனி - மூன்று பகுதியாகப் புடைத்தலையுடைய கனி, தேங்காய். பாய்தல் - பரத்தல். பொழில் - உலகு. அப்புறக் கடல் - பெரும்புறக்கடல். குரம்பு - வரம்பு. பணை - வயல். குடக்கனியொடு முப்புடைக் கனி சிந்த மோதி, அலைத்து, இடித்து, மடுத்து, உழக்கித், திசை கயற்கொடிகள் எடுத்தென முட்ட, வெடிபோய், கயல்மீன்கள் பாய்கின்ற பெரும்பணையை யுடைய மதுரை எனக் கூட்டுக. மதிக்குழவி தவழ் பலவு என்றது பலாமரத்தின் உயர்வைச் சிறப்பித்தது. (௬௬)

வடம்பட்ட நின்றுணைக் கொங்கைக் குடங்கோட்டு
மதுரவமு துண்டுகடைவாய்
வழியும்வெள் ளருவியென நிலவுபொழி சிம்புரி
மருப்பிற் பொருப்பிடித்துத்

தடம்பட்ட பொற்ருது சிந்தூரங் கும்பத்
தலத்தணிவ தொப்பவப்பிச்
சலராசி ஏழுந் தடக்கையின் முகந்துபின்
தானநீ ரால்நிரப்பி
முடம்பட்ட மதியங் குசப்படை எனக்ககன
முகடுகை தடவிஉடுமீன்
முத்தம் பதித்திட்ட முகபடாம் எனவெழு
முகிற்படாம் நெற்றிசுற்றும்
கடம்பட்ட சிறுகட் பெருங்கோலைய மழவிளங்
களிறீன்ற பிடிவருகவே
கற்பகா டவியில் கடம்பா டவிப்பொலி
கயற்கண்ணு யகிவருகவே.

(சொ - ள்.) வடம்பட்ட நின் துணைக் கொங்கைக் குடம் கொட்டு மதுர அமுது உண்டு - மணி வடங்கள் பொருந்திய உன் இரண்டு கொங்கைகளாகிய குடங்கள் சொரிகின்ற இனிய அமுதைப் பருகி, கடைவாய் வழியும் வெள் அருவிஎன நிலவு பொழிகிம்புரி மருப்பின் - வாயின் கடையில் ஒழுகும் வெள்ளை அருவி என்னும்படி நிலவைச் சொரியும் கிம்புரிப் பூண் அணிந்த தந்தங்களினுல், பொருப்பு இடித்து தடம்பட்ட பொன்தாது சிந்துரம் கும்பத் தலத்து அணிவது ஒப்ப அப்பி - மலையை இடித்துப் பெருமையான பொன்னுகிய செந்தூளை மத்தகத்தில் அணிவதைப் போலப் பூசி, சலராசி ஏழும் தடம் கையில் முகந்து பின் தான நீரால் நிரப்பி - ஏழு கடலையும் பெரிய கையால் முகந்து குறைத்துப் பின் மதநீரினுல் நிறைத்து, முடம்பட்ட மதி அங்குசப் படை என ககன முகடுகை தடவி - வளைவுற்ற சந்திரனை அங்குசப்படை என்று கூற வானத்துச் சியைத் துதிக்கையால் தடவி, உடுமீன் முத்தம் பதித்திட்ட முகபடாம் என எழு முகிற்படாம் நெற்றி சுற்றும் - நட்சத் திரங்கள் ஆகிய முத்துகளைப் பதித்த முகபடாம் என்று சொல்லும்படி விண்ணில் எழுகின்ற முகிலாகிய ஆடையை நெற்றியில் சுற்றும், கடம்பட்ட சிறு கண் பெருங்கொலைய மழ இளங்களிறு ஈன்ற பிடி வருக - மதம் பொருந்திய சிறிய கண்

களையும் பெரிய கொலைத் தொழிலையுமுடைய மிகவும் இளைய யானையை (பிள்ளையாரை)ப் பெற்ற பெண் யானையே! வருக, கற்பகா டவியில் கடம்பாடவிப்பொலி கயற்கண் நாயகி! வருக-;

(வி - ரை.) வடம் - மணிவடம். துணை - இரண்டு. கிம்புரி - யானை மருப்பின் பூண். தாது - மகரந்தம் பொடி, சிந்துரம் - செந்தூள். மூடம்பட்ட மதி - பிறைச் சந்திரன். உடுமீன் முத்தம் - நட்சத்திரங்களாகிய முத்துகள். படாம் - துகில். கடம் - மதம் மழ விளங்களிறு - இங்கு மூத்தபிள்ளையார். "பிடியதனுருஉமை கொளமிகு கரியது, வடிகொடு தனதுஅடி வழிபடும் அவர் இடர், கடிகண பதிவர அருளினன் மிகுகொடை, வடிவினர் பயில்வலி வலமுறை இறையே" என்ற செய்யுளால் உமா தேவியார் யானைமுகக் கடவுளான மூத்த பிள்ளையாரைத் தோற்றுவித்தமை விளங்கும்; இதில் விநாயகப்பெருமானுடைய திருவிளையாடல்கள் கூறப்பெற்றுள்ளன. (௫)

தேனொழுகு கஞ்சப் பொலஞ்சீ றடிக்கூட்டு
செம்பஞ்சி யின்குழம்பால்
தெள்ளமு திறைக்கும் பசுங்குழவி வெண்திங்கள்
சேக்கர்மதி யாக்கரைபொரும்
வானொழுகு துங்கத் தரங்கப்பெருங்கங்கை
வாணிநதி யாச்சிவபிரான்
மகுடகோ டீரத் தடிச்சுவ டழுத்தியிடு
மரகதக் கொம்புகதிர்கால்
மீனொழுகு மாயிரு விசும்பிற் செலுங்கடவுள்
வேழத்தின் மத்தகத்து
வீற்றிருக் குஞ்சே யிழைக்கும் பசுங்கமுகு
வெண்கவரி வீசும்வாசக்
கானொழுகு கடமலர்க் கடிபொழிற் கூடல்வளர்
கவுரியன் மகள்வருகவே
கற்பகா டவியில் கடம்பா டவிப்பொலி
கயற்கண் ணாயகிவருகவே.

(சொ - ள்.) தேன் ஒழுகு கஞ்சப் பொலன் சீறடிக்கு ஊட்டு செம்பஞ்சியின் குழம்பால் - தேன் வழிகின்ற தாமரை

மலர் போன்ற பொன்மயமான சிறிய பாதங்கட்கு ஊட்டப்படு கின்ற செம்பஞ்சுக் குழம்பினால், தெள் அமுது இறைக்கும் பசும் குழவி வெண்திங்கள் செக்கர் மதியா - தெளிந்த அமுதைப் பொழியும் மிக இளைய வெள்ளிய சந்திரனனது சிவந்தநிற மதியாக, கரைபொரும் வான் ஒழுகு துங்கத் தரங்கப் பெருங் கங்கைவாணி நதியா - கரையை மோதும் ஆகாயத்தில் ஒழுகு கின்ற உயர்வான அலைகளையுடைய பெரிய கங்கையாறு சோணை நதியாக, சிவபிரான் மகுட கோடீரத்து அடிச்சுவடு அழுத்தியிடு மரகதக் கொம்பு! - சிவபெருமானுடைய மகுட மான சடையில் பாதத்தின் சுவடுபட அழுத்துகின்ற பச்சை நிறமுள்ள பூங்கொம்பே!, கதிர்கால் மீன்ஒழுகு மாஇரு விசும் பில் செல்லும் - ஒளியை வீசுகின்ற நட்சத்திரங்கள் நடக்கின்ற பெரிய வானத்தில் செல்லுகின்ற, கடவுள் வேழத்தின் மத்த கத்து வீற்றிருக்கும் சேயிழைக்கும் - தெய்வத் தன்மையுள்ள ஐராவதமாகிய யானையின் முதுகில் வீற்றிருக்கின்ற இந்தி ராணிக்கும், பசுங்கமுகு வெண்கவரி வீசும் - பச்சை நிறமான கமுகமரம் வெண்கவரி வீசுவதற்கு நிற்பது போல உயர்ந்திருக் கும், வாசக் கானெழுகு தடமலர்க் கடிபொழிற் கூடல்வளர் கவுரியன் மகள் வருக - மணமுள்ள காற்று வீசுகின்ற அகன்ற பூக்களையுடைய சிறந்த சோலைகளும் சூழ்ந்த கூடலில் வளர் கின்ற பாண்டியன் மகளே! வருக, கற்பகாடவியில் கடம் பாடவிப் பொலி கயற்கண் நாயகி வருக-;

*(வி - ரை.) கஞ்சம் - தாமரை. பொலன்-அழகு-செக்கர்மதி- சிவந்த திங்கள். துங்கம் - உயர்வு. கோடீரம் - சடை. ஊடற் காலத்தில் உமாதேவியாரது சீறடி சிவபெருமான் முடியிற் படுதலின் சீறடியிலூட்டிய செம்பஞ்சுக் குழம்பால் முடியி லுள்ளவெண்திங்களும் கங்கையும் செக்கர்மதியும் சோணைநதியும் போன்றன. மதுரையிலுள்ள கமுக மரங்கள் ஆகாயம்வரை அளாவி விசும்பில் ஐராவதத்தின்மீது செல்லும் இந்திராணிக்குக் கவரி வீசுவதுபோலப் பாளையை விரித்து உயர்ந்து நிற்கும் என்று மதுரையின் வளம் கூறினர். இஃது உலகவழக்கிறந்த புகழ்ச்சி, ஆதலால் உயர்வு நவிற்சியணி; இதுபோல் வருவன வும் அவ்வணியாம்.* (௭)

(வேறு)

வடக்குங் குமக்குன் றிரண்டேந்தும்
வண்டல் மகளிர் சிறுமுற்றில்
வாரிக் குவித்த மணிக்குப்பை
வானு றடைப்ப வழிபிழைத்து
நடக்குங் கதிர்போற் பரிசிலா
நகுவெண் பிறைகைத் தோணியதா
நாள்மீன் பரப்புச் சிறுமிதப்பா
நாப்பண் மிதப்ப நாற்கோட்டுக்
கடக்குஞ் சரத்தின் மதநதியும்
கங்கா நதியும் எதிர்கொள்ளக்
ககன வெளியும் கற்பகப்பூங்
காடும் கடந்து கடல்சுருங்க
மடக்குந் திரைத்தண் துறைவைகை
வளநாட் டரசே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

(சொ - ள்.) வடக்குங்குமக் குன்று இரண்டு ஏந்தும் வண்டல் மகளிர் - மாலையும் குங்குமமும் அணிந்த முலையாகிய மலைகள் இரண்டைத் தாங்கியுள்ள சிறுவீடு கட்டி விளையாடும் பெண்கள், சிறுமுற்றில் வாரிக் குவித்த மணிக்குப்பை - சிறிய சுளகினால் அள்ளிக் குவிக்கப்பெற்ற இரத்தினக் குவியல், வான் ஆறு அடைப்ப வழிபிழைத்து நடக்கும் கதிர் பொற்பரிசில் ஆ - ஆகாயவழியை அடைத்தலால் வழிதப்பிச் செல்லும் சூரியன் அழகிய தோணியாகவும், நகுவெண்பிறை கைத்தோணியதா - விளங்குகின்ற வெள்ளிய பிறைச்சந்திரன் சிறு தோணியாக வும், நாள்மீன் பரப்பு சிறுமிதப்பு ஆ - நட்சத்திரங்களின் பரப் பானது சிறு மிதப்புகளாகவும், நாப்பண் மிதப்ப - நடுவில் மிதக்கும்படி, நாற்கோட்டுக் கடக்குஞ்சரத்தின் மதநதியும் கங்கா நதியும் எதிர்கொள்ள - நான்கு கொம்புகளையும் மத்த கத்தையும் உடைய ஐராவத யானையின் மதப் பெருக்கும்

ஆகாய கங்கையின் வெள்ளமும் எதிர்கொள்ள, ககன வெளியும் கற்பகப் பூங்காடும் கடந்து - ஆகாய வெளியையும் கற்பகப் பூஞ்சோலையையும் கடந்து, கடல் சுருங்க மடுக்கும் திரைத் தண்துறை வைகை வளநாட்டு அரசே வருக - கடலும் குறையும்படி பெருகுகின்ற அலைகளை யுடைய குளிர்ந்த துறைகளைக் கொண்ட வைகையாற்றின் வளத்தைக்கொண்ட பாண்டிய நாட்டின் அரசியே வருக, மலயத்துவசன் பெற்றபெரு வாழ்வே வருக வருக - மலயத்துவசன் என்ற பாண்டியன் பெற்றெடுத்த பெரு வாழ்வா யிருப்பவளே! வருக வருக.

*(வி - ரை.) வடக் குங்குமக் குன்று இரண்டு என்றது குறிப்பால் கொங்கைகளை யுணர்த்தியது. மணிக்குப்பை ஆகாயவழியை அடைத்தலால் வழி தவறிச் செல்வான் சூரியன்என்க. கதிர்போற் பரிசில், வெண் பிறை கைத் தோணி, நாள்மீன் பரப்புச் சிறு மிதப்பு இவை உருவகம். நாற்கோட்டுக் கடக்குஞ்சரம் - ஐராவத யானை. இதில் வைகையின் நீர்ப்பெருக்குச் சிறப்பிக்கப் பட்டது. வானிலிருந்து ஐராவதத்தின் மதப் பெருக்கும் கங்கைப் பெருக்கும் எதிர்கொள்ள வைகைநதியின் அலைகள் வானத்தின் மேல் வீசுவதால் சூரியனும் சந்திரனும் விண்மீன்களும் பலவகை ஓடங்கள்போல மிதக்கும் என்பது கருத்து. (௬அ)*

சுண்ணந் திமிர்ந்து தேனருவி
துளைந்தா டறுகால் தும்பிபசுந்
தோட்டுக் கதவம் திறப்பமலர்த்
தோகை குடிபுக் கோகைசெயும்
தண்ணங் கமலக் கோயில்பல
சமைத்த மருதத் தச்சன்முழு
தாற்றுக் கமுகு நாற்றியிடும்
தடங்கா வணப்பந் தரில்வீக்கும்
விண்ணம் பொதிந்த மேகபடாம்
மிசைத்தூக் கியபண் மணிக்கோத்து
விரிந்தால் எனக்கால் நிமிர்ந்துதலை
விரியும் குலைநெற் கற்றைபல
வண்ணம் பொலியும் பண்ணைவயல்
மதுரைக் கரசே வருகவே,
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

(சொ - ள்.) சுண்ணம் திமிர்ந்து தேன் அருவி துளைந்து ஆடு அறுகால் தும்பி - மகரந்தப் பொடி அளைந்து தேனூற்றுப் பெருக்கில் மூழ்கி விளையாடும் ஆறு கால்களை யுடைய வண்டுகள், பசுந்தோட்டுக் கதவம் திறப்ப மலர்த்தோகை குடி புக்கு ஓகை செயும் தண்அம் கமலக் கோயில் பல சமைத்த மருதத் தச்சன் - பசிய இதழ்களாகிய கதவைத் திறக்க மலர் மகளாகிய இலக்குமி குடிபுகுந்து விருப்பம் காட்டும் குளிர்ந்த அழகிய தாமரைப் பூவாகிய கோயில் பலவற்றைச் சமைத் தருளிய மருதநிலமாகிய தச்சன், முழுக்கமுகுத்தாற்று நாற்றி யிடும் தடம் காவணப் பந்தரில் வீக்கும் விண்ணம் பொதிந்த மேகபடாம்-பெரிய கமுகக்குலைகள் தொங்கவிடப்பட்ட பெரிய சோலைகளாகிய பந்தரில் கட்டிய விண்ணில் நிறைந்த மேக மாகிய துகிலின், மிசைத் தூக்கிய பன்மணிக் கொத்து விரிந் தால் என - மேல் தூக்கப்பட்ட மணிகளின் கொத்துகள் பரந்திருந்தாற்போல, கால் நிமிர்ந்து தலை விரியும் குலை நெற் கற்றை - தாள் உயர்ந்து தலை விரியப்பட்ட குலைகளை யுடைய தொங்கும் நெல்லின் தொகுதிகள், பலவண்ணம் பொலியும் பண்ணை வயல் மதுரைக்கு அரசே வருக - பல நிறத்துடன் விளங்கும் மருத நிலமாகிய வயல்களையுடைய மதுரைக்கு அரசியே வருக, மலயத்துவசன் பெற்ற பெரு வாழ்வே வருக வருக-;

(வி - பி.) "சுண்ணந் திமிர்ந்து.........திறப்ப" என்ற அடியால் வண்டுகள் பாட மலர்விரிந்தது என்பது விளங்கும், பசுந்தோட்டு - பச்சை இதழ், பசுமை - இளமையுமாம். மலர்த் தோகை-பூவில் வாழும் மயில் போன்றவள் (திருமகள்). ஓகை - களிப்பு. மருதத் தச்சன்-மருத நிலமாகிய தச்சன். முழுத்தாறு - நிரம்பிய குலை. நெற்கற்றை பன்மணிக்கொத்து விரிந்தால் எனப் பொலிகின்றது என்க. தடங்கா - பெரிய சோலை. வீக்குதல் - கட்டுதல். மருத நிலமாகிய தச்சன், கமல மலர்க்கோயில் சமைத்துக் கமுகமரம் நாட்டிச் சோலையாகிய பந்தரிட்டு அப் பந்தரில் மேகமாகிய துகிலை விரித்துக் கட்டி அதிற் பலவகை நிறமுள்ள நெற்களாகிய மணிகளைத் தூக்கியது போலத் தோன்றும் மருதநிலங்கள் என உருவகப்படுத்துக. இஃது உருவக அணியுடன் வந்த தற்குறிப்பேற்றம். (௯௧)

தகரக் குழலின் நறையுநறை
தருதீம் புகையுந் திசைக்களிற்றின்
தடக்கை நாசிப் புழைமடுப்பத்
தளரும் சிறுநுண் மருங்குல்பெருஞ்
சிகரக் களபப் பொம்மன்முலைத்
தெய்வ மகளிர் புடையிரட்டும்
செங்கைக் கவரி முகந்தெறியும்
சிறுகாற் கொசிந்து குடிவாங்க
முகரக் களிவண் டடைகிடக்கும்
முளரிக் கொடிக்குங் கலைக்கொடிக்கும்
முருந்து முறுவல் விருந்திடும்புன்
மூரல் நெடுவெண் ணிலவெறிப்ப
மகரக் கருங்கட் செங்கனிவாய்
மடமான் கன்று வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

(சொ - ள்.) தகரக் குழலின் நறையும் நறைதருதீம் புகையும் - மயிர்ச்சாந்து அணிந்த கூந்தலின் இயற்கைமணமும் மணந்தருவதற்காக ஊட்டுகின்ற இனிய புகையும், திசைக்களிற்றின் தடக்கை நாசிப் புழை மடுப்ப - திக்கு யானைகளின் பெரிய தும்பிக்கையிலுள்ள மூக்குத் துளையில் செல்லவும், தளரும் சிறு நுண்மருங்குல் - தளர்ந்த சிறிய நுண்மையான உன் இடையானது, பெருஞ் சிகரக் களபப் பொம்மல் முலைத் தெய்வமகளிர் புடை இரட்டும் - பெரிய மலைபோன்ற களபம் அணிந்த பருத்த முலைகளையுடைய தெய்வப் பெண்கள் பக்கத்தில் வீசுகின்ற, செங்கைக் கவரி முகந்து எறியும் சிறு காற்கு ஒசிந்து குடிவாங்க - சிவந்த கையில் உள்ள கவரி (வெண்சாமரம்) மொண்டு வீசும் சிறிய காற்றினுக்குத் தளர்ந்து தள்ளாட, முகரக் களிவண்டு அடை கிடக்கும் முளரிக் கொடிக்கும் கலைக்கொடிக்கும் - ஒலியுள்ள வண்டுகள் அடை கிடக்கின்ற தாமரையில் வாழும் கொடி போன்ற திருமகளுக்கும்

கலையை ஆய்ந்த கொடி போன்ற வாணிக்கும், முருந்து முறுவல் விருந்திடு புன்மூரல் நெடுவெண் நிலவு எறிப்ப - மயிலிறகின் அடியை ஒத்த பற்கள் விருந்து செய்தலாகிய சிறு நகையாகிய பெருகிய வெள்ளிய ஒளியை வீச, மகரக் கருங்கண் செங்கனிவாய் மடமான் கன்று! வருக - மகரமீன் போன்ற கரிய கண்களையும் சிவந்த கோவைப் பழம் போன்ற வாயினை யும் உடைய இளமான்கன்றே! வருக, மலயத்துவசன் பெற்ற பெரு வாழ்வே! வருக வருக-;

(வி - ம்.) கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டென் பது "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் குறுந்தொகைப் பாடலால் அறியப்படும். புழை-துவாரம். பொம்மல் - பூரித்தல். குடிவாங்குதல் - தள்ளாடுதல். முகரம் - ஒலி. மடமான் கன்று: விளி; மான் கன்று உவமையாகு பெயராய் மீளுட்சியம்மையை யுணர்த்தியது. மடமான் கன்றே, பெருவாழ்வே நின் நகரக் குழலின் நறையும் புகையும் காசிப்புழை மடுப்பவும், நின்மருங் குல் சிறு காற்கு ஒசிந்து குடிவாங்கவும், மூரல் நெடுவெண் ணிலவெறிப்பவும் வருக எனக் கூட்டுக. (சுO)

நோக்கும் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
சுவையே அகந்தைக் கிழங்கையகழ்ந்
தெடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறிதரங்கம்
உடுக்கும் புவனங் கடந்துநின்ற
ஒருவன் திருவுள் ளத்திலழ
கொழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே மதுகரம்வாய்
மடுக்கும் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

(சொ - ள்.) தொடுக்கும் கடவுள் பழம் பாடல் தொடையின் பயனே! - தொடுக்கப்படும் தெய்வத் தன்மையுடைய பழைய பாடல்களாகிய மாலையின் பொருளா யிருப்பவளே!, நறைபழுத்த துறைத்தீம் தமிழின் ஒழுகு நறும் சுவையே! - மணம் முற்றிய (இனிமை முதிர்ந்த) துறைகள் அமைந்த இனிய தமிழின் ஒழுகுகின்ற இனிய சுவை போன்றவளே!, அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர் உளக் கோயிற்கு ஏற்றும் விளக்கே! - ஆணவமாகிய கிழங்கைத் தோண்டி யெறியும் தொண்டர்களின் மனமாகிய கோயிலில் ஏற்றப்படும் விளக்கே!, வளர்சிமய இமயப் பொருப்பில் விளையாடும் இளமென் பிடியே!-வளர்கின்ற சிகரத்தையுடைய இமய மலையில் விளையாடுகின்ற இளைய மெல்லிய பெண்யானையே!, எறிதரங்கம் உடுக்கும் புவனம் கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிர் ஓவியமே!- வீசுகின்ற அலைகளையுடைய கடலை ஆடையாக உடுத்த பூமிக்கு அப்பாற்பட்ட ஒப்பற்ற பரமசிவன் தனது சிறந்த மனத்தில் அழகு வழியும்படி தீட்டிப் பார்த்திருக்கும் உயிருடன் கூடிய சித்திரமே!, மதுகரம் வாய் மடுக்கும் குழற்காடு ஏந்தும் இள வஞ்சிக் கொடியே! வருக - வண்டுகள் தேனை வாய்மடுத்துத் துயில்கின்ற கூந்தற்காட்டைத் தாங்கி ஏற்கும் இளமையான வஞ்சிக்கொடி போன்றவளே! வருக, மலயத்துவசன் பெற்ற பெரு வாழ்வே! வருக வருக-;

(வி - ரை.) தொடை - தொடுக்கப்படுவது: ஐ, விகுதி செயப்படுபொருளை யுணர்த்தும். இஃது ஆகுபெயராய் மாலையை யுணர்த்தியது. பயன் - பொருள். தீந்தமிழ் - இனிய தமிழ். அகந்தை-செருக்கு. இது காரியவாகு பெயராக ஆணவத்தை யுணர்த்திற்று. ஆணவத்தின் பயன் அகந்தை. இவ் வாணவ மலமே எல்லாப் பெருங்கேட்டிற்கும் மூலமாயிருத்தலால் அதனைக் கிழங்கு என்றார். சிமயம்-உச்சி. எறி தரங்கம்-வீசும் அலை: இது கடலைக் குறித்தது. உயிர் ஓவியம்-உயிருடன் கூடிய சித்திரம். ஓவிய நிபுணர்கள் தீட்டும் சித்திரங்கள் உயிருடையன போல் விளங்கும். மதுகரம்-வண்டு. இச்செய்யுளில் அங்கயற்கண்அம்மை தொடையின் பயன், தமிழின் ஒழுகுநறுஞ்சுவை, உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கு, இளமென்பிடி, உயிரோவியம், வஞ்சிக்கொடி என்று விளிக்கப்படும் சிறப்பைக் கருதுக. (௬௧)

பெருந்தேன் இறைக்கும் நறைக்கூந்தற்
பிடியே வருக முழுஞானப்
பெருக்கே வருக பிறைமௌலிப்
பெம்மான் முக்கட் சுடர்க்கிடுநல்
விருந்தே வருக மும்முதற்கும்
வித்தே வருக வித்தின்றி
விளைக்கும் பரமா னந்தத்தின்
விளைவே வருக பழமறையின்
குருந்தே வருக அருள்பழுத்த
கொம்பே வருக திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளம்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்
மருந்தே வருக பசுங்குதலை
மழலைக் கிளியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே.

(சொ - ள்.) பெருந்தேன் இறைக்கும் நறைக்கூந்தற் பிடியே! வருக - மிகுதியான தேனைக் கொழிக்கின்ற மணம் பொருந்திய கூந்தலைத் தாங்கிய பிடியே! வருக, முழுஞானப் பெருக்கே! வருக - நிறைந்த ஞான வெள்ளமே! வருக, பிறை மௌலிப் பெம்மான் முக்கட் சுடர்க்கு இடுநல் விருந்தே! வருக- பிறையணிந்துள்ள சடைமுடியை யுடைய சிவபெருமான் மூன்று சுடர்களான கண்களுக்கு அளிக்கும் விருந்தா யிருப் பவளே! வருக, மும்முதற்கும் வித்தே! வருக - அயன் அரி அரனென மூன்று மூர்த்திகட்கும் மூலமாயிருப்பவளே! வருக, வித்து இன்றி விளைக்கும் பரம ஆனந்தத்தின் விளைவே! வருக- விதையில்லாமலே விளைவைச் செய்கின்ற மேலான இன்பத் தின் விளைவே! வருக, பழமறையின் குருந்தே! வருக - பழைய மறையின் இளந்தளிரே! வருக, அருள் பழுத்த கொம்பே! வருக - அருளாகிய பழம் பழுத்துள்ள கொம்பே! வருக, திருக் கடைக்கண் கொழித்த கருணைப் பெரு வெள்ளம் குடைவார்

பிறவிப் பெரும் பிணிக்கு ஓர் மருந்தே! வருக - அழகிய கண்ணின் கடை பெருக்கிய அருட்பெரு வெள்ளத்தில் மூழ்குகின்ற அடியார்கள் பிறவி நோய்க்கு ஒரு மருந்தே! வருக, பசுங்குதலை மழலைக் கிளியே வருக - இளங்குதலையாகிய மழலைச் சொல் பேசுகின்ற கிளியே! வருக, மலயத்துவசன் பெற்ற பெரு வாழ்வே வருக வருக-;

*(வி - ரை.) ஞானப்பெருக்கு-அறிவின் மிகுதி. மும்முதல்-மூன்று தேவர்கள்; அயன், அரி, அரன் (பிரம விட்ணு உருத்திரர்கள்.) வித்து இன்றி யாதும் விளையாது என்பதே உண்மையாகவும் எண்மை நோக்கி வித்தின்றி விளைக்கும் எனப்பட்டது. இதனைச் சிவஞானபாடியத்து இரண்டாம் சூத்திர உரையிற் காண்க.*

*பரமம் ஆனந்தம்-மேலான இன்பம். குருந்து - கொழுந்து. குடைவார் - மூழ்குவார். பிறவிப் பெரும்பிணி - பிறப்பாகிய பெரிய நோய்.*

*இந்தப் பாடலிலும் அம்மையாரை நறைக்கூந்தற்பிடி, ஞானப்பெருக்கு, முக்கட்சுடர்க்கிடு நல்விருந்து, மும்முதற்கும் வித்து, பரமானந்தத்தின் விளைவு, பழமறையின் குருந்து, அருள் பழுத்த கொம்பு, பிறவிப்பெரும் பிணிக்கு ஓர் மருந்து என்று சிறப்பித்து அழைப்பதுங் காண்க. (௯௨)*

---

## எ. அம்புலிப் பருவம்

கண்டுபடு குதலைப் பசுங்கிளி இவட்கோரு
கலாபேதம் என்ன நின்னைக்
கலைமறைகள் முறையிடுவ கண்டோ அலாதொண்
கலாநிதி எனத்தெரிந்தோ
வண்டுபடு தெரியல் திருத்தாதை யார்மரபின்
வழிமுதல் எனக்குறித்தோ
வளர்சடை முடிக்கெந்தை தண்ணறுங் கண்ணியா
வைத்தது கடைப்பிடித்தோ
குண்டுபடு பாற்கடல் வருந்திருச் சேடியோடு
கூடப் பிறந்ததோர்ந்தோ
கோமாட்டி யிவள் நின்னை வம்மெனக் கோம்மெனக்
கூவிடப் பெற்றாயுனக்
கண்டுபடு சிறிதன் றுதலால் இவளுடன்
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) கண்டுபடு குதலைப் பசுங்கிளி இவட்கு ஒரு கலாபேதம் என்ன நின்னைக் கலைமறைகள் முறையிடுவ கண்டோ - கற்கண்டுபோல் இனிய மழலைமொழி பேசும் இளங் கிளியாகிய இவளுக்கு ஒரு கலாபேதம் என்ன உன்னைக் கலை களும் மறைகளும் முறையிடுகின்றவற்றைப் பார்த்தோ, அலது ஒண்கலாநிதி எனத் தெரிந்தோ - அல்லது கலைச்செல் வம் என அறிந்தோ, வண்டுபடு தெரியல் திருத்தாதையார் மரபின் வழிமுதல் எனக்குறித்தோ - வண்டுகள் பொருந்திய மாலையணிந்த அழகிய தந்தையாகிய மலயத்துவச பாண்டியன் பிறந்த குலத்திற்கு முதல்வன் என்பது கருதியோ, வளர்சடை முடிக்கு எந்தை தண்நறும் கண்ணிஆ வைத்தது கடைப் பிடித்தோ - வளர்கின்ற சடைமுடியில் எம்பிரான் குளிர்ந்த இனியமாலையாகத் தரித்திருப்பதைக் கருதியோ, குண்டுபடு பாற்கடல்வரும் திருச்சேடியொடு கூடப் பிறந்தது ஓர்ந்தோ -

ஆழம் அமைந்த திருப்பாற்கடலில் தோன்றிய இலக்குமியாகிய தோழியுடன் நீ பிறந்திருப்பதை ஆராய்ந்தோ, கோமாட்டி இவள் நின்னை வம்என கொம்என கூவிடப் பெற்றுய் - தலைவியாகிய இவ்வம்மை உன்னை விரைந்து வருக எனக் கூப்பிடப் பெறுந் தன்மை யடைந்தாய், உனக்கு அண்டுபடுசீர் இது அன்று ஆதலால் அம்புலீ ஆடவாவே - உனக்குப் பொருந்தக் கூடிய சிறப்பு அல்ல (உயர்ந்தது இது) ஆகையால் சந்திரனே; இவளுடன் ஆடவருக, ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன் அம்புலீ ஆடவாவே - ஆணித்தரமான பொன் மலையாகிய வில்லைக்கொண்ட சிவபெருமானுடன் சேர்ந்த மாணிக்கவல்லியுடன் நிலாவே விளையாட வருக.

(வி - ரை.) கண்டு படுகுதலை - கற்கண்டு போன்றினிக்கும் மழலைமொழி. கலாபேதம் - கலையின் வேறுபாடு; இது கலையின் பல வேறுபாடுகள். கலாநிதி - கலையாகிய செல்வம். மீனுட்சியம்மை கலாபேதமாகவும் கலாநிதியமாகவும் வேதங்களாற் கூறப் படுவாள். அதனால் தன்னைப் போன்றவன் சந்திரன் எனக் கருதினள் என்பது கருத்து. பாண்டிய மன்னர் மதிக்குல மன்னராதலின் அதுதோன்றச் சந்திரனைத் "தந்தையார் மரபின் வழி முதல்" என்றுர். திருமகளும் திருப்பாற்கடலிற் ரேன்றியவள். கொம்மென : விரைவுக் குறிப்பிடைச் சொல். கண்டோ, தெரிந்தோ, குறித்தோ கடைப்பிடித்தோ, ஓர்ந்தோ இவற்றி லுள்ள ஓகாரங்கள் ஐயப்பொருளினில் வந்தன. அண்டு படுசீர் - கிடைக்கத்தக்க சிறப்பு. ஆணி - உரையாணி. பொன் வில்லி - பொன்மலையாகிய மேருவை வில்லாக உடைய சிவபெருமான். கோமாட்டி - கோமான் என்பதன் பெண்பால். அம்புலீ: விளி. இக்கவியில் சாமம் என்ற முறை கூறப்பட்டது. (கக)

குலத்தோடு தெய்வக் குழாம்பிழிந் தூற்றிக்
குடித்துச் சுவைத்துமிழ்ந்த
கோதென் றும் அழல்விடங் கொப்பளிக் கின்றஇரு
கோளினுச் சிட்டமென்றும்
கலைத்தோடு முடிக் களங்கம் பொதிந்திட்ட
கயரோகி என்றமொருகாள்
கண்கொண்டு பார்க்கவும் கடவதன் றென்னவும்
கடற்புவி யேதேத்தி கழவிட்

**புலத்தோடும் உடுமீன் கணத்தோடும் ஓடுநின்**
**போல்வார்க்கு மாபாதகம்**
**போக்குமித் தலமலது புகலில்லை காண்மிசைப்**
**பொங்குபுனல் கற்பகக்கா**
**டலைத்தோடு வைகைத் துறைப்படி மடப்பிடியோ**
**டம்புலீ ஆடவாவே**
**ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்**
**அம்புலீ ஆடவாவே.**

(சொ - ள்.) தெய்வக் குழாம் குலத்தோடு பிழிந்து ஊற்றிக் குடித்துச் சுவைத்து உமிழ்ந்த கோது என்றும் - தேவர் கூட்டம் இனத்துடன் பிழிந்து வார்த்துப் பருகிச் சுவை பார்த்து உமிழ்ந்த சக்கை நீ என்றும், அழல்விடம் கொப்பளிக் கின்ற இருகோளின் உச்சிட்டம் என்றும் - நெருப்புப் போன்ற விடத்தைக் கொப்பளிக்கின்ற இராகு என்னும் கரும்பாம்பின் எச்சில் என்றும், கலைத்தோடு மூடிக் களங்கம் பொதிந்திட்ட கயரோகி என்றும் கலைகளாகிய தோடுகளால் மூடப்பட்ட கறை பொதிந்துள்ள கய நோயுடையவன் என்றும், ஒரு நாள் கண் கொண்டு பார்க்கவும் கடவது அன்று என கடற்புவி எடுத்து இகழ - ஒருநாளில் ஒருவரும் நின்னைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் கூடாது என்று கடலாற் சூழப்பட்ட பூமண்டலத் தார் இகழவும் விண்புலத்து ஓடும் உடுமீன் கணத்தோடும் ஓடும் நின்போல்வார்க்கு - ஆகாய வட்டத்தில் ஓடுகின்ற நட்சத்திரங்களுடன் ஓடுகின்ற உன் போன்றவருக்கு, மாபாதகம் போக்கும் இத்தலம் அலது புகல் இல்லை - பெரும் பாவச் செயல்களைப் போக்கக் கூடியது இந்தப் பதி அல்லாமல் வேறே புகலிடம் இல்லை, மிசை பொங்கு புனல் கற்பகக்காடு அலைத்து ஓடுவைகைத் துறைப்படி மடப்பிடியோடு அம்புலீ! ஆடவாவே-மேற் பெருகும் வெள்ளம் கற்பகச் சோலையையும் வருத்தி அதற்கு மேலே யோடுகின்ற வைகை ஆற்றுத் துறை யில் நீராடுகின்ற இளம் பெண் யானையுடன் அம்புலீ! விளை யாடவா, ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன் அம்புலீ! ஆடவா-;

(வி - ரை.) சந்திரனிடமிருந்து அமுதத்தைத் தேவர் உண்பர் ஆதலால், "தெய்வக்குழாம் பிழிந்து ஊற்றிக் குடித்துச் சுவைத்து" என்றார். கோது - சக்கை. கலைத்தோடு - கலையாகிய போர்வை, ஒருநாள் பார்க்கவுங் கடவது அன்று என்பது, விநாயக சதுர்த்தியன்று சந்திரனைக் காணலாகாதென்பது குறித்தது, விட்புலம் - விண்ணாகிய இடம், ஆகாயம். கயரோகி - இருமல் நோயுடையவன், ஒருபக்கம் கலைகள் தேய்ந்துவருகின்ற இயல்பு பற்றிக் 'கயரோகம்' எனப்பட்டது. இத்தலம் மகாபாதகங்களை யெல்லாம் போக்கியுள்ளது. இதனை அறிந்து உன்பாதகத்தையும் போக்கிப் பணம் அடைய அம்மை அழைக்கின்ற காலத்தைக் கைநழுவ விடாது கொண்டுவருக என்றபடி. "மிசைப் பொங்கு புனல் கற்பகக்காடு அலைத்தோடு வைகை" என வைகையாற்று நீர்ப்பெருக்கின் சிறப்புக் கூறப்பட்டது. உச்சிடம் - எச்சில். இருகோள் - கருங்கோள்; இஃது இராகுவை யுணர்த்தும், இருகை- கருமை. இருங்கோள் என வரவேண்டியது சந்தநோக்கி "இருகோள்' என நின்றது, இது தொகுத்தல் விகாரம். சந்திரன் ஒருகோளின் உச்சிட்டமேயன்றி இருகோளின் உச்சிட்டமன்று ஆதலின். இராகுவின் பெயர் கருங்கோள் என்றும் கரும்பாம்பு என்றும் வருவன காண்க. விட்புலத்து மீன் கணத்தோடும் ஓடும் என்று கொள்க. சாமம் என்ற உபாயம் கூறியது இக்கவி. (கூச)

கீற்றுமதி எனநிலவு தோற்றுபரு வத்திலொளி
    கிளாநுதற் சேவ்விவவ்விக்
  கேண்டைத் தடங்கணார் எருவிட் டிறைஞ்சக்
    கிடந்ததும் உடைந்தமுதம்விண

றேற்றுபுது வெண்கலை உடுத்துமுழு மதியென
    உதித்தவமை யத்தும் அம்மை
  ஒண்முகத் தோழுகுதிரு வழகைக் கவர்ந்துகோண்
    டோடினது நிறகமற்றை

மாற்றவ ளோடுங்கேள்வர் மௌலியில் உறைந்ததும்
    மறந்தனை அழைத்தபோழுதே
  மற்றிவள் பெருங்கருணை சோற்றிடக் கடவதோ
    மண்முழுதும் விம்முபுவம்வைத்

தாற்றுமுடி அரசுதவும் அரசிளங் குமரியுடன்
    அம்புலீ ஆடவாவே
  ஆணிப்போன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
    அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) கீற்றுமதி என நிலவு தோற்று பருவத்தில் ஒளி கிளர் நுதற் செவ்வி வவ்வி - கீற்றுப்போன்ற சந்திரனுக நிலவு தோற்றுகின்ற காலத்தில் ஒளிவிளங்குகின்ற நெற்றியின் அழகைக் கவர்ந்து, கெண்டைத் தடங்கணர் எருவிட்டு இறைஞ்சக் கிடந்ததும் - கெண்டை மீன்போன்ற கண்களை யுடைய மங்கையர் (தங்கட்கு மணம் விரைந்து நிறைவேற வேண்டி) எருவைப் பிட்டு இட்டு வழிபடும்படி இருந்ததும், உடைந்து அமுதம் விண்டு ஊற்று புது வெண்கலை உடுத்து முழுமதி என உதித்த அமையத்தும் - அமுதம் உடைந்து விரிந்து ஊற்றுவதால் புதிய வெள்ளைக் கலையை உடுத்து நிறை நிலவு என்று கூறும்படி தோன்றிய காலத்தும், அம்மை ஒண் முகத்து ஒழுகுதிரு அழகைக் கவர்ந்து கொண்டு ஓடினதும் நிற்க - மீனுட்சி அம்மையின் ஒள்ளிய முகத்தில் ஒழுகுகின்ற திரு அழகைக் கைப்பற்றிக்கொண்டு ஓடியதும் ஆகிய குற்றம் உன்னிடத்திருக்க, மற்றை மாற்றவளொடும் கேள்வர் மௌலி யில் உறைந்ததும் மறந்து உனை அழைத்த பொழுதே - மேலும் சக்களத்தியாகிய கங்கையுடன் தம் கணவரான சிவபெருமான் சடைமுடியில் தங்கியிருப்பதையும் மறந்து விட்டு, உன்னைக் கூப்பிட்டாள் எனில், இப்போது, மற்று இவள் பெருங்கருணை சொற்றிடக் கடவதோ - எம் அம்மையாரது பெரிய அருட் டிறத்தை எடுத்துரைக்க வொண்ணுமோ!, மண் முழுதும் விம்முபுயம் வைத்து ஆற்றுமுடி அரசு உதவும் அரசு இளங் குமரியுடன் அம்புலீ! ஆடவாவே - பூமண்டல முழுவதையும் தன் விம்முகின்ற தோளில் வைத்துத் தாங்கிய முடியரசன் ஆகிய மலையத்துவச பாண்டியன் பெற்ற இளவரசியாகிய கன்னியுடன் அம்புலியே! விளையாடவா, ஆணிப்பொன் வில்லி புணர் மாணிக்கவல்லியுடன் அம்புலீ! ஆடவா-;

*(வி - ெ.) இந்த முதல் மூன்று பாடல்களாலும் சாமஉபாயங் கூறப்பட்டுள்ளது. கீற்றுமதி-இளம்பிறை. செவ்வி வவ்வி-அழகைக் கவர்ந்து, எருவிட்டு இறைஞ்சுதல் - இளம் பெண்கள் தங்கட்கு விரைவில் மணம் முடியுமாறு நிலாச்சோறு சமைத்துப் படைக்கும் பொழுது எருவைப் பிட்டுவைத்துச் சந்திரனை வணங்குதல் வழக்கம். சந்திரன் முதலில் அம்மையாரது நுதற் செவ்வியையும் பின்னர் முகத்திருவழகையும் கவர்ந்ததுமன்றி*

யாற்றவளாகிய கங்கையோடும் சிவபிரானது சடை முடியில் தங்கினன். விம்முதல் - பருத்தல். மற்று ; அசை. (சுடு)

விண்டலம் பொலியப் பொலிந்திடுதி யேலுனது
வெம்பணிப் பகைவிழுங்கி
விக்கிடக் கக்கிடத் தொக்கிடர்ப் படுதிவெயில்
விரியும் சுடர்ப்பரிதியின்
மண்டலம் புக்கனை இருத்தியெனின் ஒள்ளொளி
மழுங்கிட அழுங்கிடுதிபொன்
வளர்சடைக் காட்டெந்தை வைத்திடப் பெறுதியேல்
மாசுணம் சுற்ற அச்சம்
கொண்டுகண் துஞ்சா திருப்பதும் மருப்பொங்கு
கோதையிவள் சீறடிகள் நின்
குடர்குழம் பிடவே குமைப்பதும் பெறுதியெம்
கோமாட்டி பாலடைந்தால்
அண்டபகி ரண்டமும் அகண்டமும் பெறுதியால்
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) விண்தலம் பொலியப் பொலிந்திடுதியேல் உனது வெம்பணிப் பகை விழுங்கி விக்கிடக் கக்கிடத் தொக்கு இடர்ப்படுதி-வானம் விளங்கும்படி நீ அங்கு விளங்குவாயானல் உன்னுடைய கொடிய பகைவனாகிய பாம்பு விழுங்கி விக்கவும் கக்கவும் கூடித் துன்பப் படுவாய், வெயில் விரியும் சுடர்ப் பரிதியின் மண்டலம் புக்கனை இருத்தி எனில் ஒள் ஒளி மழுங்கிட அழுங்கிடுதி - வெயிலைப் பரப்பும் ஒளியையுடைய சூரிய மண்டலத்திற் புகுந்திருப்பையானல் உனது சிறந்த ஒளி மழுங்க வருந்துவாய், பொன்வளர் சடைக்காட்டு எந்தை வைத்திடப் பெறுதியேல் மாசுணம் சுற்ற அச்சங்கொண்டு கண் துஞ்சாது இருப்பதும் - பொன் போன்ற சடைக் கூட்டத்தில் எம்பிரான் வைக்கப் பெறுவாயேல் பாம்பு சுற்றப் பயமடைந்து தூங்காது இருப்பதும், மருப்பொங்கு கோதை இவள் சீறடிகள் நின்குடர்

குழம்பிடவே குமைப்பதும் பெறுதி - மணம் பெருகுகின்ற கூந்தலையுடையாளாகிய இவளுடைய சிறிய அடிகள் உனது குடல் கலங்கும்படி மிதிப்பதும் பெறுவாய், எம் கோமாட்டிபால் அடைந்தால் அண்டபகி ரண்டமும் அகண்டமும் பெறுதி அம்புலீ! ஆடவாவே-எம் தலைவியிடம் சேர்ந்தால் அண்டங்களையும் வெளியண்டங்களையும் மற்றுமுள்ள எல்லாவுலகங்களையும் பெறுவாய் (ஆதலால்) அம்புலீ! ஆடவா, ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன் அம்புலீ! ஆடவா-;

*(வி - ர.) பொலிந்திடுதல்-விளங்குதல். பணிப்பகை-பாம்பாகிய பகைவன். பணி-பணமுடையது, பணம்-படம். கக்குதல் வாந்தி பண்ணுதல். குமைத்தல்-மிதித்தல், அழுங்குதல் - வருந்துதல், அம்புலீ நீ விசும்பிற் பொலிந்தால் இராகு உன்னைப் பற்றுவன். சூரியமண்டலம் புகின் ஒளி மழுங்குவாய். சிவபிரான் சடையில் வைக்கப்பெற்றால் மாசுணம் கவரும் என்று அஞ்சுவாய். அன்றியும் உமாதேவியாரால் உதைக்கப்படுவாய், இத்துன்பங்கள் எல்லாம் அடையாமல் அம்மையின் பக்கம் வந்தால் உலக முழுவதும் பெற்று இன்பமுடன் வாழ்வாய், என்று தானமுறை கூறப்பட்டது' (௬௯)*

எண்ணில்பல புவனப் பெருந்தட்டை யூடுருவி
இவள்பெரும் புகழ்கொடுநிலா
எங்கணும் நிறைந்திடுவ தங்கதனின் மேள்ளநீ
எள்ளளவு மொண்டுகொண்டு
வெண்ணிலவு பொழிவது கிடைத்தனை மடுத்திவள்
விழிக்கடை கொழித்த கருணை
வெள்ளந் திளைத்தாடு பெற்றியால் தண்ணளி
விளைப்பதும் பெற்றனைகொலாம்
மண்ணிலொண் பைங்கூழ் வளர்ப்பதுன் இடத்தம்மை
வைத்திடுஞ் சத்தியேகாண்
மற்றேருசு தந்தரம் நினக்கென இலைக்கலை
மதிக்கடவுள் நீயுமுணர்வாய்
அண்ணலங் களியானை அரசர்கோ மகளுடன்
அம்புலீ ஆடவாவே
அணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) எண் இல் பல புவனப் பெருந்தட்டை ஊடு உருவி இவள் பெரும்புகழ் நெடுநிலா எங்கணும் நிறைந்திடுவது கணக்கற்ற பல புவனங்களாகிய பெருந் தட்டுக்களை ஊடுருவிப் போய் இவளுடைய பெரிய புகழாகிய நெடிய ஒளி எவ்விடத்தும் நிறைந்திருப்பது, அதனில் மெள்ள நீ எள் அளவு மொண்டு கொண்டு வெண்நிலவு பொழிவது கிடைத்தனை - அவ்வொளி யில் நீ மெதுவாகச் சிறிதளவு அள்ளிக்கொண்டு வெண்மை யான நிலவைச் சொரியும் இயல்பு பெற்றாய், இவள் விழிக்கடை மடுத்துக் கொழித்த கருணை வெள்ளம் திளைத்தாடு பெற்றியால்- இவளுடைய விழிக்கடையின் பார்வை பெற்றுக் கொழிக்கப் பெறும் அருள் வெள்ளத்தில் மூழ்கியாடும் தன்மையுடையாய் ஆதலால், தண் அளி விளைப்பதும் பெற்றனை - குளிர்ந்த ஒளியைப் பொழிதலும் பெற்றுளாய், மண்ணில் ஒண் பைங் கூழ் வளர்ப்பது உன் இடத்து அம்மை வைத்திடும் சத்தியே- பூமியில் ஒள்ளிய பயிரை நீ வளர்க்கின்ற தன்மையும் அம்மை யானவள் உன்னிடம் வைத்துள்ள அருளாலேதான், மற்று ஒரு சுதந்தரம் நினக்கு என இலை கலைமதிக் கடவுள் நீயும் உணர் வாய் - வேறு எவ்விதமான உரிமையும் உனக்கு இல்லை என்ப தைக் கலையுடன் கூடிய மதிக் கடவுளே நீயும் அறிந்து கொள் வாயாக, (ஆதலால்) அண்ணல் அம்களியானை அரசர் கோமக ளுடன் அம்புலீ ஆடவா - பெரிய அழகிய களிப்பையுடைய யானைப் படையையுடைய அரசர் தலைவனான பாண்டியன் மக ளுடன் அம்புலியே! ஆடவா, ஆணிப் பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன் அம்புலீ! ஆடவா-;

(வி - ம்.) *கொல், ஆம், காண், அசைகள். கொழித்தல் - வெளிப்படுத்தல். நினது நிலவுத்தட்பங்களும் பயிர் வளர்விக்குந் தன்மையும் அம்மையாரின் திருவருள் கொண்டன்றி வேறில்லை - பைங்கூழ் - பயிர். சத்தி - அருள். சுதந்தரம் - உரிமை. மீனாட்சி யம்மையின் அருள் இன்றெனின் நீ ஒரு செயலும் புரிய இயலாது. ஆதலால் அவள் கருணை பெற்று வாழ்க என்று தானம் பெற்று வாழ்ந்திருக்கும் முறை இக்கவியிலும் கூறப்பட்டுள்ளது. புகழை நிலாவாகவும் கருணையை வெள்ளமாகவும் உருவகித்தார்.* (கூஎ)

முன்பும்பர் அரசுசெய் பெரும்பாவ முங்கோப
மூரிமாத் தொடர் சாபமும்
மும்மைத்தமிழ்ச்செழியன் வெப்பொடு கொடுங்கூனும்
மோசித்த இத்தலத்தின்
தன்பெருந் தன்மையை உணர்ந்திலைகொல் சிவராச
தானியாய்ச் சீவன்முத்தித்
தலமுமாய்த் துவாதசாந் தத்தலமும் ஆனதித்
தலமித் தலத்தடைதியேல்
மன்பெருங் குரவற் பிழைத்தபா வமுமற்றை
மாமடிகள் இடுசாபமும்
வளரிளம் பருவத்து நரைதிரையும் முதிர்கூனும்
மாற்றிடப் பெறுதி கண்டாய்
அன்பரென் புருகக் கசிந்திடு பசுந்தேனோ
டம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே. 17830

(சொ - ள்.) முன்பு உம்பர் அரசுசெய் பெரும்பாவமும் கோப மூரி மாத்தொடர் சாபமும் - முற்காலத்தில் தேவர் மன்னனான இந்திரன் செய்த பெரிய பாதகமும் கோபமும் வலிமையும் உடைய ஐராவத யானையைத் தொடர்ந்துள்ள சாபமும், மும்மைத் தமிழ்ச் செழியன் வெப்பொடு கொடுங்கூனும் மோசித்த இத்தலத்தின் தன் பெருந்தன்மையை உணர்ந்திலை கொல் - மூன்று வகைப்பட்ட தமிழை வளர்த்த பாண்டியனுடைய வெப்பு நோயுடன் முதுகு வளைவையும் நீக்கி இந்தப் பதியின் பெருமை யியல்பை நீ அறியாய் கொல், சிவராச தானியாய்ச் சீவன் முத்தித் தலமுமாய்த் துவாத சாந்தத் தலமும் ஆனது இத்தலம் - சிவன் அரசு புரியும் தலை நகரமாகவும் உயிர்கள் முத்தியடையும் பதியாகவும் துரியாதீதப் பதியாகவும் விளங்குவது இப்பதி, இத்தலத்து அடைதியேல் - இப்பதியில் நீ வந்து சேர்வாயாகில், மன்பெரும் குரவற் பிழைத்த பாவமும் மற்றை மாமடிகள் இடுசாபமும் - பெருமையுடைய வியாழ குருவுக்கு நீ செய்த பெருங் குற்றமும் பின்னும் மாமனாராகிய தக்கன் இட்ட சாபமொழி (கொடுமொழி) யும், வளர் இளம்

பருவத்து நரைதிரையும் முதிர் கூனும் மாற்றிடப் பெறுதி கண்டாய் - வளர்கின்ற இளமைப் பருவத்திலேற்பட்ட நரையும் திரையும் முதிர்ந்து வளையுந் தன்மையும் மாற்றப் பெறுவாய், அன்பர் என் புருகக்கசிந்திடு பசுந்தேனொடு அம்புலீ! ஆட வாவே - அடியார்கள் எலும்பு உருக ஒழுகுகின்ற இனிய தேன் போன்றவளுடன் அம்புலீ! ஆடவா, ஆணிப்பொன் வில்லி புணர் மாணிக்க வல்லியுடன் அம்புலீ! ஆடவா-;

(வி - ம்.) உம்பர்-மேலிடம்: இஃது ஆகு பெயராய்த்தேவர் களை யுணர்த்தியது. அம்பர் இம்பர் என்பவை இதன் எதிர்மொழி கள். மூரிமா - வலிமையுடைய விலங்கு (ஐராவதம்). மும்மை - மூன்றுவகை. செழியன்; கூன்பாண்டியன். வெப்பு - வெப்பு நோய்; சமணர் திருஞான சம்பந்தர் மடத்தில் வைத்த நெருப்பு, பையவேசென்று பற்றியதால் பாண்டியனுடல் வெப்பு நோயால் வருந்தியது. பின் ஞானசம்பந்தர் திருநீற்றுப் பதிகம் ஓதி அந் நோய்நீக்கி அருள் புரிந்தனர். மோசித்த-நீக்கிய, மாமடிகள்-மாம னாகிய அடிகள்: (தக்கன்) பாவம், சாபம், வெப்பு, கூன் ஆகிய வற்றை நீக்கிய தலம் மதுரையாதலின் நீயும் இங்கு வரின் உனது சாபம், பாவம், நரை, திரை, கூன்கள் நீங்கப் பெறுவாய் என்ப தாம். பெறுதி: முன்னிலை யொருமைவினைமுற்று. என்பு-எலும்பு, தேன் என்பது உவமையாகு பெயராய் மீனாட்சியம்மையை உணர்த்தியது, இதுவும் தானம் என்ற உபாயம் கூறியது. (கஅ)

கும்பஞ் சுமந்தமத வெள்ளநீர் கோட்டுங்
கோடுங்களி றிடும்போர்வையான்
குடிலகோ டீரத் திருந்துகோண் டங்கலார்
கோய்தளிர்க் கைவருடவும்
செம்பஞ் சுமத்தவும் பதைபதைத் தாரழற்
சிகையெனக் கொப்பளிக்கும்
சீறடிகள் கன்றிச் சிவந்திடச் செய்வதும்
திருவுளத் தடையாதுபோன்
தம்பஞ் சுமந்தீன்ற மானுடவிலங்கின்
தனிப்புதல்வ னுக்குவட்டத்
தண்குடை நிழற்றுநினை வம்மென அழைத்தனள்
தழைத்திடு கழைக்கரும்போன்

றம்பஞ் சுடன்கொண்ட மகரக் கொடிக்கொடியோ
டம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) கும்பம் சுமந்த மதவெள்ள நீர் கொட்டும் கொடும் களிறு இடும் போர்வையான் - மத்தகம் கொண்ட மத நீரின் வெள்ளத்தைச் சொரியும் கொடிய யானையுரித்த தோற் போர்வை போர்த்த சிவபெருமானுடைய, குடில கோடீரத்து இருந்துகொண்டு-வளைந்த சடையுள் நீ தங்கியிருந்து, அந் நலார் கொய் தளிர்க்கை வருடவும் - அழகிய சிறந்த மாதர் கொய்யப்படும் தளிர்போன்ற கையால் தடவவும், செம்பஞ்சு உறுத்தவும் பதை பதைத்து ஆர் அழற்சிகை எனக் கொப்ப ளிக்கும்-செம்பஞ்சு அழுத்தவும் துடிதுடித்து நிறைந்த நெருப் பின் கொழுந்து என்னும்படி கொப்புளம் தோன்றும் இயல் புள்ள, சீறடிகள் கன்றிச் சிவந்திடச் செய்வதும்-சிறிய அடிகள் கன்றுதலடைந்து சிவக்கும்படி செய்வதும், திரு உளத்து அடையாது-சிறந்த தன் மனத்திற் கொள்ளாமல், பொன் தம் பம் சுமந்து ஈன்ற மானுடவிலங்கின் தனிப்புதல்வனுக்கு வட் டத் தண்குடை நிழற்றும் நினை வம் என அழைத்தனள் - பொற்றூண் சுமந்துபெற்ற நரசிங்கமாகிய திருமாலின் மகனு கிய மன்மதனுக்கு வட்டமான குளிர்ந்த குடையாக நிழலைச் செய்கின்ற உன்னை வருக என்று கூப்பிட்டனள், தழைத்திடு கழைக்கரும்பு ஒன்று அம்பு அஞ்சுடன் கொண்ட மகரக் கொடிக் கொடியொடு அம்புலீ! ஆடவாவே-தழைத்த கழை யாகிய கரும்பு வில்லும் ஐந்து பாணங்களும் கொண்ட மகரக் கொடியை யுடைய பூங்கொடி போன்ற அம்மையுடன் அம்புலீ! விளையாடவா, ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லி யுடன் அம்புலீ! ஆடவா-;

(வி - ம்.) கும்பம் - மத்தகம். குடிலம் - வளைவு. கோடீரம்- சடை; வளைத்துக் கட்டப்பட்ட சடை. வருடவும், உறுத்தவும். பதைத்துக் கொப்புளிக்கும் சீறடிகள் என்க. மானுட விலங்கு - நரசிங்கம். இது திருமாலை யுணர்த்தியது (இரணியனைக் கொல் லும் வகையில்.) திருமால் புதல்வன் - மன்மதன். உமாதேவியா

ருக்கும் கரும்பு வில்லும் பஞ்சபாணங்களும் உள என்று கொள்க. பேதம் என்ற உபாயம் கூறப்பட்டுள்ளது இக்கவியில். (௬௬)

துளிதூங்கு தெள்ளமுத வெள்ளருவி பொழியுநின்
 தொன்மரபு தழையவந்து
 தோன்றிடுங் கௌரியர் குலக்கொழுந் தைக்கண்டு
 துணைவிழியும் மனமும்நின்று
களிதூங்க அளவளாய் வாழாமல் உண்ணமுது
 கலையோடும் இழந்துவெறுமட்
 கலத்திடு புதுக்கூழினுக்கிரவு பூண்டொரு
 களங்கம்வைத் தாயிதுவலால்
ஒளிதூங்கு தெளிவிசும் பினினின்றொ டோத்தவன்
 ஒருத்தன் கரத்தின்வாரி
 உண்டோதக் கியமிச்சில் நள்ளிருளில் அள்ளியுண்
 டோடுகின் றுயென்செய்தாய்
அளிதூங்கு ஞிமிறெழுந் தார்க்குங் குழல்திருவொ
 டம்புலீ ஆடவாவே
 ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
 அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) துளி தூங்கு தெள் அமுத வெள்ளருவி பொழியும் நின் தொல் மரபு தழைய வந்து தோன்றிடும் கௌரியர் குலக்கொழுந்தைக் கண்டு-துளிகளாகச் சொரியும் தெளிந்த அமுதமாகிய வெள்ளருவி பொழிகின்ற நினது பழைய குலம் தழைக்கும்படி வந்து பிறந்த பாண்டியர் குலக் கொழுந்தாகிய மீனாட்சியைக் கண்டு, துணை விழியும் மனமும் நின்று களிதூங்க அளவளாய் வாழாமல்-இரண்டு கண்களும் மனமும் பொருந்தி மகிழ்ச்சி தங்கக் கலந்து வாழாமல், உண் அமுது கலையொடும் இழந்து - உண்ணப்படும் அமுது கலை யுடன் இழந்து, வெறு மட்கலத்திடு புதுக் கூழினுக்கு இரவு பூண்டு ஒரு களங்கம் வைத்தாய் இது அலால் - சிறுமியர் வறிய மட்பாத்திரத்திற் படைக்கும் புதுமையான சோற்றுக்கு இரவு செய்து ஒப்பற்ற களங்கம் உண்டாக்கினுய் இதுவேயன்றியும்,

ஒளிதூங்கு தெளிவிசும்பில் நின்ஞெடு ஒத்தவன் ஒருத்தன் கலத்தின் வாரிஉண்டு ஒதுக்கிய மிச்சில் - ஒளிபொருந்திய தெளிந்த ஆகாயத்தில் உன்னுடன் ஒப்பவனை ஒருவன் கையில் வாரியுண்ட மிச்சத்தை, நள் இருளில் அள்ளி உண்டு ஓடுகின்றாய் என் செய்தாய் - நடு இரவில் வாரி உண்டு பின் ஓடுகின்றாய் என்ன இழிவான செயல்களை எல்லாம் நீ செய்கிறாய், அளி தூங்கு ஞிமிறு எழுந்து ஆர்க்கும் குழல் திருவொடு அம்புலீ! ஆடவாவே-அருள் தங்கிய வண்டுகள் எழுந்து ஒலிக்கும் கூந்தலையுடைய செல்வியுடன் அம்புலீ! ஆடவா! ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன் அம்புலீ, ஆடவா-;

(வி - ரை.) துளி - துளித்தல் : முதனிலைத் தொழிற் பெயர். தொல்மரபு-பழையகுலம். கௌரியர்-பாண்டியர். அளவளாய் - கலந்து. அமுது கலையொடும் இழத்தல் - உணவு உடை இல்லாமை எனவும், அமுதத்தைக் கலையொடும் இழத்தல் எனவும் மட்கலத்தில் புதுக்கூழ் - சிறுமியர் துறையில் அட்டுப் படைக்கும் நிலாச் சோறு எனவும் பொருள்படும். மிச்சில் - மிச்சம். ஞிமிறு - வண்டு. நள்இருள்-நடு இராத்திரி. இக்கவியிலும் பேதம் என்ற உபாயம் கூறப்பட்டுள்ளது. நீ உணவும் உடையும் இழந்து வெறுமட்கலக் கூழிற்கு இரந்து ஒரு களங்கமும் வைத்தாய், அன்றியும், ஒத்தஒருவன் கையால் அள்ளியுண்டொதுக்கிய மிச்சிலையள்ளி நள்ளிருளில் உண்டு ஓடுகின்றாய் எனவே அம்புலிக்கு இழிவு தோன்றியது காண்க. (எ0)

மழைக்கோந் தளக்கோதை வம்மினென் றளவில்நீ
வந்திலை எனக்கடுகலும்
வாள்முகச் சேவ்விக் குடைந்தோதுங் கினவனெதிர்
வரவோல்கி யோபணிகள்கோள்
இழைக்குங்கோல் பின்தோடர்ந் தெனவஞ்சி யோதாழ்த்
திருந்தனன் போலுமெனயாம்
இத்துணையும் ஒருவாறு தப்புவித் தோம்வெகுளில்
இனியோரு பிழைப்பில்லை காண்
தழைக்கும் துகிற்கோடி முகிற்கோடி திரைத்துமேல்
தலம்வளர் நகிற்கோடிகளைத்
தாழ்குழலும் நீவிநுதல் வேயர்வும் துடைத்தம்மை
சமயமிது வென்றழுவலிட்

டழைக்கும் தடம்புரிசை மதுரைத் துரைப்பெணுடன்
அம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) மழைக் கொந்தளக் கோதை வம்மின் என்ற அளவில் நீ வந்திலை எனக் கடுகலும்-மேகம் போன்ற கூந்தலை யுடைய அம்மையானவள் உன்னைவருக என்று அழைத்த அள வில், நீ வராதிருந்தமைபற்றிச் சினங்கொள்ளுதலும், வாள் முகச் செவ்விக்கு உடைந்து ஒதுங்கினவன் எதிர்வர ஒல்கியோ-ஒளிபொருந்திய முகத்தின் அழகுக்குத் தோற்றுப் பின் வாங்கியவன் உன் முன்பு வருவதற்குத் தளர்ச்சியுற்றோ, பணிகள் பின் தொடர்ந்து கோள் இழைக்கும் கொல் என அஞ்சியோ - (அல்லது) பாம்புகள் பின்னே தொடர்ந்து வந்து கேடு விளைக்கும் என்று பயந்தோ, தாழ்த்திருந்தனன் போலும் என யாம் இத்துணையும் ஒருவாறு தப்புவித்தோம் - தாமதமாக இருந்தனன் போலும் என்று யாம் கூறி ஒருவிதமாக உன்னை அவள் கோபத்திற்கு ஆளாகாவண்ணம் தடுத்துக்காத்து ளோம், வெகுளில் இனி ஒரு பிழைப்பு இல்லை - அவள் கோபிப் பாளாயின் இனி உனக்கு ஒரு வழியாலும் பிழைப்பதற்கு இட மில்லை, (அறிவாய்) தழைக்கும் துகிற்கொடி - மிகுதியாகிய மாளிகையிற் கட்டப்பட்ட கொடியாடைகள், முகிற்கொடி திரைத்து - மேக மண்டலங்களைத் திரையச் செய்து, மேல்தளம் வளர் நகிற்கொடிகளைத் தாழ்குழலும் நீவி நுதல் வெயர்வும் துடைத்து-மேல்வானில் வளர்கின்ற முலைகளையுடைய பூங் கொம்பு போன்ற மாதர்களின் தொங்குகின்ற கூந்தலையும் தடவி நெற்றி வியர்வையும் துடைத்து, அம்மை சமயம் இது என்று அலுவலிட்டு அழைக்கும்-அம்மையைக் காண்பதற்கு இது நல்ல சமயம் என்று உரக்கக் கூவுதல் செய்து அழைக் கும், தடம்புரிசை மதுரைத்துரைப்பெண் உடன் அம்புலீ! ஆடவாவே—பெரிய மதில்களையுடைய மதுரை நகர்க்கிறைவி யாகிய மீனாட்சியம்மையுடன் அம்புலீ! ஆடவா, ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்கவல்லியுடன் அம்புலீ! ஆடவா-;

(வி - ம்.) மழை- மேகம். கொந்தளக்கோதை- சுழற்சியுள்ள கூந்தல்: குந்தளமென்பதுமது. கடுகல் - சினத்தல். வெள்ளினவனாகிய நீ முன்வருதற்கு ஒல்கியோ அல்லது பாம்புகள் வருத்தும் என்று அஞ்சியோ காலம் தாழ்த்தாய் என்று கூறி உன்னைத் தப்புவித்தோம் எனக் கூட்டுக. மதுரைப் புரிசைத்துகிற்கொடிகள் மின்னற் கொடிகளைத் திரையும்படி செய்து வானுலகத்திலுள்ள பெண்களைக் குழல்கோதி வெயர்வு துடைத்து அழைக்கின்ற என்க. அலுவலிடல் - உரக்கக் கூப்பிடுதல். தண்டம் என்ற உபாயம் இதிற் கூறப்பட்டுள்ளது. (எ௬)

ஏடகத் தெழுதாத வேதச் சிரத்தர
சிருக்குமிவள் சீறடிகள் நின்
இதயத் தடத்தும் பொலிந்தவா திருவுளத்
தெண்ணியன் றேகபடமா
நாடகத் தைந்தொழில் நடிக்கும் பிரான்தெய்வ
நதியோடு முடித்தல்பெற்றாய்
நங்கையிவள் திருவுள மகிழ்ச்சிபெறில் இதுபோலோர்
நற்றவப் பேறில்லைகாண்
மாடகக் கடைதிரித் தின்னரம் பார்த்துசீர்
வடிம்புதை வதுமங்கலார்
மகரயாழ் மழலைக்கு மரவங்கள் நுண்துகில்
வழங்கக் கொழுங்கொங்குதூங்
காடகப் பொற்கிழி அவிழ்க்குமது ரைத்திருவொ
டம்புலீ ஆடவாவே
ஆணிப்பொன் வில்லிபுணர் மணிக்க வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(சொ - ள்.) ஏடு அகத்து எழுதாத வேதச் சிரத்து அரசு இருக்கும் இவள் சீறடிகள்-ஏட்டிலே எழுதப்பெறாத வேதத்தின் முடியில் அரசாட்சி புரியும் இவளுடைய சிறிய அடிகள், நின் இதயத் தடத்தும் பொலிந்தவா திருவுளத்து எண்ணி அன்றே- உனது இருதய பீடத்தும் நிறைகின்றவாறு தன் திருவுள்ளத்தில் எண்ணியல்லவா, கபடமா நாடகத்து ஐந்தொழில் நடிக்கும் பிரான் தெய்வ நதியொடு முடித்தல் பெற்றாய் - வஞ்சமாக

நாடக வழியில் ஐந்தொழிலும் நிகழுமாறு கூத்தாடும் பெருமான் தெய்வ நதியாகிய கங்கையுடன் முடியில் வைத்தலைப் பெற்றனை, நங்கை இவள் திருவுளம் மகிழ்ச்சி பெறில் இது போல் ஒர் நற்றவப் பேறு இல்லைகாண் - நம்பிராட்டியின் மன மகிழ்ச்சியைப் பெற்றுக்கொள்வாயானால் இதனைப்போல் நீ அடையக் கூடிய சிறந்த பேறு வேறு இல்லை, மாடகக் கடை திரித்து இன் நரம்பு ஆர்த்து உகிர் வடிம்பு தைவரும் அம் நலார் மகரயாழ் மழலைக்கும் - முறுக்காணியை அசைத்து முறுக்கி இனிய நரம்பின் ஓசையை முழக்கி நகத்தின் விளிம்பால் தடவுகின்ற அழகிய பெண்டிர் வாசிக்கும் மகரவடிவமைந்துள்ள வீணையின் இசைக்கு, மரவங்கள் நுண் துகில் வழங்க - குங்கும மரங்கள் நுண்ணிய துகில் போன்ற மலரை அளிக்க, கொழுங்கோங்கு தூங்கு ஆடகப் பொற்கிழி அவிழ்க்கு மதுரைத் திருவொடு அம்புலீ! ஆடவாவே - செழித்த கோங்க மரங்கள் அசைகின்ற பொற்கிழி போன்ற மலரை விரிக்கும் வளம் பொருந்திய மதுரைத் திருமகளுடன் அம்புலீ! ஆடவா, ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்கவல்லியுடன் அம்புலீ ஆடவா -;

*(வி - ரை.) இவ்விரண்டிறுதிப் பாடல்களிலும் தண்டம்என்ற உபாயம் கூறப்பட்டுள்ளது. ஏடகத்து - ஏட்டில். சிவபிரான் சந்திரனை முடியில் வைத்தருளியதன் காரணம் குறிக்கப்பட்டது காண்க. நாடகம்-கூத்து. ஐந்தொழில்-ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. மாடகம்-யாழின்முறுக்காணி. உகிர்வடிம்பு-நகத்தின் விளிம்பு. மரவம்-குங்குமமரம். தைவரல்-தடவல். ஆடகம்-பொன். இன்நரம்பு ஆர்த்து - இனிய நரம்பின் ஓசையை எழுப்பி; அல்லது தட்டி. மகரயாழ் - மகரமீன் வடிவிற் செய்யப்பட்ட வீணை. (எ௨)*

## அ. அம்மானைப் பருவம்

கரைக்கும் கடாமிரு கவுட்குடம் உடைந்தூற்று
களிறுபெரு வயிறு தூர்ப்பக்
கவளம் திரட்டிக் கொடுப்பதென வுஞ்சூழ்ந்தொர்
கலைமதிக் கலசவமுதுக்
கரைக்கும் பெருந்தேவர் புன்கண் துடைத்திட
எடுத்தமுத கலசம் வெவ்வே
றீந்திடுவ தெனவுமுழு முத்திட் டிழைத்திட்ட
எறிபந்தின் நிரை என்னவும்
விரைக்கும் தளிர்க்கைக் கொழுந்தா மரைத்துஞ்சி
மீதெழுந் தார்த்தபிள்ளை
வெள்ளோ திமத்திரளி தெனவும் கரும்பாறை
மீமிசைச் செஞ்சாந்துவைத்
தரைக்கும் திரைக்கைவெள் ளருவிவை கைத்துறைவி
அம்மானை ஆடியருளே
ஆகங் கலக்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
அம்மானை ஆடியருளே.

(சொ - ள்.) கரைக்கும் கடாம் இரு கவுள் குடம் உடைந்து ஊற்று களிறு பெரு வயிறு தூர்ப்ப - கரைக்கின்ற மதநீரை இரண்டு கன்னமாகிய குடங்களைத் திறந்து ஒழுகுகின்ற ஆண் யானையின் பெரிய வயிற்றை நிரப்பும்படி, கவளம் திரட்டிக் கொடுப்பது எனவும் - உணவுருண்டையைத் திரட்டிக் கொடுத்தால் போலவும், சூழ்ந்தொர் கலைமதிக் கலச அமுதுக்கு இரைக்கும் பெருந்தேவர் புன்கண் துடைத்திட எடுத்து அமுத கலசம் வெவ்வேறு ஈந்திடுவது எனவும்-சூழ்ந்து ஒரு கலைமதியின் கலச அமுதுக்காக இரைச்சலிடுகின்ற பெரிய தேவர்களின் துன்பத்தை நீக்கும் பொருட்டு அமுத கலசங்களை வேறு வேருக எடுத்து மேல் எறிவது போலவும், முழு முத்து இட்டு இழைத்திட்ட எறிபந்தின் நிரை என்னவும் - முழுமையான முத்தால் அமைத்துச் செய்யப்பட்ட எறியப்படும் பந்துகளின் வரிசை என்று சொல்லும்படியும், விரைக்கும் தளிர்க்

கைக் கொழுந்தாமரைத் துஞ்சி மீது எழுந்து ஆர்த்த பிள்ளை வெள் ஓதிமத்திரள் இது எனவும் - மணக்கின்ற தளிர்போலும் கையாகிய தாமரைப்பூவில் தூங்கி மேலே எழுந்து ஆர்த்த இளவன்னக் கூட்டமிவை எனவும், கரும்பாறைமீமிசை செஞ் சாந்து வைத்து அரைக்கும் திரைக்கை வெள் அருவி வைகைத் துறைவி! கரிய பாறையின்மீது செம்மையான பூம்பராகங்களை வைத்து அரைக்கின்ற திரைகளாகிய கைகளையுடைய அருவி பாயும் வைகைத் துறைகளையுடைய தலைவியே! அம்மானை ஆடி அருள்-, ஒருவர் ஆகம் கலந்து பாகம் பகிர்ந்த பெண் அம்மானை ஆடி அருள் - ஒப்பற்ற சிவபெருமானுடைய உடம்பில் ஒன்றுகக் கலந்து இடது பாகத்தைத் தனக்கெனப் பிரித்துக் கொண்ட பெண்ணே!, அம்மானை ஆடி அருள்-;

(வி - ி.) கடாம்-மதம். கவுட்குடம் - கன்னமாகிய குடம்: பண்புத்தொகை. வயிறுதூர்ப்ப - வயிற்றை நிறைக்க. கவளம் - ஒருவாயளவுணவு. கலைமதிக்கலச அமுது - கலைகளையுடைய சந்திரனிடத் தமைந்துள்ள கலசத்திலுள்ள அமுது. கொழுந் தாமரைத் துஞ்சி-செழிப்பான தாமரை மலரில் தூங்கி. புன்கண்-துன்பம். நிரை - வரிசை. ஆகம் - உடல். கவளம் திரட்டிக் கொடுப்பது எனவும், அமுதகலசம் வெவ்வேறு ஈந்திடுவது எனவும், எறிபந்தின் நிரை என்னவும், வெள்ளோதிமத் திரள் இது எனவும் தோன்றும்படி அம்மானை ஆடியருள் என வினைமுடிவு செய்க. (எக)

திங்கட் கொழுந்தைக் கொழுந்துபடு படர்சடைச்
 செகுதிரு மணவாளன் மேற்
 செழுமணப் பந்தரில் எடுத்தெழியும் அமுதவெண்
 திரளையிற் புரளுமறுகாற்
பைங்கட் சுரும்பென விசும்பிற் படர்ந்தெழும்
 பனிமதி மிசைத்தாவிடும்
 பருவமட மானெனவென் அம்மனைநின் அம்மனைப்
 படைவிழிக் கயல்பாய்ந்தெழ
வெங்கட் கடுங்கொலைய வேழக்கு ழாமிதென
 மேகக் குழாத்தைமுட்டி
 விளையாடு மழகளிறு கடைவாய்க் குதட்டமுகை
 விண்டஅம் பைந்துகோத்த

**அங்கட் கரும்பேந்தும் அபிடேக வல்லிதிரு**
**அம்மானை ஆடியருளே**
**ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்**
**அம்மானை ஆடியருளே.**

(சொ - ள்.) திங்கட் கொழுந்தை கொழுந்து படுபடர் சடைச் செருகு திருமணவாளன் மேல் - பிறைச்சந்திரனை வளர்ந்து நீண்ட சடைமுடியில் செருகிய சிறந்த மணவாளன் மீது, செழுமணப் பந்தரில் எடுத்து எறியும் அமுத வெண் திரளையில் புரளும் அறுகால் பைங்கண் சுரும்பு என - சிறந்த திருமணப் பந்தலில் எடுத்து வீசப்படும் அமுதமாகிய வெள்ளை யுருண்டையில் புரள்கின்ற ஆறு கால்களையும் பசிய கண்களை யும் உடைய வண்டுகள் என்று தோன்றும்படியும், விசும்பில் படர்ந்து எழும் பனிமதி மிசைத் தாவிடும் பருவ மடமான் என- ஆகாயத்தில் சென்றெழுகின்ற குளிர்ச்சியான சந்திரன்மீது குதிக்கும் இளம் பருவமுள்ள மான் என்று தோன்றும்படியும், என் அம்மனை நின் அம்மனைப் படைவிழிக் கயல்பாய்ந்து எழ- என்னுடைய தாயே! நினது வெள்ளிய அம்மானையில் நின் ஆயுதம் போன்ற கண்களாகிய கயல்மீன்கள் பாய்ந்து எழும் படி, வெங்கண் கடுங்கொலைய வேழக் குழாம் இது என மேகக் குழாத்தை முட்டி - கொடிய கண்களையும் கடிய கொலைத் தொழிலையு முடைய யானைக்கூட்டம் இது என்று மேகக் கூட்டத்தை முட்டி (தாக்கி), விளையாடு மழகளிறு கடைவாய் குதட்ட - விளையாடுகின்ற இளங்களிறு கடைவாயைக் குதட்டி நிற்க, முகை விண்ட அம்பு ஐந்து கோத்த அம் கண் கரும்பு ஏந்தும் - மொட்டு விரிந்த மலரம்புகள் ஐந்தும் கோக்கப்படு கின்ற அழகிய கணுக்களை யுடைய கரும்பு வில்லைத் தாங்கி யுள்ள அபிடேகவல்லி!-, திரு அம்மானை ஆடி அருள் - அழகிய அம்மானை விளையாட்டை ஆடியருள், ஆகம் கலந்து ஒருவர் பாகம் பகிர்ந்த பெண் அம்மானை ஆடி அருள்-;

(வி - ரை.) *திங்கட்கொழுந்து - பிறைச்சந்திரன். கொழுந்து படுபடர்சடை-கொழுந்துவிட்டு நீண்டு வளர்ந்த சடை. மிசை - மேல். அம்மானைக் காயோடு கண்ணும் செல்லுதல் திரளையிற் சுரும்பு போலவும், மதிமிசைத் தாவிடும் மான் போலவும் தோன்*

*றியது என்க. என் அம்மனே!: விளி. எழ, ஆடி அருள் என முடிக்க. மழகளிறு என்றது விநாயகக் கடவுளை. குதட்டக் கரும்பேந்தும் அபாடேகவல்லி. அம்மை கையில் ஏந்திய கரும்பு வில்லைக் கண்டு விநாயகர் ஆகிய யானை கடைவாய் அசைத்துத் தின்ன விரும்பும் என்பது கருத்து. (எசு)*

கள்ளூறு கஞ்சக் கரத்தூறு சேயொளி
கலப்பச் சிவப்பூறியும்
கருணைப் பெருக்கூற அமுதூறு பார்வைக்
கடைக்கட் கறுப்பூறியும்
நள்ளூறு மறுவூ றகற்றுமுக மதியில்வெண்
ணகையூறு நிலவூறியும்
நற்றாள அம்மனையோர் சிற்குணத் திணைமூன்று
நற்குணங் கதுவல்காட்ட
உள்ளூறு களிதுளும் பக்குரவர் இருவிரும்
உற்றிடு துவாதசாந்தத்
தொருபெரு வெளிக்கே விழித்துறங் குந்தொண்டர்
உழுவலன் பென்புருகநெக்
கள்ளூற உள்ளே கசிந்தூறு பைந்தேறல்
அம்மானை ஆடியருளே
ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
அம்மானை ஆடியருளே.

(சொ - ள்.) கள் ஊறு கஞ்சக்கரத்து ஊறு சேயொளி கலப்பச் சிவப்பு ஊறியும் - தேன் ஊறுகின்ற தாமரை மலர் போன்ற கையிலமைந்த சிவந்த ஒளி கலத்தலால் சிவப்பு நிறம் ஊறப்பெற்றும், கருணைப் பெருக்கு ஊற அமுது ஊறு பார்வைக் கடைக்கண் கறுப்பு ஊறியும் - அருள் வெள்ளம் பெருக அமுதம் சுரக்கும் பார்வையால் கடைக்கண்ணில் அமைந்த கறுப்பு நிறம் பொருந்தப்பெற்றும், நள் ஊறு மறு ஊறு அகற்றுமுக மதியில் வெண் நகையூறு நிலவு ஊறியும் - நடுவில் பொருந்திய களங்கமாகிய குறையைப் போக்கிய முகமாகிய மதியில் தோன்றும் வெள்ளிய நகையால் தோன்றிய நிலவை

யொத்த வெண்மை நிறம் பெற்றும், நல்தரள அம்மானை ஓர் சிற்குணத்தினை மூன்று நற்குணம் கதுவல் காட்ட - நல்ல முத்து அம்மானை ஒப்பற்ற அறிவுக்குணத்தை மூவகைப்பட்ட (சாத்துவிகம், இராசதம், தாமதம் ஆகிய) மூன்று குணங் களும் பற்றுதலை விளக்கிக்காட்ட, உள் ஊறு களிதுளும்பக் குரவர் இருவீரும் உற்றிடு துவாத சாந்தத்து ஒரு பெரு வெளிக்கே - உள்ளத்தில் ஊறுகின்ற மகிழ்ச்சி பெருக அம்மை யப்பர் ஆகிய நீவிர் இருவிரும் பொருந்தி யிருக்கின்ற உச்சிக்கு மேற் பன்னிரண்டங்குலமுள்ள இடத்திற்கு அப்பாற்பட்ட வெளியில், விழித்து உறங்கும் தொண்டர் உழுவல் அன்பு என்பு உருக - துயிலாமல் துயில்கின்ற அடியார்கள் சிறந்த அன்பினால் எலும்பும் இளக, நெக்கு அள் ஊற உள்ளே கசிந்து ஊறு பைந்தேறல்! அம்மானை ஆடி அருள் - நெகிழ்ந்து வாயூறும்படி மனத்திற் கசிந்து ஊறுகின்ற இனிய தேன் போன் றவளே! அம்மானை ஆடி அருள்க, ஆகம் கலந்து ஒருவர் பாகம் பகிர்ந்த பெண்! அம்மானை ஆடி அருள்-;

(வி - ம்.) கள்ஊறு கஞ்சக்கரம் - தேன் பெருகுகின்ற தாமரை மலர்போன்ற கை. சேயொளி - செம்மைஒளி. சிவந்த நிறம். நகை-சிரிப்பு, பல். தரளம்-முத்து. அம்மனை, முத்தினாற் செய்யப்பட்டது ஆதலின் அது கையின் சார்பால் சிவந்து தோன் றிற்று; அவ்வாறே கடைக்கட்பார்வையால் கறுப்பாயும் நகை வெண்ணிலவினால் வெண்ணிறமாகவும் தோன்றியது. இவ்வாறு ஒருபொருளில் பலநிறம் சார்தல் ஓர் உயிரின் அறிவில் இராசத குணமும் தாமத குணமும் சத்துவ குணமும் சார்தல் ஒக்கும் என்க. இராசதகுணம் சிவப்பு, தாமதகுணம் கறுப்பு, சத்துவ குணம் வெண்மை. கதுவல்-பற்றுதல். குரவர் இருவர் - சிவபிரா னும் உமாதேவியாரும், துவாத சாந்தம் - பிரமரந்திரத்துக்குப் பன்னிரண்டங்குலத்திற்கு மேற்பட்ட இடம். விழித்துறங்கும் தொண்டர் - சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் மெய்யன்பர். உழுவல் அன்பு - மிக்க அன்பு. எழுமையுந் தொடர்ந்த அன்பு. (௭௦)

**குலைபட்ட காந்தள் தளிர்க்கையிற் செம்மணி**
**குயின்றவம் மனைநீத்திலம்**
**கோத்தவம் மனைமுன் செலப்பின் செலுந்தன்மை**
**கோகனக மனையாட்டிபால்**

கலைபட்ட வெண்சுடர்க் கடவுள்தோய்ந் தேகஅது
கண்டுகொண் டேபுழுங்கும்
காய்கதிர்க் கடவுளும் பின்தொடர்வதேய்ப்பக்
கறங்கருவி தூங்கவோங்கும்
மலைபட்ட ஆரமும் வயிரமும் பிறவுமா
மாமணித் திரளைவாரி
மறிதிரைக் கையால் எடுத்தெறிய நாற்கோட்டு
மதகளிறு பிளிறியோடும்
அலைபட்ட வைகைத் துறைச்சிறை அனப்பெடை
அம்மானை ஆடியருளே
ஆகங்க லந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்
அம்மானை ஆடியருளே.

(சொ - ள்.) குலைபட்ட காந்தள் தளிர்க்கையிற் செம்மணி குயின்ற அம்மனை - குலையிற் பொருந்திய காந்தள் மலர் போன்ற தளிர்த்தலையுடைய கையில் செம்மையான மாணிக்கத்தாற் செய்த அம்மானையானது, நித்திலம் கோத்த அம்மனை முன்செலப் பின் செலும் தன்மை - முத்தாற் செய்யப்பட்ட அம்மனை முன் செல்லவும் அதன்பின் செல்லுந் தன்மை, கோகனக மனையாட்டி பால் கலைபட்ட வெண்சுடர்க் கடவுள் தோய்ந்து ஏக - தாமரை மலராகிய தன் மனைவியிடத்தில் பதினாறு கலைகளையுடைய வெள்ளிய கதிர்களையுடைய சந்திரன் புணர்ந்து செல்ல, அது கண்டுகொண்டே புழுங்கும் காய் கதிர்க் கடவுளும் பின் தொடர்வது ஏய்ப்ப - அதனைப் பார்த்துப் புழுக்கம் அடைந்த வெதும்பும் கதிர்களையுடைய சூரியனும் பின்தொடர்ந்து போவதை ஒப்ப, கறங்கு அருவி தூங்க-ஒலிக்கின்ற அருவியானது பெருகி, ஓங்கும் மலைபட்ட ஆரமும் வயிரமும் பிறவும் ஆம் மாமணித்திரளை வாரி - உயர்ந்திருக்கின்ற மலையில் உள்ள முத்தும் வயிரமும் மற்றுமுள்ள சிறந்த மணிக்குவியல்களையும் அள்ளி, மறிதிரைக் கையால் எடுத்து எறிய - மடங்கிவரும் அலைகளாகிய கைகளால் எடுத்து வீச, நாற்கோட்டு மதகளிறு பிளிறி ஓடும் - நான்கு கொம்புகளையுடைய மதயானையாகிய ஐராவதம் இரைந்து ஓடுதற்கிடமான,

அலைபட்ட வைகைத்துறைச் சிறை அனப்பேடை அம்மானை ஆடி அருள் - அலைகள் பொருந்திய வைகைத் துறைகளை யுடைய சிறகுகள் அமைந்த பெண் அன்னமே! அம்மானை ஆடி அருள், ஆகம் கலந்து ஒருவர் பாகம் பகிர்ந்தபெண்! அம்மானை ஆடி அருள்-;

(வி - ம்.) காந்தள் மலர் வடிவிற்கும், தளிர் மென்மைக்கும் உவமையாக வந்தன. கைத்தாமரையிலிருந்து முத்தான் இயன்ற அம்மனை முன்னும் செம்மணியான் இயன்ற அம்மனை பின்னுமாகச் செல்லுவது, தன் மனைவியாகிய தாமரையைச் சந்திரன் தோய்ந்து செல்வதைச் சூரியன் கண்டு புழுங்கிப் பின் செல்லுதல் போன்று இருந்தது என்க. ஏய்ப்ப-ஒப்ப. கதிர்க் கடவுள்-ஞாயிறு. கறங்குதல் - ஒலித்தல். ஆரம் - முத்து. நாற்கோட்டு மதகளிறு - ஐராவதயானை. அலைபட்ட - அலைக்குந்தன்மையுடைய. (எஅ)

தமரான நின்துணைச் சேடியரில் ஒருசிலர்
தடக்கையின் எடுத்தாடுநின்
தரளவம் மனைபிடித் தெதிர்வீசி வீசியிட
சாரிவல சாரிதிரியா
நிமிராமுன் அம்மனையோர் ஆயிரம் எடுத்தெறிய
நிரைநிரைய வாய்க்ககனமேல்
நிற்கின்ற தம்மைநீ பெற்றஅசி லாண்டமும்
நிரைத்துவைத் ததுகடுப்ப
இமிரா வரிச்சுரும் பார்த்தெழப் பொழிலூ
டெழுந்தபைந் தாதுலகெலாம்
இருள்செயச் செய்துநின் சேனுபராக மெனும்
எக்கமள காபுரிக்கும்
அமரா வதிக்குஞ்செய் மதுரா புரித்தலைவி
அம்மானை ஆடியருளே
ஆகங் கலந்தோருவர் பாகம் பகிர்ந்தபெண்
அம்மானை ஆடியருளே.

(சொ - ள்.) தமர் ஆன நின் துணைச் சேடியரில் ஒரு சிலர் தடக்கையில் எடுத்து ஆடும் - தம்மவரான உன் துணையான தோழியர்களில் சிலர் பெரிய கையில் எடுத்து ஆடுகின்ற,

நின்தரள அம்மனை பிடித்து எதிர் வீசி வீசி இடசாரி வலசாரி திரியா நிமிராமுன் - நினது முத்தம்மனையைப் பற்றி எதிராக வீசி வீசி இடப்பக்கம் வலப்பக்கமாகத் திரிந்து நிமிர்தற்கு முன், அம்மனை ஓர் ஆயிரம் எடுத்து எறிய - ஓராயிரம் அம்மனையை எடுத்து வீச, நிரை நிரைய வாய்க் ககனமேல் நிற்கின்றது - அவை வரிசை வரிசையாக வானத்தில் நிற்பது, அம்மை! நீ பெற்ற அகிலாண்டமும் நிரைத்து வைத்தது கடுப்ப - தாயே! நீ ஈன்றருளிய எல்லா அண்டங்களும் வரிசை வரிசையாக நிறுத்தியதுபோல இருக்கும்படி, வரிச் சுரும்பு இமிரா ஆர்த்து எழப் பொழில் ஊடு எழுந்த பைந்தாது - வரிகளையுடைய வண்டுகள் மொய்த்து முழக்கி எழுவதனால் சோலையில் எழுந்த பசிய மகரந்தப் பொடிகள், உலகு எலாம் இருள் செயச் செய்து - உலக முழுமையையும் இருளும்படி செய்து, நின் சேனுபராகமெனும் ஏக்கம் அளகாபுரிக்கும் அமராவதிக்குஞ் செய் மதுராபுரித் தலைவி! அம்மானை ஆடி அருள் - உனது சேனை போர்க்கு எழுந்ததாலுண்டான தூசியென்று நினைத்து அளகாபுரியும் அமாராவதியும் ஏக்கமுறும்படி செய்யும் வளம் பொருந்திய மதுராபுரியின் தலைவியே! அம்மானை ஆடி அருள், ஆகம் கலந்து ஒருவர் பாகம் பகிர்ந்த பெண்! அம்மானை ஆடி அருள்-;

(வி - ம்.) சேடியர்-தோழியர், இடசாரி வலசாரி-இடப்பக்கமாகச் சுற்றுதல், வலப்பக்கமாகச் சுற்றுதல். நிமிராமுன் - நிமிர்வதற்குமுன், ககனம் - விண். அகிலாண்டமும் - எல்லா உலகங்களும். வரிச் சுரும்பு - கீற்றுகளையுடைய வண்டு. பைந்தாது-பசிய தூள், இனிய மகரந்தம். சேனுபராகம்-படையின் தூசி. ஏக்கம்-கவலை. திரியா - திரித்து. தயர் - தம்மவர். (௭௭)

உயிரா யிருக்கின்ற சேடியரின் மலர்மீ
துதித்தவள் எதிர்த்துநின்றே
டோட்டியெட் டிப்பிடித் திட்டவம் மனைதேடி
ஓடியா டித்திரியநீ
பெயரா திருநல்லை யாடுவது கண்டேக்கை
பிறைமுடி தளக்கமுடிமேற்
பெருகுசுர கங்கைநுரை பொங்கலம் மானையப்
பெண்கொடியும் ஆடல்மான

**வெயரா மனம்புழுங் கிடுமமரர் தச்சனும்**
**வியப்பச் செயுந்தவளமா**
**மேடையும் தண்தரள மாடமும் தெண்ணிலா**
**வீசத் திசைக்களிறெலாம்**
**அயிரா வதத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி**
**அம்மானை ஆடியருளே**
**ஆகங் கலந்தொருவர் பாகம் பகிர்ந்தபெண்**
**அம்மானை ஆடியருளே.**

(சொ - ள்.) உயிராய் இருக்கின்ற சேடியரில் மலர் மீது உதித்தவள் - உன் உயிர் போலிருக்கும் தோழிமார்களில் தாமரை மலரில் தோன்றியவளாகிய இலக்குமி, எதிர்த்து நின்னோடு ஒட்டி எட்டிப்பிடித்திட்ட அம்மனை தேடி ஓடி ஆடித் திரிய - உன்னுடன் எதிராக நின்று சபதம் செய்து நீ எட்டிப் பிடித்த அம்மனையைக் காணமல் தேடி ஓடி யாடித் திரியவும், நீ பெயராது இருந்து விளையாடுவது கண்டு எந்தை பிறைமுடி துளக்க - நீ இடம் பெயராமலே யிருந்து விளையாடுகின்றதைப் பார்த்து எம்பிரான் (சிவபெருமான்) தன் பிறை அணிந்த சடை முடியை அசைக்க, முடிமேல் பொங்கு சுரகங்கை நுரை பொங்கல் அம்மானை அப்பெண் கொடியும் ஆடல் மான - சடைமுடியில் தங்கியுள்ள ஆகாய கங்கையின் நுரை மேல் எழுதல் அப் பெண்ணும் அம்மானை ஆடுவதை ஒத்திருக்க, வெயரா மனம் புழுங்கிடும் அமரர் தச்சனும் வியப்பச்செயும் - வெயர்த்து மனப்புழுக்கமடைந்த தேவதச்சனும் ஆச்சரியப் படும்படி செய்கின்ற, தவளமா மேடையும் தண்தரள மாடமும் தெள் நிலா வீச - வெண்ணிறமுற்ற பெரிய மேடைகளும் குளிர்ந்த முத்தினுற் செய்த மாடங்களும் தெளிவான நிலவொளி வீச, திசைக்களிறு எலாம் அயிராவதத்தினை நிகர்க்கும் மதுரைத் தலைவி - திக்கு யானைகள் எல்லாம் வெண்ணிறம் பொருந்திய ஐராவத யானையை ஒத்திருக்கும்படியான மதுரைத் தலைவியே!, அம்மானை ஆடி அருள்-, ஆகம கலந்து ஒருவர் பாகம் பகிர்ந்தபெண்! அம்மானை ஆடி அருள்-;

(வி - ு.) *மலர்மீத உதித்தவள் - திருமகள். ஒட்டி - சபதம் செய்து. அம்மைவிளையாடல் கண்டு சிவபெருமான் முடி துளக்கும்*

போது, கங்கை நுரை பொங்கியது, அக்கங்கையும் அம்மனை ஆடுவது போன்று தோன்றிய தென்க. கங்கைக்கு அலை கைக ளெனவும் நுரையெறிதலாலுண்டாகும் குமிழ் அம்மனை யெனவும் கொள்ளப்படும். புழுங்குதல்-வருந்துதல். அமரர்-தேவர். மயன் என்ற தெய்வத் தச்சனும் முன் புழுங்கிப் பின் வியந்தனன் என்க. திசைக்களிறு-திக்குயானை. இங்கு ஐராவத மொழிந்த புண்டரீகம், வாமனர், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபூமம், சுப்பிர தீபம் என்பன. (எஅ)

(வேறு)

முத்தம் அழுத்திய அம்மனை கைம்மலர்
முளரி மணங்கமழ
மொய்குழல் வண்டுநின் மைவிழி வண்டின்
முயங்கி மயங்கியிடக்
கோத்து மணித்திர ளிற்செயும் அம்மனை
குயிலின் மிழற்றியநின்
குழலி னிசைக்குரு கிப்பனி தூங்கு
குமந்துளி சிந்தியிட
வித்துரு மத்தில் இழைத்தவு நின்கை
விரற்பவ ளக்தளிரின்
விளைதரும் ஒள்ளொளி திருடப் போவதும்
மீள்வது மாய்த்திரிய
அத்தன் மனத்தெழு தியவுயிர் ஓவியம்
ஆடுக அம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக அம்மனையே.

(சொ - ள்.) முத்தம் அழுத்திய அம்மனை கைம்மலர் முளரி மணம் கமழ - முத்துப் பதிக்கப்பட்ட அம்மனை கையாகிய தாமரை மலரின் மணத்தை வீச, மொய்குழல் வண்டு நின் மைவிழி வண்டின் முயங்கி மயங்கிட - (அடர்தல்) செறிந்த கூந்தலிலுள்ள வண்டு நினது மைதீட்டப்பட்ட கண் களாகிய வண்டுடன் சேர்ந்து மயங்கவும், கொத்து மணித் திரளிற் செயும் அம்மனை குயிலின் மிழற்றிய நின் குழலின்

இசைக்கு உருகிப் பனி தூங்கு குறுந்துளி சிந்தியிட - கொத்தான மாணிக்கக் கூட்டத்தாற் செய்யப்பட்ட அம்மானை குயில் போற் பேசும் நின் குழலினது இனிய இசைக்கு இளகிக் குளிர்ச்சி பொருந்திய சிறிய துளிகளைச் சிந்தவும், வித்துருமத்தில் இழைத்தவும் நின் கைவிரற் பவளத் தளிரின் விளைதரும் ஒள் ஒளி திருடப் போவதும் மீள்வதுமாய்த் திரிய - பவளத்தினாற் செய்யப்பட்ட அம்மனைகளும் நின் கைவிரலாகிய பவளத் தளிரில் உண்டாகும் சிறந்த ஒளியைக் கவர்ந்துவரப் போவதும் வருவதுமாக அலையவும், அத்தன் மனத்து எழுதிய உயிர் ஓவியம்! ஆடுக அம்மனை - தலைவனாகிய சிவபெருமானுடைய உள்ளத்தில் தீட்டப்பெற்றுள்ள உயிருடன் கூடிய சித்திரமே! அம்மானை ஆடியருள்க, அழகு தழைந்த கல்யாண சவுந்தரி! ஆடுக அம்மனை - அழகு பெருகியிருக்கின்ற கல்யாண சுந்தரியே! அம்மானை ஆடியருள்க.

(வி - ரை.) *அழுத்திய-பதித்த. முளரி - தாமரை. குழல் - கூந்தல். விழிவண்டு-விழியாகிய வண்டு. முயங்குதல்-கூடுதல். வித்துருமம்-பவளம். முத்தாற் செய்யப்பட்ட அம்மனை பின்னாகத் தாமரை மணம் கமழுதலாகிய குழலிடத்துள்ள வண்டுகள் அம்மனைக்காய் மேல் எழுந்து செல்லும்போது உடன்செல்லும் விழியாகிய வண்டுகளும் உடன் சென்று மயங்கும் என்பது கருத்து. மணித்திரளாற் செய்யப்பட்ட அம்மனை நின் குழலிசைக்கு உருகித் துளிசிந்தவும், பவளத்தாற் செய்யப்பட்ட அம்மனை நின் விரலின் செந்நிறத்தைக் கவர்வதற்காகப் போவதும் வருவதுமாகத் திரியவும் ஆடுக என்க. மிழற்றல் - பேசுதல். மயங்கியிட, சிந்தியிட. மீள்வதுமாய்த் திரிய ஆடியருள் எனக் கூட்டுக. உயிர் ஓவியம்: உவமையாகு பெயர்; அது விளியாய் நின்றது.* (௭௧)

**விளரியி முற்றளி குமிறகு ழற்கொடி**
**வீசிய அம்மனைபோய்**
**விண்ணில் நிரைத்தெழு வதுககனந்திரு**
**மேனிய தானவருக்**
**கிளநில வுமிழ்பரு முத்தின் சோவை**
**எடுத்தவர் திருமார்புக்**
**கிடுவே கடுப்பவும் அப்பரி சேபல்**
**மணியின் இயற்றியிடும்**

**வளரொளி விம்மிய அம்மனை செல்வது**
**வானவில் ஒத்திடவும்**
**மனனெக் குருகப் பரமா னந்தம்**
**மடுத்த திருத்தொண்டர்க்**
**களிகனி யத்திரு அருள்கனி யுங்கனி**
**ஆடுக அம்மனையே**
**அழகு தழைந்தகல் யாண சவுந்தரி**
**ஆடுக அம்மனையே.**

(சொ - ள்.) விளரி மிழற்று அளி குமிறு குழற்கொடி - விளரிப் பண்ணைப் பாடுகின்ற வண்டுகள் முழங்குகின்ற கூந்தலையுடைய கொடி போன்றவளே!, வீசிய அம்மனை போய் விண்ணில் நிரைத்து எழுவது - நீ வீசிய அம்மனை விசும்பில் வரிசையாக அமைந்து எழுதல், ககனம் திருமேனியது ஆனவருக்கு - விசும்பையே திருமேனியாகவுடைய சிவபெருமானுக்கு, இள நிலவு உமிழ்தரு முத்தின் கோவை எடுத்து அவர் திருமார்புக்கு இடுவ கடுப்பவும் - இள நில வொளியைச் செய்கின்ற முத்துக்கோவையை எடுத்து அவர் அழகிய மார்பினுக்கு அணிவதை ஒப்பவும், அப்பரிசே பல மணியின் இயற்றியிடும் வளர்ஒளி விம்மிய அம்மனை செல்வது வானவில் ஒத்திடவும் - அவ்விதமே பலவகை நிறமுள்ள மணிகளால் இயற்றிய ஒளி பெருகிய அம்மனை மேல் எழுவது இந்திரவில்லை நிகர்க்கவும், மனன் நெக்கு உருகப் பரமானந்தம் மடுத்த திருத்தொண்டர்க்கு -மனம் நெகிழ்ந்து உருகும்படி பேரின்பத்தைப் பருகிய சிறந்த அடியார்கட்கு, அளிகனியத் திரு அருள் கனியுங் கனி! ஆடுக அம்மனையே - அன்பு முதிரத் திருவருள் கனியும்படி செய்கின்ற கனியே! ஆடுக அம்மனை, அழகு தழைந்த கல்யாண சவுந்தரி! ஆடுக அம்மனை-;

(வி - ரை.) *விளரி மிழற்று அளி-விளரியாகிய பண்ணைப் பாடுகின்ற வண்டு முத்தாற் செய்த அம்மனைக் காய்கள் தொடர்ந்து போதல் சிவபெருமானது மார்பிற் பிராட்டியார் சாத்தக்கொண்ட முத்துவடம் போன்றிருந்தது. அப்பரிசே - அவ்வாறே. வான வில்லிற்பல் வேறு நிறங்கள் உள்ளனவாதலின் அது பலநிறமணிகளாற் செய்யப்பட்ட அம்மனை போலத் தோன்றியது.* (அ0)

கைம்மல ரிற்போலி கதிர்முத் தம்மனை
நகைமுத் தொளிதோயக்
கண்டவர் நிற்கப் பிறர்சிலர் செங்கைக்
கமலச் சுடர்கதுவச்
செம்மணி யிற்செய் திழைத்தன எனவும்
சிற்சிலர் கட்கடையின்
செவ்வியை வவ்விய பின்கரு மணியிற்
செய்தன கொல்லெனவும்
தம்மனம் ஒப்ப உரைப்பன மற்றைச்
சமயத் தமைவுபெறார்
தத்தமில் நின்று பிதற்றுவ பொருவத்
தனிமுதல் யாமென்பார்க்
கம்மனை யாயவர் தம்மனை ஆனவள்
ஆடுக அம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக அம்மனையே.

(சொ - ள்.) கைம்மலரிற் பொலி கதிர்முத்து அம்மனை - நின் கையாகிய மலரில் விளங்கும் ஒளிபொருந்திய முத்தாற் செய்யப்பட்ட அம்மானை, நகை முத்து ஒளி தோயக் கண்டவர் நிற்க - பல்லாகிய முத்தின் ஒளியிற் படியக் கண்டவர்கள் பலர் ஒன்றும் பேசாது நிற்க, பிறர் சிலர் செங்கைக் கமலச் சுடர் கதுவச் செம்மணியிற் செய்து இழைத்தன எனவும் - அவருட் சிலர் செம்மையான கையாகிய தாமரையின் ஒளியைக் கைக் கொள்வதால் செம்மாணிக்கத்தாற் செய்து இழைக்கப்பட்டன எனவும், சிற்சிலர் கண் கடையின் செவ்வியை வவ்வியபின் கருமணியிற் செய்தன கொல் எனவும்-சிலர் சிலர் கண்ணின் அழகைப் பற்றிய பின் பார்த்தவர் கருமணியாற் செய்யப் பட்டன எனவும், தம் மனம் ஒப்ப உரைப்பன - தத்தம் மனத் திற்கு ஒப்பும்படி பேசுஞ் சொற்கள், மற்றைச் சமயத்து அமைவு பெறார் தத்தமில் நின்று பிதற்றுவ பொருவ - பிற சமயத்தில் நின்று மனவமைதி பொருந்தாதவர் தத்தம் வழியில்

மயங்கிப் பேசுஞ் சொற்களை ஒப்பவும், தனி முதல் யாம் என்பார்க்கு - தாங்களே முதற்பொருள் என்று சொல்கின்ற தேவர்கட்கு எல்லாம், அம்மனை ஆயவர் தம் மனையானவள் - தாயாகிய சொக்கநாதருக்கு மனைவியானவளே, ஆடுக அம்மனை-, அழகு தழைந்த கல்யாண சவுந்தரி! ஆடுக அம்மனை-;

(வி - ரை.) கைம்மலரிற் பொலி கதிர் முத்து அம்மனை - கையாகிய தாமரை மலரில் விளங்குகிற ஒளியுள்ள முத்தாற் செய்யப்பட்ட அம்மனை. நகைமுத்து-பல்லாகிய முத்து. தம்மனம் ஒப்ப உரைப்பன - தம் மனத்திற் றோன்றியவாறு சொல்லுவன. தம்+அனையானவள் எனவும் பொருள் கொள்ளலாம். "சிவன் சத்தி தன்னையீன்றும், சத்திதான் சிவத்தை யீன்றும், உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்" என்பது சிவஞான சித்தியார். (அக)

ஒள்ளொளி மரகத மும்முழுநீலமும்
ஒண்தர ளத்திரளும்
ஒழுகொளி பொங்க இழைத்திடும் அம்மனை
ஒருமூன் றடைவிலெடாக்
கள்ளவிழ் கோதை விசும்புற வீசுவ
கண்ணுதல் பாற்செலநின்
கையில் வளர்த்த பசுங்கிளி யும்வளர்
காமர் கருங்குயிலும்
பிள்ளைவெ ளோதிம மும்முறை முறையாற்
பெருகிய காதலைமேற்
பேச விடுப்ப கடுப்ப அணைத்தொரு
பேடையொ டரசனம்
அள்ளல் வயல்துயில் மதுரைத் துரைமகள்
ஆடுக அம்மனையே
அழகு தழைந்தகல் யாண சவுந்தரி
ஆடுக அம்மனையே.

(சொ - ள்.) ஒள் ஒளி மரகதமும் முழு நீலமும் ஒண் தரளத்திரளும் - சிறந்த ஒளியையுடைய மரகதத்தினாலும் முழு

நீலமணியாலும் ஒள்ளிய முத்துக் கூட்டத்தினலும், ஒழுகு ஒளி பொங்க இழைத்திடும் அம்மனை ஒரு மூன்று அடைவில் எடா - ஒளி பெருகச் செய்யப்படும் அம்மனை மூன்று முறையே எடுத்து, கள் அவிழ் கோதை விசும்பு உற வீசுவ - தேன் சொரி கின்ற கூந்தலை யுடையவள் விண்ணிடம் பொருந்த வீசுவன, கண்நுதல் பாற்செல - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானிடம் தூது சென்று, நின் கையில் வளர்த்த பசுங்கிளியும் வளர் காமர் கருங்குயிலும் பிள்ளை வெள் ஓதிமமும் - உனது கையில் வைத்து வளர்க்கப்பட்ட பச்சைக்கிளியையும் உன்பால் வளர்ந்த அழகிய கரிய குயிலையும் வெண்ணிறமுள்ள இளமையான அன்னப் பறவையையும், முறை முறையால் பெருகிய காதலை மேல் பேச விடுப்ப கடுப்ப - முறைப்படியே மிகுந்துள்ள ஆசையை மேலே போய்ப் பேசி வரவிட்டிருப்பதைப் போலத் தோன்ற, அணைத்து ஒரு பெடையோடு அரச அனம் அள்ளல் வயல் துயில் மதுரைத் துரைமகள் - அரச அன்னமானது தன் பெண் அன்னத்தை அணைத்துக் கொண்டு சேற்றுவயலில் தூங்குதற்கிடமான மதுரையில் எழுந்தருளியுள்ள துரைப் பெண்ணே; ஆடுக அம்மனை-; அழகு தழைந்த கல்யாண சவுந்தரி! ஆடுக அம்மனை-;

(வி - ம்.) ஒள் ஒளி - மிகுந்த ஒளி. ஓதிமம் - அன்னம். இழைத்தல் - செய்தல். அடைவு - முறை. அள்ளல் - சேறு. மரகதத்தாற் செய்த அம்மனை ஒன்றும், நீலத்தாற் செய்த அம்மனை ஒன்றும், முத்தினுற் செய்த அம்மனை ஒன்றுமாக மூன்று அம்மனைகள். இம் மூன்றினையும் முறையாக ஒன்றன்பின் ஒன்ருக விசும்பின்மேற் செல்ல வீசுதல் பிராட்டியார் தாம் வளர்த்த கிளியையும், குயிலையும், அன்னத்தையும் சிவபிரானிடம் சென்று தாம் கொண்ட காதலை அறிவிக்குமாறு தூதுவிடுத்தது போலத் தோன்றும் என்க. எடா - எடுத்து: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். கடுப்ப ஆக என்று முடிவு செய்க. (அஉ).

## க. நீராடற் பருவம்

வளையாடு வண்கைப் பொலன்சங் கொடும்பொங்கு
மறிதிரைச் சங்கோலிட
மதரரிக் கட்கயல் வரிக்கய லொடும்புரள
மகரந்தம் உண்டுவண்டின்
கிளையாடு நின்திருக் கேசபா ரத்திெனாடு
கிளர்சைவ லக்கொத்தெழக்
கிடையாத புதுவிருந் தெதிர்கொண்டு தத்தமிற்
கேளிர்கள் தழீஇக்கொண்டெனத்
தளையாடு கறையடிச் சிறுகட் பெருங்கைத்
தடங்களி றெடுத்துமற்றத்
தவளக் களிற்றிெனாடு முட்டவிட் டெட்டுமத
தந்தியும் பந்தடித்து
விளையாடும் வைகைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு *கயற்கொடி கொடுத்தகொடி*
வெள்ளநீ ராடியருளே.

(சொ - ள்.) வளையாடு வண்கைப் பொலன் சங்கு ஒடும் பொங்கு மறிதிரைச் சங்கு ஒலிட - வளைவு பொருந்திய வளவிய கையில் அணிந்துள்ள சங்கு வளையலுடன் பெருகுகின்ற மடங்கி எறிகின்ற அலைகடலிலுள்ள சங்குகள் முழக்கம் செய்யவும், மதர் அரிக்கண்கயல் வரிக்கயலொடும் புரள - மதர்த்த வரிபரந்த கண்ணாகிய கயல்மீன் கீற்றுகளையுடைய கயல்மீனொடு புரளவும், மகரந்தம் உண்டு வண்டின் கிளையாடு நின் திருக்கேச பாரத்திெனாடு கிளர்சைவலக் கொத்து எழ - பூந்தாதினையுண்டு வண்டின் இனம் இயல்கின்ற நினது கூந்தற் பாரத்தினுடன் விளங்குதலையுடைய பாசிக்கூட்டம் எழவும், கிடையாத புதுவிருந்து எதிர்கொண்டு தத்தம் இல் கேளிர்கள் தழீஇக் கொண்டென-கிடைக்கப்பெறாத புதிய விருந்தை எதிர் கொண்டழைத்துத் தங்கள் தங்கள் வீட்டில் உறவினர்கள் தழுவிக்கொண்டதுபோல, தளை ஆடு கறை அடிச் சிறுகண் பெருங்கைத் தடங்களிறு எடுத்து மற்று அத்தவளக் களிற்றி

ளுெடு முட்டவிட்டு - விலங்கு பொருந்திய உரல் போன்ற கால்களையும் சிறிய கண்களையும் பெரிய கையையும் உடைய பெரிய யானைகளை வேருன வெள்ளை யானையுடன் முட்டும்படி செய்து, எட்டு மத தந்தியும் பந்து அடித்து - எட்டுத் திக்குகளில் உள்ள யானைகளையும் பந்துபோல் வீசி எறிந்து, விளையாடு வைகைத் தடந்துறை குடைந்து புது வெள்ளநீர் ஆடியருளே - விளையாடுகின்ற வைகையாகிய பெரிய நீர்த்துறையில் திளைத்துப் புதிய வெள்ளநீரில் முழுகியருள், விடைக் கொடியவர்க்கு ஒரு கயற் கொடி கொடுத்த கொடி! - இடபத்தைக் கொடிகளில் அமைத்திருக்கின்ற சிவபெருமானுக்கு ஒப்பற்ற மீன் கொடியை உயர்த்தும்படி யுதவிய கொடி போல்பவளே!, வெள்ள நீர் ஆடி அருள் - வெள்ளத்தில் நீராடியருள்க.

(வி - ரை.) வண்கை - வளப்பமுள்ள கை. மதர் அரிக் கண் கயல் - மதர்த்த வரி பொருந்திய கண்ணுகிய கயல்மீன்கள். கேசபாரம் - கூந்தலின் தொகுதி. சைவலம் - நீர்ப்பாசி. கேளிர் - உறவினர். தழீஇ: சொல்லிசை யளபெடை. தளையாடுதல்-தளை செய்தல். கறை - உரல். தவளக்களிறு - ஐராவதம். வைகைநீர் பெருகி மேலுயர்ந்து யானைகளை யீர்த்து - வானத்திலுள்ள ஐராவதத்தை முட்டும்படி செய்தது. வானத்திற்கு மேலுயர்ந்து வெள்ளம் வந்தது என்பது கருத்து. சிவபிரான் தடாதகைப் பிராட்டியாரை மணந்தபின் பாண்டிய நாட்டை அரசு செய்யுங்காலத்து அவ்வரசுக்குரிய கயற்கொடி எடுத்தார் என்க. சங்கு வளையலொடு சங்கும், கட்கயலொடு கயலும், கேச பாரத்தோடு சைவலக் கொத்தும் இனமாகத் தழுவினது புது விருந்து எதிர் கொண்டது போல் இருந்தது என்பது கருத்து (அக)

நிரைபொங் கிடுஞ்செங்கை வெள்வளை கலிப்பநகை
நிலவுவிரி பவளம்வெளிற
நீலக் கருங்குவளை செங்குவளை பூப்பவறல்
நெறிகுழற் கற்றைசரியத்
திரைபொங்கு தண்ணந் துறைக்குடைந் தாடுவ
செழுந்தரங் கக்கங்கைநுண்
சிறுதிவலை யாப்போங்கும் ஆனந்த மாக்கடல்
திளைத்தாடு கின்றதேய்ப்பக்

**கரைபொங்கு மறிதிரைக் கையால் தடம்பணைக்**
**கழனியிற் கன்னியர் முலைக்**
**களபக் குழம்பைக் கரைத்துவிட் டள்ளற்**
**கருஞ்சேறு செஞ்சேறதாய்**
**விரைபொங் கிடத்துங்க வேகவதி பொங்குபுது**
**வெள்ளநீ ராடியருளே**
**விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி**
**வெள்ளநீ ராடியருளே.**

(சொ - ள்.) *நிரை பொங்கிடும் செங்கை வெள்வளை கலிப்ப நகை நிலவு விரி பவளம் வெளிற* - வரிசையாக மிகுந்துள்ள சிவந்த கையில் அணிந்துள்ள வெண்சங்கு வளையல்கள் ஒலிக்கவும் பல்லின் ஒளியைப் பரப்புகின்ற பவளம் போன்ற உதடு வெளுக்கவும், *நீலக் கருங்குவளை செங்குவளை பூப்ப* - நீல நிறமுள்ள கரிய குவளை மலர் போன்ற கண்கள் செந்நிறக் குவளை மலர்போலத் தோன்றவும், *அறல் நெறி குழற்கற்றை சரிய* - கருமணல் போன்ற ஒழுங்குள்ள கூந்தல் சரிந்து விழவும், *திரைபொங்கு தண் அம்துறைக் குடைந்து ஆடுவ* - அலை பெருகிவரும் குளிர்ந்த நீர்த்துறையில் முழுகி நீராடுங் காட்சியானது, *செழும் தரங்கக் கங்கைநுண் சிறு திவலையாப் பொங்கும் ஆனந்த மாக்கடல் திளைத்து ஆடுகின்றது ஏய்ப்ப* - பெருகிய கங்கையானது சிறிய துளியாகத் தங்கியிருக்கும் ஆனந்தப் பெருங் கடலாகிய சிவபெருமானோடு கலந்து விளையாடுவதை ஒப்ப, *கரைபொங்கு மறிதிரைக் கையால்* - கரையில் பெருகி மடங்கி எறிகின்ற அலையாகிய கையால், *தடம்பணைக் கழனியில் கன்னியர் முலைக்களபக் குழம்பைக் கரைத்துவிட்டு* - பெரிய மருத நிலமாகிய வயலில் (பணியாற்றுகின்ற) இளம் பெண்களின் கொங்கையில் அணிந்துள்ள சந்தனக் குழம்பைக் கரைத்துவிட்டு, *அள்ளல் கரும் சேறு செஞ்சேறதாய் விரை பொங்கிட* - குழைந்த கரிய சேறு சிவந்த சேறுகும் வண்ணம் செய்து மணம் மிகும்படி செய்ய, *துங்க வேகவதி பொங்கு புது வெள்ள நீர் ஆடி அருள்* - உயர்ந்த வையையாயற்றில் பெருகி வரும்

புதிய வெள்ள நீரில் மூழ்கி யருள், விடைக்கொடியவர்க்கு ஒரு கயற்கொடி கொடுத்த கொடி! வெள்ள நீராடியருள் ;

(வி - ரை.) *கிரை-வரிசை. கலிப்ப-ஒலிக்க. வெளிற - வெண்ணிறமடைய, பவளம்-பவளம் போன்ற வாய். அறல்-கருமணல். கலிப்ப வெளிறப் பூட்பச் சரிய ஆடுக என்க. திவலை-துளி. திளைத்தல்-முழுகுதல். களபம்-சந்தனச் சாந்து. வேகவதி - வைகைநதி. நீராடுங் காலத்துக் கைவளை யொலித்தலையும், வாய் வெளுத்தலையும், கண்சிவத்தலையும், குழல் சரிதலையும் கூறினர். அம்பிகை வையைத் துறையில் நீராடுதலால் உண்டாய வேறுபாடுகள், சிவபெருமானோடு கலத்தலால் உண்டாகும் வேறுபாட்டை ஒத்தன என்பது குறிப்பால் தோன்றுகின்றது.* (அச)

பண்ணூற கிளிமொழிப் பாவைநின் திருமேனி
பாசொளி விரிப்பவந்தண்
பவளக் கொடிக்காமர் பச்சிளங் கொடியதாய்ப்
பருமுத்த மரகதமதாய்த்
தண்ணூற மல்லல் துறைச்சிறை அனங்களி
தழைக்கும் கலாமஞ்ஞையாய்ச்
சகலமும் நின்றிருச் சொருபமென் றோலிடும்
சதுர்மறைப் பொருள்வெளியிடக்
கண்ணூற குழலியர் குடக்கொங்கை பொங்குசெங்
களபமும் கத்தூரியும்
கப்புரமும் ஒக்கக் கரைத்தோடி வாணியும்
காளிகதி யும்கங்கையாம்
விண்ணூறும் அளவளாய் விளையாடு புதுவைகை
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு *கயற்கொடி கொடுத்தகொடி*
வெள்ளநீ ராடியருளே.

(சொ - ள்.) *பண்நாறு கிளிமொழிப் பாவை நின் திருமேனி பாசொளி விரிப்ப* - பண்ணனது தோன்றுகின்ற கிளிமொழி போன்ற சொல்லையுடைய பாவை போல்வாய், உனது அழகிய உடம்பு பச்சை நிறத்தைப் பரப்புதலால்!

அம் தண் பவளம் கொடிக்காமர் பச்சிளங் கொடியதாய் பரு முத்தம் மரகதம் அது ஆய் - அழகிய குளிர்ந்த பவளக்கொடியின் அழகு பச்சை இளங்கொடியின் தோற்றமாக மாறவும் பருமையான முத்துக்கள் மரகத மணியாகத் தோன்றவும், தண்நாறு மல்லல் துறைச்சிறை அனம்களி தழைக்கும் கலா மஞ்ஞையாய் - குளிர்ச்சி தோன்றும் வளப்பமுடைய துறைகளில் தங்கும் சிறகுகளையுடைய அன்னப் பறவைகள் களிப்பு மிகும் தோகையையுடைய மயிலாக மாறவும், சகலமும் நின் திரு சொரூபம் என்று ஒலிடும் சதுர்மறைப் பொருள் வெளியிட- எல்லாப் பொருள்களும் உனது அழகிய வடிவம்தான் என்று முழங்குகின்ற நான்மறைப் பொருளை உண்மை என்று வெளிப்படுத்தும்படி, கள் நாறு குழலியர் குடக்கொங்கை பொங்கு - தேன் மணக்கின்ற கூந்தலையுடைய மாதர்களின் தனங்களில் பெருகி ஓடும், செங்களபமும் கத்தூரியும் கப்புரமும் ஒக்கக் கரைத்து ஓடி - செம்மைநிறச் சாந்தும் கரிய கத்தூரிக் குழம்பும் வெள்ளைக் கற்பூரமும் ஒருசேரக் கரைத்து எடுத்து ஓடி, வாணியும் காளிந்தியும் கங்கைஆம் விண் ஆறும் அளவளாய் - சரசுவதியும் யமுனையும் கங்கையாகிய வான்நதியும் கலந்து, விளையாடு புதுவைகை வெள்ள நீர் ஆடி அருள் - விளையாடுவதுபோலத் தோன்றும் வைகையாற்றுப் புதிய வெள்ளத்தில் நீர் ஆடியருள்வாய், விடைக் கொடி யவர்க்கு ஒரு கயற் கொடி கொடுத்த கொடி வெள்ள நீர் ஆடி அருள்-;

(வி - ம்.) பண்நாறுதல்-பண்கள் தோன்றுதல். பாசொளி - பசுமையான ஒளி. மல்லல்-வளமை. களி-களிப்பு. மஞ்ஞை-மயில். சதுர்மறைப் பொருள்-நான்கு மறையின் பயன். உமாதேவியாரின் திருமேனி பசுமை ஒளி பரப்புதலால் பவளக்கொடி பச்சைக் கொடியாகவும், முத்து மரகதமாகவும், அன்னம் மயிலாகவும் தோன்றி எல்லாம் அம்மையாரது சொருபம் என்று வேதம் கூறும் பொருளை வெளியிடுகின்றன என்க. களபம் என்பது சந்தனமும் குங்கும முதலிய மணப்பொருள்களும் கலந்து குழைக்கப்படுவது; செந்நிறமுடையது; ஆதலால் செங்களபம் என்றார். களபம் கத்தூரி கர்ப்பூரம் இவை மூன்றும் கரைந்தோடுதல் நிறத்தால் சோணைநதி யமுனைநதி கங்காநதி மூன்றும் கலத்தல் போன்றிருக்கின்றது என்க. வாணி - சோணைநதி. சோணை - சிவப்பு நிறம்; காளிந்தி - கறுப்பு நிறம். கங்கை வெள்ளை நிறம் எனக் காண்க. குடக்கொங்கை: உவமைத் தொகை. (அ௫)

தூங்குசிறை அறுகால் உறங்குகுழல் நின்றுணைத்
தோழியர்கள் மேற்குங்குமம்
தோயும் பனித்துறைச் சிவிறிவீ சக்குறுந்
துளியெம் மருங்குமோடி
வாங்குமலை வில்லியார் விண்ணுரு நினைத்தவர்
வனைந்திடு திகம்பரஞ்சேவ்
வண்ணமாச் செய்வதச் செவ்வான வண்ணரோடு
மஞ்சள்விளை யாடலேய்ப்பத்
தேங்குமலை அருவிநெடு நீத்தத்து மாசுணத்
திரள்புறஞ் சுற்றியீர்ப்பச்
சினவேழம் ஒன்றொரு சுழிச்சுழலல் மந்தரம்
திரைகடல் மதித்தல்மானும்
வீங்குபுனல் வைகைத் தடந்துறை குடைந்துபுது
வெள்ளநீ ராடியருளே
விடைக்கொடி யவர்க்கொரு கயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீ ராடியருளே.

(சொ - ள்.) தூங்குசிறை அறுகால் உறங்கு குழல் - அசைகின்ற சிறகுகளையுடைய வண்டுகள் உறங்குதற்கிடமான கூந்தலையுடையாய்!, நின்துணைத் தோழியர்கள் மேல் குங்குமம்தோயும் பனித்துறைச் சிவிறி வீச - நினது துணையாகிய தோழியர்கள்மேல் குங்குமத்துடன் கலந்த குளிர்ச்சியுடைய நீரைச் சிவிறியால் வீசுதலால், குறுந்துளி எம்மருங்கும் ஓடி வாங்குமலை வில்லியார் விண் உரு நினைத்து - சிறுதுளிகள் எவ்விடமும் பரந்துபோய் வளைத்த பொன்மலை வில்லுடையவர் ஆகிய சிவபெருமானது ஆகாய வடிவை நினைத்து, அவர் வனைந்திடு திகை அம்பரம் செவ்வண்ணமாசெய்வது - அவர் உடுத்திருக்கும் திசையாகிய உடையை நினைத்து அவ்வுடைகளைச் செந்நிறமாகச் செய்வது, அச் செவ்வான வண்ணரோடு மஞ்சள் விளையாடல் ஏய்ப்ப - அந்தச் செவ்வான மேனியுடைய சிவனுடன் மஞ்சள் நீராட்டு விளையாடுதலை நிகர்க்க, தேங்குமலை அருவி நெடு நீத்தத்து மாசுணத் திரள்புறம் சுற்றி ஈர்ப்ப -

தேங்கி நிற்கின்ற மலையிலுள்ள அருவியின் நீண்ட வெள்ளத்தில் மலைப்பாம்புகள் ஒரு பக்கம் சுற்றி இழுக்கவும், சின வேழம் ஒன்று ஒரு சுழிச் சுழலல் - கோபமுற்ற யானை ஒன்று ஒரு சுழியிற் சுழற்சியில் அகப்பட்டிருப்பது, மந்தரம் திரை கடல் மதித்தல் மானும் - அலைகளையுடைய திருப்பாற்கடலை மந்தர மலையிற் பாம்பு கயிறாகக் கொண்டு கடைதலைப் போலத் தோன்றும், வீங்குபுனல் வைகைத் தடந்துறை குடைந்து புது வெள்ள நீர் ஆடி அருள்-மிகுந்த நீரையுடைய வைகையாற்றின் பெரிய துறையிற் குளித்துத் திளைத்துப் புதிய வெள்ளநீர் ஆடி அருள், விடைக்கொடியவர்க்கு ஒரு கயற்கொடி கொடுத்த கொடி வெள்ள நீர் ஆடி அருள்-;

(வி - ம்.) தூங்குதல்-அசைதல். சிறை-சிறகு. அறுகால் - வண்டு; அன்மொழித்தொகை. குங்குமம் தோயும் பனித்த உறை-குங்குமத்தோடு கலந்த குளிர்ந்த திவலை. சிவிறி - நீர் தூவும் துருத்தி. வாங்குதல்-வளைத்தல். விண் உரு - வானமாகிய வடிவம். திகைஅம்பரம் - திக்காகிய ஆடை. நீத்தம் - வெள்ளம்; நீந்தப் படுவது நீத்தம். ஒரு சுழியிலே யானை ஒன்று அகப்பட்டுச் சுழல அதன் புறத்தே மாசுணத்திரள் சுற்றி ஈர்க்கின்றது என்க. மதித்தல்-மத்தித்தல், கடைதல். வீங்குநீர் - மிக்கநீர். மானும்-போலும். செய்வது, மஞ்சள் விளையாடலேய்ப்ப நீராடியருள் எனக் கூட்டுக. (௮௧)

துளிக்கும் பனித்திவலை சிதறக் குடைந்தாடு
துறையில் துறைத்தமிழோடே
தொன்மறை தெளிக்குங் கலைக்கோடி யேனுந்துணைத்
தோழிமூழ் கிப்புனல்மடுத்
தொளிக்கும் பதத்துமற் றவளென அனப்பேடை
ஒடிப் பிடிப்பதம்மை
ஒண்டரி புரத்தொனியும் மடநடையும் வெளவின
துணர்ந்துபின் தொடர்வதேய்ப்ப
நெளிக்கும் தரங்கத் தடங்கங்கை யுடனோட்டி
நித்திலப் பந்தாடவும்
நிரைமணித் திரள்ன் கழங்காட வுந்தன்
நெடுந்திரைக் கையெடுத்து

**விளிக்கும் பெருந்தண் துறைக்கடவுள் வைகைநெடு**
**வெள்ளநீ ராடியருளே**
**விடைக்கோடி யவர்க்கொரு கயற்கோடி கொடுத்தகோடி**
**வெள்ளநீ ராடியருளே.**

(சொ - ள்.) துளிக்கும் பனித்திவலை சிதறக்குடைந்து ஆடுதுறையில் - சிந்துகின்ற குளிர்ந்த நீர்த்துளிகள் தெறிக்க முழுகி விளையாடுகின்ற துறையில், துறைத் தமிழொடும் தொல் மறை தெளிக்கும் கலைக்கொடி எனும் துணைத்தோழி மூழ்கி - பல துறைகளையுடைய தமிழுடன் பழைமையான வேதங்களை யும் தெளிவுறுத்தும் கலைமகள் என்கின்ற துணைவியான தோழி குளித்து, புனல் மடுத்து ஒளிக்கும் பதத்து மற்றவள் என அனப்பேடை ஓடிப் பிடிப்பது - நீருள் பாய்ந்து மறைகின்ற காலத்தில் அக் கலைமகள் என்று நினைத்து நீ பெண் அன் னத்தை ஓடிப்பிடிப்பது, அம்மை ஒண் பரிபுரத் தொனியும் மடநடையும் வௌவினது உணர்ந்து பின் தொடர்வது ஏய்ப்ப தாயே! - நின் ஒள்ளிய சிலம்பின் ஒலியும் மடநடையும் கவர்ந்து கொண்டது என்று அதனைப் பிடிக்கப் பின் தொடர்வது போலத் தோன்ற, நெளிக்கும் தரங்கத் தடங்கங்கையுடன் ஒட்டி நித்திலப்பந்து ஆடவும் - வளைந்து வருகின்ற பெரிய அலைகளையுடைய கங்கையுடன் பந்தயங் கூறி முத்துப் பந்து ஆடவும், நிரைமணித்திரளின் கழங்கு ஆடவும் - வரிசையான இரத்தினக் கூட்டத்தால் அமைந்த கழற் சிக்காய் ஆடவும், தன் நெடும் திரைக்கை எடுத்து விளிக்கும் - தனது நெடிய அலையாகிய கையை உயர்த்தி அழைக்கின்ற, பெருந்தண் துறைக்கடவுள் வைகைநெடு வெள்ளநீர் ஆடிஅருள் - பெரிய குளிர்ந்த துறைகளையுடைய தெய்வத்தன்மை வாய்ந்த வைகை யாற்றின் வெள்ள நீராடியருள், விடைக்கொடியவர்க்கு ஒரு கயற் கொடி கொடுத்த கொடி! வெள்ள நீர் ஆடியருள்-;

(வி - ம்.) குடைந்து ஆடு - முழுகி நீராடுகின்ற. பதத்து - வேளையில். கலைமகள் நீருள் மூழ்கி ஒளிக்குஞ் சமயத்தில் மீனாட்சி யம்மையார் அவள் என்று கருதி ஓர் அன்னப்பேடையை ஓடிப் பிடிப்பது தமது சிலம்பின் ஓசையையும் தமது மட நடையையும் அது கவர்ந்தமை தெரிந்து பின்தொடர்ந்து பிடிப்பது போலத்

தோன்ற என்க. பரிபுரம் - நூபுரம், சிலம்பு. நெளிதல்-வளைந்து புரளுதல். கழங்கு - ஒருவகை ஆடல்: கழற்சிக்காய் ஆட்டம். வைகை தன் அலைகளாகிய கைகளால் முத்துக்களையும் மணிகளையும் எடுத்து எறிவது, பந்து கழங்கு விளையாடவா என்று கங்கையை அழைப்பது போலத் தோன்றும் என்க. (அஎ)

(வேறு)

துங்க முலைப்பொற் குடங்கொண்டு
தூநீர் நீந்தி விளையாடும்
துணைச்சே டியர்கள் மேற்பசும்பொற்
சுண்ணம் எறிய அறச்சேந்த
அங்கண் விசும்பில் நின்குழற்காட்
டறுகாற் சுரும்பர் எழுந்தார்ப்ப
வையன் திருமே னியிலம்மை
அருட்கட் சுரும்பார்த் தெழல்மானச்
செங்கண் இளைஞர் களிக்காமத்
தீமூண் டிடக்கண் டிளமகளிர்
செழுமென் குழற்கூட் டகிற்புகையால்
திரள்காய்க் கதலி பழுத்துகறை
பொங்கு மதுரைப் பெருமாட்டி
புதுநீ ராடி யருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி யருளுகவே.

(சொ - ள்.) துங்கமுலைப் பொற்குடம் கொண்டு தூநீர் நீந்தி விளையாடும் - உயர்ந்த முலைகளாகிய தங்கக் குடம் கொண்டு தூயநீரில் நீச்சலடித்து விளையாடுகின்ற, துணைச் சேடியர்கள்மேல் பசும்பொற் சுண்ணம் எறிய-நின் துணையான தோழியர்கள் மேலே பசிய பொன்னின் பொடியைத் தூவ, அறச்சேந்த அம்கண் விசும்பில் - (அதனால்) முழுதும் சிவந்த அழகிய இடமுடைய ஆகாயத்தில், நின் குழற்காட்டு அறுகாற் சுரும்பர் எழுந்து ஆர்ப்பது - நின் கூந்தற் காட்டில் மொய்க்கின்ற ஆறுகால்களையுடைய வண்டுகள் எழுந்து ஒலிப்பது,

ஐயன் திருமேனியில் அம்மை அருட்கண் சுரும்பு ஆர்த்து எழல் மான - சிவபெருமானது அழகிய உடம்பில் அம்மையே நின் அருளையுடைய கண்ணாகிய வண்டு முழங்கி எழுதலை ஒப்ப, செங்கண் இளைஞர் களிக் காமத்தீ மூண்டிடக் கண்டு - சிவந்த கண்களையுடைய இளைஞருக்குக் களிப்பைத் தருகின்ற காமநெருப்பு மூளக்கண்டு, இளமகளிர் செழுமென் குழற்கு ஊட்டு அகிற்புகையால் - இளம் பெண்கள் தங்கள் செழித்த மெல்லிய கூந்தல் உலர்வதற்காகக் காட்டுகின்ற அகிற்கட்டைப் புகையினால், திரள்காய்க் கதலி பழுத்து நறை பொங்கு மதுரைப் பெருமாட்டி! திரட்சியுடைய கதலி வாழைக்காய்கள் முதிர்ந்து தேன் பெருகுதற்கிடமான மதுரைத் தலைவியே!, புது நீர் ஆடி அருளுக-, பொருநைத்துறைவன் பொற்பாவாய் !- தாம்பிரபரணியாற்றுத் தலைவனான பாண்டியனுடைய புதல்வி யாகிய பொற்பாவை போன்றவளே, புதுநீர் ஆடி அருளுக-;

*(வி - ரை.) துங்கம் - உயர்வு. இளம் பெண்கள் குடங் கொண்டு நீந்தி விளையாடும் வழக்கம் கண்டு இவ்வாறு கூறி னார். அற - மிகவும். சேந்த - சிவந்த. வண்டுகள் சுண்ணத்தின் மணங் கருதி விசும்பில் எழுந்தன என்க. இளைஞர்க்குக் காமத் தீ மூட்டுவதற்குக் குழற்கு அகிற் புகையூட்டுவர் மகளிர் என்பது கருத்து. புகையூட்டிக் கதலிக் காய்களைப் பழுக்கச் செய்தல் வழக் காதலின் "அகிற் புகையால் திரள்காய்க் கதலிபழுத்து" என்றார். பொருநை - தாம்பிரபரணி. பாண்டிய நாட்டு நதியாதலின். பாண்டியனைப் பொருநைத் துறைவன் என்றார்.* (அஅ)

இழியும் புனல்தண் துறைமுன்றில்
இதுவெம் பெருமான் மண்சுமந்த
இடமென் றலர்வெண் கமலப்பெண்
இசைப்பக் கசிந்துள் ளுருகியிரு
விழியும் சிவப்ப ஆனந்த
வெள்ளம் பொழிந்து நின்றனையால்
மீண்டும் பெருக விடுத்தவற்கோர்
வேலை இதேல் மிகையன்றே

பிழியும் நறைக்கற் பகமலர்ந்த
பிரச மலர்ப்பூந் துகள்மூழ்கும்
பிறைக்கோட் டயிரா வதங்கூந்தற்
பிடியோ டாடத் தேனருவி
பொழியும் பொழிற்கூ டலிற்பொலிவாய்
புதுநீ ராடி அருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி அருளுகவே.

(சொ - ள்.) இழியும் புனல் தண் துறை முன்றில் இது எம்பெருமான் மண்சுமந்த இடம் என்று - முழுகுகின்ற நீரை யுடைய குளிர்ந்த துறை முற்றமாகிய இவ்விடம் எம்பெரு மானன சிவபெருமான் (பிட்டுக்கு) மண் சுமந்த இடம் என்ப தாக, அலர் வெண்கமலப் பெண் இசைப்ப - மலர்ந்த வெண் தாமரை மலரில் வீற்றிருப்பவளான கலைமகள் சொல்ல, கசிந்து உள் உருகி இருவிழியும் சிவப்ப - மனம் கரைந்து உருகி இரண்டு கண்களும் சிவப்படைய, ஆனந்த வெள்ளம் பொழிந்து நின்றனை இன்பவெள்ளத்தைப் பெருக்கி நின்றாய், மீண்டும் பெருகவிடுத்து அவற்கு ஓர் வேலை இடுதல் மிகை அன்றே - திரும்பவும் வெள்ளம் பெருகவிட்டு அப் பெரு மானுக்கு வேலை யேற்படும்படி செய்தல் குற்றம் அல்லவோ, பிழியும் நறைக்கற்பகம் அலர்ந்த பிரச மலர்ப் பூந்துகள் மூழ்கும் - வெளிப்படுகின்ற மணத்தையுடைய கற்பக மரத்தில் மலர்ந்த தேனையுடைய பூவிலுள்ள மெல்லிய மகரந்தத்தில் மூழ்குகின்ற, பிறைக் கோட்டு அயிராவதம் கூந்தற் பிடியோடு ஆட - இளஞ்சந்திரன்போல் வளைந்த கொம்புகளையுடைய ஐராவதயானை தன் கூந்தலையுடைய பெண்யானையுடன் நீராடும்படி, தேன் அருவி பொழியும் பொழில் கூடலில் பொலிவாய்!-தேனாகிய அருவியைச் சொரிகின்ற சோலைகளை யுடைய நான்மாடக்கூடல் நகரில் சிறந்து விளங்குகின்றவளே!, புது நீர் ஆடி அருளுக-, பொருநைத்துறைவன் பொற்பாவாய்! புது நீர் ஆடி அருளுக-:

(வி - ம்.) இழிதல்-இறங்குதல். முன்றில்-முன்னிடம். நாமக ளானவள் பிராட்டியாரை நோக்கி அம்மே! இவ்விடம் நம்பெரு

மான் மண்சுமந்த இடம் என்று கூறவும் பிராட்டியார் மனங் கசிந்து உருகிக் கண் சிவக்குமாறு ஆனந்த வெள்ளம் பொழிந்து நின்றாள். முன் வைகை வெள்ளம் நின் கணவரை வேலையாளாக வரச்செய்தது. மறுபடியும் கண்ணீர் வெள்ளம் வடித்து விடுத்து அவர்க்கு வேலை கொடுப்பது தகாது என்க. பிரசம் - தேன், துகள் - தூசு. கூந்தல் - யானைக் கழுத்தடி மயிர். வெண்கமலப் பெண்-நாமகள். விழியுஞ் சிவப்ப ஆனந்த வெள்ளம் பொழிந்து நிற்பது சிவபெருமானுக்கு மீண்டும் வேலையைக் கொடுப்பதாக முடியும். ஆதலால் அவ்வாறு நில்லாமல் நீராடுவாய் என்பது கருத்து. (அக)

மறிக்கும் திரைத்தண் புனல்வைகை
வண்டல் இடுமேண் கூடைகட்டி
வாரிச் சுமந்தோர் அம்மைதுணை
மணிப்பொற் குடத்திற் கரைத்தூற்றும்
வெறிக்குங் குமச்சே றெக்கரிடும்
விரைப்பூந் துறைமண் பெறிஞெருத்தி
வெண்பிட் டிடவும் அடித்தொருவன்
வேலை கொளவும் வேண்டுமெனக்
குறிக்கும் இடத்தில் தடந்துநீர்
குடையப் பெறினக் கங்கைதிருக்
கோடீ ரத்துக் குடியிருப்பும்
கூடா போலும் பொலன்குவட்டுப்
பொழிக்கும் சுறவக் கொடியுயர்த்தாய்
புதுநீ ராடி அருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி அருளுகவே.

(சொ - ள்.) மறிக்கும் திரை தண்புனல் வைகை-மடங்கி வரும் அலைகளையுடைய குளிர்ந்த நீரையுடைய வைகை நதியில், வண்டல் இடும் மண்கூடைகட்டி வாரி சுமந்தோர் - எக்கராக இட்டிருந்த மண்ணைக் கூடையில் அள்ளி வைத்து முன்சுமந்தவர் ஆகிய சிவபெருமான், அம்மை துணை மணி பொன் குடத்தில் கரைத்து ஊற்றும் - தாயே! நின் இரண்டாகிய அழகிய பொற்குடம் போன்ற கொங்கைகளிலிருந்து கரைத்து வடிக்கின்ற, வெறிகுங்குமம் சேறு எக்கர் இடும் விரைப் பூந்துறை

மண் பெறின் - மணமுள்ள குங்குமச் சேறு வண்டலாகச் சேர்ந்த மணமுள்ள அழகிய நீர்த்துறையில் மண்ணைக் காணப் பெற்றால், ஒருத்தி வெண்பிட்டு இடவும் ஒருவன் அடித்துவேலை கொளவும் வேண்டும் என - (முன் நிகழ்ந்ததுபோல்) வந்தி யென்னும் ஒரு கிழவி வெள்ளிய பிட்டை அள்ளிக்கொடுக்கவும் பாண்டியன் ஒருவன் அடித்து வேலை வாங்கவும் வேண்டும் என்று சொல்லும்படி, குறிக்கும் இடத்தில் தடம்தூநீர் குடையப்பெறின் - நாங்கள் குறித்த இடத்தில் நீ பெரிய தூய நீராடப் பெற்றால், அ கங்கை திரு கோடீரத்துக் குடியிருப்பும் கூடாபோலும் - அந்தக் கங்கை சிறந்த சிவபெருமான் சடையிற் குடியிருப்பதும் நீங்கிவிடும் போலும், பொலன் குவட்டு பொறிக்கும் சுறவம் கொடி உயர்த்தாய் - இமயமலையில் எழுதிய மீனக் கொடியை உயர்த்திய பெண்ணரசியே! புதுநீர் ஆடி யருளுக-, பொருநைத்துறைவன் பொற்பாவாய்! புது நீராடி அருளுக-;

*(வி - ரை.) மறித்தல் - மடங்குதல். வண்டல் இடும் மண் - மேடாகக் கொண்டு வந்துபோட்ட மண். வெறி-மணம், கோடீரம்- சடை. நாங்கள் குறித்த இடத்தில் நீ நீராடினால் உன் கொங் கைக் குங்குமச் சேற்றொடுகூடிய எக்கர்மண்ணைச் சுமப்பதற்குச் சிவபெருமான் விரும்பி வைகையைப் பெருக்கி மீண்டும் வருவார். அவ்வாறு அடுத்தடுத்து நிகழ்ந்தால் உன் மாற்றாளாகிய கங்கைக் கும் அவர் சடையிற் குடியிருப்பும் நீங்கிவிடும். உன்னிடத்திற்குச் சிவபெருமான் வருவதற்கு இது நல்ல சூழ்ச்சி என்று கூறி நீரா டும்படி ஊக்கமூட்டினர் என்பது கருத்து. பொலன் குவட்டுப் பொறிக்கும் சுறவக்கொடி என்பது, பாண்டியர்கள் திக்கு முழு வதும் வென்று இமயமலையிற் கயற்கொடி பொறித்தனர். அத் தகைய சிறப்புடைய கயற்கொடி எனக் கொடியின் சிறப்புக் கூறியது.* (௯0)

(வேறு)

**சொற்கோடி யோடு மலர்க்கோடி கோய்து**
**தொடுத்த விரைத்தோடையும்**
**சுந்தரி தீட்டிய சிந்துர மும்மிகு**
**துங்கக் கோங்கைகளின்**

விற்கோடி கோட்டிய குங்கும முங்குடை
வெள்ளங் கொள்ளைகொள
வெளியே கண்டுநின் வடிவழ கையன்
விழிக்கு விருந்துசெய
இற்கோடி யோடு கயற்கோடி வீரன்
எடுத்த கருப்புவிலும்
இந்திர தனுவும் வணங்க வணங்கும்
இணைப்புரு வக்கோடிசேர்
பொற்கோடி இமய மடக்கோடி வைகைப்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையோடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே.

(சொ - ள்.) சொற்கொடியோடு மலர்க்கொடி கொய்து தொடுத்த விரைத்தொடையும் - சொல்மகளான நாமகளும் தாமரை மலர்மகளான இலக்குமியும் பறித்துத் தொடுத்த மண மாலையும், சுந்தரி தீட்டிய சிந்துரமும் இரு துங்கக் கொங்கை களின் விற்கோடி கோட்டிய குங்குமமும் - இந்திராணி தீட்டிய திலகமும் இரண்டு உயர்ந்தகொங்கைகளில் எழுதப்பட்ட வில்லின் வளைவுள்ள கொடிகளை எழுதிய குங்குமக் கோலமும், குடை வெள்ளம் கொள்ளைகொள - நீ மூழ்குகின்ற வெள்ள மானது கொள்ளையடித்துக் கொண்டு போக வெளியே கண்டு நின் வடிவழகு ஐயன் விழிக்கு விருந்து செய - உனது வடி வழகை வெளியாகப் பார்த்தலால் அவ்வழகு சிவபெருமான் கண்களுக்கு விருந்தூட்ட, இற்கொடியோடு கயற்கொடி வீரன் எடுத்த கருப்புவிலும் - மனைவியாகிய இரதியுடன் கயற்கொடி வீரனான மன்மதன் கையில் எடுத்த கரும்பு வில்லும், இந்திர தனுவும் வணங்க வணங்கும் இணைப்புருவக் கொடிசேர் பொற் கொடி!-இந்திர வில்லும் தோற்று வணங்கும்படி வளைந்திருக் கும் புருவங்களின் ஒழுங்கையுடைய பொற்கொடியே!, இமய மடக் கொடி - இமயமலை யரசன் புதல்வியாகிய இளமைப் பூங் கொடியே!, வையைப் புதுநீர் ஆடுக-, பொருநைத்துறையோடு

குமரித் துறையவள் - தாம்பிரபரணி யாற்றுடன் குமரித் துறையையும் உடையவளே !, புதுநீர் ஆடுக-;

(வி - ம்.) சொற்கொடி-கலைமகள். மலர்க்கொடி-திருமகள். சுந்தரி - இந்திராணி. விற்கொடி - வில்வடிவில் மார்பில் தீட்டிய குங்குமம். கண்டு-காணப்பட்டு. கயற்கொடிவீரன் - மீனக்கொடியைத் தன் வெற்றிக் கொடியாக உயர்த்துள்ள மன்மதன். இற்கொடி-அவன் மனையாளாகிய இரதி. இந்திரதனு - வானவில். வணங்க - வளைய இணை - இரண்டு. தடாதகைப் பிராட்டியாரது புருவத்தைக் கண்டு இரதியின் வில்லுடன் மன்மதனது கரும்பு வில்லும் வானவில்லும் நாணி வணங்கும் என்பது. கொடி: உவமையாகு பெயராய் மங்கையரை யுணர்த்தியது. சொற்கொடி-சொல்லுக்குத் தெய்வமாகிய மாது எனவும். மலர்க்கொடி-மலரில் வாழும் மாது எனவும், இற்கொடி-மனைவியாகிய மங்கை எனவும் பொருள் கொள்க. மாலையும் திலகமும் குங்குமக் கோலமும் வடிவழகை மறைத்திருக்கின்றன என்பதும் நீரில் மூழ்கியெழுந்தவுடன் இயற்கையழகு வெளிப்பட்டுத் தோன்றும் என்பதும். அவ்வழகு ஐயன் கண்ணுக்கு விருந்தாகும் என்பதும் விருந்தாகும்படி நீராடுக என்பதும் விளங்கின. (கக)

கொள்ளைவெள் அருவி படிந்திடும் இமயக்
கூந்தல் மடப்பிடிபோல்
கொற்கைத் துறையிற் சிறைவிரி யப்புனல்
குடையும் அனப்பெடைபோல்
தெள்ளமு தக்கடல் நடுவில் தோன்று
செழுங்கம லக்குயில்போல்
தெய்வக் கங்கைத் திரையூ டெழுமொரு
செம்பவ ளக்கொடிபோல்
கள்ளவிழ் கோதையர் குழலிற் குழலிசை
கற்றப் பொற்றருவில்
களிநற வுண்ட மடப்பெடை யோடு
கலந்து முயங்கிவரிப்
புள்ளுறை பூம்பொழில் மதுரைத் துரைமகள்
புதுநீ ராடுகவே
பொருநைத் துறையொடு குமரித் துறையவள்
புதுநீ ராடுகவே.

(சொ - ள்.) கொள்ளை வெள்ளருவி படிந்திடும் இமயக் கூந்தல் மடப்பிடிபோல் - கூட்டமான வெள்ளிய அருவியில்

மூழ்கும் இமயமலையிலுள்ள கூந்தலையுடைய இளம் பெண் யானை போலவும், கொற்கைத்துறையில் சிறைவிரியப் புனல் குடையும் அனப்பெடைபோல் - கொற்கைத் துறைமுகத்தில் இறகுகள் விரியும்படி நீராடுகின்ற பெண் அன்னம் போலவும், தெள் அமுதக் கடல் நடுவில் தோன்று செழுங்கமலக்குயில் போல் - தெளிந்த அமுதத்தை உதவிய திருப்பாற்கடல் நடுவில் தோன்றுகின்ற செந்தாமரையில் இருக்கும் திருமகளைப்போலவும், தெய்வக் கங்கைத்திரை ஊடு எழும் ஒரு செம்பவளக் கொடிபோல் - தெய்வத்தன்மை பொருந்திய கங்கையலையிடை எழுகின்ற ஒரு செம்பவளக் கொடியைப்போலவும், கள் அவிழ் கோதையர் குழலில் குழல் இசை கற்று - தேன் சொரிகின்ற மாலையணிந்த பெண்களின் கூந்தலில் தங்கிக் குழல் இசையைக் கற்று, பொன்தருவில் களிநறவுண்ட மடப்பெடையோடு கலந்து முயங்கி - பின் பொன்னுலகிலுள்ள கற்பக மரத்தில் களிப்பைக் கொடுக்கும் தேனையுண்ட இளம் பெண் வண்டுடன் கலந்து புணர்ந்து, வரிப்புள் உறை பூம்பொழில் மதுரைத் துரை மகள்! - கீற்றுக்களையுடைய வண்டுகள் தங்கியுள்ள பூஞ்சோலைகளையுடைய மதுரைப் பெருமாட்டியே!, புதுநீர் ஆடுக-, பொருநைத் துறையொடு குமரித்துறையவள், புதுநீர் ஆடுக-;

*(வி - ம்.) கொள்ளை-மிகுதி. பிடி போலவும், அன்னப்பெடை போலவும், குயில் போலவும், பவளக்கொடி போலவும் ஆடுக என்று முடிக்க. வரிப்புள்-வரிகளையுடைய வண்டு. கள் - நறவு, தேன். அவிழ்தல் - விரிதல். மதுரைப் பதியிலுள்ள வண்டுகள் மாதர் கூந்தலில் தங்கி அவர்கள் பயிலும் குழலிசையைக் கற்றுப் பாடும் என்றும், சோலை உயர்ந்திருப்பதனால் கற்பகத்தருவிலுள்ள தேனைக் குடித்துக்களிக்கும் என்றும், அங்குள்ள பெண் வண்டுகளோடு கூடிமுயங்கும் என்றும், மதுரையின் சிறப்புக் கூறினர்.* (௧௨)

---

## ௧௦. ஊசற் பருவம்

ஒள்ளொளிய பவளக் கொழுங்கால் மிசைப்பொங்கும்
ஒழுகொளிய வயிரவிட்டத்
தூற்றுஞ் செழுந்தண் நிலாக்கால் விழுந்தனைய
ஒண்தரள வடம்வீக்கியே
அள்ளிட வழிந்துசெற் றொளிதுளும் புங்கிரண
அருணரத் னப்பலகைபுக்
காடுநின் தோற்றமப் பரிதிமண் டலம்வளர்
அரும்பெருஞ் சுடரையேய்ப்பத்
தெள்ளுசுவை அமுதங் கனிந்தவா னந்தத்
திரைக்கடல் மடுத்துழக்கும்
செல்வச் செருக்கர்கள் மனக்கமல நெக்கபூஞ்
சேக்கையிற் பழையபாடற்
புள்ளொலி யெழக்குடி புகுந்தசுந் தரவல்லி
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே.

**(சொ - ள்.)** ஒள் ஒளிய பவளக் கொழுங்கால் மிசை - சிறந்த ஒளியையுடைய பவளத்தாற் செய்த செழித்த காலின் மேல், பொங்கும் ஒழுகு ஒளிய வயிரவிட்டத்து - பொங்குகின்ற ஒழுகும் ஒளியையுடைய வயிரவிட்டத்து, ஊற்றும் செழுந்தண் நிலாக்கால் விழுந்தனைய ஒண்தரள வடம் வீக்கியே - பெருகும் செழித்த குளிர்ந்த நிலாவொளி விழுந்தாற்போன்ற ஒள்ளிய முத்துவடம் கட்டி, அள்ளிட வழிந்து செற்று ஒளி துளும்புங் கிரண அருணரத்னப் பலகைபுக்கு ஆடும் நின்தோற்றம் - அள்ளிக்கொள்ளுமாறு மிக நிறைந்து ஒளி துளும்புகின்ற நிலவையுடைய சிவந்த மாணிக்கப் பலகையிற் புகுந்து ஆடுகின்ற நின்தோற்றம், அப்பரிதி மண்டலம்வளர் அரும்பெருஞ் சுடரை ஏய்ப்ப - அந்தச் சூரிய மண்டலத்தில் வளர்கின்ற அரிய பெரிய ஒளியை ஒக்க, தெள்ளுசுவை அமுதம் கனிந்த ஆனந்தத் திரைக்கடல் மடுத்து உழக்கும்-தெள்ளியெடுத்த

சுவையையுடைய அமுதம் பழுத்த ஆனந்தமான திரையை யுடைய கடலைப் பருகிக் கலக்கும், செல்வச் செருக்கர்கள் மனக் கமல நெக்க பூஞ்சேக்கையில் பழைய பாடல் புள் ஒலிஎழ-செல் வத்தாற் களிப்பு மிகுந்தவர்கள் உள்ளத் தாமரை நெகிழ்ந்த பூம்பள்ளியிற் பழமையான பாடலான வேதப்பறவை முழக்கம் தோன்ற, குடிபுகுந்த சுந்தரவல்லி! பொன் ஊசல் ஆடி அருளே - குடியாகப் புகுந்து வாழ்கின்ற அழகிய கொடியே! பொன்னலாகிய ஊஞ்சலில் ஆடியருள்க, புழுகுநெய்ச் சொக் கர்திரு அழகினுக்கொத்த கொடி - புழுகு நெய்பூசிய சொக்க லிங்கப் பெருமானின் சிறந்த அழகுக்கு ஏற்ற கொடி போன் றவளே, பொன் ஊசல் ஆடி அருள்-;

(வி - ரை.) *கொழு - செழுமை. பொங்குதல்-மிகுதல். செறு தல் - நிறைதல். கனிதல்-முதிர்தல். செருக்கு-களிப்பு. நெகுதல்- இளகுதல். சேக்கை - படுக்கை. பிராட்டியார் பவளக்கால் நிறுத்தி மேலிட்ட வயிரவிட்டத்தில் தொங்கவிடப்பட்ட முத்து வடத்திற்பூட்டின மாணிக்கப் பலகை மீதிருந்து ஊசலாடு கின்றாள் என்க. செல்வச் செருக்கர்கள்-திருவருட் செல்வத்தா லுண்டாகிய செருக்கினையுடைய அடியார்கள். பழைய பாடல்- வேதம் மெய்யடியார்க்குச் செருக்குண்டாதலை 'இறுமாந் திருப்பன் கொலோ, ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டுச், சிறுமா னேந்திதன் சேவடிக்கீழ்ச் சென்றுஅங் கிறுமாந்திருப்பன் கொலோ' என்னும் நாவுக்கரையர் நன்மொழியால் அறிக. (௧௩)*

விற்பொலிய நிலவுபொழி வெண்ணித் திலம்பூண்டு
விழுதுபட மழகதிர்விடும்
வெண்தரள ஊசலின் மிசைப்பொலிவ புண்டரிக
வீட்டிற் பொலிந்துமதுரச்
சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின் றவளுநின்
சொருபமென் பதுமிளநிலாத்
தூற்றுமதி மண்டலத் தமுதமாய் அம்மைநீ
தோன்றுகின் றதும்விரிப்ப
எற்பொலிய ஒழுகுமுழு மாணிக்க மணிமுகப்
பேழ்மழை முகில்தவழ்வதவ்
வெழிசுடர்க் கடவுள்திரு மடியிலவன் மடமகள்
இருந்துவிளை யாடலேய்க்கும்

பொற்புரிசை மதுரா புரிப்பொலி திருப்பாவை
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சோக்கர்திரு அழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே.

(சொ - ள்.) வில் பொலிய நிலவுபொழிவெண் நித்திலம் பூண்டு விழுதுபட மழகதிர்விடும் வெண்தரள ஊசலின்மிசைப் பொலிவ-ஒளிநிறைந்து நிலவைச் சொரிகின்ற வெள்ளை முத்துக்களை யணிந்து விழுதுபடும்படி இளங்கிரணம் வீசுகின்ற வெள்ளைநிற முத்தாற் செய்யப்பட்ட ஊஞ்சலின்மேல் நீ விளங்குவது, புண்டரிக வீட்டில் பொலிந்து மதுரச்சொற் பொலி பழம்பாடல் சொல்லுகின்றவளும் நின்சொரூபம் என்பதும்-தாமரை மலராகிய வீட்டில் நிறைந்து இனிய மொழிகள் நிரம்பிய வேதத்தைச் சொல்லுகின்றவளும் நினது வடிவம் என்று சொல்வதும், இள நிலா தூற்று மதிமண்டலத்து அமுதமாய் அம்மை நீ தோன்றுகின்றதும் விரிப்ப-இள நிலவை வீசுகின்ற சந்திரமண்டலத்தின் அமுத மயமாய் அம்மையே நீ விள்ங்குகின்றதையும் விரித்துக்கூற, எல்பொலிய ஒழுகுமுழு மாணிக்கமணி முகப்பு ஏறி மழைமுகில் தவழ்வது - ஒளி விளங்க ஒழுகுகின்ற முழு மாணிக்க மணியாலாகிய முகப்பில் ஏறி மழையைப் பொழியும் மேகம் தவழ்ந்து செல்வது, அ எறி சுடர்க்கடவுள் திருமடியில் அவன் மடமகள் இருந்து விளையாடல் ஏய்க்கும் - அந்த வீசுகின்ற சுடரையுடைய சூரியதேவன் திருமடியில் அவன் இளமகள் பொருந்தி விளையாடுதலை ஒக்கும், பொற்புரிசை மதுராபுரிப் பொலி திருப்பாவை!-பொன்னாலான மதில்களையுடைய மதுரை நகரில் நிறைந்து விளங்கும் அழகிய பாவையே! பொன் ஊசல் ஆடி அருள் -, புழுகு நெய்ச்சொக்கர் திரு அழகினுக்கு ஒத்த கொடி! பொன்னூசல் ஆடி அருள் -;

*(வி - ம்.) வில் - ஒளி. நிலவு-சந்திரிகை. எல் - ஒளி. எறி சுடர்க்கடவுள்-சூரியன். புரிசை -மதில். அம்மையார் முத்துமாலை யணிந்து முத்து ஊசலின் மீதிருத்தல் நாமகள் தமது சொரூப மென்பதையும், சந்திரமண்டலத்து அமுதமயமாயிருந்துதோன்று*

கின்றூர் என்பதையும் குறிக்கின்றது, என்க. புண்டரீகம்-தாமரை. புரிசையின் மாணிக்க முகப்பில் மேகந்தவழுதல் சூரியன் மடியில் அவன் மகளாகிய யமுனை விளையாடுவது போன்றிருக்கின்றது என்க. யமனும் யமுனையும் சூரியனின் பிள்ளைகள். (கூசு)

உருகிய பசும்பொன் அசும்பவெயில் வீசுபொன்
ஞூசலே உதைந்தாடலும்
ஒண்தளி ரடிச்சுவ டுறப்பெறும் அசோகுநற
வொழுகுமலர் பூத்துதிர்வதுன்
திருமுனுரு வங்கரந் தெந்தையார் நிற்பது
தெரிந்திட நமக்கிதுவெனுச்
செஞ்சிலைக் கள்வனெரு வன்தொடை மடக்காது
தெரிகணைகள் சொரிவ தேய்ப்ப
எரிமணி குயின்றபொற் செய்குன்று மழகதிர்
எறிப்பவெழு செஞ்சோதியூ
டிளமதி யிமைப்பதுன் திருமுகச் செவ்விவேட்
டெழுநாத் தலைத்தவமவன்
புரிவது கடுக்குமது ராபுரி மடக்கிள்ளை
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே.

(சொ - ள்.) உருகிய பசும்பொன் அசும்ப வெயில் வீசு பொன் ஊசலை உதைந்து ஆடலும் - உருகின பசும்பொன் ஒழுகுவது போல ஒளியை எறிகின்ற பொன்னூசலை உதைந்து ஆடுதலும், ஒண்தளிர் அடிச்சுவடு உறப்பெறும் அசோகு நறவு ஒழுகு மலர் பூத்து உதிர்வது - ஒள்ளிய தளிர் போன்ற அடிகளின் தழும்பு பொருந்தப் பெற்ற அசோக மரம் தேன் வடிகின்ற மலர்களைப் பூத்துச் சிந்துவது, உன் திருமுன் உருவம் கரந்து எந்தையார் நிற்பது தெரிந்து - உனது சந்நிதியில் தம் வடிவத்தை மறைத்து எம் தந்தையாரான இறைவர் நிற்கின்றது தெரிந்து, நமக்கு இது இடம் எனு செஞ்சிலைக் கள்வன் ஒருவன் தொடை மடக்காது தெரிகணைகள் சொரிவது ஏய்ப்ப- நமக்கு இது நல்ல சமயம் என்று செம்மையான கருப்புவில்லையுடைய திருடன் ஆகிய மன்மதன் அம்பெய்தலை நிறுத்தாது ஆராய்ந்தெடுத்த அம்புகளைச் சொரிவதை நிகர்ப்ப, எரிமணி

குயின்றபொன் செய்குன்று மழகதிர் எறிப்ப - ஒளிர்கின்ற மாணிக்கம் அழுத்திச் செய்த அழகிய குன்று இளநிலவை வீச, எழுசெஞ் சோதியூடு இளமதி இமைப்பது - எழுகின்ற செவ்வொளியூடே இளஞ்சந்திரன் விளங்குவது, உன் திருமுகச் செவ்விவேட்டு எழுநாத்தலை தவம் அவன் புரிவது கடுக்கும் மதுராபுரி மடக்கிள்ளை - நினது அழகிய முகத்தின் தன்மையை விரும்பி ஏழு நாக்குகளையுடைய நெருப்பினிடையே நின்று அந்தச் சந்திரன் தவம் செய்வது ஒக்கும் மதுராபுரியிலுள்ள இளங்கிளியே!, பொன் ஊசல் ஆடிஅருள் -; புழுகுநெய்ச் சொக்கர் திரு அழகினுக் கொத்தகொடி! பொன் ஊசல் ஆடி அருள் -;

*(வி - ம்.) சுவடு - குறி. அசும்ப - ஒழுக. உமாதேவியார் பொன் ஊசல் மேலிருந்து எதிர்நின்ற அசோகினை உதைத்து ஆடு கின்றார். அசோகமரம் பெண்கள் காலால் உதைபட்டுழிப் பூக்கு மாதலின் அம் மரத்தினின்று பூக்கள் உதிர்ந்தன. அவ்வாறு உதிர் தல், சிவபிரான் வடிவமறைந்து உமாதேவிமுன் நிற்பதைத் தெரிந்து மன்மதன் கணைதொடுத்ததை ஒக்கும். அசோகமலர் அவனுக்குப் பாணமாதலின் அம் மலர்கள் உதிர்வதை அங்ஙனம் கற்பித்தனர். மகளிர் உதைத்தலால் அசோகு மலரும் என்பதை, "ஏடவிழ் மகிழ்சு வைக்க வெழிற்பாலை நண்பு கூடப், பாடல நீந்திக் கத்தேம் படிமுல்லை நகைக்கப் புன்னை, ஆடனீள் குராவ ணைக்க வசோகுதைத் திடவா சந்தி, பாடமாப் பார்க்க வார்சண் பகநிழல் படத்த ளிர்க்கும்" என்ற செய்யுளால் அறிக. எழுநா - தீ தலை என்பது எழனுருபு. தீயின்கண் எனக்கொள்க. மாணிக்க மலையாற் செய்குன்றின் ஒளியூடு இளஞ்சந்திரன் ஒளி விழுவது தவஞ்செய்வது போலத் தோன்றும் என்க. (கூ)*

கங்கைமுடி மகிழ்நர்திரு வுளமசைந் தாடக்
கலந்தாடு பொன்னூசலக்
கடவுள்திரு நோக்கத்து நேக்குருகி யிடநின்
கடைக்கண்ணைக் கத்துமற்றச்
செங்கண்விடை யவர்மனமும் ஒக்கக் கரைந்துருகு
செய்கையவர் சித்தமேபோன்
திருவூச லாவிருந் தாடுகின் றூயேனும்
செய்தியை எடுத்துரைப்ப

அங்கணெடு நிலம்விடர் படக்கிழித் தோடுவேர்
அடியிற் பழுத்தபலவின்
அளிபொற் சுளைக்குடக் கனியுடைந் தூற்றுதேன்
அருவிபிலம் எழுமுட்டிப்
பொங்கிவரு பொழில்மதுர மதுரைநா யகிதிருப்
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே.

(சொ - ள்.) கங்கைமுடி மகிழ்நர் திருஉளம் அசைந்து ஆடக்கலந்து ஆடுபொன் ஊசல் - கங்கையைச் சடைமுடியில் தாங்கியுள்ள கணவர் திருமனம் அசைந்து ஆடும்படி கலந்து (சேர்ந்து) நீ ஆடுகின்ற பொன்னூசல், அக் கடவுள் திருநோக் கத்து நெக்கு உருகி இட - அந்தக் கடவுளின் அழகிய பார்வை யால் நெகிழ்ந்து இளகியிட, நின் கடைக்கண் நோக்கத்து - நினது கடைக்கண் பார்வையால், மற்று அச் செங்கண் விடை யவர் மனமும் ஒக்கக் கரைந்து உருகு செய்கை - அந்தச் சிவந்த கண்களையுடைய காளை வாகனத்தரான சிவபெரு மானது மனமும் ஒன்று சேர்ந்து கரைந்துருகுகின்ற செய லானது, அவர் சித்தமே பொன்திரு ஊசல் ஆ இருந்து ஆடு கின்றாய் எனும் செய்தியை எடுத்துரைப்ப - அவர் மனமே அழகிய பொன்னூசலாக அமர்ந்து நீ ஆடுகின்றனை என்னும் செய்தியை எடுத்துரைப்பது போலத் தோன்ற, அம்கண் நெடு நிலம் விடர்படக் கிழித்து ஒடுவேர் அடியில் பழுத்த பலவின் - அழகிய இடம் அகன்ற தரையில் பிளவு உண்டாகும்படி கிழித்து ஓடுகின்ற வேரின் அடிப்பக்கம் பழுத்துள்ள பலவில், அளிபொற் சுளைக்குடக்கனி யுடைந்தூற்று தேன் அருவி - கனிந்த பொன் போன்ற சுளைகளையுடைய குடம்போன்ற வடிவமைந்த பழம் உடைந்து பெருகுகின்ற சாறு ஆகிய அருவி, பிலம் ஏழும் முட்டி - ஏழு பாதாள வுலகங்களையும் நிரப்பி, பொங்கி வருபொழில் மதுர மதுரைநாயகி! - பொங்கி வருகின்ற சோலைகளையுடைய இனிய மதுரைத் தலைவியே!, பொன்ஊசல் ஆடி அருள் -, புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக்கு ஒத்தகொடி! பொன் ஊசல் ஆடிஅருள்-;

(வி - ், ) கங்கை முடி மகிழ்நர் : சிவபிரான். விடர்படல் - வெடிப்புண்டாதல். அளி-கனிந்த. சிவபிரான் திருநோக்கம் நெருப்பாதலின், பொன்னூசல் உருகியது. பிராட்டியார் கடைக்கண் நோக்கத்தால் சிவபிரானது மனம் உருகியது. உருகியாடுகின்ற ஒன்று பிராட்டியாருக்கு ஊசலெனத் தெரிகின்றமையின் இப்பொழுது பிராட்டியாரது கடைக்கணோக்கத்தால் உருகி அசைந்தாடும் சிவபிரான் திருவுள்ளமே அவருக்கு ஏற்ற பொன்னூசல் என்பது விளங்குகின்றது. பிலம் - பாதாள உலகம். (௧௬)

**சேர்க்குஞ் சுவைப்பாடல் அமுதொழுக ஒழுகுபொன்**
**திருவூசல் பாடியாடச்**
**சிவபிரான் திருமுடி அசைப்பமுடி மேற்பொங்கு**
**செங்கணர வரசகிலம்வைத்**
**தார்க்கும் பணாடவி அசைப்பச் சராசரமும்**
**அசைகின்ற தம்மனையசைந்**
**தாடலால் அண்டமும் அகண்டபகி ரண்டமும்**
**அசைந்தாடு கின்றதேய்ப்பக்**
**கார்க்கோந் தளக்கோதை மடவியர் குழற்கூட்டு**
**கமழ்நறும் புகைவிண்மிசைக்**
**கைபரந் தெழுவதுரு மாறிரவி மண்டலங்**
**கைக்கொள இருட்படலம்வான்**
**போர்க்கின்ற தோக்குமது ராபுரி மடக்கிள்ளை**
**பொன்னூசல் ஆடியருளே**
**புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி**
**பொன்னூசல் ஆடியருளே.**

(சொ - ள்.) சேர்க்கும் சுவைப்பாடல் அமுது ஒழுக ஒழுகுபொன் திருஊசல் பாடி ஆடச் சிவபிரான் திருமுடி அசைப்ப - யாக்கப்படும் சுவையுடைய பாடலின் அமுதம் ஒழுகப் பொன்னின் ஒளி ஒழுகுகின்ற சிறந்த ஊசலிற் பாட்டுப் பாடி ஆட (இதனைக் கேட்ட) சிவபெருமான் (மகிழ்ச்சியினால்) திருமுடியை அசைக்க, முடிமேற் பொங்கு செங்கண் அரவு அரசு அகிலம் வைத்து ஆர்க்கும் பணாடவி அசைப்ப - முடிமீது பொங்குதலையுடைய சிவந்த கண்களை

யுடைய அரவரசனுன ஆதிசேடன் பூமியைத் தாங்கிப் பிணிக்கும் படக்கூட்டங்களையுடைய தலையை அசைப்ப (அதனுல்), சராசரமும் அசைகின்றது - உயிர்ப் பொருளும் உயிரற்ற பொருளும் அசையுந்தோற்றமானது, அம்மனே அசைந்து ஆடலால் அண்டமும் அகண்ட பகிரண்டமும் அசைந்து ஆடுகின்றது ஏய்ப்ப - தாயே! நீ அசைந்தாடுவதால் வானமும் பிளவுபட்ட பல அண்டங்களும் ஆடுவதைப் போலத் தோன்ற, கார்க்கொந்தளக் கோதை மடவியர் குழற்கு ஊட்டு கமழ்நறும் புகை விண்மிசைக் கைபரந்து எழுவது - மேகம் போன்ற கூந்தலையுடைய மாலையணிந்த பெண்கள் தங்கள் கூந்தல் புலரும்படி ஊட்டுகின்ற மிக்க மணம் பொருந்திய இனிய அகிற்புகையானது ஆகாயப் பரப்பில் விரிந்து எழுந்து செல்வது, உருமாறி இரவி மண்டலம் கைக்கொள இருட்படலம் வான் போர்க்கின்றது ஒக்கும் - வடிவு மாறுபட்டுச் சூரிய மண்டலத்தைக் கைக்கொள்ள இருட்கூட்டம் விண்ணை மறைக்கின்றதை ஒத்திருக்கும், மதுராபுரி மடக்கிள்ளை!-மதுரை நகரிலுள்ள இளங்கிளியே!, பொன் ஊசல் ஆடி அருள்-, புழுகு நெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்த கொடி! பொன் ஊசல் ஆடி அருள்-;

(வி - ம்.) கை-ஒழுங்கு. படலம் - கூட்டம். பாடலாகிய அமுதுஇனிது ஒழுகும் பொன்னூசற் பாடல்களைப் பாடி என்க. பணம்+அடவி - படத்தொகுதி; ஏய்ப்ப, ஆடியருளுக என்று முடிக்க. புகைபரந்து விண்ணிற் செல்வது இருட்படலம் உருமாறிப் பகையான இரவி மண்டலத்தைப் பற்றிக்கொள்ளச் செல்வதுபோலத் தோன்றும் என்க. (௧௭)

**தேர்க்கோல மோடுநின் திருக்கோல முங்கண்டு**
**சிந்தனை புழுங்குகோபத்**
**தீயவிய மூண்டெழும் காமா னலங்கான்ற**
**சிகையென எழுந்துபொங்கும்**
**தார்க்கோல வேணியர்தம் உள்ளமென வேபொன்**
**தடஞ்சிலையும் உருகியோடத்**
**தண்மதி முடித்ததும் வேள்விடைக்கோண்மணி**
**தரித்ததும் விருத்தமாகக்**

**கார்க்கோல நீலக் கருங்களத் தோடொருவர்**
**செங்களத் தேற்றலமரக்**
**கட்கணை துரக்கும் கரும்புருவ வில்லோடொரு**
**கைவிற் குனித்துநின்ற**
**போர்க்கோல மேதிரு மணக்கோல மானபெண்**
**பொன்னூசல் ஆடியருளே**
**புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி**
**பொன்னூசல் ஆடியருளே.**

(சொ - ள்.) தேர்க்கோலமொடு நின் திருக்கோலமும் கண்டு-நீ ஏறிய தேரழகுடன் நினது திருவுருவத்தின் அழகினையும் கண்டு, சிந்தனை புழுங்கு கோபத்தீ அவிய-மனத்தில் கொதித்து எழுந்த சினமாகிய நெருப்புத் தணியவும், மூண்டு எழும் காமானலம் கான்ற சிகை என எழுந்து பொங்கும் தார்க்கோல வேணியர் - மனத்திற் பற்றி எரிகின்ற காமநெருப்பு உமிழ்ந்த கொழுந்து என்று கூறும்படி வளர்ந்து பொங்குகின்ற மாலைபுனைந்த சிவந்த சடையுடையவர் ஆகிய சிவபெருமான், தம் உள்ளம் எனவே பொன்தடம் சிலையும் உருகி ஓட-தம்முடைய மனத்தைப்போலவே பெரிய பொன் மலையும் உருகி ஓட, தண்மதி முடித்ததும் வெள்விடைக்கும் ஒண்மணி தரித்ததும் விருத்தம் ஆக - குளிர்ந்த சந்திரனை முடியில் வைத்ததும் வெள்ளிய இடபத்துக்கு ஒள்ளிய மணி கட்டியதும் மாறுபாடாகத் தோன்ற, கார்க்கோல நீலக் கருங் களத்தோடு ஒருவர் செங்களத்து ஏற்று அலமர - மேகத்தின் அழகு போன்ற நீலமும் கருமையும் பொருந்திய கழுத்துடைய சிவபெருமான் போர்க்களத்தில் எதிர்த்து வருந்த (மயங்க), கண்கணை துரக்கும் கரும்புருவ வில்லொடு ஒரு கைவில் குனித்து நின்ற - கண்களாகிய அம்புகளைச் செலுத்தும் கரிய புருவங்களாகிய வில்லுடன் ஒரு கையில் வில்லையும் வளைத்து நின்ற, போர்க்கோலமே திருமணக்கோலமான பெண் !- போர்க்கோலத்தையே திருமணக்கோலமாகக் கொண்டு மணம் புரிந்த மாதே !, பொன் ஊசல் ஆடி அருள்-, புழுகுநெய்ச்

சொக்கர்திரு அழகினுக்கு ஒத்த கொடி! பொன் ஊசல் ஆடி அருள்–;

(வி - ரை.) பிராட்டியார் திக்கு விசயத்தில் கைலையை அணுகிய வழி முதலில் சிவபெருமானுக்குப் பிராட்டியாரது தேர்க்கோலத்தையும் திருக்கோலத்தையும் கண்டு கோபம் மூண்டது. பின்பு அக் கோபம் நீங்கி ஒழியுமாறு காமக் கனல் எழுந்தது: அக் கனலின் கொழுந்து போன்றது எம்பிரானது சிவந்த சடை என்க. பிராட்டியார்மீதுகொண்ட காதலால் உள்ளம் உருகிற்று. அதுபோல வில்லும் உருகிக் கையை விட்டுநீங்கியது. காதல் கொண்டவர்க்குச் சந்திரனும் விடைமணி யோசையும் துன்பம் மிகுவிக்கு மாதலால் "தண்மதி முடித்ததும் விடைக்கு மணி தரித்ததும் விருத்த" மாயின. அனலம் - தீ. கருங்களம் - கரிய கழுத்து. துரத்தல் - செலுத்தல். (௯அ)

குழியும் பசுங்கண் முசுக்கலை வெரீஇச்சிறு
குறும்பலவி னெடியபாரக்
கோம்பொடி படத்தூங்கு முட்புறக் கனியின்
குடங்கொண்டு நீந்தமடைவாய்
வழியுங் கொழுந்தேன் உவட்டெழு தடங்காவின்
வள்ளுகிர்க் கருவிரற்கூன்
மந்திகள் இரிந்தேகும் விசையினில் விசைந்தெழு
மரக்கோடு பாயவயிறு
கிழியுங் கலைத்திங்கள் அமுதருவி தூங்குவ
கிளைத்தவண் டுழபைந்துழாய்க்
கேசவன் கால்வீச அண்டகோ ளகைமுகடு
கீண்டுவெள் ளருவிபொங்கிப்
பொழியுந் திறத்தினை நிகர்க்குமது ரைத்தலைவி
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே.

(சொ - ள்.) குழியும் பசுங்கண் முசுக்கலை வெரீஇ சிறு குறும்பலவின் நெடிய பாரக்கொம்பு ஒடிபட தூங்கு முட்புறக் கனியின் குடம்கொண்டு நீந்த - ஆழ்ந்துள்ள பசிய கண்களை

யுடைய ஆண்குரங்குகள் பயந்து சிறிய குறும்பலாமரத்தின் நீண்ட பாரத்தையுடைய கொம்பானது ஒடியும்படி தொங்கு கின்ற பலாப்பழமாகிய குடத்தைக்கொண்டு நீந்துதலைச் செய்ய, மடைவாய் வழியும் கொழுந்தேன் உவட்டு எழு தடங்காவின் - மடையில் ஒழுகுவதுபோலச் செழித்த தேன் பெருக்கெடுத்து ஓடுகின்ற பெரிய சோலையில், வள்உகிர்க் கரு விரல் கூன்மந்திகள் இரிந்து ஏகும் விசையினில் விசைந்து எழு மரக்கோடு பாய - கூரிய நகங்களையும் கரிய விரல்களையும் வளைந்த முதுகினையும் உடைய மந்திகள் முரிந்தோடும் வேகத்தி னால் விசையுடன் எழுகின்ற மரக்கிளை பாய்தலால், வயிறு கிழியும் கலைத்திங்கள் அமுதருவி தூங்குவ - வயிறு கிழிக்கப் பட்டுக் கலைகளையுடைய சந்திரனின் அமுத அருவி ஒழுகுந் தோற்றமானது, கிளைத்த வண்டு உழு பைந்துழாய்க் கேசவன் கால்வீச அண்டகோளகை முகடுகீண்டு வெள் அருவி பொங்கிப் பொழியும் திறத்தினை நிகர்க்கும் மதுரைத் தலைவி! - கூடிய வண்டு கிண்டும் பசுந்துளப மாலையை யணிந்த திருமால் தமது காலை மேலே உயர்த்தி நீட்டியபோது வான வட்டத்தின் உச்சி கிழிந்து கங்கை யருவியானது பெருகிப் பொழிகின்ற தன்மையை ஒக்கும் வளம் பொருந்திய மதுரை நாயகி!, பொன் ஊசல் ஆடி அருள்-, புழுகுநெய்ச் சொக்கர் திரு அழகினுக்கு ஒத்தகொடி! பொன் ஊசல் ஆடி அருள்-;

*(வி - ம்.) குழிதல்-உள் ஆழ்தல். முசுக்கலை-ஆண் குரங்கு. முட்புறக் கனி - பலாக்கனி. கொம்பு கனியின் சுமை தாங்க ஆற் றுததாயிற்று என்பார், "கொம்பு ஒடிபடத்தூங்கு கனி" என்றார். தடங்கா - பெரிய சோலை. தடம்: உரிச்சொல். வள்- கூர்மை. இரிதல் - முரிதல். மரக்கோடு பாய்தலினாலே சந்திரன் வயிறு கிழிந்தது என்க. வயிறு கிழிந்து அமுதம் அருவியாக ஒழுகுதல், திருமால் திருவிக்ரம அவதாரங் கொண்ட காலத்து அவரது கால்பாய அண்ட கோளகை பிளந்து கங்கை வழிந்தது போன்றது என்க.* (௧௧)

**ஒல்குங் கொடிச்சிறு மருங்குற் கிரங்கிமேல்**
**ஓதிவண் டார்த்தெழப்பொன்**
**ஊசலை உதைந்தாடும் அளவின்மலர் மகளம்மை**
**உள்ளடிக் கூன்பிறைதழீஇ**

மல்குஞ் சுவட்டிணை வலம்புரிக் கீற்றிதுகோல்
வாணியேன் றசதியாடி
மணிமுறுவல் கோட்டநின் வணங்கா முடிக்கோரு
வணக்கநெடு நாண்வழங்கப்
பில்குங் குறும்பனிக் கூதிர்க் குடைந்தேனப்
பிரசநா றைம்பாற்கிளம்
பேதையர்கள் ஊட்டும் கொழும்புகை மடுத்துமென்
பேடையொடு வரிச்சுரும்பர்
புல்குந் தடம்பணை உடுத்தமது ரைத்தலைவி
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே.

(சொ - ள்.) ஒல்குங் கொடிச் சிறு மருங்குற்கு இரங்கி மெல் ஓதி வண்டு ஆர்த்து எழ - துவள்கின்ற கொடி போன்ற சிறிய இடையின் மென்மையைக் கண்டு வருந்தி மென்மையான கூந்தலிலுள்ள வண்டுகள் முழங்கி எழ, பொன் ஊசலை உதைந்து ஆடும் அளவில்-பொன்னாற் செய்த ஊசலைக் காலால் உதைத்து ஆடுகின்றபோது, மலர் மகள் அம்மை உள்அடிக் கூன்பிறை தழீஇ மல்கும் சுவட்டிணை வலம்புரிக் கீற்று இது கொல்வாணி! என்று அசதி ஆடி மணி முறுவல் கோட்ட - திருமகள்! மீனாட்சியம்மையின் வளைந்த பிறையைத் தழுவி நிறைந்துள்ள தழும்பைப் பார்த்துக் கலைமகளே இது வலம்புரிச் சங்க ரேகையோ என்று பரிகசித்து முத்துப் போன்ற பல் தோன்றச் சிரிக்க, நின் வணங்கா முடிக்கு ஒரு வணக்கம் நெடுநாண் வழங்க-(அப்போது) நினது வளையாத (பணியாத) முடிக்கு ஒரு வணக்கத்தை நீண்ட நாணமானது கொடுக்க, பில்கும் குறும்பனிக் கூதிர்க்கு உடைந்து என பிரசம் நாறு ஐம்பாற்கு - துளிக்கின்ற சிறிய பனியுடன் கூடிய கூதிர்க்கு ஆற்றுமலிருக்கிறது என்று தேன் ஊறுகின்ற கூந்தலுக்கு, இளம் பேதையர்கள் ஊட்டும் கொழும்புகை மடுத்துமென் பெடையொடு வரிச்சுரும்பர் - இளைய சிறுமிகள் ஊட்டுகின்ற

செழித்த புகையை மேற்கொண்டு மென்மையான பெண் வண்டுடன் ஆண் வண்டுகள், புல்கும் தடம்பணை உடுத்த மதுரைத் தலைவி பொன் ஊசல் ஆடி அருள் - தழுவும் பெரிய வயலிடங்களைப் பொருந்தியுள்ள மதுரை நாயகி! பொன் ஊசல் ஆடி அருள்-, புழுகுநெய்ச் சொக்கர் திரு அழகினுக்கு ஒத்த கொடி! ஊசல் ஆடி அருள்-;

*(வி - ரை.) ஒல்கும்-துவளும். மருங்குல்-இடை. இடையின் மென்மை பாரந்தாங்காமை நோக்கி வண்டுகள் கூந்தலினின் றும் எழுந்தன. ஓதி-கூந்தல். சுவடு-தழும்பு. வலம்புரிக்கீற்று-வலம்புரிரேகை. அசதியாடல்-பரிகசித்தல். அவ்வாறவன் அசதி யாடியவழி உண்டாகியநாணம் பிராட்டியாரது வணங்காமுடிக்கு வணக்கமுண்டாக்கியது. வழங்க ஆடியருளென முடிக்க. பில் குதல்-துளித்தல். ஐம்பால்-கூந்தல்; இது முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சையென்னும் ஐந்து பகுப்பாக முடிக்கப் படுதலாற் பெற்ற பெயர். அவற்றுள் முடி உச்சியிலும் கொண்டை பக்கத் திலும் முடிக்கப்படும்; சுருள் பின்னே செருகப்படும்; குழல் சுருட்டி முடிக்கப்படும்; பனிச்சை பின்னி விடப்படும்; இவ் வைந்து பகுப்பும் இக்காலத்தும் வழங்கப்படுவது காண்க. (௯00)*

**கோன்செய்த செழுமணித் திருவூசல் அரமகளிர்**
**கொண்டாட ஆடுந்தோறும்**
**குறுமுறுவல் நெடுநில வருந்துஞ் சகோரமாய்க்**
**கூந்தலங் கற்றைசுற்றும்**
**தேன்செய்த மழலைச் சுரும்பராய் மங்கைநின்**
**செங்கைப் பசுங்கிள்ளையாய்த்**
**தேவதே வன்போலிவ தேவ்வருவு மாமவன்**
**திருவுருவின் முறைதேரிப்ப**
**மின்செய்த சாயலவர் மேற்றலத் தாடிய**
**விரைப்புனலின் அருவிகுடையும்**
**வெள்ளானை குங்குமச் சேஞ்சேறு நாறமட**
**மென்பிடியை அஞ்சிநிற்கும்**
**பொன்செய்த மாடமலி கூடற் பெருஞ்செல்வி**
**பொன்னூசல் ஆடியருளே**
**புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி**
**பொன்னூசல் ஆடியருளே.**

(சொ - ள்.) கொன் செய்த செழுமணித் திருஊசல் அரமகளிர் கொண்டாட ஆடுந்தொறும் - பெருமையுடைய செழித்த மாணிக்கங்களை யழுத்திய சிறந்த ஊசலை அரம்பையர்கள் பாராட்டும்படி ஆடும்போதெல்லாம், குறு முறுவல் நெடுநில வருந்தும் சகோரமாய் - குறுஞ்சிரிப்பு ஆகிய நில வொளியைப் பருகுகின்ற சகோரப் புள்ளாக இருந்து நுகர்ந்தும், கூந்தல் அம் கற்றை சுற்றும் தென் செய்த மழலைச் சுரும்பராய்- அழகிய கூந்தற்காட்டைச் சுற்றி வருகின்ற அழகமைந்த மழலை இசையை யுடைய வண்டாய், மங்கை! நின் செங்கைப் பசுங்கிள்ளையாய்-மாதே! நின்னுடைய செம்மையான கையில் வளரும் பச்சைக்கிளியாய்!, தேவ தேவன் பொலிவது எவ் உருவும் ஆம் அவன் திருஉருவின் முறை தெரிப்ப-(இங்ஙனம்) மகாதேவனுனவன் விளங்குவது அவன் அழகிய வடிவின் இயல்பு எந்த வடிவும் ஆம் என்கின்றதை விளக்க, மின் செய்த சாயலவர் மேல் தலத்து ஆடிய விரைப்புனலின் அருவி குடையும் வெள்ளானை - மின் போன்ற சாயலை யுடைய மகளிர் மேன்மாடத்தில் நீராடிய மணமுள்ள நீரருவியில் மூழ்கிய வெள்ளானையானது, குங்குமச் செஞ்சேறு நாற-தன் உடம்பில் குங்குமக் குழம்பின் மணம் தோன்ற, மடமென் பிடியை அஞ்சி நிற்கும் பொன் செய்த மாடமலி கூடற்பெரும் செல்வி! (அது கண்டு) அறியாமையுடைய மெல்லிய பெண்யானைக்குப் பயந்து புறத்தில் நிற்கின்ற பொன்னுலான மாடங்கள் மலிந்த கூடல் என்னும் மதுரை நகர்ப் பெருஞ்செல்வியே! பொன் ஊசல் ஆடி அருள்-, புழுகுநெய்ச் சொக்கர் திரு அழகினுக்கு ஒத்தகொடி! பொன் ஊசல் ஆடி அருள்-;

*(வி - ம்.) கொன் - பெருமை. பிராட்டியார் ஊசலாடும் போது சிவபிரான் பிராட்டியாரது முறுவலாய நிலவை யுண்ணும் சக்கரவாகப் பறவையாகவும், கூந்தலைச் சுற்றும் வண்டாகவும், கையில் வீற்றிருக்கும் கிளியாகவும் அமர்ந்திருத்தல் எவ்வடிவு மாகின்ற அப்பிரானது தன்மையைத் தெரிவித்ததென நயம்பட வுரைத்தமை காண்க. அரமகளிர் - தேவ மாதர். தென் - அழகு. புனலின் அருவி - புனலாகிய அருவி. பிடியை அஞ்சுதலாவது குங்குமச் சேறு நாறுதலான் வேறொரு பிடியைத் தோய்ந்து வந்ததெனக் கருதிப் பிடி யூடுமே யென்றஞ்சுதல். மலிதல் - நிறைதல். மகளிர் மேன்மாடத்தில் நீராடிய வருவியில் வெள்ளானை படிந்தது*

என்றது, விண்ணுலகுக்கு மேல் மதுரை நகர் மாடமுயர்ந்து நின்றது என்பதைக் குறித்தது. (கO௯)

இருபதமும் மென்குரற் கிண்கிணியும் முறையிட்
டிரைத்திடும் அரிச்சிலம்பும்
இறுமிறு மருங்கென் றிரங்குமே கலையும்பொன்
எழுதுசெம் பட்டுவீக்கும்
திருவிடையும் உடைதார மும்ஒட் டியாணமும்
செங்கைப் பசுங்கிள்ளையும்
திருமுலைத் தரளஉத் தரியமும் மங்கலத்
திருநாணும் அழகொழுகநின்
றருள்பொழியும் மதிமுகமும் முகமதியின் நேர்நில
வரும்புகுறு நகையும்ஞான
ஆனந்த மாக்கடல் குடைந்துகுழை மகரத்தோ
டமராடும் ஓடரிக்கண்
பொருகயலும் வடிவழகு பூத்தசுந் தரவல்லி
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சோக்கர்திரு அழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே.

(சொ - ள்.) இருபதமும் மென்குரல் கிண்கிணியும் முறையிட்டு இரைத்திடும் அரிச்சிலம்பும் - இரண்டு திருவடி களிலும் அணிந்துள்ள கிண்கிணியாகிய சதங்கையும் முறையீடு செய்வதுபோல் ஒலிக்கின்ற பரல்களையுடைய சிலம் பணியும், இறும் இறும் மருங்கு என்று இரங்கும் மேகலையும் - இடை இற்றுப்போம் இற்றுப்போம் என்று புலம்புகின்ற மேகலா பரணமும், பொன் எழுது செம்பட்டு வீக்கும் திருவிடையும் - பொற்சரிகையாற் சித்திரிக்கப்பட்ட பட்டாடையுடுத்த சிறந்த இடையும், உடைதாரமும்ஒட்டியாணமும் செங்கைப் பசுங் கிள்ளையும்-மேலாடையும் ஒட்டியாணம் என்னும் இடுப்பணியும் செங்கையில் வளர்கின்ற பச்சைக்கிளியும், திருமுலைத்தரள உத்தரியமும் மங்கலத் திருநாணும் அழகு ஒழுக நின்று

அருள்பொழியும் மதி முகமும் - அழகிய முலையின்மேல் அணியப்பட்டுள்ள முத்தமுத்திய மேலாடையும் மங்கலமான திருநாண் அணியும் அழகு வழியும்படி பொருந்தி அருளைச் சொரியும் மதி போன்ற முகமும், முகமதியின் நெடுநிலவு அரும்பு குறுநகையும் ஞான ஆனந்த மாக்கடல் குடைந்து - முகமாகிய சந்திரனின் நீண்டநிலவு துளிக்கின்ற சிறுநகையும் ஞான ஆனந்தம் (அறிவின்பம்) என்னும் கடலில் மூழ்கி, குழை மகரத்தொடு அமர் ஆடும் ஓடரிக்கண் பொருகயலும் வடி வழகு பூத்த சுந்தரவல்லி! - மகரக் குழையணிந்த காதுடன் போர்புரியும் கயல்மீன்களாகிய கண்களும் வடிவுடைய அழகும் மலர்ந்திருக்கப்பெற்ற சுந்தரவல்லி!, பொன் ஊசல் ஆடி அருள்-, புழுகுநெய்ச் சொக்கர் திரு அழகினுக்கு ஒத்தகொடி! பொன் ஊசல் ஆடி அருள்-;

*(வி - ரை.) பொன் எழுதுபட்டு - பொற்சரிகையாற் சித்திரிக்கப்பட்ட பட்டாடை. வீக்கல் - கட்டல். உடைதாரம்-மேல் உடை. தரளம்-முத்து. ஞான ஆனந்த மாக் கடல் என்றது சிவ பிரானை. குழைமகரம்-மகரக் குழை. வடிவு அழகு பூத்த-வடிவத்தில் அழகாக மலர்ந்த. இதில் பிராட்டியாரின் பாதாதிகேச வருணனை கூறுப்படுதல் தெளிக.* (௧0௨)

**மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் உரை**

**முற்றிற்று.**

# பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்கம்]

கழக வெளியீடு : ௧௧

உ

திருச்சிற்றம்பலம்

குளத்தூர்

# அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்

மாதவச் சிவஞான சுவாமிகள்

அருளியது

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
சென்னை-1
திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
1971

*திருச்சிற்றம்பலம்*

## ஆசிரியர் கருத்து

மனம்வாக்கில் எட்டாத சிற்சத்தி ஆயினும்
[illegible]மன்பதைகள் உய்யவேண்டி
மலையரையன் முதலோர் இடத்தவ தரித்தோகு
மடப்பிள்ளை யாய்வருதலால்
இனநாட்டி வாழ்த்திடுவர் பெரியோர்கள் வாழ்த்தற்
கெடுத்தவித் தாரகவிதாம்
எண்ணிடிற் பலவாம் அவற்றிற்கும் முதலாக
ஏன்றபெண் பிள்ளைக்கவி
முனிவோட்டு காப்புநற் கீரைதால் சப்பாணி
முத்தம்வா ரானைமற்றும்
மொழிஅம் புலிப்பருவம் அம்மானை நீரூசல்
முறையினை யிருபருவமும்
கனிவாய்த்த அகவலின் விருத்தத்தி னூற்பாடி
நவிலுமுத் திங்கள்முதலா
நயந்தமூ வெழுதிங்கள் அளவினிற் கேட்பிக்கு
நன்மைய தேனப்புகல்வரே.

*(குறிப்புரை) வாக்கு - சொல். சித்சத்தி - ஞானசத்தி. மன்பதைகள் - மக்கட் கூட்டங்கள். மலையரையன், முதலோர் - மலைவேந்தனான பனிமலையரசன், மலயத்துவசன் முதலானவர்கள். மடமை - இளமை. ஏன்ற - பொருந்தின. முனிவு - சினம் (வெறுப்பு). ஓட்டுதல் - நீக்குதல். கீரை - செங்கீரை : முதற்குறை. நீர் - நீராடல். காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, அம்மானை, நீராடல், ஊசல் ஆகிய பத்துப் பெண்பிள்ளைப் பாட்டுப் பருவங்களும் மூன்றாந் திங்கள் முதல் இருபத்தொரு திங்கள் வரை கூறப்படுவனவெனக் கூறும் இலக்கணவிளக்கப் பாட்டியல் இதற்கு இலக்கணமெனத் தோன்றுகிறது. ஆயின் இதில் இப்பருவங்கள் பத்தில் அம்புலிப் பருவத்தின்பின் கூறப்படும் பெண்பாற்குரிய கழங்கை நீக்கி, நீராடல் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்னுங் கவிகள் நான்கில் பிள்ளைக்கவி வித்தாரகவியின் முதலாவது என்பதை இதனால் குறித்தவாறுணர்க.* (௧)

---

## அவையடக்கம்

இளம்பருவ விளையாட்டை நோக்குழித் திருவுரு
இடத்தாசை மிகுதியுண்டாம்
என்பதால் வித்தார கவிக்கேலா முன்னுற
இயன்றபிள் ளைக்கவியிதைக்
குளந்தையிற் சோமேசர் மார்பினைக் கோங்கையாற்
குழைவித்த அமுதவல்லி
கோமளப் பருவத்தில் அருகோன்று தாதியர்சொல்
கூற்றெனப் புகழ்தலுற்றேன்
வளம்பெருகும் இமையவரும் ஏதத்தோணுப் பெருமாட்டி
மகிமையென் புன்மொழிகளால்
வாழ்த்தரிய தாமெனினும் ஆங்கவள் கிரிக்கிறைவன்
மகளாகி யதுவுமல்லால்
உளங்கோடியர் வாழ்வலைச் சேரியினும் அவதரித்
தோளிர்பாசி சங்குபூட்டி
உள்மகிழ்ந் தருளுதலின் என்மொழிக் கும்பெரி
துவந்தருள் சுரக்குமெனவே.

*(கு - ரை.) பிள்ளைக்கவி - பிள்ளைத்தமிழ். இயன்ற - பொருந்தின. குளந்தை - குளத்தூர். சோமேசர்-குளத்தூரிலெழுந்தருளியுள்ள இறைவன் பெயர். அவர்பேரிற் பாடினது சோமேசர் முதுமொழி வெண்பா என்றுணர்க. அமுதவல்லி - குளத்தூர் இறைவி. அருகு - கிட்ட, ஒன்றுதல் - இருத்தல். கூற்று - சொல். ஏத்த+ஒணு - ஏத்தொணு : அகரந்தொகுத்தல். புன் மொழி - அற்பச்சொல். இறைவியானவள் மலையரசன் மகளாய் உயரணிகள் பூண்டு கொண்டதுமன்றி, வலைச்சேரியினுந் தோன்றிக்கருபணி, சங்கு முதலியவற்றையும் அணிதலின் என் சிறுமொழிக்கும் அருள் செய்வள் என்பார், 'கிரிக்கிறைவன் மகளாகியதுவுமல்லால், உளங்கொடியர் வாழ்வலைச் சேரியினு மவதரித் தொளிர் பாசி சங்குபூட்டி, உண் மகிழ்ந்தருளுதலினென் மொழிக்கும் பெரிதுவந்தருள் சுரக்குமெனவே' எனக் கூறினர்.*

**இது தோழிகள் கூற்றாகக் கூறப்பட்டது.**

சோமேசர் மார்பினைக் கொங்கையாற் குழைவித்தமை :—

இறைவி காஞ்சிபுரத்தில் கம்பையாற்றில் இறைவனை வழிபட்ட ஞான்று இறைவர் அம்மையார் அன்பின் வன்மையை உணரவேண்டி அவ்வாற்று நீரைப் பெருக்குவிக்க, அது கண்ட அம்மையார், தாம் வைத்த இறை வடிவத்திற்கு யாதொரு பழுதும் வாரா வண்ணம் தம் இரண்டு கைகளால் தழுவி அணைத்துக் கொண்டார். அவ்வாறும் விலகியோடிற்று. ஒரு மாமரத்தனிப் பெருங் கடவுளும் (ஏகாம்பர நாதரும்) அவ்விறைவியின் அன்பிற்குத் திருமேனி குழைந்து வளைத்தழும்பும் முலைச்சுவடும் பதியப் பெற்றுக் காட்சியருளினார் என்பது. இதைக் காஞ்சிப் புராணம் தழுவக் குழைந்த படலத்திற் காண்க. (உ)

———

உ

திருச்சிற்றம்பலம்

# குளத்தூர்

# அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்

---

## விநாயக வணக்கம்

மணிகொண்ட கோடொரு மருங்குண்மை யாற்பெண்மை
வடிவென்றும் அஃதின்மையோர்
மருங்குண்மை யாலாண்மை வடிவென்றும் மீதுகீழ்
மாறிய திருக்காட்சியால்
அணிகொண்ட உயர்திணைய தென்றும்அஃ றிணையென்றும்
யார்க்குங் கிளக்க அரிதாம்
ஐங்கரச் சிந்துரத் தின்கழற் செஞ்சரணம்
அஞ்சலித் துத்துதிப்பாம்
பணிகொண்ட துத்திப் படத்திற் கிளைத்தவிர்
பரூஉமணி விளக்கினொருபால்
பாயிருட் படலஞ் செறிந்தோளிர்வ தென்னவப்
பாம்பணை கிடக்கும்ஒருவன்
திணிகொண்ட மல்லற் புயக்குவடு விம்மத்
திளைக்குமகள் வாணிபிரியாத்
தென்குளந் தாபுரி யிருந்தவமு தாம்பிகை
செழுந்தமிழ்க் கவிதழையவே.

*(கு-ரை.) மணி-முத்து (யானைக்கொம்பில் முத்துப் பிறப்பதால்). மீது கீழில் மீதென்பது முகமும் கீழ் என்பது காலும். மாறிய காட்சி-யானை முகமும், மக்கள் அங்கங்களாகவும் மாறியிருத்தல். யானை முகமாகிய அஃறிணையும் மக்கள் அங்கங்களாகிய உயர்திணையும் விரவிய ஒரு வடிவினனுதலால் உயர்திணைய*

தென்றும் அஃறிணையென்றும் யார்க்குங் இளக்கவரிதாம் என்றார். உயர்திணையது, இதில் அது பகுதிப் பொருள்விகுதி. மீது கீழ் என்றதற்கேற்ப அஃறிணை யென்றும் உயர்திணை என்றும் மாற்றுக. ஐங்கரச் சிந்துரம். இதில் ஐங்கரம் என்பது யானையினின்று பிரித்து மூத்த பிள்ளையாரை உணர்த்திற்று. துத்தி-படப்பொறி. பருஉ - பருமை. குளந்தாபுரி - குளத்தூர். (கூ)

---

## க. காப்புப் பருவம்

### திருமால்

சீர்கொண்ட கஞ்சக் கிழத்திதன் காந்தனைச்
சிறைசெய்த வாறறிந்தாற்
செயிர்த்துநந் திருமனைவி மகன்மருகி தமையெலாஞ்
சிறைசெய்யும் என்றறிந்தும்
ஏர்கொண்ட மைத்துனக் கேண்மையால் அர்ச்சுனற்
கிறுதிநாள் பயவாமையே
எண்ணிமுன் பரிதியைப் பரிதியால் தடைசெய்த
எந்தற்பி ரான்புரக்க
பேர்கொண்ட மேனிலச் சோபான மிசையேறு
பேதைமார் முகநோக்கிநம்
பேரரசு கொள்ளவரு மதிபோலும் இதுவெனப்
பேரிதுமேக் குற்றவர்கள் தம்
கார்கொண்ட பின்னற் கரும்பாந்தள் கண்டுளங்
கவலாது களிகூர்ந்துதண்
கலைமதியம் வைகுபொழில் சூழ்குளத் தூர்வருங்
கடவுட் பிராட்டிதனையே.

(கு - ரை) கஞ்சம்-தாமரை. கிழத்தி-உரியவள் (இல்லாள்), தாமரையாகிய இல்லாள். காந்தன்-தலைவன், (அகமுடையான்) சூரியன், தாமரைக்குத் தலைவன் சூரியன் என்றபடி. சிறை செய்த வாறு-ஆழியால் மறைத்த வழி. மனைவி-திரு (இலக்குமி). மகன்-பிரமன். மருகி - கலைமகள். சிறை செய்யும் - வெளியே வரா வண்ணம் இதழ் குவித்துக்கொள்ளும். பாரதப்போர் பதின்மூன்கா வதுநாளில் அபிமன்னனைக் கொன்ற சயத்திரதனை, 'அந்திபடு மவ்வளவில் ஆவிகவரேனேல் வெந்தழலில் வீழ்வன்' என அருச்சுனன் சூளுரை கூறியதறிந்து, அன்றிரவு வரும்வரை மறைந்திருந்த அச் சயத்திரதன் வெளிவரும்படி கண்ணன் ஆழியாற்

சூரியனை மறைத்தமையை அவன் இல்லாளாகிய தாமரையறியின் தாமரைமனையில் இருக்கின்ற அக்கண்ணன் மனைவியான திருவும், அவன் மகனான பிரமனும், அவன் மருகியான கலைமகளும் வெளி வராவாறு தன்னிதழ் சுருக்கிக்கொள்ளும் என்றபடி. கேண்மை- உறவு. இறுதிநாள் - ஆயுள் முடிவு, பரிதி - சூரியன்; ஆழி. சோபானம் - படி. ஏக்குற்று - கவலையடைந்து. பின்னல்-கரும் பாம்பு; சடையாகிய கரிய பாம்பு. உளம் கவலாது - மனம் வருந்தாமல். (அ)

### சிவபெருமான்

### வேறு

அளிசு ரந்தமரர் பசிகெ டும்படியின்
அமிழ்து தந்தகதிர் கோள்சடைக் காட்டிடை
அழல்வி டஞ்சோரியும் அரவி னம்பசிய
அறுகு வெண்தலைகள் பல்குறச் சூட்டியும்
அரிய யன்பரச அவரி டும்பைதெறும்
அலர்செ ழுங்கமலம் வெல்கரத் தோட்டிடை
அனைவு றும்பொருள்கள் கருக வெம்புசுடர்
அவிரும் அங்கியினை வெய்தெனக் காட்டியும்
இளிவ ரும்பொன்மலை வளையு முன்பவுணர்
எயிலொ ருங்கவிய எள்ளுபொன் தோட்கிடை
இடுவ னங்களினில் உயிர்ம டிந்தவர்தம்
இகழும் என்பினையும் ஐதெனப் பூட்டியும்
எழுத ருஞ்சொன்மறை முடிவும் அன்பர்தம
திதய மும்பரவ நல்குமெய்த் தாட்டுணை
எமது புன்தலையும் உறந யந்துமரு
ளியப ரம்பரனை உள்ளுறச் சேர்த்துதும்
தளிர்து வன்றியிருள் படநி ழன்றுகுளிர்
தழுவி வண்டுதுதை செய்துணர்ப் பூத்திரள்
ததைவு கொண்டுநறு மணம ளைந்துமகி
தலம சும்புபட வெள்ளமட் டேற்றெழு
தரவ ளர்ந்துமுகில் அகடு டைந்தழகு
தபவு தைந்துதிசை யெல்லையைக் காத்திடு
தறுகண் எண்கரியை முடுகு றுங்கருவி
தகுமி தென்றெவரும் விள்ளமொய்த் தார்த்தவிர்

ஒளியு மிழ்ந்துலவு பரிதி மண்டலமும்
உடுப மண்டலமு நில்லெனத் தாழ்த்திவிண்
ணுலகு சென்றுசுரர் தருவோ டும்பழகி
உறவு கொண்டுமகிழ் பல்வளக் காக்களின்
உறைப சுங்கிளிகள் சுருதி சந்தையுடன்
உரைசெய் கின்றதனை மல்குபுத் தேட்குலம்
ஒளியி ருந்துகவர் பதிகு ளந்தைவரும்
உரைவி ளங்கமுத வல்லியைக் காக்கவே.

*(கு-ரை.) அளி-களிப்பு. அமிழ்துதந்த கதிர்-திங்கள். விடம்-நஞ்சு. அரவு இனம்-பாம்புக் கூட்டம். வெண்தலைகள்-வெள்ளிய தலைமாலைகள். பரசுதல் - வழுத்தல். தெறுதல் - அழித்தல். அவுணர் எயில்-முப்புரவாசிகள் கோட்டை. ஒருங்கு-முற்றும். இடுவனம்-இட்டகாடு. காடு, இடுகாடு, சுடுகாடு என இருவகைத்து. ஐது-அழகுடையது. உள்-மனம் (உள்ளம்). சடைக்காட்டிடை அரவினம், அறுகு, வெண்டலைகள் சூட்டியும், அங்கியினை வெய்தெனக் காட்டியும், என்பினை ஐதெனப் பூட்டியும் அருளிய பரம்பரனை உள்ளுறச்சேர்த்துதும் எனக் கூட்டுக. துவன்றி நெருங்கி நிழன்று - நிழலைச் செய்து. துதைதல் - நெருங்குதல். ததைவு-செறிதல். அளைந்து - கலந்து. மகிதலம் - பூமி. அசும்புபட-வழுக்க. வெள்ளம் மட்டு - தேன்வெள்ளம். முகில் - மேகம் அகடு - வயிறு. தப-கெட. தறுகண் - அஞ்சாமை. எண்கரி-எட்டுயானைகள். முடுகு உறும் கருவி-ஓட்டுகின்ற கோல். விள்ள-சொல்ல. உடு-விண்மீன். பம் - விண்மீன். இவ்விரண்டும் ஒரு பொருள் குறித்த சொற்கள். உமிழ்தல்-வெளியிற் செலுத்தல். சுரர்தரு - தேவதருக்கள். காக்கள்-சோலைகள். சுருதி - மறை. சந்தை-மறையோதும் இசை. புத்தேள் குலம்-தேவர்கூட்டம். ஒளியிருந்து - மறைந்திருந்து. கவர்தல் - பெறுதல். (ஓ)*

விநாயகக் கடவுள்

வேறு

ஒற்றைச் சுதைத்தனுக் கோட்டியெங் கணுமின்னி
ஓவாது மும்மாரிபெய்
தோண்பூ தலத்துலவு செங்கோண்டல் போலுமென்
றுன்னியச் சுற்றியாமிதற்

கெற்றைக்கு மூர்தியாய் உற்றிடக் கடவமென்
றிருண்மேகம் அருகுவந்தாங்
கிலகுகரு மூடிகத் தாதிப் பிரான்சரணம்
எத்தெடுப் பாமெம்பிரான்
கற்றைப் பிறைக்கொழுந் தொளிர்சடில வட்டமேற்
கணமணிப் படம் விரித்துக்
கண்வளரு மகிநீர்மை தலையுவா ஞான்றுசெங்
கதிர்க்கிரக ணங்கடுக்கும்
பெற்றித் திறந்தெரிந் தானந்த வெள்ளப்
பெருங்கடல் குடைந்தாடுறாஉம்
பெண்ணணங் கரசியைத் தென்குளத் தூரெம்
பிராட்டியைக் காக்கவெனவே.

(கு - ரை.) ஒற்றைச் சுதைத்தனு - ஒன்றாகிய வெண்ணிற முள்ள வில்லையென இரண்டனுருபு விரிக்க. கோட்டி-வளைத்து. ஓவாது-ஒழியாமல். அச்சுற்று - அஞ்சி. ஊர்தி - வாகனம். மூடிகம் - பெருச்சாளி. இச்செய்யுளில் மூத்தபிள்ளையாரைச் செம்மேக மென்றதினால் அவர்கொம்பை வில்லாகவும், ஒளியை மின்னலாகவும் மதத்தினை மும்மாரியாகவும் கூறினமை காண்க. கற்றை-கூட்டம். சடில வட்டத்தைச் சூரியனாகவும், அதிலிருக் கின்ற பாம்பைச் சூரியனைப் பற்றிய பாம்பாகிய கேதுவாகவுங் கொள்க. கணம் - திரட்சி. அகிநீர்மை - பாம்பிருக்குந் தன்மை. கடுக்கும் - ஒக்கும். (௧)

முருகக் கடவுள்

மாங்குயில் துரந்துசுவை ஊற்றெழ மிழற்றுமொழி
வானமீன் மாதரறுவர்
மருமத் தெழுந்தபொன் வள்ளத்தின் அமிழ்துண்டு
மருவிவாழ் தற்குரியதன்
தேங்கமல வீட்டினைத் தனதெனக் கொண்டுவாழ்
திசைமுகனை வெய்துயிர்த்துச்
சிரநான்கு மோதிப்புடைத்துப் பிணித்துவன்
சிறையிட்ட தேவை நினைவாம்
ஓங்கலொரு வில்லா வளைத்தெயில் நகைத்தனலை
ஊட்டியருள் சோமேசனார்
ஒருமூ விழிக்கிடைந் தஞ்சிச் சரண்புகுந்
தோலமிடு புண்டரீசம்

பூங்குவளை மாரனுக் கருள்செய்து முகமெனப்
போர்கொண்ட வாள்விழியெனப்
பொய்த்தநுண் ணிடையெனத் தாங்குங் குளந்தா
புரிக்குளமு தைக்காக்கவே.

(கு - ரை.) மாங்குயில்-மாமரத்திலுள்ள குயில். மிழற்றல் சொல்லல். வானம் மீன்மாதர் அறுவர் - விண்ணிலுள்ள மீன் வடிவினராகிய கார்த்திகைப் பெண்கள் அறுவர். இதைக் கார்த் திகை நாளன்று விண்ணில் திங்களிற் கருகே அறுமீனைகப் பார்க்க. மற்ற நாள்களையும் அங்ஙனமே அவ்வந்நாள்களில் அதனதன் வடிவத்துடன் பார்த்துணர்க. மருமம்-மார்பு, பொன் வள்ளம்-கொங்கை. அமிழ்து- பால். கமலவீடு - தாமரை வீடு. திசைமுகன் - பிரமன். வெய்துயிர்த்து - பெருமூச்சுவிட்டு. ஓங்கல் - மலை, எயில்-முப்புரவாசிகளின் கோட்டை. மூவிழி- திங்கள், ஞாயிறு, எரி (சோமசூர்யாக்கி). சரண்புகல் - அடைக் கலமடைதல். ஓலமிடல் - இடருற்றோர் உதவி விரும்பி இரங்கிக் கூக்குரலிடல். இச்செய்யுள் அறுமுகன் சரவணப் பொய்கை யில் தனக்கிருப்பிடமாயமைந்த தாமரையைப் பிரமன் தனக்கிட மாகக் கொண்டமையின் சினந்து சிறையிட்டா னென்னும் நயம் பெறவுளது. இதனால் ஆண்டு இறைவன் இருந்தது தாமரைப் பூவெனக் குறித்தமையும் காண்க.

'அறுமுக வுருவாய்த் தோன்றி யருளொடு சரவணத்தின்
வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந் தருளினானே'

என்பது கந்தபுராணம் திருவவதாரப்படலம். தாமரையை முக மெனவும், குவளையைக் கண் எனவும், மாரனை இடையெனவுந் தாங்கும் அமுதை என்ச. (எ)

பிரமதேவர்

தவளக் குரூஉமணி குயிற்றியொளிர் தமனியத்
தனதுமனை வாயினிறுவுந்
தண்ணிய இதழ்க்கத வடைத்துத் திறக்குந்
தனித்தொழிலை வண்டுமுரலும்
பவளச் சரோருகத் தன்னைதன் னேடுற்
பவித்தபுல வற்குமந்தப்
பண்ணவற் கேதிரான புலவற்குமாகப்
பணித்தவிறை வன்புரக்க

கவளக் கடாங்கவிழ் கவுட்டுணை நெடுங்கைக்
களிற்றுப் பிடர்த்தலைவருங்
கண்ணா யிரங்கொண்ட விண்ணாடர் கோமகன்
கற்பகச் சோலைவிடபந்
துவளக் குடங்கைத் தலத்தினிற் கோட்டித்
துணைத்தமுலை மாதர்மலர்கோய்
தூமணித் தெற்றிகள் நெருங்கிய குளந்தைவரு
சுந்தரப் பெண்ணமுதையே.

(கு - ரை.) *தவளம் - வெண்மை. குருஉமணி - நிறமணி. குயிற்றி-பதித்து. தமனியம்-பொன். அடைத்து-மூடி. பவளச் சரோருகம்-செந்தாமரை. அன்னை-திரு (இலக்குமி) அன்னை தன்னோடு உற்பவித்த புலவன்-திங்கள். பண்ணவற்கு எதிரான புலவன்-சூரியன். பணித்த-செய்த. கவளம் - யானை கொள்ளும் ஒரு வாயுணவின் பெயர். கடாம்-மதநீர். கவுள் துணை - இருகதுப்பு. கண்ணாயிரங்கொண்ட விண்ணாடர் கோமகன் - இந்திரன். விடபம்-கொம்புகள். கோட்டி - வளைத்து. துணைத்த - இரண்டான. தெற்றிகள் - திண்ணைகள் : சித்திரகூடங்கள்.* (அ)

தேவேந்திரன்
வேறு

அதிருந் தரங்கக் குண்டகழி
அளறு படப்புக் குழக்கிமுழக்
கசனிக் கிகலிக் கலித்துமதத்
தடுக்கல் எடுத்துத் தெழித்துவெகுண்
டெதிருங் குழுஉக்கோள் படைகவல
இடறுங் கறைத்தாட் பருஉத்தடக்கை
இறைக்குங் கடவெண் களிற்றியானை
யெருத்தத் திவரும் புருகூதன்
முதிருஞ் சுவைத்தேன் ளமிழ்தொழுக
முழுவெண் ணிறத்து மதிக்குழவி
முருகு விரியுங் கடவுள்நதி
முழுகித் திளைக்குஞ் சடைப்பெருமான்
கதிரும் விழிகள் இருள்சீப்பக்
கங்குற் பொழுதின் ஒருங்கிருந்து
கலவிக் குறிப்பிற் குளகாணுங்
கமலா கரியைப் புரக்கவே.

(கு - ரை.) தரங்கம் - அலை. குண்டு-ஆழம். அளறு-சேறு. பட - ஆக. உழக்கி - கலக்கி, அசனி - இடி. கலித்து - ஒலித்து. அடுக்கல்-மலை. தெறித்து-சிதறி, குழூஉக்கொள்படை - சேனைக் கூட்டம். கவல - வருந்த. கறைத்தாள் - உரல்போலுங் கால். களிற்றியானை - களிறு எனினும் யானை எனினும் ஒரு பொருளாகலின் ஒரு பொருள் குறித்த இருமொழி. எருத்தம் - பிடரி. இவரும் - ஏறும். புருகூதன்-இந்திரன் (வேள்வியில் மிக அழைக்கப்படுபவன்). மதிக்குழவி - இளந்திங்கள். கடவுள் நதி-கங்கையாறு. இருள் சீத்தல் - இருளை ஓட்டல். கமலாகரி - அமுதாம்பிகை. கமலம் - நீர். ஆகரம் - உறைவிடம். புரத்தல் - காத்தல். (க)

திருமகள்

கடிப்போ தலர்த்திக் கருஞ்சுரும்பர்
களித்துத் துயில்கூர் கற்பகப்பூங்
கானம் பயிலுங் காமர்நகர்க்
கவலை துரந்தின் அமிழ்தளித்துப்
படிப்பாற் பயிலு மகளிடத்துற்
பவித்துப் புவன மூன்றனையும்
பரிக்குந் திகிரிப் படைப்பாணிப்
பகவன் மருமத் துறைமடந்தை
விடப்பாம் பிரவி வெம்மைமிசை
மேவா வண்ணங் குடைகவிப்ப
விரிக்குங் கதிர்ச்செம் பவளநிற
வேணி யணியாப் புனிற்றுமதி
முடிப்பா லரசு வீற்றிருக்கு
முதல்வன் இடப்பால் இருந்துலக
முழுதும் உயிர்த்த குளந்தைநகர்
மோய்பூங் குழலைப் புரக்கவே.

(கு - ரை.) கடி - மணம். போது - மலர். கருஞ்சுரும்பர் - கருவண்டு. காமர் - அழகு. துரந்து - நீக்கி. பரித்தல் - காத்தல். திகிரி - ஆழி. படை - கருவி. பாணி - கை. பகவன்-திருமால். மருமத்துறை மடந்தை - திரு; மார்பிலுறையும் பெண். இரவி - சூரியன், வேணி-சடை. புனிற்றுமதி - இளந்திங்கள். பூங்குழல். அமுதாம்பிகை. திகிரிப்படைப் பாணிப்பகவன் மருமத்துறை மடந்தை குழலைப் புரக்க என முடிக்க. (கo)

கலைமகள்

வேறு

அளிக்கா தர வுற்றுச் சுவைத்தகள்
அளித்தார்வன சத்துப் பொகுட்டயன்
உளத்தாமரை நச்சத்திளைத்தவன்
உரைப்பால்அருள் பெற்றுத் தரித்தவள்
களத்தாலம டக்கிச் சுரர்க்கிடர்
களைத்தேயஒ றுத்துக் கடைக்கணி
குளத்தூர்நய னத்தற் கிடத்தமர்
குளத்தூர்அமு தத்தைப் புரக்கவே.

(கு - ரை.) ஆதரவு - விருப்பம். சுவைத்த - சுவைகண்ட. அளித்து - கொடுத்து. ஆர்தல் - தங்குதல். வனசம் - தாமரை. பொகுட்டு-உள்ளிருக்கும் மெல்லிய கொட்டை. நச்ச - விரும்ப. திளைத்து - ஆண்டு. உரை-சொல். களம்-கழுத்து. ஆலம்-நஞ்சு. குளத்து ஊர் நயனத்தற்கு-நெற்றியிற் பொருந்திய கண்ணுடையவனுக்கு. குளம் - நெற்றி. இடம் - இடது பக்கம். (கக)

துர்க்கை அல்லது காளி

வேறு

துளிக்கும் பசுந்தேன் உவட்டெடுத்துச்
சொரியுஞ் செழுந்தா மரைப்பொகுட்டுத்
தோன்றற் பெருமான் முதற்கடவுள்
தொகுதிப் பைங்கூழ் களைக்கருக்கிக்
களிக்கு மகிடா சுரக்களையைக்
களைந்து சிரமேற் பாசடையிற்
கமலம் எனத்தாள் பதித்திவர்ந்த
கன்னி யெனுந்தெய் வதங்காக்க
பளிக்கு மணிமா டங்கள்தோறும்
பதிந்த தமது சாயலினைப்
பாரா இனமென் றிளஞ்சேய்கள்
பரிந்து பரிந்து வருகவென
விளிக்குங் குளந்தைத் திருநகரின்
வெளிய மதியந் தவழுமுடி
விளங்குங் கதிர்ச்செம் பவளமலை
மீது படர்பைங் கொடி யினையே.

(கு - ரை.) உவட்டு எடுத்தல் - பெருக்கெடுத்தல். சொரிதல் - சிந்துதல். செழுந்தாமரை - வளப்பமுள்ள தாமரை. பெருமான் - பிரமன். தொகுதி - கூட்டம். பைங்கூழ் - பசிய பயிர். மகிடம் - எருமைக்கடா, மகிடாசுரன் - எருமைக்கடா வடிவனை ஓர் அசுரன். பிரமன் முதலிய கடவுளர்களை, மிக வருத்தினவனாகலின் அவர்களைப் பயிர்களாகவும் அவனைக் களையாகவுங் கூறினார். பாசடை - பச்சையிலை. கன்னி - துர்க்கை. பளிக்குமணி - பளிங்குக்கல். சாயல் - நிழல். பாரா - பார்த்து. செய்யா என்னும் வாய்பாட்டு வினை ஆகலின் இறந்த காலமாயிற்று. சேய்கள் - பிள்ளைகள். பரிந்து - விரும்பி. விளித்தல் - அழைத்தல். பவளமலை : பவளமலை போன்ற செந்நிற உருவச் சிவபெருமான். பைங்கொடி - பசிய கொடிபோலும் அமுதாம்பிகை. (கஉ)

சந்தமாதர்
வேறு

இலகொளி உமிழ்தரு சிறையோ திமத்தவள்
எழிலுறு தவளவல் விடையூர் திறத்தவள்
எறுழ்வலி மயில்கடவினள்வேல் திரிப்பவள்
இருசிறை ஒருகலு ழனையே றிநிற்பவள்
உலகதிர் தரவரும் அரியே றுகைப்பவள்
உமிழ்கட மழைபொழி அயிரா வதத்தவள்
உருதரு குழிவிழி உடல்பேய் நடத்துநள்
உவரேழு மகளிர்தம் ஒளிர்தாள் பழிச்சுதும்
அலகைகள் நடமிடும் அழலார் களத்தினில்
அமரர்கள் தபுமுடல் கழிபா ணிறக்கலன்
அரவொடு திணிவரை நிகர்தோ ளிடைப்பொலி
அணியென அணிதரு பெருமான் இடத்தமர்
நிலவிரி நகையவள் இருமூ வகைப்படு
நெறிகளு நிறுவிய ஒருமா தவக்கொடி
நிலமிசை உயரிய கமலா கரத்துறை
நிருமலி மலைமகள் தனையே புரக்கவே.

(கு - ரை.) ஒளி உமிழ்தரல்-ஒளிவீசுதல். ஓதிமத்தவள்-கலைமகள், அபிராமி. தவளம்-வெண்மை, விடை-எருது, எறுழ்வலி - மிக்க வலி, கலுழன்-கருடன். அரியேறு-ஆண்சிங்கம். உமிழ்தல்-சிந்துதல், கடம்-மதம். விடை யூர் திறத்தவள்-மகேசுவரி, வேல் திரிப்பவள்-கௌமாரி. கலுழனை ஏறிநிற்பவள்-வராகி. அயிராவதத்தவள்-இந்திராணி, பேய் நடத்துநள்-காளி ஆகிய இவர்களை

*உவரெழுமகளிர் தம் ஒளிர்தாள் பழிச்சுதும் என உகரச் சுட்டுத் தந்து கூறினர். உழிதரல்-சுற்றுதல். அழலார்களம்-சர்வசங்கார எரியார்ந்த இடம். தபுதல்-இறத்தல். பால் நிறக்கலம்-என்பு மாலையாகிய அணி. நில-குளிர்ந்த வெள்ளொளி. 'குறிய தன் கீழைக் குறுகலும்' என்றதால் நிலா என்பது நிலவெனக் குறுகிற்று. இருமூவகைப் படுநெறி - அகம், அகப்புறம், புறம், புறப்புறம் ஆகிய அறுவகைச்சமயங்கள். இச்சமயங்களைச் சிவஞானசித்தியார் சுபக்கத்திற் காண்க.* (கஅ)

**முப்பத்துமுக்கோடிதேவர்**

**வேறு**

சிறகரளி மொய்த்திதழ் கோழுதிமது வைப்பசி
சிதையம டுத்துக்க ளித்தாடு தேமலர்
செருகுமள கக்கன மதர்நெடுவி ழிக்கடல்
சிறிதுகு டித்துக்க றுத்தார மேவிய
திணிமுலைம லைச்சோரி திதலைநதி யத்திரள்
செழுவிய பொற்புக்க டற்பாய ஆரெழில்
செறிதரும டித்திரை இடையறலோ ழுக்கிய
திறமைநி கர்த்தோத்தோ ழுக்காமு ரோமமுங்

குறைவறஅ ளித்தருள் குவலயம டக்கோடி
குளிர்கெட நச்சிக்க றைப்போர்வை யாலுடல்
கொளுவியதே னத்திசை முழுவதும டக்கிய
குமரியி ருட்டைப்ப டச்சாடு மாதவர்
குலவுகிர ணச்சுவை உணவிளையு ணத்தனி
குறுகிய பொற்சக்க ரச்சேவல் போலொளிர்
குருமணிகு யிற்றிய புயமலைகு ழைக்கெதிர்
குயமுடி யைச்சற்றெ டுத்தேறு பார்வையும்

வெறிகமழும் உற்பல நறுமலர்ம றைப்பினில்
விழைதன லத்தைப்ப டித்தேக நீள்செவி
வியனிலமி றுத்தமை யெணிமறமி குத்தவை
வெருவிவி ழச்சேற்று கைத்தோடி நீடிய
விரிமலர்த மக்கோரு மறைவிடமே னப்படும்
விதியென்எ னப்புக்கு விற்காதி ஞேடமர்
விளையிலிக ரத்துழை சடைவனமு றற்கெழ
விரைவில்வி ளைத்துக்கு தித்தாடு பார்வையும்

இறைமையுமளப்பரும் அழகொளிர நிற்பவள்
இமயமலைக்கட்கோ டிப்போல மேவிய
இனியமடமைக்குயில் மரகதமயிற்பெடை
இரையும்இ ருக்குக்கு ளத்தூரில் நாடியேன்
இருமைவினை முற்றற எனையுமடி மைக்கொளும்
எழிலமிழ் தச்சத்தி வைப்பான காவலர்
எரிகதிரு ருத்திரர் விறல்வசும ருத்துவர்
எனுமிவர் முப்பத்து முக்கோடி தேவரே.

(கு - ரை.) சிறகர் - இறகு: போலி. கொழுதி - கோதி. சிதைத்தல் - கெடுதல். மடுத்தல் - குடித்தல். அளகக்கனம் - கூந்தலாகிய மேகம், ஆரம் - மாலை. திணி - பருத்த. திதலை - தேமல். பொற்புக் கடல் - அழகாகிய கடல். மடி - வயிறு. திரை - அலை, அறல் - கருமணல். திறமை - செய்வகை. உரோமம் - மயிர். குவலயம் மடக்கொடி - பூமகள். நச்சி - விரும்பி. கறை - கருமை. கொளுவியது - பொருந்தினது. குமரியிருட்டு - விடியற்காலத்துக்கு முன்இருள். சாடுதல் - ஒழித்தல். குயிற்றுதல் - பதித்தல் குயம் - கொங்கை. சற்றெடுத்தேறு பார்வை என்றது, கொங்கையின் பெருமிதத்தை. வெறி-மணம். விழைதல் - விரும்பல். தன்நலம் - தன்னுடைய நன்மை. தன் என்றது, கண்ணை. வியன்நிலம் - பரந்த இடம். இறுத்தமை - தங்கினமை. மறம் - சினம். அவை : அவ்வுற்பலமலரைச் சுட்டிற்று. செற்றுஉகைத்தல் - கெடுத்துத்தள்ளுதல். மறைவிடம் - ஒளிப்பிடம். வினையிலி - சிவபெருமான். 'வினையி னீங்கி விளங்கிய அறிவின் முனைவன்' என்பதாலறிக. உழை - மான். சடைவனம் - சடைக்காடு. இறைமை - தலைமை, முதன்மை. மடமைக்குயில் - இளங்குயில், இருக்கு - மறை. அமிழ்தச் சத்தி - அமுதாம்பிகை. வைப்பு - புதைபொருள். எரிகதிர் - சூரியர். சூரியர் பன்னிருவர் உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர், ஆக முப்பத்து மூவர் என்றறிக. இச்செய்யுள் கூந்தலான மேகமானது கண்ணாகிய கடலைக் குடித்துக் கறுத்துக் கொங்கையாகிய மலையிற் சொரிந்த தேமலாகிய புதைபொருள் அழகாகிய கடலிற்பாய, அக்கடலிலுள்ள வயிற்று மடிப்பான அலையில் கருமணலை யொதுக்கிய விதத்தை யொத்திருக்கின்ற மயிர் ஒழுங்கும், பூமகள்கரிய போர்வையால் உடம்பை மூடினது போல் மூடிய (புற) இருளை யொழிக்கும் சூரிய கிரணத்தை உண்ண நெருங்கின சக்கரவாகப் பறவைபோல மணிக்குழைக்கெதிரே தலையெடுத்துப் பெருமிதத்தோடு இருக்கும் கொங்கையினேக்கமும் தமக்குப் பகையாகிய குவளைப் பூக்கள் தம்முடைய

நலத்தைப் படிந்துச் செல்லுமாறு காதினிடத்துத் தங்கி யிருந்தமை யெண்ணிச் சினமிகுந்து அவைகள் விழும்படி கெடுத் துத் தள்ளி அப்பூக்களுக்கு மறைவிடமெனப்படும் நிலைமை என் னென்று காதுடன் போர் செய்து விளையாடுகின்ற பார்வையும் முதன்மையும் அழகொளிர நிற்பவளெனக் கூட்டிச் சொல்லுக.

---

## உ. செங்கீரைப்பருவம்

இஃது ஐந்தாமாதத்தில் நிகழ்வது கூறுவது. இதைக் குழவி தலையெடுத்து முகமசைந்தாடும் பருவம் என்பர் சிலர். இதன் உண்மை யாதெனில்,

> "ஏனமக லனையதா மரைபதித் தொருதா
> ளிருத்தியொரு தாளெடுத்தே
> யெழில்நனி கனிந்தமுக தாமரை மலர்ந்தசைய
> இருமணிக் குழைவில்வீசத்
> தேன்மலர் தருங்குதலை சீர்ப்பமங் களவல்லி
> செங்கீரை யாடியருளே"

என மங்களாம்பிகை பிள்ளைத்தமிழி லுள்ளதால் ஒரு காலை முடக்கி ஒரு காலை நிமிர்த்தி இரண்டு திருக்கைகளையும் நிலத்தி லூன்றி முகத்தை மேனிமிர்த்தாடுதல் இப்பருவத்தின் செய்கை. அதுபோது தாதியர்கள் செவ்விய சொற்களை சொல்லவேண்டு மென வேண்டிக்கொள்வதாகக் கூறவேண்டும் என்பது கருத்து. கீர் - சொல்.

பொருவரிய அண்டப் பரப்பைமுழு தாளும்
புராதனர் முகத்து விழியாப்
போந்துலவு நங்கோமுநர் தம்மைத் தடுத்திடர்
புரிந்தகைக் கமலநமையும்
பருவரல் உறுத்துமென் றஞ்சிமென் குமுதமும்
பங்கயமும் ஒன்றையொன்று
பாதுகாப் பத்துயிலும் என்றர மடந்தையர்
பரிந்துகொண் டாடுசீர்த்தி
இருகைமல ரும்புவி பதித்தொரு முழந்தாள்
இருத்தியொரு தாள்மேனிமிர்த்
திக்த்ரதிரு விற்கிடை தொடுத்தவெண் தரளநிரை
ஏய்ப்பநுதல் வேர்பொடிப்பத்

திருமுக நிமிர்த்தொரு குளந்தையமு தாம்பிகை
செங்கீரை யாடியருளே
சிற்சபையில் நெற்றிவிழி அற்புதனை ஆட்டுமயில்
செங்கீரை ஆடியருளே.

*(கு - ரை.) புராதனர் - பழமையரான இறைவர். கொழுநர் - சூரியன், திங்கள் (விழிகள் சோமசூரியர்களாகலின்). இடர் - துன்பம், அது திருக்கண் புதைத்தமையாலுண்டாயது. நமை என்பது நம்மை என்பதன் குறை. பருவரல் உறுத்தும் - துன்பப் படுத்தும். அஞ்சி - பயந்து. பாதுகாத்தல் - காவலுடன் காத்தல். ஒன்றையொன்று பாதுகாப்பத் துயிலலாவது ஒன்று குவியுங் கால் ஒன்று மலர்தல். அது பகலில் தாமரை மலர்ந்திருக்கக் குமுதம் குவிதல். இரவில் குமுதம் மலர்ந்திருக்கத் தாமரை குவிதல். ஒன்று குவியுங்கால் ஒன்று மலர்தல் காத்தல்போலா மெனக் கொள்க. அரமடந்தையர் - விண்மகளிர். பரிந்து - அன்புபெற்று. தரளம் - முத்து. ஏய்ப்ப - ஒப்ப. பொடித்தல் - சிந்தல். சிற்சபையினெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில் என்றது, உயிர்களின் இருள்மலம் நீங்குதற்பொருட்டு இறைவன் திருக்கூத்தைக் காணுவது முறைமையாதலினாலும், அவள் காணுமாறு இறைவன் திருக்கூத்தாடுந் தன்மையினாலும். அங்ஙனமாதல்,*

*—'பரையிடமாக்*
*காணும்படியே கருணையுருக் கொண்டாடல்*
*பேணுமவர்க் குண்டோ பிறப்பு'*

*என உண்மைவிளக்கம் கூறுவதாலும் ஆட்டுமயில் என்றார் என்க.*

பொங்கரி பரந்தசிறை வண்டினம் விருந்துணப்
பூங்கமல நாள்முகையெலாம்
போதாக எழுபரித் தேர்கடாய்க் கடல்முகடு
பூப்பவரு பரிதிப்பிரான்
சங்கினம் உயிர்த்தவெண் தரளவட மணியுமித்
தாமரை முகிழ்த்துணையும்யான்
தண்டாத மெல்லிதழ் முறுக்குடைத் தல்லாது
தணவலென் றருகுபோந்து
வெங்கதிர்க் கற்றைகள் பரப்பியுல வுதலேய்ப்ப
மின்னுமகரக்குழைகதிர்
வீங்கிள முலைத்தலை உமிழ்ந்துதண் புயமீது
விளையாடி நிற்பவதனத்

திங்கள்மிசை ஆடக் குளந்தையமு தாம்பிகை
சேங்கீரை ஆடியருளே
சிற்சபையில் நெற்றிவிழி அற்புதனை ஆட்டுமெயில்
சேங்கீரை ஆடியருளே.

(கு - ரை.) அரி - வரி. சிறை-இறகு. இனம்-கூட்டம். முகை-அரும்பு, போதாக - மலர. கடாய்-கடவி; இது மரூஉ. தாமரை முகை மலர்தல் சூரியன் வருகையால் என்பார், 'முகையெலாம் போதாக வருபரிதிப்பிரான்' என்றதறிக. தாமரை முகிழ்த்துணை என்றது கொங்கைகளாகிய இரண்டு தாமரையரும்புகளை. அவை முத்துமாலை யணிந்துள்ளமையைக் குறிப்பிப்பார், 'சங்கின முயிர்த்த வெண்டரள வடமணியு மித்தாமரை முகிழ்த்துணையும்' என்றார் என்க. தண்டாத-நீங்காத. தணவல் - நீங்கேன்; கற்றைகள் - கூட்டங்கள். மகரக்குழை - மகரவடிவமாய்ச் செய்யப்பட்ட காதணி. பரிதிப்பிரான் அருகுபோந்து வெங் கதிர்க் கற்றைகள் பரப்பி யுலவுதலேய்ப்ப மகரக் குழை இளமுலைத்தலைக் கதிருமிழ்ந்து விளையாடி யிற்ப எனக் கூட்டுக. சூரியன் ஒருவனும், மகரக்குழை இரண்டு மாமாற்றையுணர்க.
([illegible])

கார்பூத்த மறுவுண்ட வெண்கதிர்க் கலைமதி
கவின்றநின் கமலவதனம்
காண்தோறு மறுவற்ற மதியீ தெனவுட்
கவன்றுமுன் னிற்கவஞ்சிப்
பார்பூத்த தென்குளத் தூர்ப்போங்கர் காவணம்
பரியமதில் நூழையூடு
பையென நுழைந்தொளித் தோடநிற் பணியவரு
பங்கயச் செல்விமுதலோர்
ஏர்பூத்த அங்கையர விந்தமலர் கூம்பவவர்
இணைவிழிக் குவளை யெல்லாம்
இரும்புனல் தேத்துளி பொடிந்துமிழ்ந் தலரவருள்
எனுமமிழ்த தாரைகான்று
சீர்பூத்த முகமதியம் ஆடவமு தாம்பிகை
சேங்கீரை ஆடியருளே
சிற்சபையில் நெற்றிவிழி அற்புதனை ஆட்டுமெயில்
சேங்கீரை ஆடியருளே.

(கு-ரை.) கார்-கருமை. மறு-களங்கம். உண்ணல்-கொள்ளல் வெண்கதிர்-வெள்ளிய ஒளித்தொகுதி. கவின்ற-அழகு செய்த.

உள்-மனம். கவன்று-கவலையுற்று. பொங்கர்-சோலை. காவணம்-பந்தல். நாமைழ-திட்டு; (சிறு)வாயில். பையென-மெதுவாக. பங்கயச் செல்வி முதலோர் - திருமகள் முதலாயினர். மறுவுண்ட மதி மறுவற்ற நின் வதனங் காண்டொறும் உன் முன்னிற்க வஞ்சிக் காவணத்தி னுழைந்தோடவும், செல்வி முதலோர்கை அரவிந்தங் கூம்பவும், அலரவும், முகமதியமாடச் செங்கீரையாடியருள் என இயைக்க. (கஎ)

மணிதுற்ற தவிசெனப் பருமணிப் பருமம்
வயங்குமடி மீதிருத்தி
மதிக்கடவுள் தன்மனை யெனக்குலாய்த் தன்னமிழ்தம்
வாக்குவ தேனத்தீம்பயம்
பணிலத்தின் வாய்க்குமுதம் ஊட்டிமற் றிதுமாசு
பரியாது சாலாதெனப்
பாரிழைத் தொருபொட்டு நுதல்மதிக் கிட்டுப்
பசுங்கழையின் மஞ்ஞைநின்றுங்
கணிபெற்ற புயமேல் அணைத்திரு மதித்தேவர்
அளவளாய்க் குழீஇயதேய்ப்ப
அழகிய முகத்துமுத் தாடியெழில் மேனைசீ
ராட்டமகிழ் கூர்ந்துகோடியேம்
திணிவைத்த நெஞ்சங் கரைக்குமமு தாம்பிகை
செங்கீரை ஆடியருளே
சிற்சபையில் நெற்றிவிழி அற்புதனை ஆட்டுமயில்
செங்கீரை ஆடியருளே.

(கு - ரை.) துறுதல்-நெருங்குதல். தவிசு-ஆசனம். பருமம்-பதினன்கு கோவை மணிவடம். இது திருவிளையாடற்புராணந் தடாதகைப் பிராட்டியார் திருமணப் படலத்தில் 'ஈரேழ் பருமம் என்று கடுஅ-ஆவது செய்யுளில் உள்ளதைக்காண்க. திவாகரனார் இதைப் பதினெண்கோவை மணியென்பர். 'மேகலை காஞ்சி கலாபம் பருமம், விரிசிகை யேழுமோ ரெட்டு மீரெட்டு, மூவாறு காலெட்டு முறைக்கோவை மணியே' என்பது சூத்திரம். மனை - மனைவி. குலாய்-கொண்டாடி. வாக்குவது - வார்த்தல். தீ - பயம் - இனிப்புள்ள பால். பணிலம் - சங்கு. வாய்க்குமுதம் - வாயாகிய குமுதம். மாசு - களங்கம். பரியாது - தாங்காது. சாலாது - ஒவ்வாது. பார் இழைத்து ஒரு பொட்டு நுதல் மதிக்கு இட்டு என்பது, நிலத்தில் நீரிட்டுத் தேய்த்து வழித்து அம்மண்ணைப் பொட்டாக நெற்றியிலிடல். அவ்வாறிடல் உலக வழக்கு. 'வீறு பூரண நிலப்பொட்டுமிட்டு' என்பதாலுமறிக

கழை - மூங்கில். பசுங்கழையின் மஞ்ஞை னின்றூங்கணி பெற்ற புயமேல் அணைத்தென்பது மேனையின் தோள் மூங்கில் போன்றதும் அமுதாம்பிகை மயில் போன்றவளும் எனுநயந் தோன்ற உரைத்தமை எனக் கொள்க. இருமதித்தேவர் மேனைமுகமும் அம்மை முகமும் ஒன்றாயிணைந்து முத்தமிட்டதைக் குறித்தது. மேனை - மலையரையன் மனைவி. (கஅ)

முக்கனி செறித்தநறு நீர்ப்பந்தர் முல்லைவெண்
முகையனைய மூரலறுகால்
மூசிய இளம்போங்கர் தேசுறு மலர்ப்பொய்கை
முதலான அறம்யாவையும்
தோக்கமறை யாகம விதிப்படி யியற்றுநாள்
தோலாத கருணைகூர்ந்து
துண்ணென எழுந்தருள் திருச்சோம காதனார்
தூமேனி குழைவித்தவை
இக்கரமும் இக்கரமும் இத்தனமும் இத்தனமும்
என்றுயிர்த் தோழியர்களாய்
ஏத்துமட மாதரார் தம்மைத் தெளித்திடுவ
தேய்ப்பமுக மதியமசையத்
திக்கெட்டும் ஏத்துங் குளந்தையமு தாம்பிகை
செங்கீரை ஆடியருளே
சிற்சபையில் நெற்றிவிழி அற்புதனை ஆட்டுமயில்
செங்கீரை ஆடியருளே.

(கு - ரை.) முக்கனி - வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி. மூரல்-சோறு. அறுகால்-வண்டு. அறம் யாவையும் என்றது, அது முப்பத்திரண்டு என்பதை. இதன் விரிவைக் காஞ்சிப் புராணம் தழுவக் குழைந்த படலத்திற் காண்க. இயற்றுநாள்-செய்யுநாளில் (செய்தது காஞ்சியில்), தெளித்திடுவது - தெளிவிப்பது. ஏய்ப்ப - ஒப்ப. (கக)

வேறு

போங்கெழில் நின்முகம் ஆடுதோ றுங்கமழ்
போதரி நீள்விழிகள்
பொற்செவி யிற்பல காலுமே திர்ந்து
புகுந்து மறிந்துலவச்
செங்கதிர் நீள்குழை தம்மோடு தாமெதிர்
சென்று மணிக்கலோடும்

சேயிரறு பொன்னின் அரும்பு பிதிர்ந்து
தெறித்திட மோதுதிறம்
தங்கிளை சார்ந்திடை யாவகை சாற்றமோய்
தாம அயிற்படையால்
தண்குரு தித்துளி வீழ்தர வீரர்கள்
தம்மொடு தாமெதிரா
அங்கை கலந்தமர் ஆடுதல் ஆமென
ஆடுக செங்கீரை
அளந்தறி யாத குளந்தை நிலாவமு
தாடுக செங்கீரை.

(கு - ரை.) *மறிந்து - திரும்பி. செயிர் - குற்றம். பிதிர்ந்து- உதிர்ந்து. தெளித்திட - சிதற. இடையாவகை - பின்னிடையா விதம். மொய்த்தல் - நெருங்குதல். தாமம் - மாலை. அயில் - வேல். குருதித்துளி - இரத்தத்துளி. ஆம் - ஒக்கும். வேல் கண் ணிற்கும், குருதித்துளி மணிக்கல் பொன்னரும்பிற்கும், குழை கள் வீரர்கட்கு முவமமாம்.* (உ0)

பல்லுயி ருங்களி கூர்கரு ணைக்கடல்
பம்பிவ ளைந்ததெனப்
பாலொளி கான்ற நறும்புனல் சூழ்ந்து
பரந்தொளிர் கம்பையிடை
வில்லுமிழ் மின்னுரு வச்சுடர் வேணிவிண்
ணோனைவ டந்தழுவி
வீங்கிள வெம்முலை மார்புழ அங்கையின்
மேதகு தோள்குழையப்
புல்லி அணைப்பது போல்வயி ரங்கள்
பொதிந்தவிர் தொட்டிலினிற்
பொன்னணி பாவையொ டாடி அணைத்துப்
பொழுதுக ழித்தருளும்
அல்லிம லர்க்குழல் வல்லி பராபரை
ஆடுக செங்கீரை
அளந்தறி யாத குளந்தை நிலாவமு
தாடுக செங்கீரை.

(கு - ரை.) *பம்பி - பரவி. கான்றல் - கக்கல். கம்பை - கம்பாநதி. வில் - ஒளி. உமிழ் - சிந்துகின்ற. வடம் - மணிவடம்.*

மார்பு உழ-மார்பில் உழுதல் செய்ய, அங்கை-அகங்கை. அவிர்தல் - விளங்கல். பொழுது கழித்தருளும் - காலங்கழிக்கும். அல்லி - உள்ளிதழ். கம்பையாற்றிற்கு வயிரத் தொட்டிலையும், வேணி விண்ணேறனுக்குப் பொன்னணி பாவையையும் ஒப்புமையாகக் கொள்க. (உக)

குலத்தில் வளர்த்திடும் அன்னையர் செந்துகில்
கூர்மடி மீதிமயக்
குன்றி னரக்கலர் வாழ்க்கை யெனக்களி
கொண்டு குலாவியவர்
கலைப்பொலி முகமதி யுங்குழல் முகிலும்
கண்டென வாய்க்குமுதம்
கதிர்த்த நகைத்தள வலர வரும்பக்
கைக்கம லங்குவியா
முலைக்கம லச்செழு முகையொடு நட்பு
முயங்கிட வாடலுறும்
மூரிவளத்துத ரத்திரு வாலெழில்
மோய்த்து மிகத்தழைய
அலக்க ணறச்சுவை யாரமிழ் துண்பவள்
ஆடுக செங்கீரை
அளந்தறி யாத குளந்தை நிலாவமு
தாடுக செங்கீரை.

(கு - ரை.) குலத்தில்-நற்குலத்தில். மடிமீது-மடியின்மேல். இமயக்குன்று - பனிமலை. அரக்கு - செந்நிறம். அலர் - மலர். அரக்கலர் வாழ்க்கை - செந்தாமரையில் வாழ்ந்திருத்தல். அவர்-அவ்வன்னையர், நகைத்தளவு - பல்லாகிய முல்லை. அரும்ப - அரும்பும்படி. குவியா - குவித்து. முலை - அன்னையர் முலை. கையைக் குவித்து அன்னையர் முலைமேல் வைத்து என்பதை விளக்க 'கைக்கமலங் குவியா முலைக்கமலச் செழுமுகையொடு நட்பு முயங்கிட' எனக் கூறினார். முயங்கல் - தழுவுதல். வாடல் - வதங்குதல். மூரி - பெரிய. உதரம் - வயிறு. திரு - அழகு ஆல் - ஆலிலை. அலக்கண் - துன்பம். அமிழ்து - முலைப்பால் என்க. முடிமீது குலாவி அலர, அரும்ப, கைக்கமலங் குவியா, நட்பு முயங்கிட, ஆல் மிகத் தழைய உண்பவளெனக் கூட்டுக. (உஉ)

வேறு

வானம் எழுங்கரு மேக இனங்கள்வ
றந்தீ ரம்போய்வன்

மால்வரை எங்கணும் ஓடிட வெண்டிமிர்
வண்டு தும்போது
நான முயங்கிய வாச நறுங்குழல்
நந்தா வந்தீப
நாவில் எழுந்தோளிர் தூம ஒழுங்கென
நன்றூர் மென்சாயல்
மேனி நிறந்தரு மேனை அணங்குவி
ழைந்தார் வங்கூர
மீறி வளர்ந்தழ கான குளந்தைவி
ளங்கா நின்றூறு
தேனிறை கொன்றையி ஞனிட நின்றவள்
செங்கோ செங்கீரை
தேவர்தொ ழுங்கலி யாண சௌந்தரி
செங்கோ செங்கீரை.

*(கு - ரை.) இனங்கள் - குலங்கள். வறந்து - வற்றி. மால்-பெருமை. இமிர்தல்-ஒலித்தல். நானம் - மான்மதம். முயங்கிய-தழுவிய. நந்தாமை - கெடாமை. தூமம் - புகை. சாயல் - அழகு. மேனி - வடிவம். நிறம்-ஒளி. வண்டுதும்போது நான முயங்கிய குழலானது தீபநாவில் எழுந்தொளிர் தூமவொழுங் கென மேனிநிறந்தரு மேனையணங்கு என இயைக்க. ஆர்வங்கூர-விரும்பல். கொன்றையினன் - சிவபெருமான். இடம் நின்றவள்-இடப்பாகத்திலிருந்தவள், அமுதாம்பிகை. செங்கீரை செங்கீரை என அடுக்கப்படுவது செங்கோ செங்கீரை என்றூயிற்றென்பர்.*

கோல நெடும்பனி மாலி மயம்பயில்
கோம்பே சேம்பாத
கோக னகந்தொழு வாரு ளநின்றகோ
ழுந்தே பைந்தேனே
ஞால மளந்தவன் நாடும் அரும்பெறல்
நங்காய் வெங்கோப
காம விடஞ்செறி காம ருகண்டர்தம்
நண்பே தண்போதோ
டேல மலைந்திருள் கூரு நறுங்குழல்
எந்தா யெம்பாசம்
ஈறு படும்படி ஞான மணங்கமழ்
இன்பே அன்பாளர்

சீல மிகுங்கம லாக ரம்வந்தவள்
செங்கோ செங்கீரை
தேவர் தொழுங்கலி யாண சௌந்தரி
செங்கோ செங்கீரை.

(கு - ரை.) கோலம் - அழகு. மால் - பெருமை. இமயம்—பனிமலை. பயிலல் – வாழ்தல். செம்பாத கோகனதம் - செந்தாமரைப் பாதம். ஞாலம்-பூமி. நங்காய்-பெண்ணிற் சிறந்தவளே. வெங்கோபம் - கொடிய சினம். நாமம் - அச்சம். விடம்-நஞ்சு. செறிதல் - இருத்தல் மேற்று. காமரு - அழகிய. நண்பே - நட்பினளே. ஏலம் - மயிர்ச் சாந்து. அளைதல் - பூசுதல். இருள்கூர் - மிக்க கருமையுள்ள. ஈறு - முடிவு. சீலம் - உயர்வொழுக்கம். (உசு)

---

## ௬. தாலப்பருவம்

இஃது ஏழாந்திங்களில் நிகழ்வதாகக் கூறுவது. இது பிள்ளையைத் தொட்டிலிலிட்டு மகளிர் நாவினுற்பாடும் பாடல்களுடன் தொட்டிலாட்டும் பருவமென்றறிக. தால் - நா. தாலாட்டும் பருவத்தையே தாலப்பருவமென்று கூறுதல் பண்டையோர் வழக்கு.

மதுரங் கொழிக்கும் கொழுந்தேறல்
மடுத்துச் சுரும்பர் அடைகிடக்கும்
மலர்ப்பூந் தடத்தைக் காண்டலுஞ்சேம்
மணிகால் குடுமிப் பணியுலகம்
இதுவு மரவந் தனக்கிடமா
யிருக்குங் கொல்லோ வென்றழுக்கா
றெய்தித் தன்கீழ்ப் படத்தாழ்த்தும்
இயல்பை அறிந்தா லெனக்கரைக்கட்
பொதுளி உறவு கொண்டநறும்
போதும்பர் நாக ருலகேனுமொப்
புமையாற் புலவோர் பதிதாழ்த்திப்
பொற்ரு துதிர்க்குந் திருக்குளந்தைப்
பதியின் மகிழ நறியசுவைப்
பாகே தாலோ தாலேலோ
பனிலம் உயிர்த்த தரளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ.

(கு - ரை.) மதுரம் - சுவை. தேறல் - தேன். மடுத்து - உண்டு. அடைகிடத்தல் - நீங்காதிருத்தல் (குஞ்சுபொரிக்க முட்டையின் மேலிருத்தல்). குடுமி - உச்சி. பணியுலகம் - பாம்புலகம். இதுவும் என்றது, இத்தடாகமுமென நின்றது. அழுக்காறு - பொறாமை. தன் கீழ்ப்படத் தாழ்த்தும் இயல்பை யறிந்தாலென என்பதை (பாம்புலகமானது அத்தடாகத்தை) தனக்குக் கீழாகத் தாழும்படி செய்யும் தன்மையை யுணர்ந்தாற் போல எனக்கொள்க. இதனால் தடாகத்தினாழமானது நாகருல கத்திற்குங் கீழாக இருக்கிறதென்பது உணர்க. கரைக்கண் - அத்தடாகக் கரையில். பொதுளுதல்-நெருங்கல். உறவுகொண்ட நட்புக்கொண்ட. நறும்பொதும்பர் - நல்ல சோலை. பாவாய் - ஓவியம்போலும் பெண்ணே. கரைக்கட்பொதுளியுறவுகொண்ட நறும்பொதும்பர் நாகர் உலகம் என்கிற பெயர் ஒப்புமையால் தேவர்கள் பதியைத் தாழச்செய்து மஞ்சள் நிறமுள்ள மலர்ப் பொடியை யுதிர்க்கும் எனப் பொருத்துக. இதனால் சோலை தேவர் உலகத்திற்கும் உயர்ந்திருக்கிற தென்பது கருத்தாகக் கொள்க. (உ௫)

இருள்கால் சீத்துச் சோதிவெயில்
எறிக்குஞ் செக்கர் மணித்தோகையின்
இழைக்கும் பசும்பொன் தலத்துயர்த்த
இருங்கே தனத்தின் மிசையுயிர்கட்
கருள்கால் கலைவெண் முழுமதியம்
அமரும் பரிசு தழல்நாப்பண்
அமைத்த தூணத் தருந்தவஞ்செய்
அறவோர் கடுக்கு மேல்நிலத்துச்
சுருள்கால் மலர்ப்பூங் கூந்தலிளந்
தோகை அனையார்க் கெதிர்நடிக்கும்
சுரமா மகளிர் விழித்தொழிற்குத்
தோற்றுச் சமழ்க்குந் திருக்குளந்தைப்
பருகா அமிழ்தே பெருங்கருணைப்
பரையே தாலோ தாலேலோ
பணிலம் உயிர்த்த தரளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ.

(கு - ரை.) கால் சீத்து - துடைத்து. சோதி வெயில்-மிக்க வெயில். எறிதல் - காய்தல். செக்கர் மணி - செம்மணி. இழைத் தல்-செய்தல். உயர்த்தல் - உயர வெடுத்துக் கட்டல். இருகே தனம்-பெரிய கொடி. பரிசு-தன்மை, நாப்பண் - நடு. கடுக்கும்-

ஒக்கும். பொற்றலத்தில் உயர்த்தின கொடியில் மதியமருந்தன்மை எரியின் நடுவில் நாட்டிவைத்த தூணின்மேலிருந்து உடல் முழுவதும் நீறணிந்து தவஞ்செய்வோரையொக்குமென்க. மேனிலம்-மேடைநிலம். கால் - விரிதல். விழித்தொழில் - கண்களின் தொழில் (கண்கள் இமைத்துச் சுழலல்). தோற்று - தோல்வியடைந்து. சமழ்த்தல்-நாணுதல். இமையா நாட்டங்களையுடையவர்களாதலான் அவர்களுக்குக் கண் இமைத்துச் சுழலல் இல்லையென்றுணர்க. (உசு)

மணங்கேழ் வனசம் ஊற்றெடுத்து
மதுவார் பொகுட்டுச் சுறுச்சுமந்து
வயிறு வருந்திக் கருவுயிர்க்க
வயின்பார்த் துழலும் பெடைஞெண்டைக்
கணங்கே ழயின்முள் தாட்படுத்துக்
கவைத்தாள் இடையுற் றலையூடு
கருவண் டினங்கள் புடைசூழக்
கலந்து முரலத் துவக்குண்டு
சுணங்கோர் முலைப்பெண் அணங்குநினைச்
சுமந்து மகளிர் தாலெடுப்பத்
துயிலு மணித்தோட் டிலைக்காட்டுந்
தொடுநீர் வாவித் திருக்குளந்தைப்
பணங்கேழ் அரவப் பேரல்குற்
பரையே தாலோ தாலேலோ
பணிலம் உயிர்த்த தாளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ.

(கு - ரை.) கேழ்வனசம் - செந்தாமரை. சுறு-சுறுமீன்கள். கருவுயிர்த்தல்-பிள்ளைபெறுதல். வயின்-இடம். பெடைஞெண்டு-பெண் நண்டு, கணம் - திரட்சி. கேழ் - நிறம்; அயில் - கூர்மை, மூள்தாட் படுத்துதல் - முள்ளையுடைய தண்டாகிய தாளினால் (கொடியினால்) அகப்படச்செய்தல். கவை - பிளவு. வனசம் முட்டாட்படுத்துப் (பெடைஞெண்டின்) கவைத்தாளிடையற்று எனக்கூட்டுக. அலையூடு - திரைகளினூடே. முரல-ஒலிக்க. துவக்குண்டு - பிணிப்புண்டு (கச்சினால்). சுணங்கு - தேமல். தொடுதல் - தோண்டுதல். வாவி - குளம். தாலெடுத்தல் - நாவாற் பாட்டை யெடுத்துப் பாடல். தாமரையானது தன் பொகுட்டில் சுறுமீனைச் சுமந்து நண்டின் பிளவுபட்டகால்களால் தண்டு வெட்டப்பட்டு அலையூடு அசைந்து வண்டுகள் ஒலிக்க நின்னைச் சுமந்து மகளிர் தாலாட்டத் துயிலுந் தொட்டிலைக் காட்டுமென இயைக்க. (உஎ)

கந்தங் கமழு நறுங்களபக்
கலவை அளைந்த முலைக்குவடாம்
கரடக் களிற்றின் மருப்பினிடைக்
கவின்ற உரோமப் புழைக்கரத்தால்
நொந்தங் கலமந் திறுங்கோடிபோல்
நுணுகித் துவளுஞ் சிற்றிடையார்
நுவலுங் கிளவிக் கிடைந்தகுயில்
நுவலா தடங்கி அவ்விசையின்
சந்தம் பலநா ளகம்பயிலத்
தழுவிச் சிலநாள் வாய்விண்டு
சாற்றி ஒப்ப நோக்கிலொவ்வாத்
தவற்றாற் பின்பும் வாயடைக்கும்
பைந்தண் பொழில்சூழ் குளந்தைநகர்ப்
பரையே தாலோ தாலேலோ
பணிலம் உயிர்த்த தரளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ.

(கு - ரை.) முலையைக் குவடெனவும், அதனை மருப்பெனவும் கூறியதனால் முலைக்குவடாம் மருப்பு என இயைக்க. கவின்ற - அழகு செய்த. உரோமப் புழைக்கரத்தால் - மயிரொழுங்காகிய துளையுள்ள துதிக்கையினால். அலமரல்-வருந்தல். துவளல்-அசைதல், கிளவி-சொல். விண்டு - திறந்து. வாயடைத்தல் - பாடாதிருத்தல். (௨௮)

சுரும்பர் துளைக்க உவட்டெடுத்துச்
சோரியும் இரதச் செழுங்கரும்பைச்
சுவைத்துக் கதலிக் குலைசாடித்
தூங்குந் தெங்கம் பழஞ்சிதறி
விரிந்த பசுநெட் டிலைக்கமுகின்
மேவிக் ககனத் தருவையதன்
மீது படர்பூங் கொடிவழிபோய்
மிதித்துக் குனித்து விளையாடி
வரிந்த கழையில் நெடுங்கயிற்று
வழிபோய் நடிக்கும் பொருநர்திறம்
மானக் குரக்குக் குலங்குதிக்கும்
வளஞ்சேர் போதும்பர் சூழ்குளத்தூர்

பரிந்து தொழுவோர் மனத்துநறும்
பாகே தாலோ தாலேலோ
பணிலம் உயிர்த்த தரளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ.

(கு - ரை.) உவட்டெடுத்து - பெருக்கெடுத்து, சுவைத்து - அடித்துச் சுவைத்து. தூங்குதல்-தொங்குதல் (அசைதல்) தெங்கு-தென்னை, ககனம்தரு-விண்ணிலுள்ள தேவதருக்கள். குனித்து - கூடித்து. வரிந்த கழை - கட்டின மூங்கில் (கழைக் கூத்தர் என்பதும் இதனாலறிக). பொருநர் - கூத்தர். திறம் - தன்மை. மான - ஒப்ப.

கழைக் கூத்தர்போலக் குரக்குக்குலம் குதிக்கும் குளத்தூர் என இயைக்க. (உக)

வேறு

சுலவித் தரளப் பவளக் குவைகள்
சுருட்டிக் கரைபுரளும்
துவலைத் திரைமைக் கடல்நின் றெழுமிரு
சுடர்கள் முன் அச்சுடர்தம்
சிலையிற் கவினக் குயிலும் உருப்புனல்
தீயைப் புடைபெருகச்
சிந்திப் பனிகூர் பொழுதிற் புனலிற்
சேர்ந்தற மாற்றுநரை
உலரத் தெறுவெப் புடைவே னிற்பொழு
தொள்ளெரி வாய்த்தவநோன்
புழப்ப வரைப்பொரு நொச்சி மதிற்குலம்
ஓங்கு குளந்தையெனும்
தலனிற் பொலிவு பெறப்பயி லுங்கொடி
தாலோ தாலேலோ
தகரக் குழலாய் அமுதப் பிடியே
தாலோ தாலேலோ.

(கு-ரை.) சுலவி-சுற்றி துவலைத்திரை-நீர்த்துளிகளையுடைய அலை. அச்சுடர் தம் சிலை என்பது-சந்திர காந்தக்கல். சூரிய காந்தக்கல். இருசுடர் என்பதை அகரச்சுட்டு உணர்த்தியதென்க. குயிலும் உரு-(மதில்களிற்) பதிந்த வடிவங்கள். அறம்ஆற்றுநர் அறஞ் செய்பவர்கள். உலர - காய. உழப்பவர் - செய்பவர். பொரும்-ஒக்கும். நொச்சி மதில். ஒரு பொருட் பன்மொழி.

*நொச்சி - நொச்சிச் செடியுமாம். இது நொச்சி - பாடாண்டிணையில் ஒன்றுமாம். 'நொச்சியை முற்றியக் நொச்சியிலுள்ளார் பச்சிள நொச்சி பறித்தணியாமே' என்பதையும்நோக்குக. குயிலுமுரு திங்கள் முன் புனலையும் சூரியன்முன் தீயையுஞ் சிந்திப் புனலில் அறஞ் செய்பவரையும், தீயில் தவம் இழைப்பவரையும் பொரும் என முடிக்க.* (௩௦)

கோங்கு விரிந்த நறுங்கம லங்கள்
கொழிக்கு மதுப்புனலாக்
குவிதர ஊழ்த்துதிர் தண்ணிய தாது
குவிக்கும் எருக்குவையாப்
பங்க நிரந்த வயற்கண் விளைந்து
பழுத்தெழு நெற்குலைபோய்ப்
பசும்புர வித்திரள் பூட்டிய தேரிற்
பரிதிக் கடவுள்புடைப்
பொங்கொளி வெண்கவ ரித்தோகை வீசுவ
போல ஒசிந்தசையும்
பொற்பு மிகுங்கம லாகர மேவிய
பூரணி மெய்யடியார்
தங்கள் பணிக்கென எம்மை அளித்தவள்
தாலோ தாலேலோ
தகரக் குழலாய் அமுதப் பிடியே
தாலோ தாலேலோ.

(கு - ரை.) *கொங்கு - மணம். கொழித்தல் - குவித்தல். ஊழ்த்து - பதங்கெட்டு. தாது-பூப்பொடி. எரு-குப்பை. பங்கம்-சேறு. கவரி - சாமரை. ஒசிந்து - துவண்டு. கமலாகரம்-குளத்தூர். தகரம் - மயிர்ச் சாந்து.* (௩௧)

பவளக் கொடிபடர் வேலை முகட்டிற்
பாயொளி கான்றெழுசெம்
பரிதி நிகர்ப்பச் செம்மணி மாலை
பரப்பிய மைக்குழல்மேல்
திவளக் கதிர்விடு கொண்டை திருத்திச்
செஞ்சுடர் வாள்மகரத்
திருவணி யக்கடல் மகர மெனத்தனி
செருகிப் பகைஞருளங்

துவளச் சிலைபடு கணையென நுதலிற்
சுட்டி தரித்தருகிற்
சுடர்பிர தாப மெனப்பொட் டெழுதித்
துன்னிய கீர்த்தியெனத்
தவளப் பணிமுக் கிட்டொளிர் பாவாய்
தாலோ தாலேலோ
தகர்க் குழலாய் அமுதப் பிடியே
தாலோ தாலேலோ.

(கு - ரை.) வேலை - கடல். முகடு - உச்சி. பாய் ஒளி - பரந்த வெளிச்சம். விகர்ப்ப - ஒப்ப. செம்மணி மாலை - மாணிக்க மாலை. மை - எருமை. கொண்டை - ஐம்பாலிலொன்று. மகரத் திருவணி - மகர மீன் வடிவமாகச் செய்த திருநகை. அக்கடல் மகரம் என - அந்தக் கடலிலுள்ள சுறுவைப்போல. மகரத் திரு வணி தனு செருகி எனச் சேர்க்க. சிலை - வில். கணை - அம்பு. சிலை படுகணையென நுதலிற் சுட்டி தரித்து என்பது. சிலை நெற் றிக்கும் கணை சுட்டிக்கும் ஒப்பாகக் கூறியதெனக்கொள்க. பொட்டு - சிந்தூரப்பொட்டு. தவளப்பணி - வெண்நகை (முத்து நகை). பிரதாபத்திற்குச் செம்மையும், கீர்த்திக்கு வெண்மை யும் நிறமாகக் கூறியதுணர்க. (கூஉ)

வேறு

பரந்த வெண்புணரி மீதோன் வேதா மாதேவர்
பணிந்து தொண்டுசெய வேலே சேலே போலாடுங்
கருங்க ணுந்தமளி யீவாய் பாவாய் தாவாது
கறங்கு வண்டளக மானே தேனே ஏனோர்தம்
புரங்க டந்தநகை வாயார் தூயார் சேயார்பாற்
புணர்ந்தி டும்பசிய தோகாய் காவாய் நீகாவென்
றிரங்கும் அன்பரக வாழ்வே தாலோ தாலேலோ
இலங்கு ளங்கைவரு தாளாய் தாலோ தாலேலோ.

(கு - ரை.) வெண் புணரி - பாற்கடல். வெண் புணரி மீதோன் - திருமால். வேதா - பிரமன், வேதத்திற்குரியவன். உந்துதல் - முற்செலுத்தல். அளி - அருள். தாவாது - வருந்தப் படாமல், கறங்குதல் - ஒலித்தல். புரங்கடத்தல் - முப்புரங்களை வெல்லல். நகை - சிரிப்பு. சேயார் - செந்நிறத்தவர். புணர்ந்திடும் என்றமையால் சேய்மையிலுள்ளவர் என்னும் நயமும் உள்ளது காண்க. அகம் - மனம். இலம் - இல்லம். (கூகூ)

மலங்க டங்குமரு ளூராய் தாலோ தாலேலோ
மலங்க டங்குமரு ளூராய் தாலோ தாலேலோ
கலங்க லந்தவரை யேயாய் தாலோ தாலேலோ
கலங்க லந்தவரை யேயாய் தாலோ தாலோ
புலங்க டந்தபர நாடாய் தாலோ தாலேலோ
புலங்க டந்தபர நாடாய் தாலோ தாலேலோ
இலங்கு ளங்தைவரு தாளாய் தாலோ தாலேலோ
இலங்கு ளங்தைவரு தாளாய் தாலோ தாலேலோ.

(கு-ரை.) மலங்கு அடங்குதல் - கலங்குதலொழிதல். மலங்கல் - கலங்கல். மலங்கி: முதனிலை மாத்திரை யின்று தொழிற் பெயற் பொருளுணர்த்திற்று. முதனிலைத் தொழிற்பெயர்: மலங்கு + அடங்கும் + அருள் + ஊராய், மலங்கள் - மும்மலங்கள். தங்கும் மருள் - தங்குகின்ற மயக்கம். ஊராய் - செல்லாதவளே. எதிர்மறை. ஊர்தல் - செல்லுதல். கலம் + கலந்த + அரை + ஏய்—ஆய்—கலம்-மேகலாபரணம். கலந்த - பொருந்திய. அரை- இடையை. ஏய் - பெற்றுள்ள. ஆய் - தாயே. கலங்கு + அலந்த வரை + ஏயாய். கலங்கு - (அறிவு) கலங்குகின்ற. அலந்தவரை- துன்பமுற்றவரை - ஏயாய் - சேராதவளே. புலம் + கடந்த + பரம் + நாடாய். புலம் - எல்லாத் தேயங்களையும். கடந்த- கடந்துநின்ற. பரம் நாடாய் - வீட்டு நாட்டையுடையவளே. புலங்கள் + தந்து + அபரம் + நாடாய். புலங்கள் - அறிவுகளை, தந்து - கொடுத்து, அபரம் - பின்னிடுதலை, நாடாய் - விரும்பா தவளே, அபரம் - பின்- அபரபக்கம் என்பதாலுணர்க. இலங்கு உளம் தைவரு தாளாய் - விளங்குகின்ற அன்பர்களுடைய மனத் தின்கண் மிகப்பொருந்துகின்றகால்களையுடையவளே. தைவரல்- தடவுதல் ;இங்குப் பொருந்தலுக்காயிற்று. இலம் குளந்தை வரு தாளாய் என்பதைக் குளந்தையிலம் வருதாளாய் என மாற்றிக் குளத்தூர் இல்லமாக வருகின்ற முயற்சியுடையவளே எனவும் கொள்க. தாள் - முயற்சி. (௩௪)

———

## ச. சப்பாணிப்பருவம்

இஃது ஒன்பதாவது திங்களில் நிகழ்வது, இது குழவி கையொடு கை பொருந்துமாறு கொட்டும்படி கூறும் பருவமாம். பாணி - கை.

உருப்போலி மணிப்புனல் உடுக்கைப் புவிக்கொடி
உரத்திற் குலாவுமாக்கள்
உருத்தோன்றை ஆற்றினெதிர் பத்தாற்று வோமெனும்
உரைக்கிலக் கியமாகவோண்
குருப்போலி விரற்செறி செறித்துப் பொலந்தொடிகள்
கொழுவித் தனைப்பரிவினுற்
கொண்டாடு நின்றிருத் தாதைகிளை ஒன்றைக்
குழைத்துப் பணித்தஇறைவன்
திருப்போலி கடுக்கை தழை தோட்குவடு பத்தையும்
செழுந்தழும் பாக்குழைத்துத்
திறல்கொண்ட நறுமலர்க் காந்தளங் கைத்தலஞ்
சேந்தழ கெறிப்பஇமையோர்
தருப்போலி மலர்த்தொடைக் கூந்தலமு தாம்பிகை
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே.

(கு - ரை.) உடுக்கை - உடை. 'உடுக்கையிழந்தவன் கை போல்' என்றதால் அறிக. உரம் - மார்பு. 'ஒன்றுசெய்தாற் பத்துச் செய்வேன்' என்பது பழமொழி. குரு - நிறம். விரற் செறி - விரலிற்போடுவதாகிய மோதிரம். பொலம் - பொன். தொடி - வளையல். தாதை - இமயமலை-கிளை - மேருமலை. மலைக்கு மலை சுற்றமாயிற்றென்றுணர்க குழைத்தல் - வளைத்தல், தோட் குவடு - தோளாகிய மலை. செழுந்தழும்பாக் குழைத்து - செழுமையான வடிவாகும்படி குழைவித்து. இது காஞ்சிப் புரா ணக்கதை- சேந்து-சிவந்து: சுவை காணல்-இனிமையுணர்தல்.

(கூ)

உள்ளொளி ததும்பிமேற் பொங்கிப் புறத்தினும்
உவட்டெடுத் துப்பரந்தாங்
கொழுகொளிய வெண்ணீறு மெய்ம்முழுது மட்டித்
துயர்ந்தவடி யார்கள் குழுமி

வெள்ளொளியி னானுஞ் சிவத்துதி முழக்கானும்
வேங்கைமக வுக்களித்த
விதிவச நினைந்தின்னும் வேண்டுவார்க் கருளாமை
வேண்டுதும் எனுங்கருத்தால்
தெள்ளுதீம் பாற்கடல் வளைந்தெனச் சூழ்போந்து
சேர்ந்தனர் நெருங்கு பொதியில்
தெய்வத் திருக்கேள்வர் ஆட்டினுக் கேற்குந்
திருத்தாளம் என்னமலரைத்
தள்ளியெழில் பூத்தநின் செங்கைத் தலங்கொண்டோர்
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே.

*(கு - ரை.) உள்ளொளி-உள்ளிடத்திருக்கும் ஞானவொளி-பரந்தாலாங்கு என்பது பரந்தாங்கு என வந்தது. பரந்தாங்கு பரவியதுபோல என்க. மட்டித்தல் - பூசிக்கொள்ளுதல். வேங்கை - வியாக்கிரபாதர் : புலிக்கால் முனிவர். மகவு - அவர் மகவாகிய உபமன்னியர்.*

*வேங்கை மகவுக்களித்த கதை :—பண்டொரு காலத்தில் உபமன்ய முனிவர் குழவியாயிருந்த பொழுது தில்லைப்பொது விற்சென்ற கூத்தப்பெருமான் எதிரினின்றும் பால்வேண்டி யழு தனர். அதுகண்ட இறைவர் பாற்கடலை வரவழைத்துக் கொடுத்தருளினர் என்பது. "பாலுக்குப் பாலகன் வேண்டி யழு திடப் பாற்கட லீந்தபிரான்" என்பதா லிதை யறிக. இதனைக் கோயிற்புராணம் வியாக்கிரபாதச்சருக்கத்திற் காண்க. கேள்வர்-தலைவராகிய கூத்தப் பெருமான். திருவெண்ணீறு உடல் முழுதும் பூசின அடியார்கள் கூடின வெள்ளொளியினாலும், சிவத்துதி முழக்கானும்' பாற்கடல் வளைந்தாற்போலும் சேர்ந்து நெருங்கு கின்ற பொதியில் எனச் சேர்த்துக்கொள்க.* **(௩௬)**

ஐவகைச் சுத்தியும் அமைத்துவான் கம்பைநதி
அருகன்பு பூப்பமலரால்
அஞ்சலி நிறைத்துமேல் நோக்கிமுக மதியின்எதிர்
அல்கிய தெனக்குவிந்து
மெய்வகைத் துவாதசாந் தத்தலத் தானந்த
வெள்ளப் பெருஞ்சோதியை
விரிமலர்த் தவிசாக வேற்றுமுன் போலென்ன
மீண்டுங் குவிந்திழிந்தாங்

குய்வகைச் சிவலிங்க நாப்பணு வாகித்தவ்
வும்பனய னச்சுடரேதிர்
உறக்குவிங் தலர்விரைவு மானமுத் திரைகோடுத்
துலவாது பூசைமுற்றுஞ்
சைவமுறை யாற்றுகைப் பங்கயஞ் சேப்பவோரு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தேன்குளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே.

*(கு - ரை.) ஐவகைச் சுத்தியும் அமைத்து - பூதசுத்தி, தான சுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி ஆகிய ஐந்து வகைச் சுத்திகளையுஞ் செய்துகொண்டு. அன்புபூத்தல்-அன்புண் டாதல். அல்குதல் - சுருங்குதல். துவாதசாந்தத்தலம் - தலையின்மேல் பன்னிரண்டங்குலங் கடந்த அளவு. தவிசு - பீடம். நாப்பண் - நடு. ஆவாகித்து - மந்திரத்தால் ஆவாகனஞ்செய்து. அவ்வும்பன் - அச்சிவலிங்கப் பெருமான். நயனம் - கண், சுடர் - சந்திரன், சூரியன். மான - ஒப்பாக. முத்திரை கொடுத்து - முத்திரைகள் கொடுத்து. முத்திரைவகையாவன: குவிதலுக்குத் தேன் முத்திரையும், விரிதலுக்கு மகா முத்திரையுமென இரண் டெனக் கொள்க. சுத்தி அமைத்து - அஞ்சலி நிறைந்து மேனோக்கிக் குவிந்து ஏற்றுக்குவிந்திழிந்து ஆவாகித்துக் கொடுத்து ஆற்று பங்கயம் என இயைக்க, சேப்ப - சிவப்பாக. ஆங்கு: அசை. இது தீக்கை பெற்றுச் சிவபூசை செய்வார்இடத்தில் கேட்டறிதற்பாலது.* (௧௭)

கடவுட் பொலம்பூமி காண்டற் கெழுந்தேனக்
கடையுகப் பெருவெள்ளநீர்க்
கடல்மிசை மிதந்திட்ட பூந்தராய் தழையவரு
கௌணியர்கள் குலமணிக்கு
முடவுப் பிறைக்கண்ணி மோலிப் பிரான்சைவ
முறைநெறிச் சோகாப்பவன்
மூடப் புறச்சமய முழுவதுஞ் சோகாப்ப
மூண்டசிலை யோடுபுல்லும்
அடவிக் களிக்குந் தமிழ்க்குரிசில் நீறிட
அமண்கையர் உண்ணீறிட
அருண்மடை திறந்தூற்று திருமுலைப் பால்கறந்
தமிழ்தனா னங்குழைத்துத்

தடவுப்பொன் வள்ளத்து வைத்தூட்டு செங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே.

*(கு-ரை.) கடையுகப் படுவெள்ளநீர் - யுகாந்த வெள்ளநீர். பூந்தராய்-சீகாழி. கௌணியர் குலமணி-கௌணியர் குலத்திற் பிறந்த திருஞானசம்பந்த நாயனார். முடவுப்பிறை - வளைந்த திங்கள். கண்ணி - மாலை. மோலி - மௌலி. சோ - அரண். சைவ முறை நெறியாகிய சோ என்க. சோகாத்தல் - துன்பமடைதல். சிலை-விற்கொடி. புல் - புலிக்கொடி. அடவிக்களித்தல் - காட்டிற்குக் கொடுத்தல். இவ்விரு கொடிகளையும் அடவிக் களித்தலென்பது அக்கொடிகளையுடைய இருமன்னரையும் நாட்டை விட்டுக் காட்டிற்கோடச் செய்தல். கையர்-கீழோர்(சமணர்). உள்நிறிட-மனம் வேக. தடவு - பெருமை. குலமணிக்கு அமிழ்தஞானம் குழைத்து ஊட்டு செங்கை என முடிக்க.* (௬௮)

தீங்கனிக் கிளவியால் யான்றவக் கோட்டிய
செழுங்கழையும் முகமூரல்நீள்
சேயரிக் கண்ணுன் மெலித்தவர விந்தமுந்
தேங்கமழு நறுமுல்லையும்
பூங்குவளை மலருங் கதிர்த்தபொன் மேனியிற்
போரிட் டொழித்ததளிர்கள்
பொங்கியொளிர் மாழையும் பிண்டியுஞ் சோகாந்து
போதுவன வற்றையணையா
ஏங்குகடல் உலகமுதல் எல்லாம் பணித்திடும்
இருஞ்சமர்த் திண்மையுதவி
இடையாத வில்லென்றும் அம்பென்றும் வைத்ததென்
என்றுநீ ஒன்றேடொன்றைத்
தாங்கொளி ததும்பிடத் தாக்கியாங் கங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே.

*(கு-ரை.) தவ - மிக. கோட்டிய - வளைத்த. கழை - கரும்பு. மெலித்தல் - மெலியச் செய்தல். 'முகமூரனீள் சேயரிக்கண்ணுன் மெலிந்த அரவிந்தமும் தேங்கமழு நறுமுல்லையும் பூங்குவளை மலரும்' என்பதை, முகத்தால் மெலிவித்தது அரவிந்தமும், மூரலால் மெலி*

வித்தது முல்லையும், கண்ணால் மெலிவித்தது குவளைமலரும் எனக் கொள்க. மூரல் - பல். கதிர்த்தல் - ஒளிவிடல். மாழை - மா. பிண்டி - அசோகு. தளிர்கள் - துளிர்கள். தளிர்கள் பொங்கி யொளிர் மாழையும் பிண்டியும் மேனிக்கு ஒவ்வாமையால் துன் புற்றன வென்க. சோகாந்து - துன்பத்தை யடைந்து. அணையா - சேர்த்து : செய்யா என்னும் வாய்பாடு. பணித்திடுதல் - வணங்கு தல். திண்மை - வன்மை. வில்லென்றும் என்றது கழையை வில்லென்றும், அம்பென்றும் என்றது அரவிந்தம் முதலியவற்றை அம்புகளென்றும் எனக்கொள்க. ஒன்றோடொன்றை என்றது. ஒரு கையோடு ஒருகை என்றபடி. அம்மையாரின் கைகளில் கரும்பு வில்லும் ஐமலரம்புகளு முண்மையாலிங்ஙனம் கூறினார். இதைத் தணிகைப் புராணம் அம்மையார் வணக்கச் செய்யுளா லறிக. (௯௯)

வேறு

தவப்பய னைத்தொழு வார்க்கருள் செய்ய
தடக்கையின் ஏற்றுபோலந்
தடவுத் தொடியிற் செறியு மணிக்கண்
தத்திப் பாய்ந்திடுநின்
சிவக்கும் அரிக்க ணிழற்று நிழற்றுணை
செவ்விய நவ்விமறிச்
சீர்செயல் நோக்கி மகிழ்ந்துற வாடச்
சேர்க்குதும் என்றுமனம்
உவப்ப உவப்ப மறிந்து மறிந்தும்
உறக்க வவிக்கவவி
உயிர்த்து வளர்த்தருள் கூர்திரு மேனி
உளங்குளி ரச்சுழலும்
குவைக்கவின் மொய்த்த தளிர்க்கையின் அம்பிகை
கொட்டுக சப்பாணி
குளந்தை வயங்க வயங்கும் இளங்குயில்
கொட்டுக சப்பாணி.

(கு - ரை.) அருள் - வினைத்தொகை, செய்ய - சிவந்த. தொடி - வளையல். தத்தி - தாவி. சிவக்கும் அரி - சிவந்த வரி, நிழற்றுணை - கண்களின் நிழலாகிய இரண்டு சாயல்கள். நவ்விமறி - மான் கன்று. மறி, மான் என்னும் பொருள் உள்ளதேனும் ஈண்டு அதன் கன்றையே உணர்த்திற்று. உறவாட - அக்கன்றுகள் ஒன்றோடொன்று நட்புக்கொள்ள. உவத்தல் - மகிழ்தல். மறிந்து மறிந்தும் உறக் கவவிக் கவவி - மறுபடியும் மறுபடியும்பொருந்து

மாறு அகத்திட்டு அகத்திட்டு. கவவு - அகத்திடுதல். அகத்திடுதல் என்பது அருகே காட்டிக்காட்டி வாங்குதல். உயிர்த்து - பெற்று. சுழல்-சுற்றல், குவைக்கவின்-மிக்க அழகு. (௪0)

அரக்கெழில் கொண்டு கனிந்த செழுங்கனி
யாகச் சேயொளியை
அள்ளி இறைக்கு முருக்கலர் போலழ
காரத ரத்தினையும்
சுரக்கு நறுஞ்சுவை வானமிழ் தேந்து
சுடர்த்திரு வள்ளமெனத்
தூய மணித்தர ளத்தொடை பூண்டு
துணைத்த தனத்தினையும்
பரக்கு நிறத்தளிர்என்று பசுங்கதிர்
பம்பிய மேனியையும்
பார்த்துத் துய்த்திட வாயூ றுஞ்சிறு
பச்சை யிளங்கிளிதன்
குருச்சிறை தைவரும் அங்கையின் அம்பிகை
கொட்டுக சப்பாணி
குளந்தை வயங்க வயங்கும் இளங்குயில்
கொட்டுக சப்பாணி.

(கு-ரை.) அரக்கு - செம்மை. அதரம் - வாயிதழ், இன்கனியாகவும் முருக்கலர் போலவும் அதரத்தினையும் வானமிழ்து ஏந்து வள்ளமெனத் துணைத்த கொங்கைகளையும் தளிரென்று கதிர்பரப்பிய மேனியையும் பார்த்துத் துய்த்திட வாயூறுங்கிளிக் குருச்சிறை தைவருங்கை எனக்கூட்டுக. தொடை - மாலை; தொடுக்கப்பட்டது. துணைத்த - இரண்டாகவுள்ள. பம்புதல்- பரவல். குரு - நிறம்; ஈண்டுப் பசுமையின் மேற்று. தைவரல் - தடவல். (௪க)

முழங்கும் இசைச்சிறை வண்டு விருந்துணும்
முண்டக நாள்மலர்கள்
மூரி மணித்தவி சாக வளர்ந்தருள்
மூவிரு செவ்வுருவம்
தழங்கு குளங்கரை யெய்தி யெடுத்தெழில்
தங்கிடும் ஒருருவாத்
தழுவி முலைக்குவ டார அணைத்தெதிர்
தாங்குதல் ஆற்றகிலா

தழுங்கி விடுத்தொழி கங்கையுள் வெள்கி
அலைந்து விளர்ப்பமுலை
அமிழ்தம் அருத்தி வளர்த்தருள் கூர்தரு
மச்செயல் ஆற்றியநின்
கொழுங்கவின் மொய்த்த செழுங்கையின் அம்பிகை
கொட்டுக சப்பாணி
குளந்தை வயங்க வயங்கும் இளங்குயில்
கொட்டுக சப்பாணி.

(கு - ரை.) மூரி - பெருமை. மூவிரு செவ்வுரு (அறுமுகக் கடவுளுடைய) ஆறுவகைச் செவ்விய வடிவம். ஆர்தல்-பொருந்தல். ஆற்றகிலாது-தாங்கமுடியாமல். உள்வெள்கி-மனம் நாணி. விளர்த்தல் - வெளுத்தல். கங்கை தாங்கமுடியாமல் சரவணத்துய்த்த ஆறுவடிவத்தையும் ஒன்றாக்கி அவள் நாணி விளர்ப்ப எடுத்தணைத்துப் பாலருத்தி வளர்த்த செழுங்கைகொண்டு சப்பாணி கொட்டுக எனப் பொருள்கொள்க. (சஉ)

வேறு

மதுகரம் உலவிய துளப உரத்தினன் மட்டாரும்
மரைமலர் நிலவிய மறைமுனி பொற்றவி சிற்றேவர்
முதுமணி முடிகுனி தரவர சிற்பொலி புத்தேளும்
முதலிய அனைவரும் முளரிநிகர்த்த கரத்தால்விண்
நதிதரு புனலொடு தருமலர் நச்சி யிணைத்தாளின்
நவையறு விதிமுறை சொரிதர மிக்க குளத்தூர்வாழ்
இதமுறு பரசுக வடிவினள் கொட்டுக சப்பாணி
இமகிரி தரவரும் உமையவள் கொட்டுக சப்பாணி.

(கு - ரை.) மதுகரம் - வண்டு. உரத்தினன் - மார்பினன். மட்டு - தேன். மறைமுனி - பிரமன். குனிதரல் - வணங்கல். தேவர்......அரசிற் பொலிபுத்தேள் - தேவேந்திரன். விண்ணதி- ஆகாய கங்கை. தருமலர் - கற்பகத் தருமலர். நச்சி - விரும்பி. நவை - குற்றம். இதம் - நன்மை. பரசுகவடிவினள் - உயர்ந்த இன்ப வடிவினளே. (சங)

அருள்பெறும் அடியவர் விழியளி சுற்று மணத்தேனே
அவனியின் இடையறம் எவையும் வளர்த்த சுவைப்பாகே
திருமலர் அமரர்கள்சொரிதரு பத்ம பதத்தாயே
தெளிமறை நெறியினர் உளமொளிர் வித்த சுகப்பேறே

முருகவிழ் மதுவழி நறுமலர் மொய்த்த குழற்கோதாய்
முனிவரர் மறையவர் அடியர் பழிச்சு குளத்தூரின்
இருமையும் உதவிடு மடமயில் கொட்டுக சப்பாணி
இமகிரி தரவரும் உமையவள் கொட்டுக சப்பாணி.

(கு - ரை) அறம் எவையும்-முப்பத்திரண்டுஅறங்களையும். பத்மபதம்.தாமரையடி. உளம் ஒளிர்தல் - உள்ளத்தை விளங்கச் செய்தல். முருகு - மணம் மொய்த்தல் - நெருங்கல். குழல்-கூந்தல். கோதை - கூந்தல். ஆகலான் குழற்கோதை, ஒரு பொருள்குறித்த சொற்கள். இருமை-இம்மைப்பயனும் மறுமைப் பயனும். (சச)

---

## ரு. முத்தப்பருவம்

பதினொராவது திங்களில் நிகழ்வது. இது பிள்ளையை முத்தமிடும்படி வேண்டிக் கூறும் பருவமாம். முத்தம் - வாயிதழ்.

பகைத்த புரிசை மூன்றுமொரு
பதத்தின் இறுத்துத் திருக்குளந்தைப்
பதியிற் கருணை பூத்தலர்ந்த
பரமா னந்தப் பெருவாழ்வை
நிகர்ப்பச் சிறுவெண் மதிகடந்த
நெடுவாள் நுதல்மேற் போந்துலவி
நெறிக்கும் புருவச் சிலைகோட்டி
நெய்த்துப் பழுத்த கொலைவேல்போல்
வகுத்த மதர்க்கட் சரந்தொடுத்து
மணிமே கலைசூழ் அல்குலந்தேர்
வாய்ப்ப வெளிக்கொண் டெமதும்மை
மலச்சோ அழலப் புன்மூரல்
முகிழ்க்குந் தரளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முருகு விரியும் நறுங்களப
முலையாய் முத்தந் தருகவே.

(கு-ரை.) ஒருபதத்தின் இறுத்து-ஒரே சமயத்தில் அழித்து. பரமானந்தப் பெருவாழ்வு-சிவபெருமான். நெறித்தல்-செவ்வையாய் இறுத்தல். புருவச்சிலை கோட்டி - புருவமாகிய வில்லை வளைத்து. நெய்த்து-நெய்த்தன்மை பொருந்தி. பழுத்த- சிவக்கக்

காய்ச்சப்பட்ட. கட்சரம் - கண் + சரம்: கண்ணாகிய அம்பு. மும்மை மலச்சோ அழல-ஆணவம் கன்மம் மாயை என்னும் மும் மலங்களாகிய கோட்டைகள் தீப்பற்ற, புன்மூரல் முகிழ்க்கும்- சிறுநகை செய்யும்; பெருவாழ்வை நிகர்ப்ப மூரல் முகிழ்க்கும் எனக் கூட்டுக. (சஙு)

வளைத்த கருப்புச் சிலையெடுத்து
வனசக் கணையு மாங்கணையும்
வாசங் கமழு நறுநீல
மலர்ப்பூங் கணையும் அசோகினிடைத்
தளைத்த நனைதாழ் கொடுங்கணையுந்
தழுவிக் கோணர்ந்தேன் ஞெடுந்தொடுத்துச்
சகல புவனங் களும்பணிக்குந்
தண்ணங் குடையெங் குரிசிலைக்கண்
திளைத்த எரியாற் படப்பொருத
திருவார் குளந்தைச் சிவவாழ்வைச்
சிந்தை மருட்டிப் பணிப்பலெனத்
திறல்கொண் டெழுந்த தளவம்போல்
முளைத்த முறுவற் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முருகு விரியும் நறுங்களப
முலையாய் முத்தந் தருகவே.

(கு - ரை.) தளைத்தல் - பிணித்தல், நனை-முகை; அரும்பு. எம் குரிசில் - எம்முடைய அரசனை மன்மதன். கண் திளைத்த எரி - கண்ணிலுண்டான நெருப்பு. பொருத - போர் செய்த. சிந்தை மருட்டல்-மனத்தை மயங்கச்செய்தல். பணிப்பல் - பணியச் செய்வேன். தளவம் - முல்லை. முறுவல்-நகை. களபம் - கலவைச்சாந்து. (சகூ)

பிதிரும் பொறிப்பொற் சிறைவிரித்துப்
பெருந்தேன் மடுத்துத் தாதளைந்து
பெடையோ டாடிக் களிபூத்துப்
பிறழா வகையின் னிசைபாடி
அதிரும் பலவண் டினமுழக்க
அலரும் பொகுட்டுத் தேங்கமல
அலர்க்குந் தனக்கும் பகைமையுற
அமைத்துக் குளத்தூர் அமர்ந்தருளிக்

கதிரும் பெருமான் உளக்கமலந்
தனையு மலர்த்தி வயமாக்கிக்
கலப்பான் எழுந்தால் எனவானக்
கலைவான் மதியின் அரும்புநிலா
முதிரும் பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முருகு விரியும் நறுங்களப
முலையாய் முத்தந் தருகவே.

(கு-ரை.) *தாது-மலர்ப்பொடி. களிபூத்தல்-மகிழ்வடைதல். தனக்கும் என்றது, வதனமதியைக் குறித்தது. பெருமான் - சிவ பெருமான். கலப்பான் - சேரும்பொருட்டு: எதிர்கால வினை யெச்சம். அரும்பு - சிறுக உண்டாகின்ற. நிலா - நகையாகிய நிலா.* (சஎ)

கொழுது வரிவண் டினமுரலாக்
குளிர்பூந் தொடையல் முடிசாய்த்துக்
கும்பிட் டிறைஞ்சுங் கடவுளர்தங்
குழாத்தைச் சிறிதும் மதியாத
பழுது நிலவாத் திருக்குளந்தைப்
பதிவாழ் இறையோன் விழிச்சுடரின்
பரிசு நோக்கி மணியிதழ்க்க
பாடஞ் சிறிதே திறந்துருவம்
எழுதும் வினைஞர் தொழிற்கடங்கா
எழிலார் தனதொள் ளொளிகாட்டி
எழுந்தச் சுடரை வயமாக்கி
எக்கற் றமையம் பார்த்திருப்ப
முழுதும் அடிமை கொளுநகைவாய்
முத்தந் தருக முத்தமே
முருகு விரியும் நறுங்களப
முலையாய் முந்தந் தருகவே.

(கு-ரை.) *முரலா-முரன்று: ஒலித்து, செய்யா என்னும்வாய் பாட்டு வினையெச்சம். முடிசாய்த்தல்-வணங்கல். இறைஞ்சுதல்- தொழுதல். பரிசு - தன்மை. மணி இதழ்க் கபாடம் - அழகிய உதடாகிய கதவு. உருவம் எழுதும் வினைஞர்- ஓவியம் எழுது வோர் (சித்திரக்காரர்). தொழிற்கு அடங்கா எழிலார் தனது ஒள் ஒளி என்றது, ஒளி எழுத முடியாதென்பதை உணர்த்து*

கின்றது. அச்சுடர் - அந்தக் கண்ணின் சுடர், ஏக்கறல்-தாழ்ந்து நிற்றல். அமையம் - சமையம். முருகு - நறுமணம். (சஅ)

இகந்த மனத்தாற் கடல்கடைந்த
இமையோர் வெருவ எழுங்காளம்
எடுத்துப் பருகுந் திருக்குளந்தை
இறைவன் பவளத் திருவாய்க்கும்
சகந்த னிலைமை தவாதோங்கத்
தாவிக் குதிக்குஞ் சிறுமறிமான்
தழங்கும் அரும்பே ரொலிமுழுதுந்
தாங்குஞ் செவிக்கு மருந்தாக
உகந்த ஒளிதுன் றியஎயிற்றின்
ஊறும் அமிழ்தப் பெருக்காறும்
உரைப்பா ணமிழ்தப் பெருக்காறும்
ஊட்டிக் களிகூர்ந் தெழிற்கடலே
முகந்த பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முருகு விரியும் நறுங்களப
முலையாய் முத்தந் தருகவே.

(கு - ரை.) இகந்த-நீங்கின. மனத்தால் - மனத்தினால் (சிவ பெருமானை மதியாது அவரை நீங்கிய மனத்தினால்.) காளம் - நஞ்சு. சகம் - உலகம். தன்னிலைமை - தன்னுடைய தன்மை. தவாது-கெடாது. ஓங்குதல்-உயர்தல். சிறு மறிமான் - முனிவர்கள் விட்ட மான். தவாது ஓங்குஞ் செவியென்க. எழிற் கடல் - அழகாகிய கடல்; இல்பொருள். திருவாய்க்கு எயிற்றின் ஊறும் அமுதப் பெருக்காறும், செவிக்கு உரைப்பாணமிழ்தப் பெருக்காறும் ஊட்டி எனமுடிக்க. இவையிரண்டும் இறைவன் உண்ட காளத்திற்கும். மானொலி கேட்ட வருத்தத்திற்கும் அமிர்த மருந்தெனக் கொள்க. (சக).

வேறு

அசும்புபட வாய்நீர் வழிந்தோட ஓடிவந்
தணையுமைங் கரக்க ளிற்றை
ஆகத் திடைக்கோண்டல் நாப்பண் தடித்தென
அணைத்தலும் பணைத்து வளர்போன்

**தசும்புதனை யெதிருமிரு களிறெனத் தன்மத்**
தகங்கொண்டு தாக்கி மயிரின்
தண்ணிய ஒழுக்கினை அணைக்குமொரு கந்தெனத்
தடவுக்கை யாற்சு ழியவவ்
விசும்புண்மறை பட்டெழுந் தெண்ணிலா எனநகை
விரித்தொல்லை மேலெ டுத்து
வெகுளிதீர்த் துளங்குழைய முத்தாடி வைத்தா
வியனகர்க் குளந்தை வாழ்வே [டும்
பசும்பொனவிர் திருமேனி அழகொளிர நின்றநின்
பனிவாயின் முத்த மருளே.
பங்கயச் செல்விதொழு மங்கையர்க் கரசிநின்
பனிவாயின் முத்த மருளே.

(கு - ரை.) அசும்புடல் - இடையறு தொழுகல். ஐங்கரக் களிறு-மூத்தபிள்ளையார். இவரது இளமைப்பருவத்தை வாய்நீர் வழிந்தோடஎன்பது குறிக்கின்றது. ஆகம்-மார்பு. நாப்பண்-நடு. தடித்து - மின்னல். அம்மையாரைக் கொண்டலாகவும் மூத்த பிள்ளையாரை மின்னலாகவும் குறித்தது அன்னார் பசுமைநிறத்தையும், செந்நிறத்தையும் முறையே குறித்தற்கென்க. துப்பார் திருமேனி என்பதால் விநாயகர் செந்நிற முள்ளவரென்றுணர்க. பணைத்து - பருத்து. தசும்பு - குடம். கந்து - கட்டுத்தறி. தடவு - பருமை. சுழிய - சுற்றி வளைக்க. விசும்பு - மேகம். ஒல்லை - விரைவு. வெகுளி - கோபம். உளங் குழைதல் - மனம் இளகுதல். முத்தாடி - முத்தமிட்டு. ஐங்கரக் களிற்றை ஆகத் திடையணைத்தலும், தாக்கி, சுழிய நகை விரித்து எடுத்துத் தீர்த்து முத்தாடி ஆடும், என இயைக்க. பங்கயச் செல்வி - திரு மகள். பனிவாய் - தண்ணியவாய். (௧0)

சேட்டின மணிச்சோதி நீட்டுமிலை ஞாங்கர்நுதி
தீட்டுநின் ஞட்டத்திஞல்
தெள்ளிய அருட்பார்வை வெள்ளவமிழ் தம்மைநீ
தேக்கிடவும் நீக்கியளகக்
காட்டினைக் காட்டிமையல் பூட்டிளம் பேட்டனக்
கவினடைக் கன்னியரிடைக்
கட்டுண்டு மட்டுண்டு தட்டுண்டு பட்டிறுங்
காளையரின் மாழுகரென

மூட்டியபொன் மாடகத் தியாழுக்கும் இசையூட்டு
மொழியமிழ்த மூட்டவிட்டு
மோட்டிருங் கோட்டுக் குவட்டைநிகர் வட்டமுலை
முத்தையமிழ் தென்றேக்கறாஉம்
பாட்டிசைக் கிள்ளைக்கு மீட்டுமிசை ஊட்டுநின்
பனிவாயின் முத்தமருளே
பங்கயச் செல்வி தொழு மங்கையர்க் கரசிநின்
பனிவாயின் முத்தமருளே.

(கு-ரை.) சேட்டின மணி. சேடு+இனம்+மணி - பெருமையுடைய கூட்டமாகிய மணி. இலை ஞாங்கர் - இலை வடிவு போலும் வேல். உவமைத் தொகை. நுதி - முனை. நாட்டம் - கண், நாடுதலுடையது. தேக்கிடல் - நிறைதல். அளகக் காடு - அடர்ந்த கூந்தல். இளம்பேடு - இளமையாகிய பெண். மட்டுண்டு - அளவுக்குட்பட்டு. தட்டுண்டு - தடையுண்டு, படுதல் - கெடுதல். இறுங் காலையரின் மா ழுகர் என - முறியுங் காலைப் பருவத்தரில் மயங்குவாரைப் போல. மாடகம் - தந்தி முறுக்கும் ஆணி. ஊட்ட - உண்பிக்க, விட்டு அதைவிட்டு, மோடு - பெருமை, கோட்டுக்குவடு சிகரத்தையுடைய மலை. ஏக்கறாஉம் வேண்டிப்பெற வணங்கி நிற்கும், மீட்டும் - பிறகும். அருட் பார்வை வெள்ள அமிழ்து நீ தேக்கிடவும் நீக்கிக் கன்னியரிடைக் கட்டுண்டு மாமுகரென மொழியமிழ்தம் ஊட்ட விட்டு முலைமுத்தை அமிழ்தென்று ஏக்கறாஉங் கிள்ளைக்கு மீட்டும் இசையூட்டு நின்வாயின் முத்தமருள் என முடிக்க. (௬௧)

மடல்கொண்ட பூந்துழாய்ப் படலைமணி மார்பினன்
மறைக்கிழவன் ஆதியண்ட
வாணரும் பதைபதைத் தோட்டெடுப் பக்கொடிய
வளைகடற் புனல்மீதெழும்
விடமுண்ட சோமேச ஞர்க்கினிய வாயமிழ்தம்
மெல்லெனப் பருகுவித்து
விளியாத வண்ணமென் கொங்கையஞ் சஞ்சீவி
வெற்புங் கொடுத்துமற்றும்
உடனென்றி மணிமிடற் றுலவா திருத்தலான்
ஒருகணப் பொழுதமகலா
துருப்பாதி யிற்கலந் தனுதினம் பாதுகாத்
தொண்குளத் தூரின்மருவும்

படமோன்றும் அரவல்குல் எழிலமுத வல்லிநின்
பனிவாயின் முத்தமருளே
பங்கயச் செல்விதொழு மங்கையர்க் கரசிநின்
பனிவாயின் முத்தமருளே.

(கு - ரை.) மடல் - இதழ். துழாய்ப் படலை - துளசிமாலை. மறைக் கிழவன் - பிரமன். அண்டவாணர் - தேவர்கள். வாழ்நர் - வாணராயிற்று. வாயமிழ்தம் - வாயிலிருந்து ஊறுகின்ற இதழ் நீராகிய அமிழ்து. விளியாதவண்ணம் - இறவாதபடி. கொங்கையஞ் சஞ்சீவி வெற்பு - தனமாகிய அழகிய சஞ்சீவி மலை. ஒன்றுதல் - பொருந்தல். சோமேசனுர் விடமுண்டமையால் அவர் இறவாதபடி வாயமிழ்தம் பருகுவித்துக் கொங்கையஞ் சஞ்சீவி வெற்பையுங் கொடுத்து என இயைத்துப் பொருள்கொள்க. (௫௨)

வேறு

சுறவே றியகொடி முதலா கியபடை
சுற்றி வரத்தனிபோய்ச்
சுவைநீள் சிலைகோடு மலரார் பகழி
துரக்கு மதக்கோடுவேள்
இறவே நுதல்விழி வழியூ டழலெழு
வித்த திறற்பெருமான்
எரிபோல் ஒளிவிடு சடைமா முடியின்
இருக்கும் மதிக்கடவுள்
வெறியார் திலகம தணிவா ணுதலெழி
லிற்குளம் வட்கிநறு
விரிபூ விதழியை நடுமே னியினிறு
விப்பொரு வக்கருதும்
முறிபோல் உருவினள் கமலா கரமயில்
முத்த மளித்தருளே
முதுநான் மறையறி வறியா வடிவினள்
முத்தம் அளித்தருளே.

(கு - ரை.) சுறவு-சுறுமீன். படை - சேனை. சுவை நீள்சிலை என்றது கருப்புவில்லை. பகழி — அன்பு. துரக்கும் - செலுத்தும். இற - கெட. வெறி - மணம். திலகம் - பொட்டு. வெட்கி - வெட்கங் கொண்டு. இதழி - கொன்றை. நிறுவி - நிறுத்தி. பொருவ-ஒப்பாக, முறி - தளிர். சடைமாமுடியினிருக்கு மதிக்

கடவுள் திலகமணிவாணுதல் எழிலிற்கு உளம் வட்கி இதழியை நடுமேனியினிறுவிப் பொருவக் கருதும் உருவினள் என இயைத்துப் பொருள் கொள்க. (௯௩)

பெருகார் அமிழ்தருள் ஒளிசேர் மதியேழில்
பெற்ற நுதற்கொடியே
பிறவா வருணெறி தருவா யெனுமவர்
பெட்பின் உளச்சுவையே
மருவார் தகரமும் அளிவீழ் மலருமண
ணத்த குழற்றிருவே
மதியா தவருளம் மருவா திருளென
வைத்த மடப்பிடியே
உருகா நெறியெம துளமா சறவும்ஒ
றுக்கும் அறக்கடலே
உருவாய் அளவரு மருவாய் நிறைபொரு
ளுக்கோ ருவைப்பிடமே
முருகார் பொழிலணி கமலா கரமயில்
முத்த மளித்தருளே
முதுநான் மறையறி வறியா வடிவினள்
முத்தம் அளித்தருளே.

(கு - ரை.) பெருகுதல் - மிகுதல். பெட்பு - அன்பு. மரு - மணம். தகரம் - மயிர்சாந்து. அளி - வண்டு. மதியாதவர் உளம் மருவாது இருளென வைத்த மடப்பிடியே என்றது, எண்ணாதவருடைய உள்ளத்திற் சேராது அவர்களுடைய உள்ளத்தை அஞ்ஞான மயமாக வைத்த மடப்பம் வாய்ந்த பெண்யானை யன்னாளே என்றவாறு. ஒறுத்தல் - தண்டித்தல். நிறைபொருள் - நிறைந்த சிவபெருமான். 'எங்கு நிறைகின்ற பொருளே' என்றதனாலும் இதை யுணர்க. வைப்பிடம் - வைப்பதற்குரிய இடம். (௯௪)

---

## ௬. வாரானைப்பருவம்

பதின்மூன்றுவது திங்களில் நிகழ்வது : இது தோழியர்கள் பிள்ளை நடந்து வருதலை விரும்பியழைக்கும் பருவமாம். வாரானை-வருகை. ஆனை : தொழிற்பெயர் விகுதி.

வெள்ளித் தகட்டையரில் கொள்ளத் துறுத்தனைய
வெள்ளிய சிறைப்பவளவாய்
வெள்ளோதி மத்திரள்கள் செஞ்சிலம் பொலியினையும்
மென்மடப் பிடியினத்தை
எள்ளிக் கவின்கொண்ட திருநடைப் பொலிவினையும்
எய்யாது கற்கவெண்ணி
இகபரப் பெருவாழ்வு வேட்டவர்க் கருளுநின்
இணையடிக் கமலமலரை
உள்ளித் தொடர்ந்துசூழ் மொய்த்திடுஞ் சூழலிடை
உற்றுநீ அச்சூழலி
ஞெடும்பெயர்ந் தவிர்மதியம் ஊர்ந்துவரல் ஏய்ப்பவொளி
மாமணிகள் இருகரையினும்
அள்ளிச் சொரிந்துலவு பாலிநா டாளவரும்
அமுதாம்பி கைவருகவே
அருள்மடை திறந்தூற்று புன்முரல் அழகொளிர
அம்பொனு யகிவருகவே.

(கு - ரை.) அரில்-பின்னல், பிணக்கல். துறுத்தல்-நெருக்கமாக அமுத்தி வைத்தல். வெள்ளிய சிறை - வெள்ளை இறகு. இனம் - கூட்டம். எள்ளி-இகழ்ந்து. எய்யாது-பெறுமல். கற்க எண்ணி - அந்த ஒலியையும், நடையையும் கற்றுக்கொள்ள நினைந்து. சூழ் - சூழ்ந்து : வினையெச்சப்பொருட்டு. அச்சூழல்-அக்கூட்டம். ஏய்ப்ப - ஒப்ப, பாலி - பாலாறு. இகரம், ஒன்றன் பாலையுணர்த்துவது. இது தொண்டை நாட்டாறு. மணி-முத்து. மடை - நீரை மடக்குதற் பொருட்டுப் போடப்படும் சிறுகரை. ஈண்டு அருளுக்காயிற்று. புன்முரல் - சிறுநகை. வெள்ளோதி மத்திரள்கள் ஒலியினையும், நடைப்பொலிவினையும் முன்னர் அடையாமையால் அவற்றைக் கற்றுக்கொள்ள எண்ணி உன் இணையடிக் கமல மலரை மொய்த்திடுஞ் சூழலிடை அச்சூழலொடும் வருக என இயைத்துப் பொருள் கொள்க. (௫௫)

துளிபட்ட தேந்தோடைக் கூந்தலைக் காரென்று
தோகைமுன் னாடிவரமேன்
துணைமலர்ப் பாதநடை கற்கவன் னத்திரள்
தொடர்ந்துபின் ஓடிவரவுட்
களிபட்ட தீங்கிளவி கற்குநின் செந்தளிர்க்
கைக்கிள்ளை பாடிவரவான்
கருணைபொழி கட்கடைப் பார்வையை வியந்துமான்
கன்றினங் கூடிவரமெய்
ஒளிபட்ட வேதக் குழாங்கதறி யோலிட்
டுனைப்பெரிதும் நேடிவரவில்
உமிழ்மணிக் கோவைக் குரூஉப்பரும மீமிசை
உடுத்தவிடை வாடிவரமை
அளிபட்ட பூஞ்சோலை சூழ்குளத் தூரில்வரும்
அமுதாம்பி கைவருகவே
அருள்மடை திறந்தூற்று புன்மூரல் அழகொளிர
அம்பொனு யகிவருகவே.

(கு - ரை.) கார் - மேகம். தோகை - மயில். தீங்கிளவி- இனிய சொல். தளிர் - துளிர், மெய்ஒளி - உண்மையாகிய அறிவொளி (ஞானவொளி.) ஓலிட்டு - கூச்சலிட்டு, நேடி - தேடி. வில்—ஒளி, உமிழ்தல்-வெளிப்படுத்தல். குரூஉ - நிறம் (ஈண்டுச் செந்நிறம்). பருமம்-பதினன்கு கோவை மணிவடம். இதன்மாறு தல் முன்னுரைத்தாம் ஆண்டுக் காண்க. மீமிசை - மேல். வாடிவர-துவள. மை - கருமை. கூந்தலைக் காரென்று தோகை முன் ஆடிவர என இயைக்க. (௯)

வில்லுமிழ் குரூஉமணிச் சுடிகைப் பணிக்குழாம்
விரித்தபை நெரித்துருத்து
வீசுங் கலாபப் பசுந்தோகை ஈட்டங்கள்
மெல்லியுலும் நடையும்வேட்டு
வல்லுறழ் மணிக்கோவை தாழ்ந்தமென் கொங்கைநின்
மருங்குறச் சூழ்ந்துவரவவ்
வளரிளஞ் சாயலான் நடையினன் வேறடிய
மாட்டாது மருளுமெம்மை
எல்லொளித் தண்ணிலா நகைகொண்டு தேற்றிமற்
றிருக்காதி யானநான்கும்

இன்னங் கிடந்துமுறை யிட்டுமேழி வரியநின்
இயல்பினைக் காட்டியருளி
அல்லுமிழ் தடம்பொங்கர் சூழ்குளத் தூரில்வரும்
அமுதாம்பி கைவருகவே
அருள்மடை திறந்தூற்று புன்மூரல் அழகொளிர
அம்பொனு யகிவருகவே.

*(கு - ரை.) சுடிகை - பாம்பின் உச்சி. பணிக்குழாம் - பாம்பின் கூட்டம். பை - படம். ஈட்டங்கள் - கூட்டங்கள். இயல் - சாயல். வேட்டு - விரும்பி. வல் - சொக்கட்டான்காய் (சூதாடு கருவி). உறழ்தல் - ஒத்தல். மணிக்கோவை-முத்துவடம். மருளுதல்-மயங்கல். தேற்றி - தெளிவித்து. தோகை ஈட்டங்கள் இயலும் நடையும் வேட்டு நின்மருங்கு வரலால் நின்வடிவென்றும் மயில்வடிவென்றும் அறியாமல் மயங்கும் என்னை நகைகொண்டு தேற்றி நின் இயல்பினைக்காட்டிக் குளத்தூரில் வரும் அமுதாம்பிகை என முடிக்க, அல் உமிழ்தல் - இருள்படர்தல், மரம் அடர்ந்தமையால். பொங்கரில் இருள்மிகும் எனக்கொள்க. 'இருள் படப் பொதுளிய' என்பதாலு மறிக. (௭)*

வயிரா வணந்தோறும் எழுங்குளத் தூர்வந்து
வான்கோடி ரண்டாயிரம்
வாய்த்ததனை ஆளும் பிரானைமரு மத்திரு
மருப்பினுல் ஆளாண்மையும்
சேயிரா வணங்கினைப் பல்லுயிரும் எய்தத்
தேறாஉமலக் களிறைந்தையும்
திக்கெட்டும் அண்டப் பரப்புங் கடந்திறச்
செற்றிடும் விழிவீரமும்
பயிரா வணஞ்சோரியும் மேகத்தின் அருள்கூர்ந்த
பதநடையும் நோக்கியஞ்சிப்
பனிமால் அடுக்கலெனும் நங்கைநின் உரிமையாற்
பரிந்துபின் வருதலேய்ப்ப
அயிரா வணம்பின்பு தொடரத் தொடைக்கூந்தல்
அமுதாம்பி கைவருகவே
அருள்மடை திறந்தூற்று புன்மூரல் அழகொளிர
அம்பொனு யகிவருகவே.

*(கு - ரை.) வயிர் - ஊதுகொம்பு. ஆவணம் - தெரு. எழுதல் - உண்டாதல். வான்கோடிரண்டாயிரம் வாய்த்ததனையாளும்*

பிரான்-உயர்ந்த இரண்டாயிரங் கொம்புள்ள ஐராவணம் என்னும் யானையை யாள்கின்ற சிவபெருமான் என்க. இவ்யானை இறைவன் கயிலையிலுள்ளது. மருமத்து இருமருப்பினால் ஆன் ஆண்மை-மார்பிலுள்ள இரண்டு கொங்கைகளாகிய மருப்பினால் ஆண்ட ஆண்தன்மை. இது முன்னர் வரைந்துளது. செயிரா-செயிர்த்து: செய்யா என்னும் வாய்பாடு. அணங்கினை-தெய்வத் தன்மையை. எய்தல் - அடைதல். தெறாஉம் - அழிக்கும். மலக் களிறு ஐந்து - ஆணவம், கன்மம், மாயை, திரோதானம், மாயேயம் என்பன. பயிர் ஆவணம்-பயிர் செழிக்கும்படி. பனி மால் அடுக்கல் எனும் நுந்தை - உயர்ந்த பனிமலையாகிய உன்னுடைய தந்தை; அயிராவணத்துக்குப் பனிமலையை உவமை கூறினர். திறவொற்றுமையால். ஆண்மையும், விழிவீரமும், நடையும் நோக்கி அஞ்சி எனப் பொருத்துக. (௩௮)

விந்தையங் கிரிதனக் கிகலியுள் ளதுமுற்றும்
வீந்தவீ றின்மையுந்தண்
வெள்ளிவே தண்டமோர் அரக்கன் பெயர்த்திட்ட
மென்மையுங் ககனமீறும்
மந்தர முதற்கிரி யிடைக்கண் பொலிந்தண்ட
மார்க்கத் திரண்டுசுடரும்
வலமாய் வரப்புவிக் காதார மானதன்
வண்மையையும் நோக்கிநோக்கிச்
சிந்தைகளி கூருமா மேருவைச் சிவபிரான்
செங்கமல அங்கைபத்துஞ்
சேர்ந்துநித் தலுமுழக் கத்தளர்ந் தோசியாது
செம்மாந்து விம்மியெள்ளும்
அந்தனச் சிகரிமிசை அருவிநித் திலமிட்ட
அமுதாம்பி கைவருகவே
அருள்மடை திறந்தூற்று புன்முரல் அழகொளிர
அம்பொனு யகிவருகவே.

(கு - ரை.) வீந்த-அழிந்த. வீறின்மை - வன்மையின்மை. வெள்ளி வேதண்டம் - வெள்ளி மலை. அரக்கன் - இராவணன். ககனம்-ஆகாயம், ஈறுதல் - முடிதல். அண்டமார்க்கம் - ஆகாய வழி. இரண்டு சுடர்-சந்திரசூரியர்கள். ஆதாரம்-பற்றுக்கோடு உழக்க-கலக்க. ஓசியாது-துவளாமல். செம்மாந்து-இறுமாந்து. விம்மி - பருத்து. எள்ளல் - இகழல். அந்தனம் - அழகிய கொங்கை, அருவி நித்திலம் - அருவியாகிய முத்துமாலை. விந்தம் வீந்த வீறின்மையும், அரக்கன் பெயர்த்திட்ட மென்மையும்,

புவிக்கு ஆதாரமான தன் வன்மையும் நோக்கிக் களிகூரும் மேருவை உழக்க எள்ளும் தனச்சிகரிமிசை நித்திலமிட்ட அமுதாம்பிகை என முடிக்க. (௯)

வேறு

தெய்வச் சுருதி தமிழ்க்கன்றித்
 தீட்டா நிலைமைத் தேனவுலகில்
தெரிக்குங் காழித் திருஞானச்
 செம்மற் குழவிக் கருள்ஞானம்
பெய்து குழைக்க வோமுலையாம்
 பெரிய மலைவாய் உறுத்துமென்றே
பெருமான் றனையுங் குழைத்தவலிப்
 பெற்றி அறிந்து தடுத்தோபூங்
கையில் இலகு நகக்குறிபற்
 கதுவ நோமென் றேதீம்பால்
கறந்து கொடுத்தா யெனச்சகிமார்
 கனிந்து பாட நகைமுகிழ்க்கும்
வைவைத் தமைத்த மதர்வேற்கண்
 வாழ்வே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
 வல்லி வருக வருகவே.

(கு - ரை.) செம்மல் குழவி-பெருமையிற் சிறந்தபிள்ளைக்கு. வாய் உறுத்தல் - வாயில் துன்புறுத்தல். குழைத்த வலி - இறைவனைக் குழைவு செய்த வலி. பல் கதுவல் - பல்பற்றல். நகை முகிழ்த்தல் - சிரித்தல். வை - கூர்மை. இச்செய்யுள் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனருக்கு முலைப்பால் கறந்துகொடுத்தமைக்கு நயங் கூறுகின்றது. இது பெரிய புராணம் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் புராணத்திலறிக. (௧0)

குஞ்சி யசைய அசைந்துவருங்
 குமரப் பெருமான் தனையேந்துங்
குளிர்பூங் கரத்துத் தொடிகறங்கக்
 கோடிபோல் ஒசியுஞ் சிறுமருங்குல்
அஞ்சி நுடங்க அம்மருங்குல்
 அணிந்த பருமங் கதிர்த்தேங்க
அணங்கும் இடைகண் டிரங்குவ போல்
 அவிரும் மணிநூ புரமொலிப்பப்

பஞ்சி திருத்துஞ் சீறடிகள்
பதிந்த சுவடு தோறுமிமையோர்
பணிகால் மோலி நிரைபுரளப்
பதுமை முதலோர் களிதூங்க
மஞ்சி வரும்பூங் குழற்கற்றை
மாதே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
வல்லி வருக வருகவே.

(கு - ரை.) குஞ்சி - குடுமி, குளிர்தல் - தண்ணெனல். கறங்க - ஒலிக்க. மருங்குல்-இடை. ஏங்கல் - ஒலித்தல். அணங்கும் - வருந்தும். சீறடி - சிறிய அடி. சுவடு-வடு, களிதூங்கல் - மகிழ்தல். மஞ்சு இவரும் - மேகம் விரும்பும். வளங் கூர்தல் - வளப்பம் மிகுதல். தொடிகறங்க, மருங்குல் நுடங்க, பருமம் ஏங்க, நூபுரம் ஒலிப்ப, மோலிபுரளக், களிதூங்க வருக என முடிக்க, தேவர் பன்முறை வணங்கலைப் பணிகால் மோலி நிரை புரள என்பது குறிக்கின்றது. (௬௧)

கடிகொண் டலரும் நறுங்கடுக்கைக்
கடவுள் மகிழப் பேரண்ட
கடாகப் பரப்பே சிற்றிலெனக்
கருமப் பகுப்பே சிறுசோறும்
படிகொண் டுயிராம் பாவைகட்குப்
பைதல் மலநோய்ப் பசியிரியப்
பல்கால் அயிற்றி விளையாடிப்
பரமா னந்தப் பெருவீட்டிற்
குடிகொண் டிருக்குந் தீங்கரும்பே
கொள்ளத் தெவிட்டாச் சுவையமுதே
குன்றம் பயந்த நறுங்கனியே
கொழிக்குங் கருணைப் பெருக்காறே
மடிகொண் டயரா தெமைப்புரக்கும்
வாழ்வே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
வல்லி வருக வருகவே.

(கு - ரை.) கடி-மணம். கடுக்கைக் கடவுள்-கொன்றைக் கடவுள். சிற்றில்-சிறு வீடு. பைதல்-துன்பம், மலநோய்ப் பசி இரிதல்-ஆணவ மலநோயாகிய பசி கெடுதல். அயிற்றி-ஊட்டி.

*மடி - நோய். தெவிட்டாத-விறையாத. அயராது - சோர்வை யடையாமல். புரத்தல்-காத்தல்.* (௬௨)

தீது விளக்குங் களப்பணியுந்
தேவர் குரவன் மனைச்செல்வி
திருக்கற் பழித்த களப்பணியுந்
திளைத்துக் கலவி செயப்புகுங்காற்
கோது விளக்கும் பேரச்சக்
குணமும் நாணுங் கொடுக்குமெனக்
குறியே னினது சாயலுமின்
கொழிக்குங் காஞ்சி அல்குலுமே
போது விளக்குஞ் சடைக்காட்டிற்
புகுந்து வெளிக்கோ ளாதொளிக்கப்
பொலிவு தருமால் எனச்சகிமார்
புகலச் சற்றே நகைத்தளிகள்
வாது விளக்கு முடிசாய்க்கும்
மாதே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
வல்லி வருக வருகவே.

(கு - ரை.) *களப்பணி யென்பதில் - முன்னது, களம் - நஞ்சையுடைய. பணி-பாம்பு. பின்னது, களம்-கறுப்பையுடைய. பணி-அணி, திங்கள். திளைத்தல்-நெருங்கல். கோது-குற்றம். காஞ்சி-இருகோவை மணிவடம். வாது-கலகம். பாம்பால் அச்சமும், சந்திரனால் நாணமும், சாயலாற் பாம்பொளித்தலும் அல்குலாற் சந்திர னொளித்தலுங் கொள்க.* (௬௩)

அயில்கண் டனையஞ் சலித்தேத்தும்
அன்னை வருக பெருங்கருணை
ஆழி வருக தீவினையேம்
ஆவித் துணையே வருகவிடந்
துயில்கண் டனையம் பலத்தாட்டுஞ்
சுடர்பொற் கொடியே வருகஇளஞ்
சுகமே வருக நறுங்குதலை
தோற்றுங் கிளவி யெனுமதுரம்
பயில்கண் டனையர் செவிக்கூட்டும்
பசுங்கோ கிலமே வருகவென்றும்

பருகத் தேவிட்டாச் சுவையமுதப்
பாவாய் வருக பசுந்தோகை
மயில்கண் டனைய இளஞ்சாயல்
மாதே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
வல்லி வருக வருகவே.

*(கு - ரை.) அயில் கண் தனை-இரண்டு அயில் வேலை. ஆழி-கடல் (இன்பம்). விடம் துயிலல் - நஞ்சிறுத்தல். சுகம் - கிளி. குதலை - தோன்று மொழி. கண்டு - கற்கண்டு. பருக - குடிக்க. மயில் கண்டனைய- மயிலைக் கண்டாலொத்த என இரண்டனுருபு விரிக்க. (௬௪)*

---

## எ. அம்புலிப்பருவம்

*பதினைந்தாந் திங்களில் நிகழ்வது: இது பிள்ளையை மங்கையர்கள் இடுப்பில் வைத்துக்கொண்டு அப்பிள்ளையுடன் சந்திரனை விளையாட வரும்படி சாம, பேத, தான, தண்ட முறை கூறியழைக்கும் பருவமாம். சாமம் - சமமாகக் கூறல், இனிமையாகக் கூறல். பேதம் - ஒவ்வாமை கூறல், வேற்றுமை தானம் - ஈகை கூறல். தண்டம் வழக்கினும் ஒழுக்கினும் வழுவினரை வழியில் நிறுத்தத் தண்டித்தலைக் கூறல் சிலர் முன் மூன்றிலும் பொருந்தாதவரைத் தண்டித்த லெனவுங் கூவர்.*

பொன்பூத் தலர்ந்தவன மரவங்கள் மாலரி
பொருங்களிற் றினமளாவிப்
பொங்குமலை வாய்வருங் காரணத் தாற்செய்ய
பொன்னஞ் சிலம்படியினின்
மின்பூத்து நாளும் புலம்புறச் சூழ்தலான்
மிடையுமங் கமலமயர
மிக்குறுங் குவலயம் அடங்கலுங் களிதூங்க
விரியொளிக் கதிர்வீசலாற்
கோன்பூத்த பெருமானை யணைதலால் வேளேனுங்
குழகற்கு மகிழ்செய்தலாற்
கோமளப் பெண்செய்கை நின்செய்கை போலுமாற்
கூர்ந்துணரின் இவளையன்றி

அன்பூற் றெடுப்பவிளை யாடுதுணை வேறில்லை
அம்புலீ ஆடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே.

(கு - ரை.) **அமுதாம்பிகைக்குப் பொருந்துங்கால் :** பொன்-பொற் கட்டி. வனம் மரவங்கள் - மிகுதியாகிய குங்கும மரங்கள். வனம் - காடு. இங்கு மிகுதியென்னும் பொருளில் வந்தது. மால் அரி - பெரிய சிங்கம். களிறு இனம் - யானைக் கூட்டம். மலை வாய்-இமயமலை இடம். பொன் அம் சிலம்பு - பொன்னாற் செய் யப்பட்ட அழகிய சிலம்புகள். சிலம்பு - ஒலியுள்ள ஒருவகைக் காலணி. அடி - கால். புலம்பு உறசூழ்தல் - ஒலித்தலுற வளைத் திருத்தல். புலம்பு - முதனிலைத் தொழிற்பெயர். மிடையும் அங்கம் மலம்அயர - (ஆன்மாக்களை) நெருங்கியிருக்குங் களங்க மாகிய ஆணவ மலம் சோர்வடைய. குவலயம்-உலகம். களி தூங்க - மகிழ்ந்திருக்க. ஒளிக்கதிர் - அறிவு (ஞான) ஒளி. பெரு மான் - பெருமையை யுடையவனாகிய சிவபெருமான். வேள் எனும் குழகன் - வேளென்னும் பெயரையுடைய முருகன். **சந்திர னுக்குப் பொருந்துங்கால் :** பொன் - திருமகள், பொன் நிறமுமாம். வனம் - அழகிய வர்ணமுமாம். மரவங்கள் - கற்பக மரங்கள். மால் அரி - பெரிய உச்சைச்சிரவமாகிய குதிரை. களிறுஇனம்- களிற்று மீனினங்கள். அலைவாய் - கடலிடம். பொன் அம் சிலம்பு அடி - அழகிய மேருமலையின் அடிவாரம். புலம்பு உறச் சூழ்தல் - வருத்தமுறச் சூழ்ந்து வரல். மிடையும் அம் கமலம் அயர - நெருங்கி யிருக்கின்ற அழகிய தாமரைகள் தளர (குவி தல்). குவலயம் - குவளை மலர்கள். ஒளிக்கதிர் - ஒளியாகிய வெளிச்சம். பெருமான் - பெரிய (களங்கமாகிய) மான். வேள் எனும் குழகன் - வேளென்னும் இளமைப் பருவமுடைய மதன். வேள் - விரும்பத் தகுந்தவன். விருப்பத்தைச் செய்பவன். (சுஇ)

மண்டலம் புகழாத வண்படுஞ் சேவ்வியின்
மாண்டவரை உச்சிமீது
வயங்கிய கரஞ்சேர்த்தி ஆணவ இருட்குழாம்
மாற்றிநற் பசுமென்பயிர்
கண்டக மகிழ்ந்துநெடு வானுற விளங்தோளி
கலந்தமணி கான்றகதிர்நீள்
கடிநாறு தன்னடி வணங்கவெளி வந்துதேன்
கடலுலக முற்றுமேத்த

விண்டல நெருங்குமீன் கணமாதர் புடைசூழ
மேவியுல கந்தனதியல்
வீறுபெற நோக்கினல் ஈரேண் கலைப்பொலிவும்
மெய்ம்மையிற் காட்டுமுறையால்
அண்டர்தொழும் எம்மையாள் அம்மையை நிகர்ப்பைநீ
அம்புலீ ஆடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(கு - ரை.) **அமுதாம்பிகைக்குப் பொருந்துங்கால் :** *மண்டலம் புகலாத வன்பு அடும் செவ்வியில் - உலகம் துதிக்கப் பெருத (இயற்கை மலத்தின், ஆணவத்தின்) வலிமையை அடக்கற்குரிய காலத்தில், மாண்டவரை உச்சிமீதுவயங்கியகரம்சேர்த்தி-மாட்சிமையுடைய தவத்தினர்க்குத் தலையின்மேல் விளங்கிய கையைக் குவித்து வைத்து ; அத்தமத்தகசையோகக் குறி. ஆணவ இருட் குழாம் மாற்றி - ஆணவமாகிய இருட் கூட்டத்தை யொழித்து. 'இருள்சேர் இருவினை' என்னுங் குறளடியை நோக்க. நல் பசு மெல் பயிர் கண்டு அகம் மகிழ்ந்து நெடுவான் உற - நல்ல வுயிர் களாகிய மெல்லிய பயிர்கள் கண்டு உள்மகிழ்ந்து உயர்ந்தபெருமையாகிய கதியை யடைய, விளைந்து ஒளி கலந்த மணிகான்ற கதிர் நீள் கடி நாறு தன் அடிவணங்க எளி வந்து - உண்டாய் ஒளி பொருந்திய மணிகள் கக்கின விளக்க மிக்க மணமுண்டாகின்ற தன்னடியை வணங்க எளிதாக வந்தருளி. மீன் கண் அம் மாதர் புடைசூழ மேவி - மீன்போலும் அழகிய கண்களையுடைய விண் மாதர் அருகே சூழ்ந்திருக்க. ஈர் எண்கலைப் பொலிவும் மெய்மையில் காட்டும் முறையால் - பதினாறு கலைகளின் விளக்கத்தையும் உண்மையிற் காட்டுகின்ற முறைமையால் என்க. நோக்கினல் ஈரெண் கலை என்பதை நோக்கின் + நால் ஈர் எண்கலை எனக்கொண்டு அறுபத்து நான்கு கலை எனக் கூறுவாறுமுளர். அது பொருந்ாது. பதினாறு கலைகளா மாற்றை, அகாரம், உகாரம், மகாரம், விந்து, அரைத் திங்கள், நிரோதினி, நாதம், நாதாந்தம், சுத்தி, வியாபினி, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிருதை, சமனை, உன்மனை என்றறிக.*

**சந்திரனுக்குப் பொருந்துங்கால் :** *ஆதவன் படும் செவ்வியில் - சூரியன் பாடுசாயும்வேளையில். மாண்டவரை உச்சிமீதுவயங்கிய கரம்சேர்த்தி-மாட்சிமை பொருந்திய உதயமலை முடிமேல் விளங்கிய (கிரணங்களாகிய) கைகளைப் பொருத்தி ஆணவம் இருள் குழாம்மாற்றி-இயற்கையாகிய (ஆணவ மலத்திற் கொப்பாகிய) இருட்டொகுதியையொழித்து, பசு மெல்பயிர்வான் உற விளைந்து*

மணிகான்ற கதிர்-பசிய மெல்லிய பயிர்கள் வானத்திற்பொருந்த விளைந்து (நீண்டு) மணிகளைக் கக்கிய நெற்பயிர்கள். கடிநாறுதன் அடி வணங்க வெளிவந்து - விளக்கந்தோன்றும் தன் கால்களை வணங்குதற்கு விண்ணிற் றோன்றி, மீன்கணம்மாதர் புடைசூழ மேவி - நட்சத்திரக் கூட்டங்களாகிய பெண்கள் பக்கங்களில் சூழ விருந்து, ஈர் எண்கலை பொலிவு - பதினாறு கலைகளின் ஒளி. நெற் கதிர்களில் மணியுண்டென்பதை, 'தழைத்துக் கழுத்து வளைந்த மணிக்கொத்துஞ் சுமந்த பசுஞ்சாலிக் குளிர் முத்தினுக்கு விலையுண்டு' எனவரும் திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழாலும், திருவிளையாடற் புராணம் மாணிக்கம் விற்ற படலத்தாலு முணர்க. (௬௬)

கங்கையும் பாந்தளும் தும்பையும் செம்பொற்
கடுக்கைச் செழுந்தொடையலும்
கபாலமும் கோக்கிறகும் ஊற்றிருந் தொழுகுதேங்
கமழ்ந்தபூ மத்தமுநறும்
கொங்குதவழ் ஆத்தியும் வன்னியும் எருக்கும்
குளிர்ந்தவறு கம்புல்லுமேற்
கோமளப் புலவோர் இறைக்குமந் தாரமும்
கோய்துதவர் தூற்றுமலரும்
தங்கிய பிரான்சடைக் காட்டினில் உனக்குரிமை
சற்றலால் வேறுமுண்டோ
தாவிலெண் ணான்கவய வத்தினும் செம்பாதி
தனதெனக் கொண்டுவாழும்
அங்கவள் நினக்கதிகம் என்பதற் கையமிலை
அம்புலீ ஆடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(கு - ரை.) பாந்தள் - பாம்பு. கடுக்கை - கொன்றை. தொடையல் - மாலை. மத்தம் - ஊமத்தை. கொங்கு - தேன். கோமளம் - அழகு. புலவோர் - இமையவர். பிரான் - சிவன். சற்று - கொஞ்சம். தாஇல் - கெடுதல் இல்லாத. செம்பாதி-சரி பாதி. தனது - தனக்குரியது. திங்கட்கு இறைவன் சடையில் கொஞ்ச இடமே உரியது. அவ்வாறன்றி அவனங்கங்கள் முப்பத் திரண்டிலும் சரிபாதி இறைவிக்குண்டு எனக்கொள்க. மற்ற கங்கை முதலாகச் சொல்லப்பட்டவற்றிற்கும் அவை தங்கியிருக் கும் சிறியஇடங்களே அவைகளுக்குமுரிய எனக் கொள்க. (௬௭)

உருநிறை உவாத்தோறும் வாக்குநின் அமிழ்துண்ட
உம்பர்த் தலத்தின் இமையோர்
உவாக்கடல் உயிர்த்தவிடம் முன்னிற்ற லாற்றற்கும்
ஒல்கினர்கள் சாவாதிரார்
குருநிறை மணிக்கச் சணிந்தஇவள் பவளவாய்க்
கொழியமுதம் வாய்மடுத்த
கோமளச் சோமேசர் விடமயின் றுற்றலும்
கொண்டனர் இறத்தலிலர்மற்
றிருள்நிறை இராவினை விளைத்தியவள் உள்நிறையும்
இருளிரா வினைமுழுவதும்
இரித்திடுவள் ஆதலால் இவளோடும் பொன்னோ
டிரும்பனையை மன்றவரிபாய்
அருள்நிறை கடைக்கண்வைத் தெம்மையாள் அம்மையுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(கு - ரை.) *உருநிறை உவா - முழுத்திங்களின் நாள்; அது பூரணை. வாக்குதல் - சிந்துதல். உம்பர்த்தலம் - மேலிடம். உயிர்த்த - பெற்ற. ஒல்கினர்கள் - துவண்டார்கள். நஞ்சு கண்டு வருந்தினர் என்க. குரு - நிறம். கச்சு - வார்ப்பட்டை. கொழித்தல் - தெளித்தெடுத்தல். மடுத்த - உண்ட. ஆற்றல் - வன்மை. இருள் - கருமை. விளைத்தி - உண்டாக்குகின்றாய். உள்நிறையும் இருள் - அஞ்ஞானஇருள். இரித்தல் - ஓட்டல். இறைவியுடன் திங்களே! நீ பொன்னுடன் இரும்பனையை என்றமை நோக்கற்பாலது.* (௬௮)

தெளிக்குமெய் யன்பினால் வழிபட்ட நாளுனது
செல்லலோய் தவிர்த்தளித்த
திருச்சோம நாதனார் உண்டருளும் நஞ்சும்
சினந்தவிர்ந் துள்ளோடுங்கத்
துளிக்குமெழில் அங்கைத் தலத்தில் தடுத்திட்ட
சுவையமிழ் திருப்பவமிழ்தம்
துணைக்கரத் தேந்திப் பசிப்பிணி தெறத்தினந்
துயருழந் துழல்வோரெனக்
களிக்குமுறை தேற்றாது வாளரா உண்டுண்டு
கக்கத் திகைத்துவெருவிக்

ககனவெளி ஓடியும் வடகுவடு சுற்றியும்
கவலுநின் செய்கைநன்றே
அளிக்குலம் இரைக்கும் கடிக்குழற் கன்னியுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(கு - ரை.) செல்ல - வருத்தம். நோய் - கயநோய் (கொடுமையுள்ளது). நஞ்சு - விடம். உள் ஒடுங்க - தன் வலியற்றுக் கழுத்தில் அடங்கி யிருக்க. துளிக்கும் எழில்-மிக்க அழகு. துளித்தல்-சிந்துதல். மிகுதியிருப்பின் சிந்தற்கியையும். ஆயின் மிக்கு என்க. சுவை அமிழ்து - அமுதாம்பிகை. தெற - ஒழிய. வாள் அரா - ஒளியுள்ள இராகு வென்னும் பாம்பு. 'மதியுணும் ராகு நாமம்' என்பதாலறிக. கக்குதல் - எதிரெடுத்தல். ககனவெளி-விண்வெளி. வடகுவடு - மேருமலை. கவலும் - வருந்தும். (௬௬)

வணங்குமுறை யாற்றனது திருவுளப் படிநிற்கும்
மாந்தர்க்கு மலதிரோத
மாயேய காமிய மருட்பிணி அவிழ்த்துநான்
மறைமுடிவும் எட்டாததோர்
குணங்குறி கடந்தபே ரானந்த வெள்ளக்
கொழுங்கடல் திளைத்தாடிடக்
கொடுத்தருளும் வள்ளன்மை நிற்கமற் றுலகினும்
குளிர்தூங்க எண்ணுன்கறம்
இணங்குவே தாகம வழித்துறை வழாவகை
இயற்றியது காணுயலை
ஈங்குநீ வரினினது கறைபோக்கி வேண்டியதும்
ஈந்தருள் கொழித்தருளுவாள்
அணங்கு கொண்டந்தரத் தலையாதெம் அம்மையுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(கு - ரை.) வணங்கு முறை - நூலிற் கூறப்பட்டிருக்கின்ற விதிமுறையைக் குறிக்கின்றது. மாந்தர்-உயிர்கள். மலதிரோதம்-திரோதமலம். இது போகத்திலழுத்துவது. மாயேயம் - தநு கரண புவன போகங்கள். மருட்பிணி - மயக்கமாகிய நோய். பேரானந்த வெள்ளக்கொழுங்கடல்-சிவபெருமான். திளைத்தாடு

தல்-முழுகல். அம்மை திருவுளப்படி வீற்குமாக்தர்க்கு அவிழ்த்துக் கடல் ஆடிடக் கொடுத்தருளும் வள்ளற்றன்மையுடன் என்னுன் கறமும் இயற்றியவளாகலின் நீ வரினும் உன்கறைபோக்கி உனக்கு வேண்டியவற்றையும் ஈவள் என்க. காணுயலை-பாராமலிருக்கவில்லை. கறை - களங்கம். அணங்கு - துன்பம். (எ௦)

குடங்கைமல ராற்செம்பொன் மேருவைத் தனுவெனக்
கோட்டிய மலைக்குமருகன்
கோமளச் சிலைமார்பு மைந்தனை இரட்டித்த
குவவுப் புயக்குவடுமேல்
வடங்கதுவு மோட்டிளங் கோங்கினும் வண்டினும்
மலங்கக் குழைத்தவள்நினை
வருகென் றழைத்திடவும் மதியா திருத்தியிவள்
வன்கதக் கனலிதோய்ந்த
தடங்கட் கொடும்படைச் செய்யசுடர் வேல்கொண்டு
தாக்கினுயிர் பொன்றிவிடுதல்
சரதமற் றெங்கெங் கொளிப்புறினும் இவளிலாத்
தானமொன் றில்லைகண்டாய்
அடங்கிய தடங்கமல நெஞ்சா தனத்திருவோ
டம்புலீ ஆடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

1.7830

(கு - ரை.) குடங்கை - உள்ளங்கை. தனு - வில். கோட்டுதல் - வளைத்தல். மலைக்கு மருகன் - சிவபெருமான்- கோமளம்- அழகு. கோங்கு-கோங்கரும்பு, ஈண்டு முலைக்காயிற்று. வண்டு- வளையல். மலங்குதல்-கலங்குதல். மதியாது இருத்தி - பொருட்படுத்தாமலிருக்கிறாய். கதக்கனலி - சினத்தீ. தாக்குதல் - மோதுதல். பொன்றி விடுதல் - சாதல். சரதம் - உண்மை. தானம் - இடம். எங்கு நிறை இறைவனுடனிருப்பதால் இவளில்லாத இடம்இல்லை என்றபடி. (எக)




துடிபட்ட கைத்தலத் தெம்பிரான் மகிழ்தருஞ்
சுந்தரப் பெண்ணமிழ்தெனத்
தோன்றும் பிராட்டியைமுன் எண்ணுத தக்கனர்
துயர்கூர்ந்து பட்டபாட்டை
முடிபட்ட வானவர் குழாத்தோடும் உடனின்று
முழுவதும் பட்டறிதியிம்

மொய்குழற் செல்விதனை அவமதித் தின்றுநீ
முன்னுரு தகன்றேழிவையேற்
கடிபட்ட இதழ்தின்று கறுவினன் நின்னிலைமை
கடிபட்டு மாழ்குவையலாற்
கலைமுழு மதித்தே வெனும்பழைய பெயரோடுங்
கலைமதி யிலாததேவென்
றடிபட்ட பாவிற் புதுப்பெயரும் ஆளுவாய்
அம்புலீ ஆடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(கு - ரை.) துடி - உடுக்கை. தோன்றுதல்-காணப்படுதல். பட்டபாடு - அடைந்த துன்பம். முடிபடுதல் - முடிகெடுதல். மொய்குழல் செல்வி - இறைவி. முன்வராது - அவளிடம் வராமல். அகலுதல் - நீங்குதல். கடி - மணம். கருவினல் - சினந்தால். கடிபட்டு - கடிதலையடைந்து. மாழ்குவை - மயங்குவாய். கலைமதி-நூலறிவு. பா-புலவர் பாடும் பாட்டு. அடி - யாப்பின் ஓர் உறுப்பு. (எஉ)

சங்கையா னங்கையிவள் எம்பிரான் புலவியில்
தடங்கருங் கட்கடைநுதி
சற்றே கறுப்புழித் தாமரைச் சீறடிகள்
தாக்குங் கடுந்தொழிலினுற்
கங்கையா டித்துடித் திவள்கருணை யாற்றினைக்
கைகூப்பும் இறையேந்துமான்
கதழ்விழி மானைத் தொழுந்தொடையல் வண்டெலாங்
கருங்குழல் தாவுமரவம்
மங்கையா டாதலைப் பாந்தளைக் காவென்று
வாவுமற் றுங்குநீயும்
வாணுதல் மதிக்கிறைஞ் சிடுவையன் றேயதனை
மதியாத தென்னை கோலமைக்
கங்கையா மலகமென அன்புகூர் அம்மையுடன்
அம்புலீ ஆடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(கு - ரை.) சங்கை - ஐயம். புலவி - ஊடல். நுதி - நுனி. கறுப்புழி - சினந்தால், சீறடி - சிறியஅடி. கங்கை -உமாதேவி.

கை கூப்புதல்-கை கூம்புதல் : கும்பிடுதல். ஏந்துதல்-பிடித்தல். விழிமான் - கண்ணுகிய மான். ஆடாத பைப்பாந்தள்-அல்குல். இறைஞ்சிடுவை - வணங்குவாய். அங்கை ஆமலகம் என-உள்ளங்கை நெல்லிக்கனிபோல் வெளிப்படையாக. எம்பிரான் கை கூப்பும், மான் தொழும், வண்டு தாவும், அரவம் வாவும் அவற்றைப்போல நீயும் வணங்குவாய் என இயைக்க. (௭௩)

கைப்போது நீட்டிமுன் விரித்துனை அழைப்பவும்
காணுதி போல்வந்திலாக்
சாரணத் தாலம்மை சீறுதலும் அங்கையைக்
கரும்பாந்தள் என்றஞ்சினன் [illegible]
இப்போது தாழ்க்கலான் வருவனென் றிதுகாறும்
இவ்வாறு தப்புவித்தோம்
இன்னுநீ வாராது மத்தரின் திரிதியேல்
இனியுனக் கேதுபுகலோ
செப்போது கோங்கைப் பிராட்டியிவள் சோமேசர்
செங்கண் புதைத்தஞான்று
தினகரச் செல்வனே டழுங்கித் திகைத்தநின்
திறமறந் தனைபோலுமால்
அப்போது பட்டதை நினைந்துமற் றிவளுடன்
அம்புலீ ஆடாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ ஆடவாவே.

(கு-ரை) காணுதி - பாராமலிருப்பவன். சீறுதல் - சினத்தல். கரும்பாந்தள்-கரும் பாம்பு இஃது இராகுக்கோளைக் குறிக்கின்றது. ''மதியுணு மிராகு நாமம் மற்றது தமங்கறுப்பாம்'' ''இராகுக்கோளே கரும்பாம் பாகும்'' என்பவை நிகண்டு திவாகரங்கள். தாழ்க்கலான் - பொறுக்கமாட்டான். மத்தரின்-உன் மத்தர்களைப்போலே. புகல் - தஞ்சம்; அடைக்கலம். ஞான்று-காலம். தினகரச் செல்வன் - சூரியன்; பட்டது - அடைந்தது; (துன்பம்.) இப்பருவத்தில் இரண்டு பாடலில் சாமமும், இரண்டில் பேதமும் அடுத்த இரண்டில் தானமும், மற்ற நான்கில் தண்டமும் கூறினர். (௭௪)

---

# அ. அம்மானைப்பருவம்

பதினோழாம் திங்களில் நிகழ்வது. இது பிள்ளையைப் பார்த்துத் தோழிகள் முத்தம்மானை முதலிய அம்மானைகளை எடுத்து ஆடியருளும்படி கூறல்.

வம்பியல் தொடைக் கூந்தல் மீமிசைக் கதிர்வீச
வாள்பட்ட கோற்றொடிக்கை
மலரினைக் கண்டுசில அண்டத்து மதியங்கள்
வனசமி தெனுங்கருத்தாற்
பம்பியடர் இருள்கண்டு முகிழாமை யாற்றமைப்
பரிசித்தல் வேட்டதாகப்
பாவித் துறுந்தோறுந் தன்றுணைமை அன்மையாற்
பங்கயம் விதிர்த்துவெகுளா
வெம்பியகல் வானத் தெழுந்தோ டிடத்தள்ளி
விடலெனச் செங்கைகளால்
வேலினை இகந்தோருவி வார்தரு கோடும்புருவ
வில்லொடு கிடந்துமிளிரும்
அம்பியல் தடங்கணொளி கொண்டுலவு ரித்திலத்
தம்மானை யாடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை ஆடியருளே.

(கு - ரை.) வம்பு - மணம். தொடை - மாலை. மீமிசை - மேல். வாள் - ஒளி. கோல் - வளைவு. வனசம் - தாமரை. பம்புதல் - பரவுதல்: அடர்தல் - நிறைதல். முகிழாமையால், மூடாமையால்-கூந்தலொளி ஈண்டு இருள் எனப்பட்டது. பரிசித்தல்- அணைதல், தன் துணைமை - தன்னுடைய தலைவனாகிய சூரியனுடைய தன்மை. விதிர்த்தல் - நடுங்கல். வெகுளா - பயந்து; செய்யா என்னும் வாய்ப்பாடு, தடங்கண் - இறைவி; அன்மொழித்தொகை. இச்செய்யுள் முத்தம்மனையைக் குறித்தது. அவற்றைத் திங்களாகக் கொள்க. (எகு)

இருள்பூத்த நெறிசுரி கருங்குழல் அரம்பையர்கள்
எண்ணிலார் கவரிவீச
எழிசுடர் மணித்தவிசு வீற்றிருந் தரசுபுரி
யேந்தல்குல வரைகளோடும்
தெருள்பூத்த நுந்தைசிற கீர்த்தமை குறித்துச்
செயிர்த்தவனை அண்டமுகடும்

தெழிபடக் கைக்கொண் டெழிந்தோச்சி மீளத்
திகைத்துவீழ் தோறுமுன்றன்
மருள்பூத்த வெகுளிதணி யாமையாற் பின்னரும்
வன்கண்மை கொண்டோச்சல்போல்
மருங்குசூழ் தோழியர்தம் இணைவிழியின் நீழலை
மரீஇச்சுலவி ஓடிஆட
அருள்பூத்த கைகளால் ஒளிபூத்த மரகதத்
தம்மானை ஆடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை ஆடியருளே.

(கு - ரை.) அரம்பையர்கள் - தேவப் பெண்கள், ஏந்தல்- தேவேந்திரன், நுந்தை - பனிமலை, சிறகு ஈர்த்தமை - சிறகரிந்தமை, அவன் - அத்தேவேந்திரனை. ஓச்சுதல் - எறிதல். வன்கண்மை-கொடுமை. இந்திரன்-மலைகளின் சிறகரிந்தமையான் அவனை மேல் எறிந்ததுபோற் கூறும் நயத்தை இதில் நோக்குக. இது மரகதத் தம்மானை, இந்திரனை மரகதத் தம்மானையாகவும், அவனுடற் கண்களைத் தோழியர்கள் கண்களாகவும் பொருத்துக. (எக)

ஒழுங்குபடும் அண்டகோ டிகள்தோறும் நிலாவுறூஉம்
ஒண்கமல மாநிதிகளும்
ஒலிகொண்ட வெண்சங்க நிதிகளும் சார்ந்தவர்க்
குதவுநின் கரநோக்கிவான்
செழுங்கதியும் உய்த்தளித் திடுநிதியம் ஈதெனத்
தேர்ந்துவந் தளவளாவித்
திருவாய்ந்து விடைகொண்டு தம்பதி குறித்துமேற்
சேண்வழி நடத்தலேய்ப்பக்
கொழுங்கதிர் பரப்பிக் கவின்றசெம் மணியாற்
குயிற்றுமம் மனைகள்பலவும்
குளிர்நிலாக் கான்றுவெள் ளொளிவீசு முத்தங்
கொழிக்குமம் மனைகள்பலவும்
அழுங்குமணி மேகலைச் சிற்றிடை யெடுத்தெடுத்
தம்மானை ஆடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை ஆடியருளே.

(கு-ரை.) ஒழுங்கு படலம்-வரிசையாதல். சார்ந்தவர்க்கு-உன்னையடைந்தவர்க்கு. வான்-பெருமை. ஈது-இந்தக்கை. தேருதல் - தெளிதல். அளவளாவுதல் - கலத்தல். திரு-அச்செல்வம். சேண்வழி-ஆகாய வழி. ஏய்ப்ப-ஒப்ப, அழுங்குதல்-அழுந்துதல், சிற்றிடை-இறைவி: அன்மொழித்தொகை. பதுமநிதி-தாமரை வடிவமுள்ளது. சங்கநிதி - சங்குவடிவமுள்ளது. பதுமநிதி: செம்மை. சங்கநிதி: வெண்மை. இவ்விரு நிதிகளும் இறைவியிடம் வந்து வரம்பெற்று மேல்நோக்கிப் போவனபோல மாணிக்க அம்மனைகளையும் முத்தம்மனைகளையும் ஆடுதல் என இயைக்க. (எஎ)

தேங்கலுழி ஊற்றெடுத் தோடுமம் போருகச்
செல்வமட வாரிருவரும்
திங்களைக் கண்டினி யிருக்கினேமை நந்தவிசு
சிறைசெயும் எனக்கவன்று
பூங்கமலம் விட்டோரீஇத் தங்கொழுநர் பதியுறப்
போமிடை திரும்பிநோக்கிப்
புகழ்ந்திவை மதிக்குமுன் முகிழாமை தேர்ந்துளம்
பூரித்து வருவதேய்ப்பத்
தோங்கனியு மும்மலத் துகளீர்க்கு நின்முகம்
சுடர்பூப்ப அங்கையேந்தித்
துரிசற்ற பவளத் திழைத்தனவும் நித்திலத்
தொகையிற் குயிற்றியனவும்
ஆங்கமணி வால்வளை தழங்கிட எடுத்தெடுத்
தம்மானை ஆடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை ஆடியருளே.

(கு-ரை.) தேங்கலுழி - தேன் பெருக்கு. அம்போருகச் செல்வமடவார் இருவர் என்றது, திருமகளையும் கலைமகளையும் ஆகலின், அம்போருகம் இருவகைத் தாமரையுமாம். தவிசு-இருவகைத் தாமரைகளாகிய ஆசனம். கவன்று - கவலை யடைந்து. ஓரீஇ-நீங்கி. கொழுநர்-சூரிய சந்திரர். இவை-இந்தக் கைகள். தோம்-குற்றம். மும்மலத்துகள்-ஆணவம், கன்மம், மாயைகளாகிய தூள். துரிசு-குற்றம்குயிற்றுதல்-செய்தல். ஆங்க-அசைநிலை.

புத்தமிழ் துகுத்துமணி மோலியங் கடவுளர்
புரைபசிப் பிணிதவிர்த்துப்
பூதல மருங்கினும் பைங்கூழ்த் தொகுப்பெலாம்
பூரிப்ப மாந்தர்முகனும்

சித்தமு மலர்ந்துகளி கூரச் செழுங்கலைத்
தீங்கதிர் பரப்பியுலவுந்
திங்கட் பிரான்செந் துவர்க்கோடி படர்ந்தவெண்
திரைமுகட் டெழுகாலையும்
தத்தலை விரிக்குங் குடாதுகட லுட்புகுஞ்
சமயத்தினுஞ் சேத்தல்போல்
தடங்கையில் எடுத்தெறியும் எல்லையினும் மற்றது
தடங்கையிற் புகுபோழ்தினும்
அத்தமுமிழ் செயொளி கவர்ந்தொளிரு நித்திலத்
தம்மானை ஆடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை ஆடியருளே.

*(கு-ரை.) புத்தமிழ்து-புது அமிழ்து. உகுத்து-சிந்தி, புரை-குற்றம். பைங்கூழ்-பசுமையாகிய பயிர். குடாது கடல்-மேற்கடல். சேத்தல்-சிவத்தல். எல்லை-போழ்து. அத்தம்-அம்பிகை. சிலர்கை யெனவுங் கூறுவர். திங்கள் தோன்றுங் காலத்தும், மறையுங் காலத்தும் சிவந்திருக்கும் மியற்கையை யுணர்க.* (௭௧)

மருள்கான்ற நெஞ்சச் சழக்கைத் தடிந்தின்ப
வான்கதி கொடுக்குநின்கை
வயங்குபொற் கடகத் திருங்கவின் முகந்துமலர்
வள்ளலை நிகர்த்துவிழியின்
இருள்கான்ற நீலங் கவர்ந்தராப் பாயலிடை
யேந்தலை நிகர்த்துநுதலின்
இட்டசிந் தூரவெழில் கவர்ந்தநின் கோண்கரை
யிணைந்துமேற் போந்துலாவித்
தெருள்கான் றெவற்றினுந் தோய்வற்று நின்றவச்
சிற்பரம் பொருளையொத்துச்
சேணுடர் கொண்டாட ஆடச் செழுங்கருணை
தேக்கிநிறை சோமேசனுர்
அருள்கான்ற கண்களி பயப்பமணி நித்திலத்
தம்மானை ஆடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை ஆடியருளே.

(கு - ரை.) மருள்-மயக்கம். சழக்கு-அறியாமை. தடிதல்-கொல்லுதல். வான்கதி-உயர்பதவி; வீடுமாம். இருங்கவின்-மிக்க அழகு. நீலம்-கருமைநிறம். அராப்பாயல்-பாம்புப்பாய், ஏந்தல்-திருமால். இணைந்து-ஒத்து. சேணுடர்-இமையவர். மேற்போகுங் காலத்தில் முத்துமணி தன்னிறமான வெண்ணிறங்காட்டியிருத்தலாற் சிற்பரம் பொருளை யொத்து என்றார். முகந்து நிகர்த்து இணைந்து ஒத்து ஆட ஆடியருளெனப் பொருத்துக. ஈண்டு, மும்மூர்த்திகளுக்கு நிறமும் சிவத்தினிறமு மறிக. (௮0)

வேறு

முத்த மிழைத்தன வும்பவ ளத்திரள்
மொய்த்தன வுங்கலைகள்
முற்றும் நிறைந்த பசுங்கிர ணச்செழு
முழுமதி ஆமெனவும்
எத்திசை யுங்கதிர் கான்றிருள் சீத்தெழும்
என்றூழ் ஆமெனவும்
எண்ணி உணற்கெழு மூன்று ளராவும்
இருஞ்சிறை நேமியுநின்
உத்தி முலைக்கும் இடைக்கும் மிடைந்தயல்
ஓடவும் வெம்பசியால்
உயங்கு சகோரம் மயங்கி உடன் திரி
வுற்று வருந்தவுமேன்
அத்தன் உளத்தின் நடிக்கும் மடப்பிடி
ஆடுக அம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவள்
ஆடுக அம்மனையே.

(கு - ரை.) முத்த மிழைத்த அம்மனை ...முழுமதியா மெனவும். பவளத்தம்மனை...என்றூழா மெனவும் கூட்டுக. கலைகள் முற்று நிறைதல் எல்லாக் கலைகளுடனுங் கூடியிருத்தல். கான்று-வீசி. சீத்து-துடைத்து, என்றூழ்-சூரியன். மூன்று என்றது-பாம்பு, சக்கரவாகம். சகோரம். பாம்பு சூரிய சந்திரர்களை யுண்பது. சக்கரவாகம் சூரிய கிரணத்தை யுண்பது. சகோரம் சந்திர கிரணத்தை யுண்பது. உத்தி-சுணங்கு, தேமல். சக்கரவாகம் முலைக்கும், பாம்பு இடைக்கும் இடைந்தயலோட வென வியைக்க. திரிவுறல் - சுழலல். அரந்தை - துன்பம். (௮௧)

வடங்கெழு கொங்கை நிகர்ப்ப வளர்ந்த
வடாது பொருப்பினைநின்
மகிழ்நர் கரத்தினின் இன்னும் வளைத்தே
மாற்றரு சூழ்ச்சிநினைந்
துடங்கழி மூன்று புரங்களை மீண்டும்
உலாவ எழுப்பிவரம்
உதவி வெளிக்கண் விடுத்தல் கடுத்திட
ஒள்ளொளி முத்தினுமேர்
முடங்கல் உறுதோளிர் நீல மயத்தினும்
மொய்த்த பசும்பொனினும்
முற்ற அமைத்து விடுத்தருள் அம்மனை
மூன்றும்விண் மீதுலவ
அடங்கிய அன்பர் உளங்குடி கொண்டவள்
ஆடுக அம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவள்
ஆடுக அம்மனையே.

(கு-ரை.) வடம் - மணிவடம். வடாதுபொருப்பு - வடக்குள்ள மலை, மேருமலை. நின் மகிழ்நர்-சிவபெருமான். உடங்கழி-ஒருங்கே அழிந்த. முப்புரங்களைப்பற்றிக் காஞ்சிப் புராணம் கயிலாயப் படலத்திலுணர்க. கடுத்திட - ஒப்ப. ஏர்முடங்கல் உறுது - அழகு கெடுதலில்லாமல், விண்மீது - ஆகாயத்தில். உலவ-சஞ்சரிக்க. முத்தினுலும், நீலத்தினுலும், பொன்னினுலும் செய்யப்பட்ட மூன்று அம்மனைகளும் வெள்ளிக்கோட்டையையும் இரும்புக் கோட்டையையும் பொன் கோட்டையையும் ஒப்பனவாகக் கொள்க. (அஉ)

உய்ய வரந்தரு நித்தன் முகத்தில்
உயங்க முனந்தகையும்
ஒண்கர மின்னும் ஒறுத்த வுருதுற
வாடி நயப்பமேனு
வெய்ய நெருப்பெழு செங்கதி ருங்குளிர்
வீசு பனிக்கதிரும்
மேவி அகங்கையி னூடுற கேண்மை
விளைத்துவிண் ஏகுதல்போற்

செய்ய மணிப்பவ ளத்தின் இழைத்த
செழுந்திரள் அம்மனையுந்
தெள்ளிய முத்தின் இழைத்த கதிர்க்குவை
சிந்திய அம்மனையும்
ஐய நுசுப்பொசி யத்தளிர் அங்கையின்
ஆடுக அம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவள்
ஆடுக அம்மனையே.

(கு - ரை.) உயங்க - அசைய. தகையும் - தடுக்கும். இன்னும் ஒறுத்தல் உருது-இன்னும் வருத்துவதைப் பொருந்தாமல். கயப்பம் - மகிழ்வேம். கேண்மை-நட்பு. ஐயம் நுசுப்பு - உண்டோ இல்லையோ என்று ஐயப்படற்குரிய இடை. ஒசிதல்-துவளல்.

சூரிய சந்திரர்கள் முன் அம்மையார் இறைவன் கண்களை மூடிய காலத்தில் வருந்தினமை போல மீண்டும் நேராவண்ணம் அவ்வம்மையாரின் கையுடன் உறவாடிக்கொள்வோ மென்றெண்ணி நட்புப் பெற்றுப் போவனபோல் பவள அம்மனையையும் முத்தம்மனையையும் இறைவி ஆடினுள் என்றறிக. (அ௩)

கதிருமிழ் நீல மணித்திரள் மொய்த்த
கருஞ்சுடர் அம்மனைநின்
கட்படை யாலடி யார்மலம் ஓடல்
கடுப்ப எழுந்துலவ
முதிரொளி துற்ற செழும்பவ ளத்திரள்
முற்றிய அம்மனையும்
மும்மலம் வென்ற திறற்பிர தாபம்
முளைத்தெழல் ஒத்தெழவெண்
மதிநிகர் முத்தம் நிரைத்து வனைந்தவம்
மானை யதன்பிறகே
வயங்கிய கீர்த்தி திரண்டெழு கின்றது
மான எழுந்துலவ
அதிர்வளை அங்கையி னுலமு தாம்பிகை
ஆடுக அம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவள்
ஆடுக அம்மனையே.

(கு-ரை.) கண்படை - கண்ணுகிய போர்க்கருவி. மலம் - மும்மலம். ஓடல்கடுப்ப-ஓடிப்போய் விடுவதைப்போல. துறுதல்-நிறைதல். மூற்றிய - வளர்ந்த. பிரதாபம்-வீரம். வயங்குதல் - விளங்குதல். மான - ஒப்ப. அதிர்வளை - ஒலிக்கின்ற வளையல்.(அ௪)

---

## க. நீராடற்பருவம்

பத்தொன்பதாந் திங்களில் நிகழ்வது. இது பிள்ளையை நோக்கித் தோழியர்கள் ஆற்று வெள்ள நீராட வேண்டிக் கூறுதல்.

தேங்கிய செழுங்கலைத் திங்களுக் கருள்செய்த
  செல்வர்முடி மீதுதானும்
 திளைத்தாடும் உரிமையால் திளைத்தாடு வோர்க்கெலாந்
  தீப்பிணிப் பவந்தெறுதலால்
ஓங்கிய கலித்திரைக் கங்கையோன் றேநம்மை
  ஒத்ததாம் என்றதனோடும்
 உறவாடல் வேட்டெழுந் தாலென்ன விண்ணத்
  துயர்ந்துடுக் கூட்டமலைமேல்
தாங்கிய கிளைக்குலங் கான்றமணி யைத்தனது
  சாதியென ஓகைகூரத்
 தண்கதிர்க் கடவுளோடு செங்கதிரை அண்டத்
  தடஞ்சுவர்ப் பிடரினேற்றி
வீங்கிய ஒலிக்கூட்டம் ஈன்றுவரு பாலிநதி
  வெள்ளநீ ராடியருளே
 வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை
  வெள்ளநீ ராடியருளே.

(கு-ரை.) தான் என்றது. பாலியாற்றை. திளைத்தல் - முழுகுதல். தீப்பணி-கொடிய நோய். கலி - ஒலி. அதனோடும்- அக் கங்கையோடும். விண்ணத்து உயர்ந்து - ஆகாயத்தின்மேல் எழும்பியுயர்ந்து. உடுக்கூட்டம்-நட்சத்திரத் தொகுதி. கிளைக் குலம் - மூங்கிற் கூட்டங்கள். உடுக்கூட்டம் ஓகை கூர எனச் சேர்க்க. உறவாடல் வேட்டு எழுந்தாலென்ன உயர்ந்து எற்றி ஒலிக்கூட்டம் ஈன்று வரு பாலி நதியென்க. இது பாலாறெனத் தொண்டைநாட்டி லுள்ளது. (அ௫)

இருகவு ளுடைந்தூற்று பூங்கடாங் கமழ்முகத்
தெறுழ்வலிக குழூஉக்களிறெலாம்
எழிலிக் குழாத்திற் பெயர்ந்துழி தருஞ்சிகரி
யிடமாதி நான்குமாற்றத்
தருவளன் அடங்கத் தழீஇக்கொண்டு பின்னவை
தளர்ந்துகலி கூடராவகை
சாலவெதிர் ஒன்றுக் கனந்தமாப் பெருவளன்
தண்டா தளித்துவரிசூழ்
அருநிலன் இடத்தொருவர் தினையளவை ஆற்றிடினும்
அருளிநிலை பெறவாழ்க்கையோ
டழியாத திருவுமெதிர் ஆங்கவர்க் குதவுநின்
அடியவரை ஒத்துமாக்கள்
வெருவியயல் ஓடத் தழங்கிவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே
வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை
வெள்ளநீ ராடியருளே.

(கு - ரை.) இருகவுள் - இரண்டு செவியடி. கமழ்தல்-வீசுதல். எறும்வலி - மிக்கவலி. எழிலி - மேகம். உழிதரல் - சுழலல்.. சிகரி-மலை. நானிலத்தை நான்கு என்றார். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். ஆற்ற-மிகவும். வளம் - பண்டங்கள். தழீஇக்கொண்டு-வாரிப்பொருந்திக்கொண்டு. அவை என்றது அந்நில நான்கையும். கலி - வறுமை. தண்டாது - ஒழியாமல். உவரி - கடல் (உப்புள்ளது.) வெருவி - பயந்து. தழங்குதல் - ஒலித்தல், வளனடங்கத் தழீஇக்கொண்டு அளித்து ஒத்து வரு பாலிநதி யெனக் கொள்க. (அசு)

வளைத்தமுப் புரிசைத் தலத்தினின் றயில்கொண்ட
வாளிக்குழாம் எழுதல்போல்
வயங்கிய பசும்பொன் திரட்குவட் டினையும்வல
வாளரித் திரளையநெடுந்
துளைத்தகை முகக்கடாக் குஞ்சரத் தினையுஞ்
சுழிக்குமக் சுழிமூன்றினுந்
துண்ணென எழுந்தநெட் டுடல்வாளை தெய்வத்
துறைப்புனற் கங்கைநதியில்
திளைத்ததிற நோக்குவார்க் கிப்புனல் படிந்தாடு
செய்தவப் பயனையிந்தத்

திண்பூத பரிணும தேகத்தில் உதவுமா
தீர்த்தமிது வேனவியப்பு
விளைத்துவிண் ணுடும் பழிச்சவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே
வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை
வெள்ளநீ ராடியருளே.

*(கு-ரை.) வளைத்த-சுற்றிய. அயில்-கூர்மை. அரித்திரள்-சிங்கக் கூட்டம். பொற்றிரட்குவட்டினையும், வாளரித்திரளையும், குஞ்சரத்தினையும் சுழித்தலின் சுழி மூன்றினும் என்றார். இம்மூன்றையும் பொன், வெள்ளி, இரும்பாலாகிய மூன்று மதில்களாகக் கொள்க. துண்-விரைவுக்குறிப்பு. நெட்டுடல்-நீண்டவுடம்பு. புனல்-நீர். பழிச்ச-துதிக்க. வெறி-மணம். நறு-தேன். மூன்றுவகைச் சுழியிலுமெழுந்த வாளைமீன்கள் ஆகாய கங்கையிற்றிளைத்த திற நோக்குவார் இப்பாலிப்புனலிலாடுந்தவப் பயனைப் பூதசாரவுடலாகிய தேவவுடலாலெய்தாமல் பூதபரிணுமவுடலிலெய்தவுதவும் மாதீர்த்தம் இதுவென்ன வியப்பு விளைத்து விண்ணுடும் பழிச்சவரும் பாலியென்றியைக்க. இப்பூதசாரதேகம், பூதபரிணும தேகவிரிவுகளைச் சீகாழித்தல புராணம் திருவிழா அத்தியாயத்திற் காண்க.* (அஎ)

திரைத்தோலி பரப்பியலை வீசும் பெருங்கடல்
தீம்பயம் பருகிஆர்த்துச்
செல்லினம் எழுந்துநெடு வான்படர்த லுந்தனது
தீர்த்தம் படிந்தாடுநர்
புரைத்தோகை விளைக்குமல மாயைகன் மக்குழாம்
பொள்ளேன இரிந்தோடலும்
புரையக் கருங்குழற் காட்டுமலர் கூடும்
பொலஞ்சிறைத் தும்பிமுழுதும்
இரைத்துமணி வானத் தொழுந்தோட நீராடும்
ஏந்திளங் கோங்கைமடவார்
எறிட்ட மணியணிகள் சிந்திய கரைக்கணின்
இணையடி வருந்தாவகை
விரைத்துணர் நிரம்பப் பரப்பிவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே
வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை
வெள்ளநீ ராடியருளே.

(கு-ரை.) தீம்பயம்-இனிய நீர். பருகி-குடித்து. ஆர்த்து-ஒலித்து. செல்லினம் - மேகக்கூட்டம். படர்தல்-செல்லுதல். புரைத்தொகை - குற்றக்கூட்டம். பொள் என - விரைவாக, புரைய-ஒப்ப. பொலம்சிறை-பொன்நிறச்சிறகு. தும்பி-வண்டு. மணிவானம்-கரிய ஆகாயம். ஈண்டு, மணி கருமைக்காயிற்று. ஏறிட்ட - கோத்த, விரைத்துணர் - மணமுள்ள பூங்கொத்து. செல்லினம் நெடுவான் படர்தலும், மலமாயை கன்மக்குழாம் இரிந்தோடலும் புரையத்தும்பி முழுதும் இரைத்து மணிவானத் தெழுந்தோடநீராடும்ஏந்திளங்கொங்கைமடவார்எனக்கூட்டுக. அன்னார் மணியணிகள் சிந்திய கரையில் உன்னடி வருந்தாவகை விரைத்துணர் பரப்பி வரு பாலிநதி என முடிக்க. (அஅ)

கொழுந்தாமம் ஆடவது சுற்றுங் குழற்கற்றை
கூட்டுவிட் டாடவதனிற்
குடிகொண்ட மாதர்ச் சுருப்பினம் முகேரெனக்
குரல்விளைத் தாடவதுசூழ்
செழுந்தா துகுங்கஞ்ச வெள்ளனந் திரையூடு
சேர்ந்தாட அதனருகுநின்
திருமேனி கண்டினம் எனப்பிணி முகக்குலஞ்
சிறைவிரித் தாடவதுபோல்
எழுந்தாடு தெய்வப் பிணாக்குழாங் கண்டுகண்
டின்பநீ ராடவவர்தோள்
இணங்கும் பெரும்புலவர் கைகொட்டி ஆடவெள்
ளிர்ம்புனற் கங்கைபுவிமேல்
விழுந்தாங் கொழுங்குகொண் டாடிவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே
வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை
வெள்ளநீ ராடியருளே.

(கு-ரை.) கொழுந்தாமம் - செழுமையாகிய மாலை. அது-அம்மாலை. குழற்கற்றை-கூந்தற் கூட்டம். மாதர்-அழகு. சுருப்பு-வலித்தல், முகேர்-ஒலிக்குறிப்பு; ஈண்டுவண்டொலியை யுணர்த்திற்று. இது பொது, இதனை "மொய்யார் தடம் பொய்கைபுக்கு முகே ரென்னக் - கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி" எனத் திருவாசகத் திருவெம்பாவையில் வருவது காண்க. குரல்-ஒலி. அது - அச்சுருப்பினம். பிணிமுகம்-மயில். பிணா-பெண். பெரும் புலவர்-பெரிய தேவர்கள். இன்பநீர்-களித்தலாகிய நீர். புவிமேல் விழுந்தாங்கு - பூமியின்மேல் விழுந்ததுபோல. (அகு)

ஏந்து பிறைவெண் மருப்புரற்கால்
எழில்கூர் மலைவா ரணத்திரள்கள்
எய்திப் பரவை கலக்குமலை
யேய்ப்பத் துளைந்து விளையாடி
நீந்தி அணைந்து கரையேறி
நிறையுங் களிப்பு மீக்கொண்டு
நிலாவெண் தரளக் குவைபெயர்த்து
நீள்வா ரிதியின் கரைக்கணலை
மாந்து முகிலா லியைச் சொரிந்தான்
மானச் சிதறும் பரப்பினிடை
வான்மீன் நடுவண் பலமதியம்
வதிந்தால் நிகர்ப்பச் சங்கினங்கள்
போந்து துயிலும் பாலிநதிப்
புதுநீ ராடி யருளுகவே
பொற்பார் குளந்தை அமுதவல்லி
புதுநீ ராடி யருளுகவே.

(கு - ரை.) எழில் கூர்தல்-அழகு மிகுதல். வாரணத் திரள்கள்-யானைக் கூட்டங்கள். எய்தி-வந்து. பரவை கலக்கும் மலை - கடலைக் கடைந்த மலை; (மந்தரமலை.) ஏய்ப்ப-ஒப்ப. துளைந்து-முழுகி, கலக்கி. மீக்கொள்ளுதல்-அதிகப்படல். வாரிதி - கடல். அலை-கடல், ஆகுபெயர். மாந்தல்-உண்ணல். ஆலி-ஆலியங்கட்டி, நீர்க்கட்டி. மான - ஒப்பாக. பரப்பினிடை - அம் முத்துக்களின் பரப்பிடத்தில். வான் மீன் - ஆகாய நட்சத்திரம் மின்னுதலை யுடையது மீன் என்க. முதனிலைதிரிந்த தொழிற்பெயர். யானைக்கு மேகமும் தரளக் குவைக்கு ஆலியும், தரளப் பரப்பிற்கு வான்மீனும், சங்கினங்கட்குப் பல மதியங்களும் உபமானங் களாம் என்றறிக. (கூ0)

வழியுஞ் செழுந்தேங் கமலமலர்
மடவார் அமிழ்தே புனலகத்து
மறைந்தால் யாங்கள் நினைப்பிடிக்க
வல்லேம் எனவஞ் சினங்கூறச்
சுழியும் புனனீ அவ்வாறு
துண்ணென் றேளிப்ப மற்றவர்தாந்
துருவிக் காணு தெங்கொழுநர்
சோதிப் பிரான்றாள் தலையென்ன

மொழியும் உறுப்போர் இரண்டையுமே
முன்னிக் காணூர் யாமிவளை
முழுதுங் காணேம் எனநாணி
முடிசாய்த் தொதுங்கிநிற்பவருள்
பொழியும் பசிய முகில்பாலிப்
புதுநீ ராடி யருளுகவே
பொற்பார் குளந்தை அமுதவல்லி
புதுநீ ராடி யருளுகவே.

(கு - ரை.) *கமல மலர் மடவார் - தாமரைப் பெண்கள்; திருமகள் கலைமகள். மறைந்தால்: உம்மை தொகுத்தல், வஞ்சினம் - சபதம், துருவி - தேடி. எங்கொழுநர் - எம்முடைய நாயகர்கள். திருமால், நான்முகன். நாணி - வெட்கமடைந்து. அருள்பொழியும் பசிய முகில் - அமுதாம்பிகையம்மை.* (கக)

திரையுந் தனது நறும்புனலில்
திளைத்து முழுகு மடவார்தம்
செழுந்தேந் தொடையற் சுருப்பினங்கள்
சேட்சேன் றகலும் படிவிலக்கி
உரையுந் தொழிலும் உள்ளமுந்தன்
னுழைசேர்த் தழுந்து வோர்மலநோய்
ஒருவுந் தொழிலைத் தெரித்திதழி
உறழப் பொன்னும் வேண்டலைபோல்
நரையுஞ் சடைபோல் துவர்க்கொடியும்
நணுகும் மதிபோற் கரிக்கோடும்
நடங்க நடித்து வெளுத்துமறை
நுவலற் கரிய பரம்பொருளைப்
புரையுஞ் செல்வப் பெரும்பாலிப்
புதுநீ ராடி யருளுகவே
பொற்பார் குளந்தை அமுதவல்லி
புதுநீ ராடி யருளுகவே.

(கு - ரை.) *தனது என்பது பாலியாற்றினுடைய தென்றதை. திளைத்து - அழுந்தி, சேண் - தூரம். உரை - வாக்கு. தொழில் - செயல். உள்ளம் - மனம். தன்னுழைச் சேர்த்தழுந்துவோர் - தன்னிடம் ஒப்புவித்துத் தன்னுடனென்றாய் இரண்டறக் கலந்தழுந்துகின்ற உண்மைஞானமுள்ள மெய்யன்பர். ஒருவுதல் - நீங்குதல். தெரித்து - தெரிவித்து. நுடங்கு*

தல் - அசைதல். புரையும் - ஒக்கும். விலக்கித் தெரித்து நடித்து வெளுத்துப் புரையும் பாலி எனக் கூட்டுக. சிவபெருமானுக்கு வெண்ணிற முண்டாதலால் வெளுத்து என்றார். மலநோய் என்பது மும் மலங்களால் உண்டாகுந் துன்பம். (கஉ)

வேறு

முகமல ரிணையொளி உகுமதி ஆமென
முண்டக நொந்தயர
முன்கையில் ஏற்றிய சங்கொடு சங்கம்
முழங்கிக் கரைபுரள
மகர இருங்குழை எதிரிய கெண்டை
மலங்கு கயற்குலம்வார்
வாளை கலங்கி யெழுந்து குதிப்ப
வயங்கு சுணங்கிலமென்
நகநேசு புற்புத முலையி னுடைந்திற
அறல்குழல் போற்றகரம்
அணிந்திலம் எனநினை தடியில் தன்கவின்
அழியத் திருமருவிப்
புகழ்நிறை யுங்கம லாகரி பாலிப்
புதுநீ ராடுகவே
பூரண ஞான புராதனி பாலிப்
புதுநீ ராடுகவே.

(கு - ரை.) உகுதல் - சிந்துதல். முண்டகம் - தாமரை. நொந்து - வருந்தி. அயர்தல் - இளைத்தல் முன்கையிலேற்றிய சங்கு - கையின் முன்னிடம் தரித்த வளையல். மகர இருங்குழை - மகரமீன் வடிவமாகச் செய்யப்பட்ட பெருமை பொருந்திய காதணி. எதிரிய - எதிர்த்த. வார்வாளை - நீண்ட வாளைமீன். சுணங்கு - தேமல். புற்புதம் - நீர்க்குமிழி. அறல் - கருமணல். இற - இற்றுப்போக. தகரம் - மயிர்ச்சாந்து. பூரண ஞானம் - நிறைஞானம். (கங)

விற்புரு வங்குழை யக்கரு நீல
விழித்துணை செங்குவளை
வெல்லநின் மேனி தழைப்பமு கேரென
வீங்கிய நீர்குடையா

நிற்புகழ் தேய்வ மடந்தையர் மீதினில்
நீள்சிவி றித்துளையான்
நிரைத்த குறுந்துளி தம்முடல் எங்கும்
நிரத்தலும் வானவர் தங்
கற்புரை தோள்கள் புதைத்தனர் ஆடக்
கடவுள் சடாமகுடக்
கங்கை யவன்தலை ஐந்தோடு மாடக்
காசினி கொண்டாடப்
போற்பு மிகுங்கும லாகரி பாலிப்
புதுநீ ராடுகவே
பூரண ஞான புராதனி பாலிப்
புதுநீ ராடுகவே.

(கு - ரை.) *விற்புருவங்குழைய-வில்லாகிய புருவம் வளைய. நீல விழித்துணை செங்குவளை வெல்ல - கருமையான கண்களிரண்டும் நீராடலாற் சிவந்து செங்குவளை மலரை வெற்றி கொள்ள. வீங்குதல் - பருத்தல். குடையா - முழுகி. சிவிறி- நீர்த்துருத்தி. முகோர் எனல் - ஒலிக்குறிப்பு. நிரைத்த - ஒழுங்கு படச் செய்த. குறுந்துளி-சிறிய துளிகள். நிரத்தல்-நிறைதல். கல்புரைதல் - மலையையொத்தல். காசினி-உலகம். நீலம் என்றது கரிய நீலப்பூ வென்பாருமுளர்.* (கஏ)

---

## க௦. ஊசற்பருவம்

இது குழந்தையை ஊஞ்சலிலேற்றிவைத்துத் தோழியர் அவ்வூஞ்சலை யாடச்செய்தல். இஃது இருபத்தோராவது திங்களில் நிகழ்வது.

ஒழுகொளி பரப்பிக் கதிர்த்தெழும் பரிதியை
ஒழுக்கித் திரட்டியதுபோல்
உரகமுமிழ் செம்மணித் தூணிறுவி அதனும்பர்
ஒளிநிலாக் கான்றகலைகள்
முழுதுநிறை திங்களை உருட்டிநீட் டியதேய்ப்ப
முதிர்வயிர விட்டமிட்டம்
முழுமதியி னின்றிழியும் அமிழ்ததா ரைகளென்ன
முத்தணி வடங்கள்தூக்கிப்

பழுதகலு நவமணிப் பலகையிடை மூட்டியப்
பலகைமேல் மதியமிழ்துணப்
பச்சிளங் கிள்ளையோன் றேறினுல் என்னப்
பரிந்திருந் தருளி மூலமேற்
புழுகொழுக உயிர்களுக் கருளொழுகும் அமுதம்மை
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) கதிர்த்தல்-கிரணம் வீசுதல். ஒழுக்கி - ஒழுங்கு படச்செய்து. திரட்டியது-சேர்த்தது. உரகம்-பாம்பு (உரம்-மார் பால், கம் - நடப்பது) உம்பர் - மேல். தூக்கி - தொங்கவிட்டு. பழுது - குற்றம். நவமணி - ஒன்பது மணிகள். புழுகு - புனுகு. இழியும் - இறங்கும். பரிதல் - விரும்புதல். (கசி)

செயலையக் தாருவை உதைந்தாடு தோறுமச்
செழுந்தருப் பூக்கள்சோரியும்
செயலுதைக் காற்றது தனைநீங்க எண்ணிநங்
தேவைத் தணந்துவிளையாட்
டியலைமேல் கொண்டநின் மீதலர்ப் பூம்பகழி
இளையாது சோரிவதெனவும்
இதுகண் டதற்குநேர் விழிச்சுரும் பீந்தருளி
இளநிலா நகைமுகிழ்ப்ப
அயலுறாஉங் கொடிமுல்லை ஊழ்த்தலர் சொரிந்திடல்
அருந்துணைமை பூண்டுதானும்
அலர்வாளி பெய்திடுந் திறனெனவும் ஏர்காட்ட
ஐம்படை பொறுத்தபச்சைப்
புயலொடு பிறந்தருட் கடலொடு வளர்ந்தமின்
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) செயலை - அசோகு. தாரு - தரு, மரம். செயல் - செய்கை. உதைக்கு-நின் கால் உதையினுக்கு. ஆற்றுது-பொருக் காமல். தனை :அசோகை. நங்தேவை-நம்முடைய சிவபெருமானை. தணத்தல் - பிரிதல். விளையாட்டியலை - விளையாட்டினது தன் மையை. அலர்ப்பூம் பகழி-மலர் அம்பு. அதற்கு நேர்-அம்மலர்ப்

*பகழிக்குச் சரியாய். வாழ்த்து-மலர்ந்து. துணைமை-துணையாகுந் தகைமை. திறன்-வகை. ஏர்-அழகு ஐம்படை-சங்கு, சக்கரம், வாள், தண்டு, வில் என்னும் ஐந்துகருவி. பச்சைப்புயல்-திருமால். மின்-அம்பிகையைக் குறித்தது. செயலை மரமானது மலர்சிந்துஞ் செய்கை அலர்ப்பகழி சொரிவதெனவும், முல்லைக்கொடி அலர் சொரிந்திடல் அந்த அசோகுக்குத் துணைபூண்டு தானும் மலர் வாளி பெய்திடுவதெனவும் ஏர்காட்ட என்க. மகளிரால் மலரு மரங்கள் பத்துள் அசோகு உதைக்கவும், முல்லைசிரிக்கவும் மலரு மாதலால் இங்ஙனங் கூறினாரென வறிக. இறைவி இறைவனை நீங்கியிருத்தலால் அவனை அவன்பாற்சேர்க்க அவ்விரண்டும் மலர் சொரிந்தன என்பது கருத்து. மகிழ், பாலை, பாடலம், புன்னை, குரா, அசோகு, குருக்கத்தி, மா, சண்பகம், முல்லை என்பன பத்து மரங்கள். இவற்றுள் முல்லைக்கொடி விரவியிருப்பினும் சுருங்கச் சொல்லல் என்னும் நயம்பற்றி மரங்களெனக்கூறியதென அறிக. இவற்றின் விரிவைச் சூடாமணி நிகண்டிலறிக. (கக)*

நிலம்பொலி உயிர்ப்பயிர் மலக்கோடுந் தழல்வெம்மை
நீத்துமெய்ஞ் ஞானமலரா
நின்மலா னந்தச் செழுங்கனி கனிந்தோங்க்
நிறையருட் சூல்கொண்டுபொற்
கலம்பொலியும் உருவெலாம் பச்சென்று தோற்றிக்
கருங்குழற் கற்றைநாப்பண்
கதிர்த்தசிறு கீற்றினன் மின்னியொளி கூர்நுதற்
கார்முகங் கவினவாங்கிச்
சிலம்பொலிசெய் கிண்கிணிப் பருமத்தி னற்பெருந்
தீங்குரல் எடுத்திடையறுத்
திருவருள் தாரைபொழி செய்கைக்கு வாய்ப்பவான்
சேர்ந்துலாய் நிற்றலுறழப்
புலம்பொலியும் அடியார்கள் சிந்தைகுடி கொண்டவன்
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

*(கு-ரை) மலம் என்றது, மும்மலங்களை. அவை ஆணவம், கன்மம், மாயை என்பன. மலரா-மலர்ந்து. செய்யாஎன்னும் வாய் பாடு, இதனால் மெய்ஞ்ஞானம் மலராயிற்று. கனிந்து-பழுத்து. சூல்-கருப்பம். கலம் - அணி. நாப்பண் - நடு. கார்முகம் - வில்; காரிலுண்டாவது. கவின-அழகுசெய்ய. வாங்குதல்-வளைத்தல்; சிலம்பு - ஒலிசெய் காலணி. பருமம் - பதினெண்கு கோவை மணி*

*வடம். தீங்குரல் இனிய வொலி. வாய்ப்ப - பொருந்த. வான்-வெளி.*

*இப்பாட்டில் இறைவியை அருள்மழை பொழியும் கார் எனக் கூறினரென அறிக.* (கஎ)

மனக்குல மிடைந்துபின் காட்டவிசை கொண்டாடும்
வண்மையால் நினதுருவெலாம்
மணித்திரள் நிரைத்தெனச் சிறுவெயர் பொடித்தலும்
வழிநின்று பணிகேட்டுநின்
அனக்கவின் நடைத்திறங் கற்கவரும் வெள்ளானை
அஞ்சிச் செவிக்காலெறிந்
தந்தரக் கங்கையை மடுத்துத் துளித்துவெயர்
ஆற்றுமத் திவலைபரவா
நினக்கடிமை பூண்டுமுன் போற்றும்இமை யோர்முதல்
நெடுந்தருப் புல்லிறுதியில்
நிரத்தலால் அனைத்துநின் மயமெனுஞ் செஞ்சொல்லை
நிலையுறுத் திடுவதேய்ப்பப்
புனக்கிளி நிகர்த்தமென் தீங்கிளவி அமுதம்மை
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

*(கு - ரை.) இடைந்து - வருந்தி. மனக்குலம் பின் காட்ட என்றதனால் உள்ளத்தின் விரைவினும் மிகுதியாக என்பது கருத்தாயிற்று. மணி-முத்து. அது வெயர்வுக்குவமையாயிற்று. வழி-திருவுள்ளக்குறிப்பின்படி. மடுத்தல்-கையினிறைத்தல். நிரத்தல்-கலத்தல். எல்லாம் நின்னுறைவுஎன்பதைவிளக்கியவாறும்.* (கஅ)

திங்களொளி காட்டுமுக மீதுலவு நாட்டச்
செழுங்கயல் உதைந்தூக்கலாற்
செம்பொனின் இழைத்தமக ரக்குழைக ளுஞ்செவிச்
செங்கனக ஊசலாடப்
பங்கய இருக்கைமட மாதரது நோக்கியிரு
பாலுமிரு வேமொட்டவும்
பாயுங் கயற்குலம் அசைக்குமவ் வூசலிற்
பாய்ந்திலதிவ் வூசலெனநீள்

அங்கையின் வலித்துநனி ஆட்டுதோறு நின்வாய்
அரும்புநகை நிலவெழிலினுக்
காங்கவர் முகத்திங்கள் சாயப்பு ராணமறை
ஆகமம் அளந்தறிவரும்
புங்கவன் மருங்குகுடி கொண்டஅமு தாம்பிகை
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) நாட்டம்-கண். ஊக்கல்-அசைத்தல். இழைத்த-தங்கத்தால் இழைத்துச் செய்த. அது நோக்கி-அதைப் பார்த்து, குழைகள்செவியாகியவூசலாடுவதைஎன்க. அரும்புதல்-தோன்றுதல்.வலித்து-இழுத்து.சாய்தல்-கவிழ்தல். அளந்து-எல்லைகண்டு.

திண்ணிய பொலஞ்சிகரி வாங்கிய பிரான்சென்னி
தெரிகலா மறையோதிமம்
செப்புபழி மொழிமாறு மாறுனக் கூர்தியாய்ச்
சேர்ந்துநின் தாள்சுமந்து
தண்ணிய நினதுகண் அருள்கிடைத் துன்னுழிச்
சார்ந்திறைவன் ஊடல்தீரத்
தாள்பணியும் எல்லைமுடி கண்டுகோண் டுயர்கீர்த்தி
தாங்குவான் எண்ணிவரலும்
கண்ணியவவ் வஞ்சனை அறிந்ததனை அலமரக்
காண்டுமென உன்னியேறிக்
ககனத்து முன்பின்ன தாகக் கடாவுதல்
கடுப்பவெண் தரளமொய்த்துப்
புண்ணிய மலர்ந்தனைய ஒண்பலகை ஏறிநீ
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) திண்மை திரண்ட வன்மை. பொலம் சிகரி-பொன்மலை. வாங்குதல்-வளைத்தல். மறையோதிமம்-பிரமனாகிய அன்னம். பழிமொழி - திருமுடியைப் பார்த்து வந்தேன் என்று சொன்னபழிமொழி. ஊர்தி-ஏறிச்செல்வது. தண்ணிய-குளிர்ந்த. உழி-இடம். ஊடல்-பிணக்கு. தாள்-இறைவியின் அடி. எல்லை-காலம். அதனை-அம்மறைஅன்னத்தை. அலமரக் காண்டும்-சுழ

லச்செய்வோம். ககனம்-விண். தரளவொண் பலகைக்கு ஓதிமம் உவமானமாமென வறிக. (௯00)

அரவமுமிழ் செம்மணித் திரள்சுற் றிழைத்திடை
அலங்கொளிய நித்திலத்தால்
அமைத்ததன் நடுச்செழுஞ் செம்பட் டலங்கரித்
தவிர்பலகை மீதிருத்தல்
இரவகல வெங்கதிர் உகும்பரிதி மண்டலம்
இளம்பனிக் கதிர்மண்டலம்
எரிக்கடவுள் மண்டலங் கீழ்தொட்டு முறைமூன்றும்
ஏய்ந்தபூந் தவிசிலடியார்
பரவநீ நின்றநிலை ஒப்பஆ னந்தமெய்ப்
பண்ணவன் விழிச்சுடர்கள்நின்
பாலணுகு காட்சியப் பரிசறிந் தெம்மையும்
பரூஉமணித் தவிசெனக்கொள்
புரவுபூண் டருளென்று வேண்டுதல் கடுப்பஉயர்
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) அரவம் உமிழ் செம்மணி-நாகரத்தினம். சுற்று இழைத்தல்-பலகைச் சுற்றுப்பக்கங்களின் இழைத்தல். இடை - அப்பலகையின் நடுவில். அலங்கு ஒளிய-மிக்க ஒளியினையுடைய. இரவு - இரா. இருத்தலை ஒப்பவும் காட்சியைக் கடுப்பவும் ஊச லாடியருள் எனக்கூட்டுக. புரவு-புரத்தல். ஞாயிறு, திங்கள், எரி களின் மண்டிலங்கள் உடலினுள் உண்மையை யோக நூலார் மாட்டேனும்,சிவவழிபாடு செய்வார் மாட்டேனுங் கேட்டுணர்க.

சுத்தமும் அசுத்தமும் எனப்படுங் கொடுமாயை
தூணாக இருளாணவம்
தொடுத்தநெடு விட்டமாக் கருமப் பெரும்பகுதி
தூக்கிய வடங்களாக
வைத்தமா யேயமே பலகையா முடிவிலா
வான்புவன கோடிமுற்றும்
மகிழ்ந்தாடு வெளியாக ஆருயிர்க் குழவிகளை
மரணம் பிறப்பென்னுநோய்

மொய்த்தமணி ஊசல்வைத் தாட்டிக் கடைத்தலை
மூடங்கா தேடுத்தணைத்து
முதுக்குறை வளித்துமேற் பரமுத்தி வீடுய்த்து
மூவாத ஆனந்தமாம்
புத்தமிழ் தருத்திமெய்த் தாயாய் வளர்ப்பவள்
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) இருள் ஆணவம்-கருமையாகிய ஆணவம். 'இருள் சேர் இருவினை,' என்றதாலும் அறிக. கருமப் பெரும்பகுதி-மிக்க வினைப்பகுப்பு. மாயேயம்-தநு,கரண,புவன,போகங்கள். வெளி-விண். குழவிகள்-மக்கள். கடைத்தலை-இருவினை நீக்க முடிவில். மூடங்காது-கெடாமல். முதுக்குறைவு - பேரறிவு. மூவாத - கெடாத. ஆநந்தம் - சிவவின்பம். புத்தமிழ்து - புதிய மூவா மருந்து. (௧0௨)

நாந்தகப் பொருபடை விதிர்த்தனைய இமையாத
நாட்டத் தரம்பைமாரும்
நளினக் கரங்கூப்பி எதிர்நிற்கு முகில்வண்ண
நாயகன் முதல்தேவரும்
வேய்ந்தசெம் பொற்பெரும் பூண்களின் இழைத்தபல
வேறுகுல மணிகள் தோறுமவ்
விரிகதிர்ப் பேதத்தி னுக்கேற்ப நின்னூசல்
மின்னிழல் பரப்புதோற்றம்
வாய்ந்தமெய்த் தொண்டுசெயும் அன்பர்கள் உளந்தோறும்
வயங்குபரி பாகபேத
மார்க்கத்தி னுக்கிசைய மன்னிநீ விளையாடும்
வாய்மையைக் காட்டவளிவீழ்
பூந்தகர வார்க்கருங் கூந்தலமு தாம்பிகை
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) நாந்தகம்-வாள். வேய்தல்- அணிதல். பூண் - அணி. வயங்குதல்-விளங்குதல். பரிபாக பேதமார்க்கம்-பக்குவ வேறுபாட்டுநெறி. மன்னி-நிலைத்து. மின்னிழல் பரபத தோற்றங்காட்ட ஆடியருள் எனக் கூட்டுக. (௧0௩)

அண்டப் பரப்பெங்கும் மண்டிப் படர்ந்தபே
ரானந்த வெள்ளம்வாழ
அருட்சரியை கிரியைசிவ யோகமோடு ஞானமெனும்
அதிகசிவ தருமம்வாழக்
கண்டவர்க் கினியநஞ் சோமேசர் வாழநின்
கட்கடைக் கருணைவாழக்
காசினி ஒருங்குசிவ பத்திகுரு பத்திசங்
கமபத்தி செய்துவாழ
வெண்டிருப் பூதியுயர் அக்கமணி வாழமெய்
விளக்குமஞ் செழுத்துவாழ
வேதநெறி சைவநெறி வாழக் குளந்தைநகர்
மேன்மேற் செழித்துவாழப்
புண்டர நுதல்தொண்டர் தங்குழாம் வாழநீ
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) மண்டுதல்-மிகுதல். ஆனந்த வெள்ளம்-சிவம். நால்வகை வழிகளைச் சிவதருமம் என்றதை யறிக. ஒருங்கு - எல்லாம். சங்கமம்-சிவனடியார் கூட்டம். புண்டரம்-நெற்றியி லணியும் முக்கூற்றுக்குறி. அது நீற்றுக்குறி என்க. (௧0௪)

அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்

முற்றிற்று.

---

# செய்யுள் முதற்குறிப்பு

[எண் : பக்க எண்]

கழக வெளியீடு : கஅகட

சங்கர நாராயணர் கோயிற்

# கோமதியம்பிகை பிள்ளைத்தமிழ்



ஊற்றுமலை சமத்தான வித்துவான்

**புளியங்குடி திரு முத்துவீரக் கவிராயரவர்கள்**

இயற்றியது

கழகப் புலவர் சித்தாந்த பண்டிதர்

**திரு ப இராமநாத பிள்ளையவர்கள்**

எழுதிய குறிப்புரை




திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

சென்னை–1. மதுரை–1. திருநெல்வேலி–6.

1968

பரமசிவன் பிள்ளை இராமநாத பிள்ளை (1890)



Ed 1 August 1959

Reprint: Nov. 1968

o31, IM 70, 1
K 8

SANKARA NARAYANAR KOIL

KOMATHIAMBIGAI PILLAITTHAMIZH

Thiruvaranganar Achakam, Madras-13. (I)

# பதிப்புரை

பெயர்முறையில் பிள்ளைத்தமிழ் எனப் பேசப்படும் பனுவல்கள் உண்மையிற் பெரிய தமிழ்ப்பெரு நூல்களே. அந் நூல்களைக் கற்பாருள்ளம் தத்தம்குழந்தைகளிடம் குழைந்துருகிக் களிந்து களிப்புறுவதுபோல் களிப்புறுமென்பது கைவந்த மெய்ம்மையாகும். "குழந்தையும் தெய்வமும் கொண்டாடி யவிடத்து" என்னும் முதுமொழி எல்லாரானும் நன்குணர்த்தப் பட்ட தொன்றாகும்; இம் முதுமொழியினமைவால் தெய்வத்தையும் குழந்தையாக நினைந்து கொண்டாடுவது சாலச்சிறந்ததென்பது விளங்கும். பிள்ளைமைப்பருவம் "செறுநரும் விழையும் செயிர் தீர்" பருவமாகும். குழந்தையின் உள்ளம் மாசுமறு வற்றது. அதனால் அக் குழந்தை தெய்வ வடிவமாகவே திகழ்வது தெளிவு.

அறிமுகமில்லாத பிள்ளைகளையும், வேற்றுமையின்றிக் கண்டார் காதல்கொண்டு கைநீட்டி வாங்க முற்படுவதும், அப் பிள்ளைகளும் பெரும்பாலும் தாவிச் செல்ல முற்படுவதும், அவை கண்டு ஈன்றார் கொடுத்துவப்பதும் உலகியலிற் காணும் உண்மை களாகும். இதுபோல் பிள்ளைத்தமிழ் நூல்களும் எல்லாரானும் இனிதேற்றுக் கற்றுப் பயனெய்தி இன்புறும் எழில் நூல்களாகும். அதுகுறித்தே கழகத்தாரால் பல பிள்ளைத்தமிழ் நூல்கள் வெளி யிட்டு வருவதும், பிள்ளைத்தமிழ் மாநாடுகள் கூட்டி அவற்றைப் பற்றிய ஆய்வுநூல்கள் வெளியிட்டு வருவதும் அனைவரும் அறிந்த வுண்மையாகும்.

அம்முறையில் "சங்கர நாராயணர் கோயிற் கோமதியம்பிகை பிள்ளைத்தமிழ்" என்னும் இந் நூலும் வெளி வருகின்றது. இதன் ஆசிரியர் வரலாறும் நூலின் சிறப்பும் இதன் முன்னுரையின்கண் காணலாம். இந் நூல் ஊற்றுமலைச் சமத்தான அரசராகிய பெருந்திரு இருதயாலய மருதப்ப தேவரவர்கள் வாழ்க்கைத்துணைவியார் சிவத்திரு மீனாட்சிசுந்தர நாச்சியாரவர்கள் பொருளுதவியால் நந்தன ஆண்டில் வெளி வந்துள்ளது.

இந் நூலுக்குக் கழகப் புலவர் சித்தாந்தபண்டிதர் திரு. ப. இராமநாத பிள்ளையவர்களைக் கொண்டு எல்லாப் பாட்டுக்களுக்குங் குறிப்புரையும், இன்றியமையாதவிடங்களில் விளக்கங்களும், வரலாறுகளும், இலக்கணக் குறிப்புக்களும், தக்க மேற்கோள்களும், சித்தாந்த நுணுக்கங்களும், உருவக உண்மைகளும் பிறவும் அமைய விரிவுரையும் எழுதி அவ்வப்பாட்டின் கீழ்ச் சேர்க்கப் பட்டு இரண்டாம் பதிப்பாகக் கழகத்தாரால் இந் நூல் வெளி வருகிறது.

இதனைப் பொதுவாகச் செந்தமிழ் அன்பர்களும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் வாங்கியும் வாங்குவித்தும், கற்றும் கற்பித்தும் இன்பம் எய்துவாராக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# முன்னுரை

தெய்வத் திருவுருவங்கள் அனைத்தும் அத் தெய்வத்தின் தண்ணளி நிறைந்த பண்புகள் புலனாக அருள்வடிவாய் மெய்யன்பர்களுக்குத் தோற்றமளித் தருளிய திருத்தோற்றங் களாகும். இத் தோற்ற வடிவங்கள் செந்நெறியாளர்கட்கு அந் நெறி யுண்மைகற்கும் உருவ எழுத்துப் பெருநூல்களாகும். இம் முறையான் தில்லைத் திருக்கூத்தரின் திருவடிவம் கீழிருந்து மேல்நோக்கி "நமசிவய" எனவும், மேலிருந்து கீழ்நோக்கிச் "சிவயநம" எனவும் அருளாற் கண்டு வழிபடவமைந்த பொருளுடையதாகும். மேலும் திருக்கைகள் மூன்றினால் உடம் பின்கட் காணப்படும் முத்தொழில்களும், திருவடியிரண்டினால் ஆளாக்கல் அடிச்சேர்த்தலாகிய உயிரின்கண் நிகழ்த்தப்படும் இருதொழில்களும் குறிக்கப்படுகின்றன. இவற்றின் விரி வனைத்தும் மெய்கண்ட நூல்களாகிய தமிழாகமத்தின்கண் கண்டுகொள்க.

தெய்வத்தைத் திருக்குழந்தை வடிவமாக வைத்து வழி படுதல் எல்லாவற்றினும் சிறந்த எழிலின்ப ஆற்றாகக் காணப் படும். அந்த முறையில் ஆண்பாற் பிள்ளைத் தமிழும் பெண்பாற் பிள்ளைத்தமிழும் தெய்வங்கட்கும் ஆன்றோராலாக்கி வழங்கி வருகின்றன. அம்முறையில் "சங்கர நாராயணர் கோயிற் கோமதியம்பிகை பிள்ளைத்தமிழ்" என்னும் இச் சீரியநூலும் ஊற்றுமலைக் குறுநில மன்னரின் வேத்தவைப் புலவர் புளியங்குடி "முத்துவீரக் கவிராய" ரவர்களால் யாக்கப்பெற்று வெளி வந்துள்ளது. இதன்கண்ணும் எல்லாப் பிள்ளைத்தமிழ்களைப் போன்று பத்துப் பருவங்களும் அமைந்துள்ளன.

இவ் வாசிரியரைப் பற்றிய விரிந்த வரலாறுகள் ஏதும் புலனாக-வில்லை. இவர் ஏறத்தாழ தொண்ணூறாண்டுகளுக்கு முன் வாழ்ந்தவரெனத் தெரிகின்றது. இப் பெருந்தகையார் பழந்தமிழ் நூல்களிலும், திருமுறை சித்தாந்தங்களாகிய செந்நெறி நூல் களிலும், புராண இதிகாச இலக்கண இலக்கியங்களிலும், சிற்றிலக்கியத் தொகுதிகளிலும் கற்றுத் துறைபோய வல்லுந-ரென்று தெரிகிறது.

அவ்வவற்றின் சொற்பொருள்களும் நுண்கருத்துக்களும் இப் பிள்ளைத்தமிழின்கண் ஆங்காங்கு மிளிர்ந்து காணப்படு கின்றன. புராண நிகழ்ச்சிகள் பல பல்வேறிடங்களில் சொல்லும் பொருளுந் தொடர்ந்தொழுகச் சுவைநனி சொட்ட உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம் முதலிய பல அணிகள் திகழ விளங்குகின்றன.

நூல் பெரும்பாலும் எல்லாரானும் வழங்கிவரும் இயற் சொல்லான் அமைந்துள்ளது. சிற்சில திரிசொற்கள் காணப் படினும் அவை எளிதுணர் பொருளன. சமய நுண்கருத்துக்களைப் பொருந்திய ஒப்புக்களால் அனைவரும் உளங்கொள விளக்கி யுள்ளனர்.

இத் திருவூரின்கண் விளங்கி விழுப்பே றளித்துவரும் "புற்று மண்" ணாகிய மற்றொப்பில்லா உற்ற மருந்தின் உண்மை உயர்வினை நன்கு யாப்புறுத்துள்ளனர் இவ்வாசிரியர். அம் மருந்து எல்லா நோய் நீக்கத்திற்கும் ஆக்கமளித்தருளும் நோக்கமிக்க கைகண்ட ஒரு மருந்தாகும். அம்மட்டோ, உடற் பிணியகற்றி யொழிப்பது போன்று உயிர்ப்பிணியாகிய பழமல நோயினையும் அகற்றி யொழிக்கும் மிகப்பெரிய மருந்துமாகும். உடல்நோயகன்று உறுநலமுற்று வாழவும் அம் மருந்து அருந் துணை யாவதுபோல் உயிர்நோயகன்று திருவடிப் பெருநல

முற்றுப் பேரின்ப வாழ்வு எய்துவதற்கும் வழியாக நிற்பது இப் புற்றுமருந்தே யாகும். இவ்வுண்மைகளை இவ்வாசிரியர் பலவிடங் களில் உளங்கொளும் எடுத்துக்காட்டுக்களுடன் வளம்பெற விளக்கியுள்ளனர். வரிப்பாட்டுக்களும் ஆங்காங்குத் திகழ்ந்து கற்பார்க்குக் களிப்பூட்டுந் தகையவாக் காணப்படுகின்றன. பெரும்பான்மையான பாட்டுக்கள் சிறிது கற்றூர்க்கும் எண்மையிற் பொருள் விளங்கும் வண்மையாய் அமைந்துள்ளன.

இவ் வாசிரியரால் சீவலமாற பாண்டியரியற்றிய சங்கர நயினர் கோயில் புராணத்துள் நதிச் சருக்கம் முதல் மூர்த்தி விசேடச் சருக்கம் முடிய ஆறு சருக்கங்களும், கடவுள் வாழ்த்துள் மூன்று பாடல்களும், புராண வரலாற்றுள் இரண்டு பாடல்களும் பாடிச் சேர்க்கப்பெற்றன எனத் தெரியவருகின்றது. இவை யன்றி வேறு வரலாறுகள் இனிமேல் கிடைக்குமேல் அவை அடுத்த பதிப்பிற் சேர்த்து வெளியிடப்பெறும். தெரிந்த மெய்யன்பர்கள் எவரேனும் வரலாறு குறித்துத் தெரிவிப்பின் நன்றியுடன் சேர்த்து வெளிப்படுத்துவர் கழகத்தார்.

புற்று மருந்துணரின் பொய்யா நலமருளி
உற்றபிணி யெல்லா மொழித்திடுமால்—நற்றவர்கள்
பேணுமருட் கோமதி யம்மை யருண்மருந்தாம்
ஊனுமதாம் இன்பவாழ் வுக்கு.

ப. இராமநாதன்.

# உள்ளுறை

உ

கணபதி துணை

சங்கர நாராயணர் கோயிற்

# கோமதியம்பிகை பிள்ளைத்தமிழ்



## க. காப்புப் பருவம்

*[இப் பருவத்தில் காதற் பிள்ளையினைப் பிறப்பில் பெருந் தெய்வ முதலாகப் பிறப்புறு சிறுதெய்வம் ஈருகவுள்ள எல்லாத் தெய்வங்களையும் காக்குமாறு வேண்டிக் கோடல் கட்டுரைக்கப் படுகின்றது.]*

### விநாயகக் கடவுள்

கார்பூத்த கடல்புடை யுடுத்தபுவ னத்தையரா
ணர்கைக் கனிக்காசை யாய்க்
கதிர்வே லெடுத்துமயி லேறிவேள் சூழ்ந்துவரு
முன்னமக் கடவுள் செய்ய
ஏர்பூத்த திருமேனி யினினண்ட கோடிக
ணிறைந்ததென வெண்ணி விரைவின்
ஈரடியி னுற்சூழ்ந்த வொருகோட்டு வாரணத்
தெந்தையை வணங்கல் செய்வாம்
தார்பூத்த கற்பகத் தருவே தவஞ்செய்து
தாரணியில் வந்து தோன்றித்
தண்ணிழல் கொடுத்துவளர் புன்னையங் கானிற்
சயம்பு வடிவா யுறைந்த

**ஆர்பூத்த செஞ்சடைப் பெருமானொர் பாகத்**
**தமர்ந்துல கெலாம் பயந்த**
**அன்னைகோ மதிபுகழ் துதிக்குந் தமிழ்க்கவிதை**
**யாவுந் தழைக்க வென்றே.**

(குறிப்புரை) புவனம் - உலகம். அரனார் கைக்கனி - சிவ பெருமான் திருக்கையிலிருந்த மாங்கனி. சிவபெருமான் தாள் நிழலில் அண்ட கோடிகள் அடங்குதலின் அவர்தம் திருவடியை வலம்வருவார் அனைத்துலகையும் வலம் வருவாராவர். அம் முறையில் மூத்தபிள்ளையாராகிய யானைமுகப்பெருமான் சிவ பெருமான் திருவடியை வலம் வந்து தந்தையாகிய அவர்தம் திருக்கையிலுள்ள மாங்கனியைப் பெற்றருளினர். இளைய பிள்ளையாராகிய அறுமுகப்பெருமான் இக்கனியைப் பெறுதற் பொருட்டு உலகை வலம் வந்தனர் என்ப. மூத்தபிள்ளையார் அறிவுடையாளமாகவும், இளையபிள்ளையார் ஆற்றலுடையாள மாகவும், உமையம்மையார் அன்புடையாளமாகவும் கொள்ளுப. அன்பு, அறிவாற்றல்களுக்கு நிலைக்களமாகும். அறிவு அகமாகும். ஆற்றல் புறமாகும். இக்குறிப்பே பிள்ளையார் அகமாகிய திரு வடியை வலம் வந்ததும் செவ்வேள் புறமாகிய உலகைச் சுற்றப் போயதும்.

பிள்ளையார் பெற்றது மாங்கனி என்னும் மெய்ம்மை வரும் திருமுறையான் உணர்க :

'கொம்பனைய வள்ளி கொழுநன் குறுகாமே
வம்பனைய மாங்கனியை நாரையூர்—நம்பனையே
தன்னவலஞ் செய்துகொளுந் தாழ்தடக்கை யாயென்னோ
பின்னவலஞ் செய்வதெனோ பேசு.''—கக. நம்பி. விநாய-க.

தார் - மாலை. கற்பகதரு - எண்ணுவார் வேண்டும் பொருள் களைக் கற்பித்துக் கொடுக்கும் ஆற்றலுள்ள மரம். 'இது விண் ணுலகத்திலுள்ள தென்ப. ஆர் - ஆத்திமாலை. பயந்த - திரு வுள்ளத் திருக்குறிப்பால் படைத்தருளிய. துதிக்கும் - புகழும்; வழுத்தும். யாவும் - எல்லாமும்; முழுவதும். தழைக்க - செழிக்க. (க)

## திருமால்

பூமேவு கமலப் பொகுட்டினன் முகனையுந்
திக்கமல மீது பூத்துப்
புவனப் பரப்பெலாஞ் சிட்டித்து மாருதப்
பொற்றேர னைப்படைத்து
மாமேவு மானிட முதற்சகல வுயிரையும்
மலர்வாளி யான் மயக்கி
மருவும் படிக்கருள்செய் மாதவனை யாதவனை
வந்தித்து வாழ்த்தல் செய்வாங்
காமேவு மிந்திராணி கஞ்சன மெடுத்தெதிரி
னிற்பவிரு கமலமாதுங்
கவரிகை யிரட்டவரி யாசன மிசைக்கந்த
வேள்கய முகத்தனோடு
மீமேவு கங்கா நதிச்சடைக் கடவுளுடன்
வீற்றிருந் தரசுபுரியு
மின்னு ரிடைக்கவுரி பொன்னு வுடைத்தேவி
மேனியைக் காக்க வென்றே.

(கு - ரை.) பொகுட்டு - தாமரைக் கொட்டை. மாருதப் பொற்றேர் - தென்றற் காற்றாகிய அழகிய தேர்; இது காமனுக்குரியது. மா - பெருமை. மலர்வாளி - பூங்கணை. மருவும் - தழுவும். கா - கற்பகச்சோலை. கஞ்சனம் - கண்ணாடி. இரு கமலமாது - திருமகள், கலைமகள். கவுரி - வெண்ணிறம் வாய்ந்தவள்; பார்வதி. (உ)

## சிவபெருமான்

### வேறு

கடகரி யின்னுரி போர்வைக் குவைத்தவர்
கனலரி நன்மதி பார்வைக்கு ளுற்றவர்
கவினுறு மன்மத காயத்தை நைத்தவர்
கலைநிறை தண்மதி காலிற் குமைத்தவர்

படவர வின்னணி மார்பிற் பரித்தவர்
பரவையின் வெவ்விட பானத்தின் மெய்த்தவர்
பகரரு சொன்மறை பாடித் துதித்தவர்
பதமலர் பன்முறை சூடிப் பழிச்சுதுங்
குடவயி றன்னொடு கோழிக் கொடிக்கையர்
குதலையின் மென்மொழி காதுக் குவப்பவள்
குருகுல மன்னவர் தூதுக் குரைத்தவர்
குலவிய முன்னவ ராகச் செனித்தவள்
வடமலை தென்மலை யாகப் பணைத்திடு
வடமலை பொன்முலை யாளுத் தமப்பரை
மரகத மன்னிய மேனிக் கயற்கணி
மடலவிழ் புன்னையின் மானைப் புரக்கவே.

(கு - ரை.) கடம் - யானைமதம். கரி - யானை; கையையுடையது. கரம் - கை, அரி - ஞாயிறு. காயம் - உடம்பு. நைத்தவர் - நசுங்கச் செய்தவர். குமைத்தவர் - சிதையச் செய்தவர். பரித்தவர் - பூண்டவர். மெய்த்தவர் - இறவாதிருந்தவர். பழிச்சுதும் - வணங்குதும். குடவயிறன் - பேழைவயிறன்; விநாயகப் பெருமான். மானை - மான்போலும் நோக்குடைய கோமதியம்மையை. (ந)

## சங்கர விநாயகர்

### வேறு

கங்கா சுபுத்திரன் கங்கா ளனுக்குமுத
லானகண நாதன்வெற்றிக்
கயமுகனை யொருகோ டொடித்துவல் லாயுத
மெனக்கொடு கனன்றுவென்று
சங்காழி கைவைத்த தாமோ தரக்கடவுள்
முதலமரர் பீழைதீர்த்த
சங்கர விநாயகன் செங்கமல பாதந்
தலைக்கொண் டுவந்துபணிவாங்

கொங்காரு நறுமலர்ப் புன்னையங் காவுமறை
முடியுமடி யாருள்ளமுங்
கோயிலாக் கொண்டுவளர் கிள்ளையைப் பிள்ளைக்
கொழும்பிறையை நிகர்நுதலியை
மங்காத புகழ்பெற்ற விமயமலை யரசற்கு
மகளாக வந்த மயிலை
வரராசை யம்பதியி லுறவா யிருந்தகோ
மதியைப் புரக்கவென்றே.

(கு-ரை.) கங்காபுத்திரன்-காங்கேயன்; கந்தன். கங்காளன்-சிவபெருமான். தாமோதரன்-திருமால். பீழை-துன்பம். (௪)

## முருகக் கடவுள்

### வேறு

அரவையு மதியையு மேர்சடைச் சூட்டிவல்
லரிணமு மனலமு மாதரித் தேற்றுவெள்
ளடலையை யுடலமெ லாமுறப் பூச்சிடும்
அமலனை மறையறி யாதசொற் கேட்டிட
வரமிகு குருவென வேசெவிச் சாற்றிய
வளமைய ரிளமையின் மீதினிற் ரேற்றியவ்
வரையுர நெரிதர வேலெடுத் தேற்றிய
வரையர சுரிய குமாரனைப் போற்றுதும்
பரவையி னமுதையு மேதுவர்ப் பாக்கிய
பவளமெல் லிதழிப ராவநட் பாத்தரு
பதமல ருமைபனி மாமலைப் பாக்கியப்
பயனென வருமகள் பாடியிற் காட்டிய
குரவையர் துணைவி நிலாவிவட் பாற்செறி
குளிர்தரு வனபுனை நீழலிற் பாற்பொலி
குமரியெ னனையுமை யாவுடைத் தாய்க்குடல்
குலவிய கவசம தாயுறக் காக்கவே.

(கு - ரை.) அரிணம் - மான். அடலை - சாம்பல்; திருநீறு. வரை - குருகு பெயர்க்குன்றம். வரை - அனைத்துமலைகள். குரவையர் - ஆயர்பாடியிற் குரவைக் கூத்தாடிய கண்ணனார். துணைவி - தங்கை. (ஔ)

## பிரமதேவன்

### வேறு

திருமால்பொ ருவிமுண் டகமதி லுதித்தொரு
படைப்பிலந் தத்தந்தையைச்
சிருட்டித்து மண்பொதுத் தந்தையென் னப்பெயர்
சிறந்த நான் முகதேவனை
அருமா மறைப்பொருளை யறிவிக்கு மாதையந்
தாலத்துள் வைத்திருக்கும்
அன்னவா கனனைமன தென்னவா வுறவுருகி
யன்பிற் றுதித்தல்செய்வாம்
வருமால் விடத்தையமு தெனவுண்டு மரியாத
வாழ்வுகண வர்க்களித்த
மங்கல சுமங்கலையை வெங்கலியை யடியர்பால்
வாராது வீட்டியென்றும்
பெருமா மகத்வசெல் வந்தந்து மறுமையிற்
பேறுங் கொடுக்கும்ஞானப்
போரொளியை யாவுடைப் பரதேவி யைத்தினம்
பேணிப் புரக்கவென்றே.

(கு-ரை.) தாலத்துள்-நாவினுள். மகத்துவம்-பெருமை(சு)

## தேவேந்திரன்

அண்டப் பரப்பெலாம் வெடிபட முழக்குருமின்
ஒலியுமின் னுனகோடும்
அகிலங் குழிந்திடப் பொழிதாரை மதமுமற்
ருகங் கறுத்த வேகக்

கொண்டற் கயத்தைவெண் கயமதனி னும்பிரிய
மாக்கொண் டுலாவும்விண்ணிற்
கோமகனை யிந்திராணி தலைவனைச் சலசமென்
குளிர்சரணை யேத்தல்செய்வாந்
தண்டத்தை வைத்தகைச் சமனையுள் வெருவவன்
ருளாற் சமட்டிவென்று
தவமுனி குமாரனுக் கழியாத ஆயுடந்
தவரைக் கலந்துதழுவும்
வண்டைப் புனைந்தகைக் கோமளக் கோமதியை
வரராசை மேவுகுயிலை
வாலையம் பிகையைவிணின் மேலைவா னவர்பரவு
மாதங்கி யைக்காக்கவே.

(கு - ரை.) *சலசம் - தாமரை. சமன் - எமன். தவமுனி குமரன் - மார்க்கண்டேயன். ஆயுள் - வாழ்நாள்; அகவை. மாதங்கி - பார்வதி.* (எ)

## திருமகள்

திங்கட் புதுக்கலை நிலாத்திரள் விரிந்தெனத்
திரைவிரிக் கின்றசீரத்
தெண்கடற் பள்ளியுஞ் செம்பொனு டையுமணி
யிழைத்தவணி திகழ்மகுடமும்
வெங்கதிர்க் காயிர மடங்கொளி பரப்புங்
கௌத்துவமணி யும்படைத்து
மேதினி புரக்கும்விதி கணவர்க்கு நல்குதிரு
மாதடி வியந்தேத்துவாந்
தங்கச் சிலைத்தனுத் தாங்கிமுப் புரநகைத்
தழலினிற் சாம்பர்செய்த
சங்கரக் கடவுளொரு பங்கின்மே வியபரா
சத்திமலை யரசன்மனைவி

அங்கைத் தலத்தினி லெடுத்துமகிழ் வெய்தமக
ளாகவந் தவதரித்த
அன்னைகோ மதிமலர்ப் புன்னையங் காமபிலை
யன்புடன் காக்கவென்றே.

(கு - ரை.) *தங்கச்சிலை -பொன்மலை; மேருமலை.* (அ)

## கலைமகள்

வேறு

இவள வென்றறி யாவுல கியாவையும்
எளிதி னன்குசெய் நான்முகர் தாலுவுந்
தவள முண்டக மீதினு மேவிய
தவள வம்பிகை தாளிணை பேணுவாங்
கவள வெங்கரி யீருரி மூடிய
கனலி னின்றொளிர் மேனியர் பாலுறை
குவளை யொண்கணி கோமதி பார்வதி
குவலை யந்தரு தாய்தழை வாகவே.

(கு - ரை.) *தவளமுண்டகம் - வெண்டாமரை. குவளை யொண்கணி - குவளைமலர் போலுங் கண்ணையுடையவள்.* **கணி-** *கண்ணி, இடைக்குறை.* (க)

## ஏழு மாதர்கள்

வேறு

வண்டமிழ்ச் செல்வியைத் திரோபவ மகேசுவரியை
வளரெவன கௌமாரியை
மன்னுயிர் புரக்குநா ரணியையுல கைப்பெயர்க்
குங்கோட்டு வாராகியை
மிண்டரை யடக்குகா ளியையிந் திரற்கரசு
மிகநல்கு மிந்திராணியை
வேணவா வொடுகமல நாணவாய்ந் திட்டசெழு
மெல்லடியை வாழ்த்தல்செய்வாங்

கொண்டலைத் தண்டலையை யறலினைச் சைவலக்
கொத்தைக் கடிந்துகணவர்
கோடீர முற்றதென மதலையைச் சற்றுறவு
கொண்டபூங் குழலிமதுரக்
கண்டையமு தைக்கனியை நனிவிரும் பச்செயுங்
கனிவுதரு கிள்ளைமொழியாள்
காமாரி பாகத்து மேவுமா வுடையம்பி
கைக்கன்னி யைக்காக்கவே.

(கு - ரை.) திரோபம் - மறைப்பு. சைவலம் - பாசி. கோடீரம் - திருச்சடை. மதலை - கொன்றைப்பூ. காமாரி-காமனை ஒடுக்கிய சிவன். (கo)

## முப்பத்துமுக்கோடி தேவர்கள்

### வேறு

முலைநிலத்தினி லாயர்கள் பாடியின்
முனநிரைத் துயர் தீர்தர வேயிசை
முளரி யொத்தசெவ் வாயிடை யேதரு
முகிலி னைப்பொரு மேனியர் சோதரி
பலக லைத்தமிழ் மாமகள் தேனுறை
பதும மெத்தையள் சேடிய ராயொரு
பணிவி டைக்கருள் வாயென வேயெதிர்
பரவி நித்தலு மேவழி பாடுசெய்
திலகு பொற்பத மாமல ராளிறை
யினிதுறப் பிரிய மாவுரை பேசிய
இலவை யொத்தெழி லாரிதழ் வாயின
ளிரலையைப் பொரு வேனிகர் கோவினில்
உலகி னைத்தரு தாய்வர ராசையி
லுறும கத்துவ கோமதி நாயகி
உடலி னுக்குறு காவல ரானவ
ருயர்நி லத்துறை தேவர்கள் யாருமே

(கு - ரை.) முல்லைநிலம் - முல்லை நிலம்; இடைக்குறை. நிரை - பசுக்கூட்டம். முகில்மேனியர் - திருமால். பணிவிடை - குற்றேவல். முப்பத்துமுக்கோடிதேவர்: ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் ஆக முப்பத்துமூவர். இவர்களை "நால்வேறியற்கைப் பதினொரு மூவர்" என்ப.

இத்தேவர்கள் வினைக்கீடாகப் பிறந்திருந்து இறக்கும் பெற்றியர். முக்குணவயப்பட்டு மிக்க வேட்கை நீங்காவியல் பினர். எனினும் ஆண்டவன் திருவாணை இவர் வாயிலாக நின்று ஞாலங்காக்கு முண்மையினையோர்ந் தொழுகுவதே நன்னெறி யாகும். திருவாணையருள் விழுமிய சிவபெருமானின் முழு முதன்மை வருமாறு:

"முழுத்தழன் மேனித் தவளப் பொடியன்
கனகக் குன்றத்
தெழிற்பரஞ் சோதியை யெங்கள்பி ரானை
யிகழ்திர் கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத்
தொழுத பின்னைத்
தொழப்படுந் தேவர்தம் மாற்றொழு விக்குந்தன்
தொண்ட ரையே." —ச. ௧௧௩-இ.

(௧௧)



## உ. செங்கீரைப் பருவம்

*[இஃது ஐந்தாம் திங்களில் நிகழும் நிகழ்ச்சி கூறுவது. அது, பிள்ளை தலையெடுத்து முகமசைத்தாடுவதாகும். ஒருகாலை முடக்கி ஒருகாலை நிமிர்த்து இரண்டு கைகளையும் நிலத்திலூன்றி முகத்தை மேல் நிமிர்த்தாடுதல்.]*

வேறு

பரிமள மிகுந்தநீ ராட்டிமர கதவொளி
 பரப்புதிரு மேனியெல்லாம்
 பட்டாடை கொண்டொற்றி யீரம் புலர்த்திமலை
 யரசன்மனை யாட்டிபவள
விரிகுமுத வாயினுன் மென்காது கண்ணுந்தி
 மேவுநீ ருதிநீக்கி
 வெண்பிறையை நிகர்நுதலின் மண்பொட்டு மிட்டுமடி
 மீதினி லிருத்திமலையிற்
பெரியதன வமுதூட்டி யுலகெலாம் பெற்றஅன்னை
 யைப்பிள்ளை யாய்ப்பெற்றிடும்
 பேறெவர்க் கெய்துமென வீறிலா வானந்த
 பெருவளம தாய்வளர்த்த
திருமக ணிறைந்தசீ ராசையம் பிகைதேவி
 செங்கீரை யாடியருளே
 தேன்மொய்த்த புன்னையங் கானிற் பசுங்கிள்ளை
 செங்கீரை யாடியருளே.

(கு - ரை.) *தவமிருந்து பெற்ற தனிப்பெருங் குழவியைத் திருமுழுக்காட்டிப் பிள்ளையின் காது, கண், கொப்பூழ் முதலிய மூவிடத்தும் நீர் தங்காவண்ணம் செவ்வையாகத் தாய் வாயினுல் ஊதி மண்ணைத் தேய்த்தெடுத்துப் பொட்டிடும் சிறப்பு இதன் கண் புகலப்பெறுகின்றது.* (கஉ)

அரிபிரம ராதியர்க ளனவரதம் வந்தனைசெ
யம்புயத் திருவடியி லொன்
றவனிமான் முடிசூட்டி யொன்றினை மடக்கியரு
ளொழுகுதிரு முகமசைத்துப்
பிரியமுற் றிமையரசன் மனைவியனை வாவென்று
பேசியிரு கையைநீட்டப்
பின்னிட்டு நீசெலப் பேதையாம் நீயெனைப்
பேதையாக் கினைகொ லென்ன
ஒருமுத்த மிட்டுமடி மிசைவைத்து விளையாட
ஒளிர்முத்த மூரல்காட்டி
ஒண்டிரைப் பரவையமு துண்டவரெனத் தாய்க்கொ
ரொப்பிலா மகிழ்வுநல்குந்
திரிபுவன நாயகீ சீராசை வளர்தேவி
செங்கீரை யாடியருளே
தேன்மொய்த்த புன்னையங் கானிற் பசுங்கிள்ளை
செங்கீரை யாடியருளே.

(கு - ரை.) அவனிமான் - நிலமகள்; பூமி. இதன்கண் செங்கீரையாடுமுறைமை கூறப்படுகின்றது. மூரல்-பல். பரவை-கடல். திரிபுவனம் - மூவுலகம் கீழ், நடு, மேல் எனச் சொல்லப்படும் மூவகை யுலகு; அவன், அவள், அது வென்னும் மூவகை யுலகெனலுமாம். (கக)

ஐவகைக் கடவுளரை ஐவகைச் சத்திகளை
ஐவிழிக் கடை நோக்கினு
லாக்கியவ ராலைந்து தொழிலையு நடத்திடச்
செய்ததிலொர் பற்றுமின்றி
மெய்வளர் பரப்பிரம வத்துவினை நீங்காது
மென்மலரின் மணமுமெண்ணின்
மேவுநெய் யும்போல வோவிலா துற்றின்ப
வெள்ளந் திளைத்துவாழுஞ்

**சைவமறை முடிவே பராசத்தி யேதத்து**
**வாதீத மானபொருளே**
**சாமள சொரூபியே கோமளக் குன்றத்**
**தனத்தமுத மூட்டி வேலன்**
**தெய்வவிக் கினேசனை வளர்த்தருளு மன்னையே**
**செங்கீரை யாடியருளே**
**தேன்மொய்த்த புன்னையங் கானிற் பசுங்கிள்ளை**
**செங்கீரை யாடியருளே.**

*(கு - ரை.) ஐவகைக்கடவுளர் :—அயன், அரி, அரன், ஆண்டான் (ஈசன்), அருளோன் (சதாசிவன்).*

*ஐவகைச்சத்திகள் :—நாமகள், திருமகள், உமை, ஆண்டாள் மகேசை), அருளம்மை (மனோன்மணி).*

*ஐவிழிக்கடை - அழகிய திருக்கடைக் கண்ணோக்கம்.*

*ஐந்துதொழில் :—படைப்பு, காப்பு, துடைப்பு, ஆளாக்கல் (மறைப்பு), அடிச் சேர்த்தல் (அருளல்).*

*எண்ணின்-எள்ளின். எண் - எள். தத்துவாதீதம் - அனைத்துலகும் கடந்த அப்பால்நிலை. சாமளம் - பசுமை. கோமளம்- அழகு. பராசத்தி - வனப்பாற்றல். ஐந்தொழிலும் உமையம்மையின் திருவருளால் நிகழ்வன. (கச)*

**சருவலோ கத்தையுந் தாங்கிய வராவுலகு**
**தன்னில்வளர் சங்கபத்மர்**
**சைவமும் வைணவமு மோர்ந்திருவர் தங்களிற்**
**சமையவா தம்புகன்று**
**மருமலர்க் கற்பகத் திறையுலகி னிற்சென்று**
**மன்னுகுரு விடையுரைக்க**
**மற்றவர்க் கரியரனு மொன்றெனத் தெளிவிலா**
**வன்மையை யுணர்ந்துநீவிர்**

உரிமையுடன் வரராசை யுற்றுநற் றவமுஞற்
றிடிலவிரு வுருவுமொன்று
உங்களுக் கறியலா மென்றபடி யவர்தவ
சுகந்துசெய வொருவடிவமாய்த்
திருவுருவு காட்டியவர் மருவிய பராசத்தி
செங்கீரை யாடியருளே
தேன்மொய்த்த புன்னையங் கானிற் பசுங்கிள்ளை
செங்கீரை யாடியருளே.

(கு - ரை.) சருவலோகம் - அனைத்துலகம். அரா-பாம்பு; ஆதிசேடன். சங்கபத்மர் - சங்கர், பத்துமர் ஆகியவிருவர். இதன்கண் சைவ வைணவப்பிணக்கம் நீங்கி இணக்கமுற்று இருபெருந் தெய்வ வுருவங்களும் ஒரு முழுமுதல்வனின் நிலைவேறுபாடுகளென உணர்த்தும் உண்மை காண்க. (க௯)

வெவ்வேற தாய்முன்பு செய்தவினை வழியாய்
வியாதிக ளனேகமுடலின்
மீறிவரி னவ்வவற் றிற்கொரு மருந்தாய்
விதித்தவை யெலாமகற்றி
எவ்வாற தாய்வரினு மெல்லாவி யாதிக்கு
மேற்றிடு மருந்தொன்றதா
இமையவரு ணமுதினும் மினிதான புற்றினன்
மருந்தளித் தினிவராது
மைவார் கடைக்கணருள் செய்துசங் கரர்பாக
மருவிக் கலந்தமானே
மானத தியானம் புரிந்துபணி யன்பர்பிற
விப்பிணிக் கும்மருந்தே
செவ்வேளை யீன்றகோ மதிபரா சத்தியே
செங்கீரை யாடியருளே
தேன்மொய்த்த புன்னையங் கானிற் பசுங்கிள்ளை
செங்கீரை யாடியருளே.

(கு - ரை.) மைவார் கடைக்கண்-மைதீட்டப்பட்ட நீண்ட திருக்கண். உடற்பிணி முதல் பிறவிப்பிணி ஈருவுள்ள எல்லா நோய்க்கும் ஒரு மருந்து தெய்வப்புற்று மருந்து. மணிமந்திர மருந்துகள் நோய்க்கு மாற்று மருந்தாக அமைந்திருக்க, அம்மை யின் திருவருளால் இங்குள்ள புற்று மண் மருந்தாயிற்று. (கசு)

வேறு

முருகலர் பொதுளிய பொழிலிசை மலைய
முறுஞ்சீர் விஞ்சார
முதுமணம் விரவிநல் வளமையின் மழலைமொ
ழிந்தா டுஞ்சேய்போல்
வரும்வளி புனைவன நடுவினி லுலவிம
தன்றேற ரென்றேறுதும்
வழுவினை யழிவுசெய் வரமருள் பெறவுண்ம
கிழ்ந்தே பொன்கோயிற்
பெருமதில் தடவியுள் பெயர்தர விரைவொடு
பின்றூழ் மின்பாரப்
பிறைமுடி யுடையவர் பிரியநன் னடனமி
டுஞ்சீர் குன்றாத
திருவுறு சககயி லையின்மரு வியகொடி
செங்கோ செங்கீரை
சிலைமக ளெனவொரு பெயர்பெறு தலைமகள்
செங்கோ செங்கீரை.

(கு - ரை.) சீர்விஞ்சு - சிறப்புமிகுந்த. ஆரம் - சந்தனம். சககயிலை - உலககயிலை. மலையம்-பொதியமலை. சிலை-மலை. (கஎ)

பதமிசை பரிபுர மனமொழி யெனமுரல்
பண்போ டேயாடப்
பலமணி விரவிய வெழில்வளை யிருகை
பரிந்தோ டாதாட

இதமித மிடையிறு மெனமணி வடமொலி
யின்சீ ரோடாட
இணர்மலர் பொதுளிய குழலிடை யளிக
ளெழுந்தோ டோடாட
விதவித வுயிர்களை யுதவிய வயின்வட
மென்பா சிலையாட
விகசித கமலமும் விள்றிட விறல்தரு
மின்சேர் முகமாட
அதரந லமுதுகு மொழிபயில் கோமதி
யாடுக செங்கீரை
ஆதிவ ராகிபொ னுவுடை யம்பிகை
யாடுக செங்கீரை.

(கு - ரை.) இறும் - ஓடியும். இணர்மலர் - கொத்தாயுள்ள பூ. பொதுளிய - தழைத்த. அளி-வண்டு. விகசிதம் - மலர்ச்சி. அதரம் - உதடு. அம்மை அருளொடும் செங்கீரையாடுங்கால் பரிபுரம், வளை, மணிவடம், வண்டு, வயிறு, முகம் முதலியனவும் ஆடும் வனப்பு இதில் கூறப்பட்டுள்ளது. (கஅ)

மதிமிசை தவழ்தரு கருமுகி லெனமுக
மதிமிசை யிசைபாடு
மதுகர நிரைநிரை கதுவிய புரிகுழல்
வணர்வார் சடையாட
விதிபுனை தருதொழில் தருபிரு குடிமிசை
மிளிர்வா னுதன்மீதின்
வெயர்தரு தரளமொ டுறழ்தரு தரளமி
குஞ்சுட் டியுமாடக்
கொதிவிட மமுதன விருவிழி தடவிய
குழைசெவி குழையாடக்
குடமலை யலைதர மலைதரு தனம்வரு
குளிர்மார் பகமாட

அதிரக சியபர வெளியினி லுறைபவ
ளாடுக செங்கீரை
ஆதிவ ராகிபொ ருவுடை யம்பிகை
யாடுக செங்கீரை.

(கு - ரை.) மதுகரம் - வண்டு. புரிகுழல் - சடைக்கூந்தல். வணர் - மயிர்க்குழற்சி. பிருகுடி - புருவம். தரளம் - முத்து. பரவெளி - மேலான திருவருள்வெளி. (கக)

மண்டல மும்முயர் விண்டல மும்பணி
வண்டல மும்மாட
மரகத மேனியி னொளிகளு லிக்கதிர்
மணியை மறைத்தாட
வெண்டிரை மகண்முத லெண்டிரு மாதரு
மென்கை குவித்தாட
மிளிர்மறை யாதிய பலகலை யாவுநின்
மெய்ப்புகழ் கொண்டாடத்
தொண்டர்கள் புண்டரி கப்பத மேன்மை
துதித்து மதித்தாடச்
சூலுறு சேய்முத லாய வுயிர்த்தொகை
யுஞ்சுழல் வுற்றுாட
அண்ட மனைத்து நிறைந்தப ராபரை
யாடுக செங்கீரை
ஆதிவ ராகிபொ ருவுடை யம்பிகை
யாடுக செங்கீரை.

(கு - ரை.) புண்டரிகப்பதம் - திருவடித்தாமரை. அம்மை அருள்பூண்டு ஆடும் ஆட்டத்தினைச் சிறப்பித்து அனைத்துலகும். அவ்வவ்வுலகத்துடம்பொடு வாழும் உயிர்களும், தெய்வப் பெண்களும், மறைமுதற் கலைகளும், கருவும் புகழ்ந்து கொண்டாடவும் சுழன்றுடவும் ஆயின என்றனர். அதனுல் அம்மையின் இயக்கமே அனைத்துலகுயிரியக்க மென்பதுணர்க. (உ0)

ஏடலர் கொன்றையு மாரு நிறைந்த
சடா தாரி
ஈசனெடுந் திரு மேனியொர் பங்கினில்
வாழ் பாரி
தாடலை கொண்டவர் சார்பவ சங்கட
நீள் வாரி
தாழவி ழும்பொழு தோர்பெரு வங்கம
தாய் வாரி
நீடு பெருந்தனி வீடருள் கின்ற
கிருபா சீலி
நீள்முகில் வந்துறை மாடமு மேடையு
மேர் கூரும்
ஆடக மன்றமு மேவிய ராசைமி
னாடுக செங்கீரை
ஆதிவ ராகிபொ னாவுடை யம்பிகை
யாடுக செங்கீரை.

(கு - ரை.) ஏடு - இதழ். அலர் - விரிகின்ற. ஆர்-ஆத்தி. பவசங்கடம் - பிறவித் துன்பம். நீள்வாரி - பிறவிப்பெருங் கடல். வங்கம் - தோணி; கப்பல். 'தாடலை' தாள் + தலை. சிவபெருமானின் திருவடியினை அவன் திருவருளால் சூட்டப்பெற்று அத்திருவடிக்கண் இரண்டறக் கலக்கும் பேரின்பப் புணர்ப்புநிலை. புணர்ப்பு - அத்துவிதம். தாடலை கொண்டவர்-திருவடிப் பேறு பெற்றவர். (உக)

## ங. தாலப்பருவம்

*[இஃது ஏழாந்திங்களில் நிகழ்வது; பிள்ளையைத் தொட்டிலி லிட்டுப் பெண்கள் இன்னிசைபாடி யாட்டுவதாகும். தொட்டி யில் : தொட்டில். தொங்குந் தொட்டிலாதலால் தாலம் என வந்தது. நாலுதல் : தாலுதல் - தாலம். தொங்கும் அணிக்குத் தாலியென்னும் பெயர் வழங்குவதுங் காண்க.]*

வேறு

துகிலம் பரமா கச்சூழ்ந்த
தொல்லைப் புவன மனைத்தினையுந்
துணைக்கட் கடையிற் றந்தளித்துந்
துகினம் படர்ந்த வரைக்கரசன்
மகிழும் தவத்தால் மகவாக
வந்த மயிலே மாமறைநூல்
வாக்கிய முந்தேர்ந் தறியாத
வடிவே புன்னை வனக்குயிலே
எகினம் பிடியுந் தொடர்ந்துநடை
இயற்கை யறியச் சிலம்பரற்ற
எழிற்பூ வடிமென் மெலப்பெயர
வெய்துங் கிளியே யெனப்போற்றி
அகிலம் பரவும் வராசைக்
கரசே தாலோ தாலேலோ
ஆல கண்டர் மருவியவம்
பிகையே தாலோ தாலேலோ.

(கு - ரை.) அம்பரம்-கடல். துணை - இரண்டு. கட்கடை-கடைக்கண். துகினம் - பனி. வரை - மலை. எகினம் - அன்னம். பிடி - பெண்யானை. சிலம்பு - காலணி; நூபுரம். ஆலம் - நஞ்சு. (உஉ)

ஈட்டுங் கனகச் சுவரேற்றி
யிலகு மணிகள் குயிற்றிவிண்ணை
யெட்டிப் பார்க்கு மாடநிரை
யேந்து சிகரத் தலைமீதிற்
றீட்டும் வரியிற் றாரகைகள்
சிறக்கும் வானத் தெழுந்தசெழுந்
திங்க ளிறங்கி யுடற்களங்கந்
தீர்க்கு மருந்து தேவர்கள்விண்
ணூட்டு மருந்தின் மேலான
நல்ல மருந்து நின்கணவர்
நல்கும் புற்று மருந்தெனவுண்
ணயந்து வளியாற் றுகிலையசைத்
தாட்டுங் கொடிப்பால் வருராசைக்
கரசே தாலோ தாலேலோ
ஆல கண்டர் மருவியவம்
பிகையே தாலோ தாலேலோ.

(கு - ரை.) கனகம் - பொன். குயிற்றி - பதித்து. தாரகைகள் - விண்மீன்கள்; நட்சத்திரங்கள். வளி - காற்று, மாடங்கள் வானளவாவிருக்கின்றன. அவற்றின்கண் அமைந்துள்ள கொடிகள் காற்றாலசைகின்றன. வானுலாவும் திங்கள் தன் களங்கத்திற்கு நல்ல மருந்தென்று அக்கொடிகளின் பக்கம் வருகின்றது.

சுரும்பும் தேனும் ஞிமிறும்வண்டும்
தொடருந் தொடையற் கூந்தனல்லார்
துணைப்புருர வில்லெடுத்துச்
சுடுவெங் கூர்மைச் சுடர்விழியைப்
பொரும்புங் கமென முயன்மானும்
புழுங்க மதிதோய்ந் தும்பரிற்போய்ப்
பொன்னுட் டவரோ டிவருறவு
புரிய வுயர்ந்த மாளிகையுங்

கரும்புங் கமுகுங் கதலியும்பைங்
காய்ப்பூந் தாழை மாபலவுங்
கஞலி யெழுந்தா யிரங்கிரணக்
கடவு டேரைத் தடுக்கமலர்
அரும்பும் பொழிலுஞ் செறிராசைக்
கரசே தாலோ தாலேலோ
ஆல கண்டர் மருவியவம்
பிகையே தாலோ தாலேலோ.

(கு - ரை.) தேனும் - வண்டும். ஞிமிறும் - வண்டும். தொடை - மாலை. கூந்தல் - தலைமுடி. புருரம் - புருவம். பொரும்- போர் செய்யும். புங்கம் - அம்பு. (உச)

தமரக் களிவண் டடைகிடந்து
தண்டே னுகர்ந்து வரிபாடுந்
தாமக் குழலார் பூமெத்தை
தன்னிற் கணவ ரோடூடிக்
குமரக் கடவுள் கைவேலிற்
கூர்த்த விழிமுத் தொடுமெறிந்த
குனிர்முத் தார மன்னவரூர்
குலவாம் பரிக்கா லாற்குமைக்க
நிமிரப் பரந்து பொன்மாட
நிரைமேற் சுதைதீற் றியதென்ன
நிலவி யந்த நீளொளிகள்
நீல நிறத்திந் திரன்வாழும்
அமரர் பதிக்கும் புகும்ராசைக்
கரசே தாலோ தாலேலோ
ஆல கண்டர் மருவியவம்
பிகையே தாலோ தாலேலோ.

(கு - ரை.) தமரம் - ஒலி. தாமம் - மாலை. சுதை-வெள்ளை. (உரு)

பள்ளத் தடத்துட் கண்டகத்தாட்
பதுமா சனத்தில் வெண்டோட்டுப்
பதும மிசைவீற் றிருந்துகலை
பலவும் புகன்ற நாமகடன்
உள்ளத் தரனு மரியுமொன்று
யுற்ற வடிவங் கருதியுணர்ந்
தியோகத் திருந்து நீகாணுந்
தன்மை போற்கா ணுறவோர்ந்து
வெள்ளைத் திருமே னியினீறு
பூசி விமலத் தவமுஞற்ற
மேய தென்ன மென்னடைப்பைஞ்
சூட்டுச் செங்கால் வெள்ளனஞ்சேர்
அள்ளற் பழன வரராசைக்
கரசே தாலோ தாலேலோ
ஆல கண்டர் மருவியவம்
பிகையே தாலோ தாலேலோ.

(கு - ரை.) தடம் - குளம். கண்டகத்தாள் - முள்ளுள்ள தண்டு. பைஞ்சூட்டு - அழகிய உச்சிக்கொண்டை. இதன்கண் அரனும் அரியும் ஓர் உருவத்தின்கண் விளங்கும் தோற்றத்தினைக் கண்டு வழிபட்டின்புற அகத்தவம் (யோகம்) புரிகின்றனள் நாமகள். அவள் இயல்பாகவே வெண்ணிறம் வாய்ந்தவள். மேனியெல்லாம் வெண்ணீறு சண்ணித்துத் தூய தவம் புரிகின்றனள். அதுபோல் தவமுஞற்றிக்காண வெண்ணிற அன்னமும் அக்குளத்தின்கண் காணப்படுகின்றதாம். (உசு)

வேறு

மீனத்துவச முயர்த்திடு வழுதிசெய்
மேலா நோன்பாலு
மேனைத் திருமக ளைப்புணர் வரையிறை
மேலோர் மாண்பாலுங்

கானற் கடலிறை கமலாலயன்வெகு
காலத் தவசாலுங்
காதற்கிசைதரு சேயிற் பொலிவுறு
கருணைக் கடலேபொன்
வானத்தமரர்கள் கோனுக் கொருமக
வாயுற் றிடுமாது
மானிற் றருமலை வாணர்க்கிசைமக
வாமைக் குழன்மாதுந்
தானற்புதமரு கியராய் மகிழ்மயில்
தாலோ தாலேலோ
சங்கர நாரணர் பங்கி லுறுங்கிளி
தாலோ தாலேலோ.

(கு - ரை.) *மீனத்துவசம் - கயற்கொடி. வழுதி - பாண்டியன். வரையிறை - மலையரசன். கடலிறை - வலைஞர்கோன். அம்மைமேற்கூறிய மூவர்தம் பெருந்தவத்துக்கு ஈடாக மகவாகத் தோன்றியருளினள். அதுபோல் அவர்தம் மருகியராக வாய்த்த தெய்வ நாச்சியார் வள்ளி நாச்சியாராகிய இருவரும் முறையே இந்திரன் தவத்திற்கும் வேடர் கோமானுகிய நம்பி தவத்திற்கும் ஈடாகத் தோன்றியவராவர். இத்தகைய சிறப்புக் குறிப்பால் இதன்கண் காணப்படும் தெய்வத்திருவருள் தவத்தோர் தூய எண்ணங்களை நிறைவேற்றி வைக்குந் தன்னளி காணப்படும்.* (உஎ)

அருமறை யினினுப நிடதநன் முடிமிசை
யமர்வேல் கயலாக
அழகுசெ யிருவிழி யறிதுயில் புரியுனை
யறியா வடியேங்கள்
ஒருசிறு மகவென மனதினி னினைவுசெய்
தோம்புதல் போலாக
வுற்றிடு பேதைமை பெற்றபுல் லறிவையிவ்
வுலகத் தவரறியக்

கருமணி காலிர ணியமது பலகைக
வின்சேர் வடமாகக்
கதிர்மணி யிற்புரி தொட்டிலை யும்மொரு
பொருளாய்க் கண்வளர்வாய்
தருமநன் னெறிவளர் சககயி லையின்மயில்
தாலோ தாலேலோ
சங்கர நாரணர் பங்கி லுறுங்கிளி
தாலோ தாலேலோ.

(கு - ரை.) உபநிடதம் - மறைமுடிபு. இதன்கண் அம்மை கண்வளர் தொட்டிலும் கண்வளர் உண்மையும் விளக்கப்பட்டுள்ளன. இரணியம் - பொன். தொட்டிலானது பலகை பொன்னாகவும், கால்கள் பச்சையாகவும், வடங்கள் முத்தாகவும் கொண்டு திகழ்வதாம். (உஅ).

புண்டரி கத்தி லிருந்து விதித்திடு போதாவும்
பொன்றிடு மட்டு முயிர்க்குறு போகமி தென்றேதிக்
கண்டித மிட்ட வெழுத்தையு மாமகி டத்தேறிக்
கண்கள் சிவக்க வுருத்து வெறுத்திடு கால்கோபங்
கொண்டு பிடித்திடு தத்தையு மேகுளிர் பொற்பாதங்
கும்பிடு பத்திய ருக்கு விலக்குகு ணத்தாயே
தண்டலை சுற்றிய புன்னைவ னக்குயில் தாலோ தாலேலோ
சங்கர நாரணர் பங்கி லுறுங்கிளி தாலோ தாலேலோ.

(கு - ரை.) எழுத்து - தலை எழுத்து; விதி. மாமகிடம் - பெரிய எருமை. தத்து - இறப்புத் துன்பம். இவ்விரண்டையும் அம்மை தன் அடியவர்க்கு நீக்கியாட் கொள்ளும் தன்மை இதில் காணப்படும். (உகூ)

அரவர சேந்து கடற்புவி யேழினு மேலான
அரிய தவம்புரி கரும புவிக்குள கந்தோயப்
பரவிய செந்தமிழ் நாடு படைத்த பயன்கூர்நற்
பதிக ளனந்த மதிற்பவ பஞ்ச மலந்தீர

விரவிய தொண்டர் பணிந்து வணங்கு மிகுஞ்சீர்சால்
மிகுதல மைந்தினு மைந்து பெருந்தல மென்றோ துந்
தரமிகு ராசை தழைந்திட வந்தவள் தாலோ தாலேலோ
சங்கர நாரணர் பங்கி லுறுங்கிளி தாலோ தாலேலோ.

(கு-ரை.) அரவரசு-ஆதிசேடன். இஞ்ஞாலத்து ஏழுலகங்களுள் தமிழ்நாடு சிறந்தது. அத் தமிழ்நாட்டுள் நற்பயன்தரும் திருவூர்கள் அளவில. ஐந்து மலங்களும் அற்று ஒழிய அமைந்த திருவிடங்கள் ஐந்து. அவற்றினும் சிறந்தன ஐவகை மன்றங்களமைந்துள்ள ஐந்து திருவூர்கள். அவற்றுள் ஒன்று திருக்குற்றாலம். ஐந்து மலங்கள்: ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், மறைப்பாற்றல். மாயேயம் - மாயையின் காரியங்கள். மறைப்பாற்றல் - திரோதான சத்தி. ஐவகை மன்றம்-மணி, பொன், வெள்ளி, செம்பு, ஓவியம் இவைகளாலாயவை. மணிமன்று-திருவாலங்காடு. பொன்மன்று - திருத்தில்லை. வெள்ளிமன்று-திருக்கூடல். செப்புமன்றம் - திருநெல்வேலி. ஓவிய மன்றம்-திருக்குற்றாலம். (௩0)

வேறு

காருக் கெதிர்மயி லேறிப் பவனிகொள்
காதற் பெறுசேயுங்
காதிப் பொருமொரு கோடுற் றிடுகய
மாவத் திரதேவும்
வாருட் கிடவரு மேருத் தனமலர்
வாய்வைத் துணநீயும்
வாலைக் குழவிய தாகப் பெயர்பெறு
மாயைத் திருமாதே
தேருட் கதிருடன் மீதிற் பொலியொளி
போலத் தளிர்சேருந்
தேனற் கனிதரு சூதத் திரள்பல
நாரத் தைகளாரத்

**தாருச் செறிவள ராசைப் பதியுமை**
**தாலோ தாலேலோ**
**சங்கர நாரணர் பங்கி லுறுங்கிளி**
**தாலோ தாலேலோ.**

**(கு - ரை.)** கயமாவத்திரம்-யானைமுகம். வத்திரம்-முகம். வாலை - இளமை. சூதம் - மாமரம். மாயை - வியப்பு. முருகப் பெருமானையும், பிள்ளையாரையும் பிள்ளைகளாகவுடைய நீ மெய் யடியார் பொருட்டு ஒரு பிள்ளையாகத் தோற்றமளிப்பது வியப் பாகும். பவனிகொள்ளுதல் - உலாவருதல்.

'மாயைத் திருமாது' என்பதற்கு தூமாயையுடன் நேரே இயைந்தியக்கித் தொழிற்படுத்தும் அம்மையென்றலும் ஒன்று. மாயை தூமாயை, தூவாமாயை, பகுதிமாயை என முத்திறப் படும். தூமாயையினை நேரேயியக்கும் உண்மை வருமாறு :

''வித்தையோ டீசர் சாதாக் கியஞ்சத்தி சிவங்க ளைந்துஞ்
சுத்ததத் துவஞ்சி வன்றன் சுதந்திர வடிவ மாகு
நித்தமென் றுரைப்பர் கால நீங்கிய நிலைமை யாலே
வைத்திலர் முற்பிற்பாடு வருவித்தார் கருமத் தாலே.''

—சிவஞானசித்தியார், க. கூ-எ.

(கூக)

## ௯. சப்பாணிப் பருவம்

*[இஃது ஒன்பதாம் திங்களில் நிகழ்வது; அது பிள்ளை கையொடு கைபொருந்தக் கொட்டும் நிகழ்ச்சியாகும்.]*

விண்பொதிர் படத்தடவு சிகரகோ புரமிசை
வெளிர்த்ததுகில் கட்டுகொடிகள்
விண்டுவொடு சண்டையிட் டந்தழற் கிரிமுடி
விருப்பினொடு காணவெண்ணி
மண்பொதுத் தந்தைதன் வாகன வுருக்கொண்டு
வானிற் பறந்த தென்ன
வளியசைத் திடவிம்பர் மானிடர்கண் மேனோக்கம்
வைத்திமை யிமைத்திடாது
கண்பொருந் தாததன் மையினால் விணவரெனக்
கண்டவர் வியக்கமூன்று
காலத்து மழியாத பூகயிலை காணியாய்க்
காதலுற் றுறையுமம்மே
தண்பொலியு மம்போரு கக்கரங் கொண்டுநீ
சப்பாணி கொட்டியருளே
தாவுடை விடைக்கடவுண் மேவுமா வுடையம்மை
சப்பாணி கொட்டியருளே.

(கு - ரை.) பொதிர்பட - குத்துண்ண. சிகரகோபுரம்- உயர்ந்த கோபுரம். விண்டு - திருமால். கிரிமுடி - மலையுச்சி. மண்பொதுத் தந்தை - நான்முகன்; பிரமன். வளி - காற்று. விணவர்-விண்ணவர்; தேவர் (இடைக்குறை). தாவு-வலிமை. விடைக்கடவுள் - ஆனேறூரும் சிவபெருமான். (௯௨)

திருமருவு கயிலைவரை தன்னிலொரு ஞான்றுதென்
பொதியவரை யிற்பிறந்த
சிறுகா றவழ்ந்துலவு பன்மரக் கோட்டிசெறி
திவ்வியவுத் தியானத்தினிற்

பருவமிரு மூன்றினில் வசந்தபரு வத்தினிற்
பர்த்தாவு டன்கலந்து
பயிலும்விளை யாட்டினிடை கண்பொத்து தீமையைப்
பாற்றவவ ருத்தரவினுற்
கருமபூ மியினிற் சிறந்தகாஞ் சியில்வந்து
கருதரிய தவமுளுற்றுங்
காலத்தி லிருநாழி நெற்கொண்டு காத்திடக்
கருணைவைத் துச்சிறந்த
தருமமுப் பத்திரண் டும்புரி கரத்தினுற்
சப்பாணி கொட்டியருளே
தாவுடை விடைக்கடவுண் மேவுமா வுடையம்மை
சப்பாணி கொட்டியருளே.

(கு - ரை) சிறுகால் - இளமென் தென்றற்காற்று. கோட்டி - கூட்டம். உத்தியானம் - வேந்தர் விளையாடும் காவற் சோலை. பருவம் ஆறு: கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன. வசந்தம் - இளவேனில். கருமபூமி - வினைசெய்யுலகம். அம்மை சிவபெருமான் அளித்தருளிய இருநாழி நெற்கொண்டு முப்பத்திரண்டறமும் முட்டாது செய்தருளுகின்றனள். அஃதாவது, சிவபெருமான் கொடுத்தருளிய இருநாழி நெல்லும் வித்தைமுதலாகும். அது நாளும் உண்ணும் படிமுறை நெல்லன்று. அம்மை அவ்விதை முதலை உழுவித்துண்ணும் உயர்குடி வேளாண்மாந்தர் கைக்கொடுத்துப் பெருக விளைவித்து அவர் வாயிலாக எண்ணான்கறமும் பண்ணுறப் புரிவிக்கின்றனள். இதுவே அம்மை புரியும் செப்பரும் அறங்கள் முப்பத்திரண்டின் விழுமிய முழுவுண்மையாகும். இதனால் வேளாண்மாந்தர் பிள்ளையென்னும் பெரும் பெயரான் அழைக்கப் படுகின்றனர். (கூகூ)

பனிமலைக் கரசனும் மவன்மனைவி மேனையும்
பண்ணிய தவோபலத்தாற்
பணிலத்தின் முத்தெனத் தோன்றிவளர் நாளில்வான்
பண்ணவர்க ளேனைன்பியற்று

முனிவர்கள் குழாத்தோடு முக்கட் பரம்பொருள்வெண்
மூரிவிடை யூர்ந்துவந்து
முதுமறை விதிப்படி விவாகச் சடங்கினை
முடித்திடும் பொழுதிலாரும்
இனியசுவை யமுதினைப் பொற்கலத் தினில்வாக்கி
யினிதூட்டு மிதழமுதென
இசையமிசை யும்படிக் கிட்டூட்டு மினவனை
செறிந்தொப் பிலாதிகந்த
தனிமலர்க் கையினு னனியுள மகிழ்ந்துநீ
சப்பாணி கொட்டியருளே
தாவுடை விடைக்கடவுண் மேவுமா வுடையம்மை
சப்பாணி கொட்டியருளே.

(கு - ரை.) பணிலம்-சங்கு. முக்கட்பரம்பொருள்-மூன்று திருக்கண்களையுடைய சிவபெருமான். மூன்று கண்கள்-ஞாயிறு, திங்கள், தீ. கண்ணினைக் கருத்தெனக்கொண்டு "அன்பு, அறிவு, ஆற்றல்" என்றலும் ஒன்று. அன்பு - இச்சை. அறிவு-ஞானம். ஆற்றல்-கிரியை. மூரிவிடை-வலிமையுள்ள எருது. (கூ)

உய்வந்த நாளையிற் றேவருக் கெய்தவொண்
கடல்விட மயின்றகடவுள்
உடலுயிரு மொன்றுக் கலந்துள மகிழ்ச்சியா
யுரிமையுட னேபயந்த
தெய்வந் தமக்கெலா முதலாய வெறும்வலிச்
செங்கண்மு டிகமிவர்ந்த
திரிநேத்திர தாரியாம் பாசாங்கு சக்கரச்
செல்வனையு மமரர்நாடு
கைவந் திடக்கவர்ந் தீரைஞூ றுடனெட்ட
தாய்க்கணக் கிட்டவண்டங்
காவல்புரி யவுணனுயிர் வீட்டுகந் தனையுமுட்
கசிவுட னெடுத்தணைத்துத்

தைவந்த வியன்மணங் கமழ்தா மரைக்கையாற்
சப்பாணி கொட்டியருளே
தாவுடை விடைக்கடவுண் மேவுமா வுடையம்மை
சப்பாணி கொட்டியருளே.

(கு - ரை.) அயின்ற - உண்ட. பயந்த - பெற்றெடுத்த. ஏறும்வலி - மிக்க வலி. மூடிகம் - பெருச்சாளி. இதன்கண் பிள்ளையார், முருகப்பெருமான் வரலாறுகளும் வெற்றிப்பாடுகளும் கூறப்பட்டுள்ளன. (௧௫)

இந்தா யிரத்தொளி பரப்புமெழின் முகமுமதி
லிணைமா னெனத்திகழ்ந்த
யிருவிழியும் விடமுண்ட வீசனுக் கின்புறவின்
னமுதுதவு பவளவாயும்
நத்தாரு முத்தினை நகைத்தநகை யுங்கௌர
நன்னிறத் திருமேனியும்
நாட்கமல மலரனைய பொற்றாளு முள்ளத்தி
னுடியுயர் தொண்டருக்குச்
சிந்தா குலந்தவிர்ந் திடவில் லறத்தினைச்
சேர்ந்தமனை மக்கள்சுற்றஞ்
செல்வம்வா ணுளுமறு மைக்குறுதி யாமோட்ச
செல்வமுந் தேவநாட்டுச்
சந்தான மும்வெட்க நல்குசெங் கையினாற்
சப்பாணி கொட்டியருளே
தாவுடை விடைக்கடவுண் மேவுமா வுடையம்மை
சப்பாணி கொட்டியருளே.

(கு - ரை.) இந்து - திங்கள்; சந்திரன். நந்து - சங்கு. கௌரநிறம் - வெண்மைநிறம்; பொன்னிறம். சிந்தாகுலம் - மனக்கவலை. சந்தானம் - தேவவுலகத்திலுள்ள ஐந்து தருக்களி லொன்று. ஐந்தருவும் கடல்கடைந்த காலத்துத் தோன்றிய வென்ப.

ஐந்தரு வருமாறு :
''சந்தானம் தேவ தாரங் கற்பகம்
மந்தாரம் பாரி சாதமைந் தருவர்க்கம்.''
—பிங்கலம் - உகூ ௫0.
(கஅ)

வேறு

தங்கக் கிரிசிலை வெங்கட் பணிகுதை
தங்கத் தழுவிய வடமோர்கைச்
சங்கைப் புனைமுகி லம்பிப் புவியுயர்
சந்தப் பெருரத மறைமானூர்
துங்கத் தவனர விந்தத் தவனுருள்
துன்றக் கதிரவ ரிருவோருந்
தொந்தப் படவர னன்றப் புரமது
துஞ்சப் பொரவெழு திறல்வாம
செங்கைத் தனுவிசை யந்தக் கரமொடு
செம்பொற் கணநிறைதருசீரஞ்
சிந்தைக் கிசைதரு சண்பைக் குமரர்
திருந்தத் தமிழ்தர வருள்கின்ற
கொங்கைத் தருவல மென்கைத் தளிர்கொடு
கொட்டுக சப்பா ணி
கோமதி யம்பிகை புன்னை வனக்குயில்
கொட்டுக சப்பா ணி.

(கு - ரை.) தங்கக்கிரி - மேருமலை. சிலை -வில். பாம்பு—நாண். முகில் - முகில்போலும் மேனியினையுடைய திருமால். அம்பு - கணை. புவி - உலகம். மான் - குதிரை. முப்புரமெரி செய்த காலத்துப் பொருந்தியவை: பொன்மலை வில்லாக, வாசுகி யென்னும் பாம்பு நாணாக, திருமால் கணையாக, நான்கு மறைகளும் குதிரையாக, நான்முகன் தேரோட்டுபவனாக, ஞாயிறுந் திங்களும் தேரின் உருள்களாக, இசையச் சிவபெருமான் பொருதனன் என்ப. தொந்தம் - பிணைப்பு. துஞ்ச - அழிய. முப்புரம் எரிசெய்த வரலாறு வரும் ஆளுடைய பிள்ளையார் திருமறையான் உணர்க.

''வெம்மைமிகு புரவாணர் மிகைசெய்ய
விறலழிந்து விண்ணு ளோர்கள்
செம்மலரோன் இந்திரன்மால் சென்றிரப்பத்
தேவர்களே தேரதாக
மைம்மருவு மேருவிலு மாசுணநாண்
அரியெரிகால் வாளியாக
மும்மதிலு மொடியளவிற் பொடிசெய்த
முதல்வனிட முதுகுன்றமே.'' —க. கூக - ௨.

(கூஎ)

**பறைவரை யற்றுக வரிதரு வச்சிர**
**பாணிமுதற்கட வுளரியாரும்**
**பவன மரக்கனி சருகு சலத்துளி**
**பருகி யுடற்பொறை மிகவாடக்**
**கறையறு மெய்த்தவ விரத முஞற்றிய**
**கருதரு சித்தர்கண் முனிவோ ருங்**
**கவினல முற்றிய கணபண கட்செவி**
**கதுவுல கத்தவர் முதல்யா ரும்**
**நிறைவுற நித்தமு மலர்கொடு னற்புத**
**நிமல பதத்துணை வழிபா டு**
**நிலைபெற வைத்திட வவர்க ளினைத்திடு**
**நினைவி னிரட்டிய வர நல் கிக்**
**குறைவு தவிர்த்தரு ளரச வரைக்கொடி**
**கொட்டுக சப்பா ணி**
**கோமதி யம்பிகை புன்னை வனக்குயில்**
**கொட்டுக சப்பா ணி.**

(கு - ரை.) பறைவரை: வரைபறை-மலைகளின் சிறகுகள். உக - சிந்த. வச்சிரம் - இருதலைச் சூலப்படை. பவனம் - துறக்க வுலகம். கறையறு - குற்றமில்லாத. உஞற்றிய - செய்த. கட்செவி - பாம்பு. கதுவுலகம் - நாகவுலகம். நிமலபதத்துணை - இயல்பாகவே மலமகன்ற திருவடிகள். (கூஅ)

படவர வத்தலை யிடமென வைத்துறை
பரவை யுடைப்படர் நிலமா தின்
பருவ முகிற்குல கருநிற கச்சிடு
பலமணி துற்றிய விருபாரத்
தடமுலை யொத்திடு பொதிய முயர்த்திடு
கைலை வரைச்சம முறமே னட்
சகல வுயிர்க்குயி ரெனுமர னட்பொடு
தருவ னுனக்குநன் மணசே வை
விடைபெறு தெக்கண நிலைபெற விக்க ண
மெனவிம லற்குள மகிழ்வா க
விரைவினி லப்பொதி யமலையி னுற்றவண்
விழைதமி ழுக்குறை யுளதாய் வாழ்
குடமுனி யற்புடன் வழிபடு சிற்பரை
கொட்டுக சப்பா ணி
கோமதி யம்பிகை புன்னை வனக்குயில்
கொட்டுக சப்பா ணி.

(கு- ரை.) கயிலைமலையும் பொதியமலையும் எல்லாவகையானும் ஒத்த பண்புடையன. பொதியமலைக்கண் அகத்தியர் என்று மூன செந்தமிழை வளர்க்கின்றனர். கயிலைமலைக்கண் கண்ணுதலோன் அச் செந்தமிழை வளர்க்கின்றனன். பொதியமலைக்கண் சிவபெருமான் திருமணக்காட்சி அகத்தியர்க்கு அளித்தருளப் பட்டது. அகத்தியர் சிவபெருமானல் பொதியமலைக்கு அனுப்பப் பட்டவர். அகத்தியரால் தொழப்படும் அம்மை என்க.

சிவபெருமானும் உமையம்மையாரும் மணந்துகொள்ளும் வாய்மை ஆருயிர்கள் இருபால் உடம்புடன் இயைந்து இன்புற்று வாழவேண்டுமெனக்கொள்ளும் திருவுள்ளத் திருக்குறிப்பேயாம்.

செஞ்சிகை யெங்கு நிரந்து பரந்து
செழுந்திசை சென்றாடச்
செங்கையி னங்கி சிவந்து கொழுந்து
சினந்து சினந்தாட

மஞ்சி வருங்கள மிஞ்சு விடந்துடி
கொண்டு மலர்ந்தாட
வன்பணி யென்றுசொ லும்பணி யம்புய
மண்டி மலர்ந்தாட
அஞ்சன குன்ற மலைந்து வகிர்ந்த
அருந்துகின் மேலாட
அம்பொ னெடுஞ்சபை நின்று நடம்புரி
யம்புய மென்கூறுங்
குஞ்சித பாதரொ டாடு மடக்கொடி
கொட்டுக சப்பாணி
கோமதி யம்பிகை புன்னை வனக்குயில்
கொட்டுக சப்பாணி.

(கு - ரை.) இதன்கண் சிவபெருமான் திரு நடச்சிறப்பு விளக்கப்பட்டுள்ளது. அது வருமாறு : சிவபெருமானின் சிவந்த திருச்சடை எல்லாத் திசைகளிலும் சென்று பரந்தாடவும், திருக் கையிலேந்திய தணல் கொழுந்துவிட்டுச் சினந்தாடவும், மேகத் தினு மிகுந்த நீலநிறம் பொருந்திய திருக்கண்டம் ஒளிவிட்டாட வும், பாம்பணி பெருகியாடவும், யானைத் தோலாகிய போர்வை அசைந்தாடவும், ஆடுகின்றனர். தாமரை மலரென்று கூறும்படி யாயுள்ள எடுத்த பொற்பாதருடன் அம்மையும் ஆடுகின்றனள். மஞ்சி வருங்களம் - மேகத்தைவிட மிகுந்த நிறம் விளங்கும் மிடறு. வன்பணி - வலிய பாம்பு. பணி-அணிகலன். அஞ்சனக் குன்றம் - கரியமலை; உவமவாகுபெயராக யானையைக் குறித் தது. குஞ்சிதபாதம் - வளைந்து நிழலருளும் திருவடி. இதுவே எடுத்த பொற்பாதம். இதனைக் கண்ணினும், கருத்தினும், உணர்வினும் தணவாது பூண்டின்புறுதல் பிறவிப் பெரும்பயன். (௬௦)

எட்டு வரைக்குல நான்கு புறத்தினு
மிட்ட சுவர்த்தலமா
யேழு முகிற்குல மேந்து மணிச்சிக
ரத்தெழி லாயுலவக்

கட்டு கொடித்தொகை யாடுபொன் மாளிகை
காமுறு பொன்மலையாய்க்
காதன் மிகுத்திடு மாதர்க ளும்பர்கள்
காவுறை கன்னியராய்ப்
பட்ட நுதற்கரி பாய்பரி செல்தெரு
பாடுறு நாற்றிசையாய்ப்
பாணர்கள் பாடிய யாழிசை வார்விசி
பம்பிய பற்பலவாய்க்
கொட்டு மியத்தொனி நீடிய ராசையள்
கொட்டுக சப்பா ணி
கோமதி யம்பிகை புன்னை வனக்குயில்
கொட்டுக சப்பா ணி.

(கு - ரை.) திருராசையெனப்படும் சங்கரநயினார் கோவிலின் நகர்ச்சிறப்பு இதன்கண் கூறப்படுகின்றது. இத் திருவூரின்கண் காணப்படும் நான்கு மதில்களும் உலகைச் சூழ்ந்துள்ள குலமலை எட்டினையும் போன்றுள்ளன. ஏழுமுகிற் கூட்டங்களும் தவழ்கின்ற அழகிய சிகரங்கள் அம்முகில்கள் போன்றே காணப்படுகின்றன. கொடியாடும் பொன் மாளிகைகள் இமயமலையையொத்துக் காணப்படுகின்றன. ஆங்கு வாழும் அழகிய பெண்கள் தேவவுலகப் பெண்களாகக் காணப்படுகின்றனர். யானையும் குதிரையும் இடையறாது செல்லும் தெருக்கள் நான்கு திசைகள் போற் காணப்படுகின்றன. பலவகை வாழ்த்திய முழக்கங்களும் ஓவாது ஒலிக்கின்றன.

உம்பர்கள் - தேவர்கள். கா - கற்பகச் சோலை. நுதல் - நெற்றி. (சுக)

———

# ரு. முத்தப்பருவம்

[இது பதினொராந் திங்களில் நிகழ்வது. அது பிள்ளையை முத்தமிடும்படி வேண்டிக்கொள்வதாகும்.]

இறையா மலையத் துவசனுங்காஞ்
சனமா லையுஞ்செய் யிருந்தவத்தா
லெழிலார் மதுரை தழைக்கமக
வாய்வந் திரத்தின முடிசூட்டிக்
கறையார் கண்டக் கடவுளுடன்
கலந்து கயற்க ணம்பிகையாய்க்
கதிர்மா மதியின் வழிவளரக்
கலைதே ருக்கிர வருமனையுந்
தறையாள் வதற்குத் தந்தசௌந்
தரியே சகல குலத்தவருந்
தங்கள் தங்கள் முயற்சியினூற்
றருமூ தியத்தா லறம்புரிந்து
முறையாய்ச் செல்வஞ் செறிராசை
முத்தே முத்தந் தருகவே
மூல முதலா ருதார
முதலே முத்தந் தருகவே.

(கு - ரை.) இறை - மன்னன். காஞ்சனமாலை - மலையத்துவச பாண்டிய மன்னனின் பட்டத்தரசி. காஞ்சனம்-பொன். இரத்தினம் - மணிகள். தறை - உலகம். ஊதியம்-வருவாய். செறிதல்-மிகுதல். மூல முதலாருதாரம்: ஆருதாரம். அவை: மூலம், கொப்பூழ், மேல் வயிறு, நெஞ்சம், மிடறு, புருவநடு என ஆறுகும். இவற்றை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தம், ஆக்ஞேயம் எனவுங் கூறுப. 'முத்து' என்னும் சொல் தமிழ்ச் சொல்லே. அது மூப்பு என்னும் சொல்லிற் காணப்படும் மூ என்னும் அடியாகத் தோன்றியது. மூப்பு; மூத்தது; முற்றியது; முத்தியது; முத்து. (சஉ)

பிடியா யனமாய்ச் செலுநடையும்
பெருமா மதவெங் கயத்துதிக்கை
பிறைபோல் வளையச் செயுந்துடையும்
பிறங்கு நவநன் மணியிழைத்துத்
துடிபோ லிடையைச் சூழ்கலையுந்
துளிரா லிலைபோற் சுடர்வயிறுஞ்
சோம னிரவி குளிர்வெம்மை
தோற்றுந் துணைமே ருக்குயமும்
வடியேர் மதிய நிகர்முகமு
மலர்வா சனைக்கு மியற்கைமணம்
வகுத்த குழலுங் கண்டு கண்டு
மகிழ்ந்து மதுப்பூங் கொன்றையணி
முடியா ராசை புரிராசை
முத்தே முத்தந் தருகவே
மூல முதலா ருதார
முதலே முத்தந் தருகவே.

(கு - ரை.) அம்மையின் திருவுறுப்புக்களின் சிறந்தவழ கினை யுவமையுடன் இதன்கண் காணலாம். அம்மையின் அழகிய முலைகள் வெப்பகாலத்துத் தட்பத்தையும், தட்பகாலத்து வெப் பத்தையும் தரும் தன்மைய. அம்மையின் கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டென்பது வழக்கு. (சக)

பூவாழ் பிரம னுலகவின்பம்
பொன்று மவன்கற் பத்தின்வரை
புண்ட ரீகக் கண்ணனுல
கத்தின் பழுமப் படிப்போகுந்
தேவா திபனு மிந்திரவின்பந்
தேறுங் கான்மற் றதிற்கீழாஞ்
சிறிய மனுட ருலகவின்பஞ்
செப்பு் வதற்கோ மிகச்சிறிதென்

ரேவா துனது திருவடிக்கே
யுற்ற தொண்டாய் வழிபடுவோர்க்
குரைக்கு மெதிர்வு நிகழ்விறப்பென்
ரேருங் கால மூன்றினிலு
மூவா வின்பந் தருராசை
முத்தே முத்தந் தருகவே
மூல முதலா ருதார
முதலே முத்தந் தருகவே.

(கு - ரை.) பிரமன், மால், இந்திரன் முதலிய தேவ இன்பமும், உலகோர் கொள்ளும் சிறிய இன்பமும் ஒன்றினுக்கு ஒன்று தாழ்வுடையன. புண்டரீகம் - தாமரை. இவற்றை யிகழ்ந்து சிவனடிக்கே மனம் வைத்திடுவார் சிவனடியார். (௪௪)

நாக முத்துங் கழையின்முத்து
நவில்செஞ் சாலி நல்குமுத்து
நால்வாய்க் கோட்டி னுள்ளிருந்து
தோன்று முத்து நளிர்செய்கரு
மேக முத்துஞ் சங்கின் முத்து
மேலா நினது நகைமுத்தை
மேய துணையா மெனினுரு
யிரத்தோர் கூறும் விளம்பரிதென்
ருக முத்தப் பருவமுரைத்
தவர்முன் னுரைத்தா ரதையறிந்தும்
அடியே னுரைக்கிற் பயனென்னு
மாதி சங்க ரேசுரற்கு
மோக முத்தந் தருராசை
முத்தே முத்தந் தருகவே
மூல முதலா ருதார
முதலே முத்தந் தருகவே.

**(கு - ரை.)** அம்மையார் பல்வரிசை முத்திற்கு ஒப்பில்லை யென்பது. நாகம் - பாம்பு. கழை - கரும்பு ; மூங்கில், செந்நெல், யானைக்கொம்பு, மழை, சங்கு. நால்வாய் தொங்குகின்ற வாயினையுடைய யானை. (சரு)

**கைத்த கடலிற் பிறந்துவிலை**
**கருதா திருக்குங் கவின்றுவரே**
**காலைக் கதிர்கண் டலராமற்**
**றனே யலர்ந்து கமழ்பூவே**
**செய்த்த லையினீர் விரும்பாது**
**திகழ்பா கூறுஞ் செழுங்கரும்பே**
**சேயாய்க் காகம் வளர்க்காமற்**
**றனே வளர்ந்த செவிக்குயிலே**
**மைத்த மேகத் திற்கூடி**
**வானிற் சுழலா வளமின்னே**
**வண்டுந் தேனு மிசைபாடி**
**மகரந் தங்க ளிறைக்கமண**
**மொய்த்த மலர்ப்பூங் குழல்ராசை**
**முத்தே முத்தந் தருகவே**
**மூல முதலா ருதார**
**முதலே முத்தந் தருகவே.**

**(கு - ரை.)** அம்மையின் ஒப்பில்லா இயற்கை வனப்பினை இசைக்கின்றது இப்பாட்டு. இதழ் கடலிற் பிறவாப் பவழம் போன்ற செம்மை நிறம் உடையது ; திருமுகம் பகலவனைக் கண்டலராத செந்தாமரை போன்றது ; வாயூறல் வயற்றலை நீரிற்றேன்றாது வளர்ந்து முற்றிய கரும்பின் இனிய சாறு போன்றது; திருமொழி காகம் வளர்க்காமல் வளர்ந்த குயிலின் இன்னிசை போன்றது ; இடை விசும்பிற் பூத்துச் சுழலாத மின்னொத்துத் திகழ்வது என்பதாம். துவர் - பவழம். தேனும்- ஒருவகை வண்டு. மகரந்தம் - பூந்தாள். அம்மைக்குரியன அனைத்தும் ஒப்பில்லன என்பதாம். (சசு)

வேறு

நிம்பச் செழுந்தார் தரித்தவுக் கிரவழுதி
நின்சாப முற்றபுலையன்
நிலையினன் மணிக்கிரீப னீயுநின் கணவனு
நெடுஞ்சினை தழைத்த புன்னை
பம்புற்ற வனமுறைதல் கண்டுரைத் திடவந்து
பார்த்துள மகிழ்ந்து போற்றிப்
பகரரிய பேரின்ப வெள்ளத்தி ழைழ்ந்துபல
மணிகொண் டிழைத்தநீடு
தம்பத்தின் மேற்றம ணியத்தார் சமைத்தவுத்
திரமேற்றி முகடு வேய்ந்து
சதுரமிட் டாவரண முஞ்செய்து சதுமுகத்
தவன்வியந் திடவமைத்த
செம்பொற் பெருங்கோயில் வளருமா வுடையம்மை
செவ்வாயின் முத்தமருளே
சேமநிதி யாயடியர் காமிய மளித்தசிவை
செவ்வாயின் முத்தமருளே.

(கு - ரை.) முன்னொருகாலத்து மணிக்கிரீபன் என்னும் ஒருவன் அம்மையின் சாபமுற்றுப் புலையனாயினன் போலும்; அவன் கோமதி அம்மையும், சங்கர நாரணரும் சங்கரன் கோவில் புன்னைக் காட்டில் எழுந்தருளியிருந்த பான்மையைக்கண்டு. வழி பட்டு நன்னிலை எய்தி வேப்பந்தாரணிந்த உக்கிரகுமார பாண்டி யர்க்கு விண்ணப்பித்துக் கொண்டனன். அவ்வழுதியும் கேட்டு மனமகிழ்ந்து எல்லாவுறுப்புக்களும் குறையாதமைந்த 'செம் பொற் பெருங்கோயில்' எடுப்பித்து வழிபட்டனன்.

நிம்பம் - வேம்பு. சேமநிதி - வைப்புப்பொன். காமியம் - விழைந்த செழும்பொருள். வழுதி-பாண்டியன். சிவை - உமை யம்மையார்; சிவன் என்னும் சொல்லுக்குரிய பெண்பாற் சொல். (௪௭)

வாட்டடங் கண்ணிஞர் மஞ்சனச் சாலையினி
ஞடியநல் வாசநீரும்
வாவிவிண் பாய்திறல் வயப்பரியின் வாயினின்
வழிந்திடுவி லாழிநீருங்
கோட்டுமா விருகவுட் கைகோச மூன்றினுங்
கொட்டுமத நீருமறைநூல்
கூர்ந்துணரும் விப்பிரர்கை கொடுத்தநிதி யோடுதவு
குளிர்நீரு மொன்றதாகி
ஓட்டரு வீதியினின் மன்னவர்க ளூரிரத
வுருளைகள் வழுக்கரத்திந
ஒண்சிலை பதித்தேற்றி மேனடவு வளனினை
யுகந்திருக ணிமையாதநீள்
சேட்டவா னவர்பார்த்து மகிழ்ராசை யன்னைநின்
செவ்வாயின் முத்தமருளே
சேமநிதி யாயடியர் காமிய மளித்தசிவை
செவ்வாயின் முத்தமருளே.

(கு - ரை.) செல்வப் பெண்கள் குளிப்பதனல் பெருகும் மணநீரும், விரைந்து செல்லுங் குதிரைகளின் வாயிலிருந்து நுரைநுரையாக ஒழுகும் விலாழி நீரும், மதயானைகளினுடைய இரு காதுகளிலும் கையினும் குறியினும் நின்று ஒழுகும் மத நீரும், மறைவல்லார்க்கு உவந்தளித்த பொன்னுடன் பெய்த நீரும் ஒன்ருய்த் தெருவில் பெருகிச் சேருகி மன்னர்கள் ஊரும் தேர் உருள்களை வழுக்கச் செய்யும் அதனை மணிகளைப் பரப்பி மேடாக்குவர்.

வாவி - தாவி. வயம் - வலிமை. விப்பிரர்-மறைவல்லார். சேட்ட - சிறந்த. ஒண்சிலை - ஒளிக்கற்கள்; மணிகள். (௪அ)

கொங்கிற் பொலிந்தநால் வகைவண்டு கூட்டுணுங்
கொள்ளைமது வூற்றுமலரிற்
குண்டலவுடுக்குலந் தங்குல மெனக்கூடு
கொம்பர்விண் டோய்பொழிலினும்

மங்குற் குலங்கடற் புனலுண்டு கருமேனி
வாய்ந்துகரு வுற்றுமேற்கின்
மன்னிய விலங்கலைப் பிரசவிக் குந்தல
மெனக்கருதி வரும் வட்டையில்
துங்கப் பெருங்கயிலை யென்னவெண் சுதைதீற்று
சுவணமா ளிகைகள் வரையாய்த்
தோற்றமீ தேறுமக் கிரகத்தி னுச்சியிற்
சுடர்மணியின் மீதுவெள்ளைத்
திங்கட் டவழ்ந்துலவு வரராசை யன்னை நின்
செவ்வாயின் முத்தமருளே
சேமநிதி யாயடியர் காமிய மளித்தசிவை
செவ்வாயின் முத்தமருளே.

(கு - ரை.) இதன்கண் மாடச் சிறப்புக் கூறப்படுகிறது. நால்வகை வண்டு - வண்டு, தேன், கரும்பு, மிஞிறு என்பன. குண்டலம் - வானம். உடு-நட்சத்திரம். விலங்கல்-மலை. பிரசவிக்குந்தலம்-மகப்பெறுமிடம். வட்டை-வழி. சுதைதீற்றுதல்-வெள்ளையடித்தல். சுவணம் - பொன். கிரகம் - வீடு. கடல் நீரையுண்டு கருக்கொண்டு மேலெழுந்த கருமுகில் பொதியமலையினைக் கருவுயிர்க்கு மிடமெனக்கருதி அங்குத் தங்குகின்றது.

(சக)

வேறு

வான்றனை யொட்டிய மாட மிசைப்பொலி
வஞ்சமு நஞ்சமும்வேல்
வாள்கய லைப்பொரு நீள்விழி மங்கையர்
வார்குழ லிற்பொலியுந்
தேன்றனை நல்கிய பூமல ரிற்செறி
வாசனை தேர்ந்து விணிற்
சென்று சுழன்றிடு வண்டினி னுற்றிடு
திவ்விய வாசனையைக்

காண்றரு கற்பக நீழலின் வைகிய
கன்னிய ரிம்மண நாங்
கண்டது மின்றென விம்மித மாய்மகிழ்
கவினுறு ராசையினில்
மூன்றர ணட்டவ ரோடுறை யம்பிகை
முத்த மளித்தருளே
முல்லையை வென்ற நகைத்திரு வாயினள்
முத்த மளித்தருளே.

(கு - ரை.) கண்களுக்கு ஒப்பு: வஞ்சம், நஞ்சம், வேல், வாள், கயல் என்பன. வானுறவோங்கிய வளமிகு மாளிகையின் நிலாமுற்றத்தே வீற்றிருந்த பெண்களின் கூந்தலிலுள்ள மலர்த் தேனுண்டு மணமொடு திரிந்த வண்டு எளிதாக வானுலகம் சென்றது. அங்குக் கற்பக நீழலிலுள்ள வானரமகளிர்கள் இத் தகைய நறுமணத்தைத் தாங்கள் என்றுங் கண்டதில்லையென்று மருண்டனர்.

வார்குழல் - நீண்ட கூந்தல். திவ்விய - வியக்கத்தக்க. கவின் - அழகு. நகை - பற்கள். (௯0)

ஆதவ னம்மையொர் கண்ணென வைத்திடு
மையனொர் பாகமுறும்
அம்பொன் மலர்க்கொடி யாவுடை யம்பிகை
யணிமலர் துற்றியரி
சீத மதுத்துளி யுண்டு சிறைப்பெடை
யோடிசை தேர்ந்து பயில்
சேகர மேற்பொலி கூழையை யொப்பெண
வேதிர ளும்மிருளைக்
காதி மலைந்திடி னருள்செய்வ ளென்று
கவின்பெறு கோபுரமேற்
கருதி யுறைந்திடு கின்றது போற்கன
செம்மணி யின்கதிர்கள்

**மோதிய ராசையில் வாழு மடக்கொடி**
**முத்த மளித்தருளே.**
**முல்லையை வென்ற நகைத்திரு வாயினள்**
**முத்த மளித்தருளே.**

**(கு - ரை.)** ஆதவன் - சூரியன். ஐயன் - தலைவன்; சிவ பெருமான். துற்றி - நெருங்கி. அரி - வண்டு. சேகரம்-மணி முடி. கூழை - கூந்தல். காதி - சினந்து. மலைத்திடின்-போர் செய்தால். கனசெம்மணி - பெரிய மாணிக்கம். இருள் முழுவதும் திரண்டு அம்மையின் கூந்தற் கருநிறத்தை ஒப்பேன் என்று எண்ணுவதை யகற்றக் கோபுரத்தின் மேலுள்ள மணிக்கற்களின் கதிர்கள் பாய்ந்தன; பாயவே இருள் அடங்கிற்று. இச் செயலால் அம்மணிகளுக்கு அம்மையருள் கிடைத்தது. இதுபோல் திருவருளால் இருள் நீக்கினார்க்குப் பேரருளும் பேரின்பமும் கிடைக்கும் என்பது குறிப்பு. இவ்வுண்மைவருங் **"கொடிக்கவி"**த் திருப்பாட்டானும் உணர்க.

" ஒளிக்கு மிருளுக்கு மொன்றே
யிடமொன்று மேலிடிலொன்
றொளிக்கு மெனினு மிருளட
ராதுள் ளுயிர்க்குயிராய்த்
தெளிக்கு மறிவு திகழ்ந்துள
தேனும் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும்
படிக்கொடி கட்டினனே."

முன்னொரு காலத்து அம்பலவாணர் திருவாணையின்வழி இந்நூலைப் பாடித் தில்லைக்கொடி ஏற்றப்பட்டது. திருக்கோவில்கடோறும் கொடியேற்றம் செய்வது இத்தமிழ்முறையினைப் பாடியே செய்தல்வேண்டும். இந்நூல் நான்கு திருப்பாட்டுக்களைக் கொண்டது. **(கக)**

---

## கூ. வருகைப்பருவம்.

*[இது பதின்மூன்றாந் திங்களில் நிகழ்வது. இது தோழியர்கள் பிள்ளை நடந்துவருதலை விழைந்தழைப்பதாகும்.]*

பணிலமூன் றுக்குமே லாம்பணில மும்பரிய
தண்டும்வா ளுந்திகிரியும்
பத்மா சனத்தில்வளர் திருமக ளுதற்குநிகர்
பகர்கின்ற தனுவுமேந்தி
மணியொளியி னுலந்த காரத்தை வீட்டுவன்
மாசுண வுடற்புறத்தின்
மரகதக் கிரியெனக் கமலலோ சனம்வளர்
கின்றமால் புதல்வனறியாத்
தணியல்செறி கொன்றையுந் தண்பிறையு மரவமுந்
தாழநீள் சடைவிரித்துத்
தள்ளாடி யுள்ளங் கசிந்துருகி யூடறவி
ரென்றுசங் கரர்வணங்க
அணிமுடிக் கணியெனக் கொண்டதிரு வடிபெயர்த்
தருள்புரிந் திடவருகவே
அம்போதி யைப்பருகு கும்போ தயன்பரவு
மம்மைகோ மதிவருகவே.

(கு - ரை.) *பணிலமூன்று : நால்வகைச் சங்கினுள் மூதன் மூவகைச் சங்கு; அவை இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம் என்பன. மேலாம்பணிலம் : மேற்கூறிய மூவகைச் சங்குக்கும் மேலாகிய பாஞ்ச சன்னியம். திகிரி - சக்கரம். தனு - வில். அந்தகாரம் - இருள். தணியல் - கள்; தேன். சிவபெருமான் ஊடல் தீர்க்கும்படி அம்மை (சிவை)யை அடிபணிந்தமை இதன்கண் காணப்படும். அம்போதியை - கடல்நீரை. பருகு- குடித்த. கும்போதயன் - கும்பவோரையில் தோன்றிய அகத்திய முனிவன். பரவும் - தொழும்.* (கூ)

நெஞ்சினுண் ணறிவிலா வொருமுனிவ ரன்சிவனை
நேசித்து நினைவழிபடா
நெட்டூர னுனதை யறிந்துநீ தவசினு
னிருமலனொர் பாகமெய்த
வஞ்சமிகு சஞ்சரீ கத்துரு வெடுத்துவலப்
பாகத்தை யேதுளைத்து
வலம்வர லறிந்துநம் சத்தியம் சத்தைநீ
மாற்றுவா யெனவகற்றப்
பஞ்சவா னனனொரு பதங்கூட நல்கிநம்
பன்னிதன் சத்தியன்றிப்
பகர்செய னமக்கொன்று மிலையென வறிந்துனைப்
பரவவருள் செய்தபரையே
அஞ்சநிகர் நடைதருங் கஞ்சமல ரடிவருந்
தாமல்மெல் மெலவருகவே
அம்போதி யைப்பருகு கும்போ தயன்பரவு
மன்னைகோ மதிவருகவே.

(கு - ரை.) நுண்ணறிவு - செருக்ககன்று, திருவருளால் பெறும் மெய்யுணர்வு. நெட்டூரன்-வன்மனம் உடையவன். சஞ்சரீகம் - வண்டு. சத்தியம்சம் - ஆற்றற்கூறு. பஞ்ச ஆனனன்- ஐந்து திருமுகமுடையோன்; சிவன். பதம் - கால். பன்னி - மனைவி. பகர் - சொல். இதன்கண் பிருங்கி முனிவர் வரலாறு குறிக்கப்படுகின்றது: இவர் உமையம்மையாரை விடுத்துச் சிவ பெருமானை மட்டும் வலம் வந்து வணங்கி வந்தனர். அம்மை தவமிருந்து சிவபெருமான் திருவுடம்பில் ஒரு கூறுபெற்றனர். அப்பொழுது அப்பிருங்கி அவ்வுடம்பின் நடுவே வண்டுருவெடுத்துத் தொளைத்துச் சிவனை மட்டும் வழிபட்டனன். அப்போது அம்மை தன்கூறுகிய ஆற்றலை வாங்கிவிட்டனள். பிருங்கி ஆற்றலிழந்தனன். அவனுக்குக் கோலும் காலும் கொடுத்து அறிவுறுத்தினன் சிவன். அஃதாவது பிருங்கியே! நமக்குத் திருவருளை நீக்கி வேறு செயலில்லை என்றனன். இதனால் தெளிவு பிறந்து இருவரையும் வலம் வந்து வணங்கினன். அஞ்சம்-அன்னம். (ஙஉ)

நாட்டினில மைந்திற் சிறந்தமரு தப்பாவை
தன்னை நாற் கோட்டுவேழ
நாகநா தன்வதுவை யாற்றவம ரர்கள்தச்ச
ஞட்டிய மணப்பந்தருக்
கீட்டுகா லெனவாழை த்ரழைகமு கினமுலவ
வீர்ங்கடலி னமுதருந்தி
யிருண்மணி யெனத்திகழு மேகங்கள் மேற்கட்டி
யென்னமீ திற்செறிதர
நீட்டுசிறை மாயூர நாடகக் கணிகையரி
னிர்த்தமிட வண்டுபாட
நிறைவளஞ் செறிசோலை மருவுவர ராசையினி
னிமலசங் கரராடிய
ஆட்டமோ டெதிராட வேட்டவா னந்தசிவ
காமியம் பிகைவருகவே
அம்போதி யைப்பருகு கும்போ தயன்பரவு
மன்னைகோ மதிவருகவே.

(கு - ரை.) *நிலம் ஐந்து-முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தலென ஐந்து. மருதப்பாவை - வயல் நிறைந்த மருதப் பெண். நாற்கோட்டு வேழம் - இந்திரனூரும் வெள்ளையானை. இது நான்கு கொம்புகளையுடையது. நாகநாதன்-தேவேந்திரன். கணிகையரின் - நாட்டியப் பெண்களைப்போல்.* (௯௪)

மோதிப் பகட்டுவா ளைக்குலந் தாவிமுது
பாளைவிரி தாழைகாய்த்த
முப்புடைக் கனிசிதறி மேற்சென்று கமுகினை
முறிக்கவதின் மிடற்றொடிந்து
சோதிக் கதிர்த்தரள முதிரொளியை மதியென்று
சுருள்விரித் தாம்பலலரத்
தொக்கிறினு மேலவர்க ளுதவிசெய் தன்மையைத்
தோற்றுபொழி லிடைசிவந்த

தாதிற் பொலிந்தமலர் மதுவொழுகி யம்புயத்
தண்டட நிறைத்து வயலிற்
சாலியுங் கன்னலும் வானுற வளர்க்கவள
மேவுவர ராசைதன்னில்
ஆதிப் பரஞ்சுடரோர் பாகத்து மருவுமா
னந்தசிற் பரைவருகவே
அம்போதி யைப்பருகு கும்போ தயன்பரவு
மன்னைகோ மதிவருகவே.

(கு - ரை.) பகட்டு வாளை - பெரிய வாளைமீன். (௯௫)

வந்தியரு நன்மகப் பேறுபெற வளைகூனு
மன்மதா கிரதியாக
மானிலத் தவரிகழ வருசிந்து நல்லுருவம்
வாய்க்கமதி யிரவிகதிரும்
இந்தவித மென்றறிகி லாப்பிறவி யந்தகரு
மெழில்விழிப் பிரபை யெய்த
இருமல்குட் டங்குன்ம மீளைகா மாலைதலை
வலியிருகை கான்முடக்கு
முந்தைவினை யான்மருந் திற்றீர்ந் திடாதநோய்
முதுபேய் தொடக்குபித்த
முற்றுநின் சந்நிதியின் முன்வந் தவர்க்குமுன்
வாராது நீக்குமுதலே
அந்தியம் பிறைசூடு சிவசங்க ரேசர்மகி
ழருமறைப் பொருள்வருகவே
அம்போதி யைப்பருகு கும்போ தயன்பரவு
மன்னைகோ மதிவருகவே.

(கு - ரை.) இப் பாட்டின்கண், மகப்பேறு, கூன் நிமிர்தல், நல்லுருப் பெறுதல், பிறவிக்குருடு நீங்குதல், குட்டம், குன்மம், ஈழை, காமாலை, தலைவலி, கைகால் முடக்கு முதலிய நீங்கா வினைகள் முற்றும் நீங்குதல் கூறப்படுகின்றது. (௯௬)

### வேறு

மோகத் துயராற் றந்தைமுன்னோர்
முனிவன் பன்னி தனைச்சேர்ந்தம்
முனிசா பத்தான் மூன்றுலகு
நகைக்க முகில்போ னிறத்ததனை
தாகத் தலமெ லாமியோனி
யாகக் கண்டுஞ் சீதைதனத்
தாசை யாலே சயந்தன்றன்
னழகார் தெய்வ வுருமறைத்துக்
காகத் துருவாய்க் குத்துவினை
கடிந்து திவ்விய வடிவநல்குங்
கமழ்பூ நாக சுனைபடிந்தோர்
கவலை தீர்த்துக் கதிபெறச்செய்
மாகத் தமுதே புன்னைவன
வாழ்வே வருக வருகவே
மன்றல் கமழு மலர்க்குழற்கோ
மதியே வருக வருகவே.

(கு - ரை.) இப் பாட்டின்கண் இந்திரன் மகன் சயந்தன் சீதையின் கொங்கையை விரும்பிக் காகவடிவங்கொண்டு சென்று குத்தினன். அப் பாவமும் அக் காகவடிவமும் பூநாகசுனையில் படிந்தமையால் நீங்கினமை கூறப்படுகின்றது. (௭)

திதிக்கு மதிதிக் கும்மகவா
மசுரர் சுரருஞ் செங்கையினாற்
றிண்மந் தரத்தின் மதித்தறியிற்
றீவாய்ப் பாந்தள் சேர்த்தீர்த்து
மதிக்குந் திருப்பாற் கடலமுதை
வடித்துத் தெளித்த மதுரரச
வண்மைத் தமிழ்நாட் டுக்கரசாம்
மலையத் துவசன் றருமகவே

உதிக்குங் கதிரால் வெம்பாலை
யுடலக் கருக்கி நீருக்கி
யுண்ணீர் சுவற்றுங் கடுங்கோடைக்
காற்ரு துழன்றெண் கோட்டில்வரு
மதிக்குங் குளிர்செய் புன்னைவன
மணியே வருக வருகவே
மன்றல் கமழு மலர்க்குழற்கோ
மதியே வருக வருகவே.

(கு - ரை.) இதன்கண் தமிழ், தேவரமிழ்தத்தைப் பிழிந்தெடுத்த இனிய சாற்றின் வளம் பொருந்திய தென்பது கூறப் பட்டுள்ளது.

மதிக்கும் - மத்திக்கும்; கடையும். மதிக்கும் - திங்களுக்கும். கோடு - புன்னைமரக் கிளை. (௫அ)

பருவப் புயனேர் குழன்மடவார்
படைமா வன்னி பசுந்தென்றற்
பன்மா மணித்தேர் கொண்டிந்தப்
பல்லா யிரவண் டத்தினுள்ளோர்
வெருவப் பொருபூங் கணைமதனை
விழியங் கியினுல் வெறுத்தநம்பர்
மேலா சையினுற் றவவேட
மிட்டு விண்ணோர் நகர்பரவும்
உருவக் காஞ்சி நகர்க்கம்பைக்
குண்ணீ பூசை யியற்றியநா
ளுள்ள விரக மாற்றும
லோல நீரா லச்சுறுத்தி
மருவச் செய்யு மாமாய
வடிவே வருக வருகவே
மன்றல் கமழு மலர்க்குழற்கோ
மதியே வருக வருகவே.

(கு - ரை.) காமனுக்குரிய படைகள் பருவப்பெண்கள், குதிரை கிளி. தென்றல் தேர். விரகம் - காமம். மாமாயவடிவே. தூமாயையினை நேரே தொழிற் படுத்தும் திருவருள் வடிவே. சிவபெருமானுக்குத் " தணந்த பெருந் துயர்க் கடல்மிக்கதும் " அம்மையின் திருவருளே. (௫௯)

செய்க்கான் முளைத்த செங்கமலஞ்
செவ்வல் லிகள்செந் நீலநிறை
தேனுண் டுறங்கு வரிவண்டு
செந்நெற் கிடையே முளைத்தகளை
ஐக்கார்க் கூந்தன் மள்ளியர்க
ளனம்போல் நடந்து கடியுமலர்
அங்கைக் கணிந்த கரும்பொற்காப்
பாலித் திடும்வன் றெனிக் கஞ்சிக்
கொக்கார் தடத்துஞ் சோலையினுங்
குதித்தங் கவர்தங் குரவையினைக்
கூடி யிகழ்தல் போலவரி
பாடும் பணைசூழ் குலராசை
மைக்கார் மிடற்றூர் மனக்கோயில்
வளரு மனமே வருகவே
மன்றல் கமழு மலர்க்குழற்கோ
மதியே வருக வருகவே.

(கு - ரை.) செய்க்கால்-வயலினிடத்து. வரிவண்டு-புள்ளி களையுடைய வண்டு. இசைபாடும் வண்டெனினுமாம். ஐக்கார்-அழகிய மேகம். மள்ளியர் - உழவப்பெண்கள். கரும்பொன் - இரும்பு. (௬0)

தேனே வருக சீராசைத்
திருவே வருக திரிநேத்திர
சிவசங் கரருக் குவகைநல்குஞ்
செல்வக் கனியே வருகவிண்ணின்

ஆனே பரவத் தவம்புரியு
மமுதே வருக குமுதவாய்
அனமே வருக வினையிருளை
யவிக்குங் கிரணக் கதிர்வருக
பானேர் மொழிப்பார் வதிவருக
பனிமா மலையின் சேய்வருக
பன்னு கங்க ளிரண்டும் வழி
பாடு புரியும் புன்னைவன
மானே வருக வுயிரனைத்தும்
வளர்க்கு மனையே வருகவே
மன்றல் கமழு மலர்க்குழற்கோ
மதியே வருக வருகவே.

(கு - ரை.) தேன் : பிறவிப்பிணியகற்றி உறவுப்பணியயற்றும் உளநல்கி வளமுறு சிவனடியாருடன் கூட்டுவித்துத் திருவடிப்பேற்றினுக்கு நேரேவாயிலாம் செந்தமிழ்த் திருமறை திருமுறைகளை யோதுவித்து மாறிலாப் பேரின்பப் பெருவாழ்வளிக்கும்அம்மை திருவருள் ஈடிலா இன்தேன் என உருவகிக்கப்பட்டது. விண்ணின் ஆன் - தெய்வப்பசு ; காமதேனு. (சுக)

# எ. அம்புலிப் பருவம்

*[இது பதினைந்தாம் திங்களில் நிகழ்வது. அது பிள்ளையைப் பெண்கள் ஒக்கலையில் வைத்துக்கொண்டு வானத்தம்புலியை அப் பிள்ளையுடன் விளையாட வரும்படி இன்சொற் சொல்லல், வேறு படுத்தல், கொடுத்தல், ஒறுத்தல் என்னும் நால்வகைச் சூழ்ச்சி களால் அழைப்பதாகும்.]*

**பேருலகி னுக்கொருகு பேரனீ யிவளுநிதி**
**பெறுகுபே ரன்சினேகப்**
**பெம்மான்றன் மனைவிவாட் கலையுடையை நீயுமிவள்**
**பெருமணிக் கலையையுடையாள்**
**நீருலவு பிள்ளைமதி யாவைநீ யிவணிழலி**
**னோடாடு பிள்ளைமதியாள்**
**நீள்பனிக் கிரணனீ யிவளுமெந் நாளுமெழி**
**னிகழ்பனிக் கிரியின் மகளாம்**
**பாருலகி லித்தன்மை யாலிவளொ டொப்பென்று**
**பகர்கின்ற சொல்விளங்கப்**
**பரியமணி யிட்டிழைத் திடுகோ புரத்தின்வழி**
**யாய்ப்படர்ந் தோடிவந்திங்**
**காருமமு தத்துளி தழைத்தமொழி யன்னையோ**
**டம்புலீ யாடவாவே**
**அரியரனு மொன்ருக வருதவ முயன்றவளொ**
**டம்புலீ யாடவாவே.**

**(கு - ரை.)** *இப் பாட்டின்கண் அம்புலிக்கும் அம்மைக்கும் உள்ள ஒப்புக் கூறப்படுகின்றன. குபேரன் - சந்திரன். வாட் கலை - ஒளியுடைக்கதிர்கள். பெருமணிக்கலை - பரிய மணிகள் அழுத்திய மேகலை. பனிக்கிரணன் - குளிர்ந்த கதிர்களையுடை யவன். பனிக்கிரி-இமையமலை. திங்கள் வர ஏணிப்படியாயிருப் பது கோபுரம்.* **(கூ௨)**

முன்னமலை யத்துவச மன்னவன் ளுெருமகவு
பெற்றிடு முயற்சியாக
முதுமறை விதித்தபடி புரிபுத்திர காமேட்டி
தன்னின்முலை மூன்றுகாட்டிக்
கன்னியிவள் கனலினிடை வந்தவ தரித்தனள்
கனற்கடவுண் மகவதாகக்
கதிர்மதிக் கடவுளே நீயுமுற் பத்தியாங்
காரணத் தொடர்பினுலே
உன்னையொரு துணையெனக் கொண்டுவிளை யாடவா
வென்றுவகை யோடழைத்தாள்
உனக்கிது கிடைத்திடும் பேறல்ல நீசெய்த
வொண்டவப் பேறதாகும்
அன்னையா வெவ்வுயிரை யுங்காக்கும் வல்லியோ
டம்புலீ யாடவாவே
அரியரனு மொன்ருக வருதவ முயன்றவளொ
டம்புலீ யாடவாவே.

(கு—ரை.) இதன்கண் திங்கள் தீயிடைத் தோன்றிய குறிப்புக் காணப்படுகின்றது. திங்கள் கதிரவனில் தோன்றிய தென்றலும் ஒன்று. துணை - ஒப்பு. புத்திரகாமேட்டி - மகவு வேண்டிச் செய்யுமகம். திருமுலை மூன்றும் அன்பு, அறிவு, ஆற்றல்களின் குறிப்பாகும். (௬௩)

எல்லாக் கலைக்குமிவ ளெசமாட்டி நீயுமீ
ரெண்கலைக் குடையனதனில்
இற்றிற்ரொர் கலையாய்க் குறைந்தீற்றி லேயிரவி
யோடொன்றி யுருவநீத்தாய்
நல்லார்க ளானமெய் யடியார்க ளிவள்சனிதி
நாடியே கூடிவாழ்ந்தார்
நாளுநீ மிருகசம் பந்தமுற் றேயிரவி
னண்ணலாற் ருனவனெனப்

பொல்லாத நிசிசரப் பேர்புனைந் தாயுனையோர்
பொருளாக மனதிலெண்ணிப்
பொய்தற் சிசுக்களொடு விளையாடு பேதையா
தலில்வா வெனப்புகன்ற
தல்லாது நீயிவட் கொப்பாவை யோவிவளொ
டம்புலீ யாடவாவே
அரியரனு மொன்ருக வருதவ முயன்றவளோ
டம்புலீ யாடவாவே.

(கு – ரை.) இப் பாட்டின்கண் ஒப்பின்மை அல்லது வேறுபாடு கூறப்படுகின்றது. மிருக சம்பந்தம் : திங்களிடத்துக் காணப்படுங் கருமையினை முயல் எனவும் மான் எனவும் கூறுப: அதனால் விலங்குத் தொடர்பு ஏற்பட்டது போலும். ஈரெண்கலை – திங்களுக்குரிய பதினாறுகலை. சனிதி-சன்னிதி:திருமுன். (சுச)

வெம்பணி வரக்கண்டு எஞ்சுவாய் நீயிவள்
விரைத்திரு மலர்ச்சரணிணை
விரிமணிச் சூட்டின்மிசை கொண்டுபணி யிருவர்கள்
விரும்பியர்ச் சனைபுரிகுவார்
செம்பினிடை யுற்றிடு களங்கமென வுடலினிற்
றீராக் களங்கமுற்ருய்
தேவியிவள் சன்னிதியி னுற்றவர்கள் வல்வினைத்
தீக்களங் காந்தவிர்ப்பள்
தம்பமென நீசார்ந்த வரைதாழ்வு பெற்றன
தவச்செல்வி யிவள்பிறந்த
சைலஞ் சிரேட்டமுடை யதுவிதைக் குறியாது
தயவுடன் வாவென்றனள்
அம்புவி புரந்ததிரு மால்சகோ தரியுட
னம்புலீ யாடவாவே
அரியரனு மொன்ருக வருதவ முயன்றவளொ
டம்புலீ யாடவாவே.

(கு - ரை.) திங்கள் கரும்பாம்பென்னும் இராகுவினுல் பற்றப்படும். திருப்பாற்கடல் கடைந்த காலத்து நிலம் தாழியாகவும், மந்தர மலை மத்தாகவும், திங்கள் மத்தொடு பொருந்திய தறியாகவும், பாம்பு நாணுகவும், வானவரும் தானவரும் கடைவோராகவும், திருமால் தலைவராகவும் விளங்கினரென்ப. அக்காலத்து மந்தர மலையாகிய மத்துக் கடலுள் ஆழ்ந்தது. அதனைத் திருமால் ஆமை வடிவெடுத்துத் தன் முதுகில் தாங்கினன் என்ப. இத்தாழ்வு மந்தரத்திற்குச் சந்திரனின் சார்பாலுண்டாயதென்பது குறிப்பு. அம்மை தோன்றியருளிய பனிமலை உலகத்திலே ஈடின்றி உயர்ந்தோங்கியுள்ளது. (௬௫)

கான்மருவு மான்மறுவு முயன்மறுவு மபரபக்
கத்தினிற் கலைகடேய்ந்து
கதிரொளி குழைந்துமுதிர் கிழவர்போ லேநரைக்
காயத்தி லேசிலையெனக்
கூன்மருவு குற்றமுங் குருமனைவி யைச்சேர்ந்த
குற்றமு மற்றையுள்ள
குற்றமுங் கங்கையன நாகசுனை தீர்த்தங்
குடைந்துகொண் டலின்மீதுபோய்
வான்மருவு புன்னைவன நீழலுறை யிவளைவழி
படினுடி யினிற்போக்குவாள்
மதியெனப் பெயர்பெற்று மதியிலி யெனச் சொல்ல
வாளா திரிந்தலுத்தாய்
ஆன்மருவி வந்தனைசெ யாவுடைப் பார்வதியொ
டம்புலீ யாடவாவே
அரியரனு மொன்ருக வருதவ முயன்றவளொ
டம்புலீ யாடவாவே.

(கு - ரை.) கான் மருவு - காட்டில் வாழ்கின்ற. மான் மறுவு - மான்களங்கம். முயன் மறுவு-முயற்களங்கம். அபர பக்கம்-தேய்பிறை. நாகசுனை - மிகச்சிறந்த புண்ணியநீர். குடைதல் - முழுகுதல். புன்னை - திருக்கோவிற்றிருமரம். (௬௬)

இமையவர்க ளுண்மருந் தொருகற்ப காலமுட
லிற்றிடா தேயிருக்க
ஏமவுல கத்தினிடை வைக்குமிவ ணல்குமண்
மருந்தேத்து மினியவடியார்
தமையுடல் வருத்துபிணி யாவையுந் தீர்த்துட
றவிர்ந்துயிர் தனித்தபொழுது
சாயுச்சிய முத்தியினி னீங்காது வைக்குமித்
தன்மையை யுணர்ந்திருந்துஞ்
சுமையுடற் கயரோக முந்தீர்த்து முத்தியிற்
றொடராமல் வீணதாகச்
சுழல்காற்றி னிற்சுரு கெனச்சுற்றி யலைவதென்
றூயநின் குலவிளக்காம்
அமைபொருந் தோளியுட னிமையின்விழி யாய்க்கூடி
யம்புலீ யாடவாவே
அரியரனு மொன்றாக வருதவ முயன்றவளொ
டம்புலீ யாடவாவே.

(கு - ரை.) ஏமவுலகம் - மாறா இன்பவுலகம். சாயுச்சிய முத்தி - திருவடிப்பேறு. அமை - மூங்கில். பொரும் - ஒக்கும். தோளி - தோள்களையுடையவள். இமையின் விழி : விழியினைக் காத்து அவ்விழிக்கு யாண்டுந் துணையாக நிற்பது இமை. அது போல் அம்மையும் ஆவள். (௬௭)

வரராசை சீராசை பூகயிலை புன்னைவன
மாமிம் மகாதலத்தின்
மன்னுநின் குலவுக்கிர வழுதியும் பொன்னியாம்
வரநதிக் கிறைவனுனை
சிரநாம முற்றவனும் வனசரனு மணிமுடிச்
செங்கட் கொடும்பாந்தளிற்
சேடனென வறிவுற்ற சங்கபத் மர்களுஞ்
செயற்கரிய தவசுசெய்து

பரமான முத்திபெற் றுய்ந்தனர்க ளுனைவலிய
வாவென்று பரிவு செய்யிற்
பாலினிற் பழநழுவி வீழ்தல்போ லாகுநின்
பாக்கியம தேபாக்கியம்
அரனுரொ டெதிராடி விளையாடு மம்மையோ
டம்புலீ யாடவாவே
அரியரனு மொன்ருக வருதவ முயன்றவளொ
டம்புலீ யாடவாவே.

(கு - ரை.) *மாதலம் - பெரிய திருவூர். உக்கிரகுமார பாண்டியன், சென்னியாகிய சோழன், வேடன், பாம்பில் ஆதி சேடன் போன்ற அறிவுடைய சங்க பத்மர்கள், இங்குத் தவம் செய்து பெரும்பேறு பெற்றனர். அம்மைதிருவருள் பெற்றவர் பேரின்பம் உற்றனர்.* (சுஅ)

கங்கையணி கடவுடன் கைமானு மிவளிணைக்
கண்மானு நின்மானுமெக்
காலுங் கலந்துறவ தாகுமிவண் முகமதிக்
கதிரினு னிறைவுபெற்றுத்
துங்கமதி யாகுவா யரனரியு மோருருத்
தோற்றமா யுறைதலாலே
சொன்னமக மேருநிகர் கருடனும் மித்தலத்
துறைகுவா னவனிடத்தில்
வெங்கொடும் பாந்தளுன் மீதுவா ராதுவிட
மீட்குமந் திரமறிகுவாய்
வேனிற் கொடுங்கோடை நீக்கவும் புன்னைவன
மென்னிழலு முண்டுகண்டாய்
அங்கையயில் வைத்தகுக னைப்பெற்ற வன்னையுட
னம்புலீ யாடவாவே
அரியரனு மொன்ருக வருதவ முயன்றவளொ
டம்புலீ யாடவாவே.

(கு - ரை.) இப் பாட்டின்கண் பெறுபேருகிய கொடை கூறப்படுகின்றது. மூன்று மான்கள் : சிவபெருமான் திருக்கையி லுள்ள மான், அம்மையாரின் மான் போன்ற கண்கள், திங்களின் உடலிற் காணப்படு மான் என்பன. கருடமந்திரம் - பாம்பின் நஞ்சகற்று மந்திரம். அயில் - வேல். (௬௯)

பிரமன்றன் வாகன வுருக்கொண்டு விண்ணிற்
பெருங்கால மாய்ப்பறந்து
பேணுமிற கெல்லா முதிர்ந்திடத் தேடியுங்
காணுத பிஞ்ஞகன்றன்
சிரமன்ன வைத்தநட் பறியாது நிந்தனைசெய்
சிறுவிதி மகத்தினீயுந்
தேவரொடு கூடியவி யுணவெண்ணி யேசென்ற
தீயகுற் றத்தினுலே
பரமன்வடி வாம்வீர பத்திரன் ருளாற்
பதைத்திட வுதைத்ததறிவாய் 17830
பனிவரைக் குமரியிவள் வாவெனில் வராதிருக்
கிற்பகவ ரென்செய்கிலார்
அரமன்ன கூர்விழிச் சீராசை யம்மையுட
னம்புலீ யாடவாவே
அரியாது மொன்ருக வருதவ முயன்றவளொ
டம்புலீ யாடவாவே.

(கு - ரை.) இதன்கண் தக்கன் வேள்வியில் புக்கிருந்த திங்கள் வீரபத்திரரால் ஒறுக்கப்பட்டமை கூறப்படுகின்றது. அதனுல் இப்பாட்டு ஒறுத்தல் முறையாகும். பிஞ்ஞகன் பின்னற்றிருச் சடையினையுடையவன். அவி - வேள்வியுணவு. மன்ன - நிலைபெற்றிருக்க. (௭0)

எவ்வெவ்வண் டத்தினு முள்ளவரி பிரமாதி
யாவரும் மிவள்கடைக்கண்
இனியவரு ளெப்பொழுது கிட்டுமென வந்துநின்
றேத்தியெதிர் நோக்கிநிற்பார்



**மௌவலங் குழலியிவள் வாவென வழைத்திடுமுன்
வாரா திருக்கிலுன்னை
வவ்வுபணி விட்டிடுதல் போலாது னுயிர்கவரும்
வன்பணி யிரண்டிங்குள
ஒவ்வொரு நொடிக்குளங் குற்றுடல் சவட்டுமிஃ
துண்மைசொன் னேனோடிவந்
துள்ளங் களித்திடச் செய்தியெனி னின்னுயிர்க்
குறுதியுண் டுலகத்தினில்
அவ்வவ ருயிர்க்குயிர தாய்க்காக்கு மன்னையோ
டம்புலீ யாடவாவே
அரியரனு மொன்ருக வருதவ முயன்றவளோ
டம்புலீ யாடவாவே.**

(கு - ரை.) மௌவல் - முல்லை; ஒருவகை மல்லிகை. வவ்வு பணி - இராகு; கரும்பாம்பு. வன்பணி இரண்டு - அம்மையை வழிபடும் இரு பாம்புகள். பிறப்பில் பெரும்பொருளாம் சிவ பெருமான் அரனாய்த்துடைத்தும், அரியாய்க்காத்தும், அயனாய்ப் படைத்தும் வரும் அருளாளன். அம்முழுமுதல்வன் நெறி யாளர்களால் இருவகையாக வழிபடப்படுகின்றனன். அவ் வீருருவும் ஒருருவாய் நின்று உண்மை தெளிவிப்பதே சங்கர நாரணர் திருவுருவம். (எக)

## அ. அம்மானைப் பருவம்

[இது பதினேழாம் திங்களில் நிகழ்வது. இது பிள்ளையைப் பார்த்துத் தோழிகள் முத்து மாணிக்கம் நீலமணி முதலியவற்ருலாய அம்மானைகளைக் கொடுத்து ஆடும்படி வேண்ட ஆடுவதாகும்.]

செங்கயலை வென்றவிரு கட்பார்வை யிமையாது
செழுமணியின் முத்தம்மனை
சேணிடை யெறிந்திடத் திங்கண்மண் டலவரைச்
சென்றமதி தன்னை நோக்கி
எங்கணு யகிதிரு முகத்தெழிலை வவ்விநீ
யிங்குவா னிடை வதிந்தா
யென்றுடலை யெற்றிப் புடைத்துத் திரும்பிவந்
தெழிறரு மலர்க்கரத்தில்
தங்கிய வனக்குஞ் சினைப்பொருவி யப்பினைத்
தந்துமன மகிழ்வித்திடத்
தண்சினை விரித்தபுன் னைகவன நீழலிற்
சங்கபத் மர்களிறைஞ்சும்
அங்கயிலை யண்ணல்பா லிங்கிதமொ டாடுகொடி
யம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) முத்தம்மனை - முத்துக்களாலாகிய அம்மனை. இவ்வம்மனை அம்மை அருளுடனெறிந்த வேகத்தினுல் வான் மண்டலத்தில் உலாவும் திங்கள் மண்டலத்தைப் போய்முட்டிற்று. முட்டி அத் திங்கள் கோமதியம்மையின் திருமுகத்தின் அழகினைக் கவர்ந்து கொண்ட குற்றத்தின் பொருட்டு அதனுடலை உதைத்து அடித்துத் திரும்பி வந்து அம்மையின் கையிடத்துத் தங்கிற்று. தங்கிய அது அம்மையின் திருக்கையிலுள்ள அன்னக்குஞ்சினை ஒத்துக் கண்டார்க்கு வியப்பினைத் தந்தது. (எஉ)

மாணிக்க முத்திழைத் திட்டவம் மனைகளிரு
வனசக் கரத்தினேந்தி
வானோக்கி வீசமேற் சென்றுகீழ் வருதல்மதி
கதிரிருவர் வந்துநின்முன்
பேணிப் பணிந்துவரம் வேண்டுதற் காகவரு
பெற்றிய தெனத்துலங்கப்
பெருகுசுர கங்கையலம் வரவெம் பிரான்மகிழ்
பிறங்கச் சிரந்துளக்கப்
பாணிற் கிசைந்தவிசை பயில்கின்ற சகிமாதர்
பக்கத்தி னின்றுநின்கட்
பார்வைமே னோக்கம்வைத் திமையாது நின்றர
மடந்தையர்கள் பார்வைகாட்ட
ஆணிற் சிறந்தமத னுக்குரிமை மாமியுமை
யம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) இப் பாட்டின்கண் கோமதியம்மை இரண்டு திருக்கைகளிலும் முறையே செம்மணியாகிய மாணிக்க அம்மனையும், முத்தாலாகிய அம்மனையும் ஏந்தி மேலே வீசி ஆடுங்காலத்து அவை இரண்டும் வானுறச் சென்றுகீழ் வருகின்றன. அவை வரும் தோற்றம் திங்களும் ஞாயிறும் தங்கள் நிலையினை விட்டுக் கீழிறங்கி அம்மையின் திருவடியினைப் பணிந்து வரம் வேண்டவரும் தோற்றத்தினை ஒக்கும். அம்மையின் அம்மனையாட்டத்தைக்கண்டு சிவபெருமான் கங்கை சுழலும்படி தலையசைத்து மகிழ்கின்றனர். கலைமகளும் அலைமகளும் ஆகிய தோழிமார் பண்ணிசையப் பாடி அம்மையினை நோக்கி நிற்கின்றனர்.

செம்மணியம்மனை ஞாயிற்றையும் முத்தம்மனை திங்களையும் ஒக்கும். இவையிரண்டும் முறையே வலத் திருக்கையிலும் இடத் திருக்கையிலும் கொள்ளப்பட்டன எனக்கோடல் பொருந்தும். துலங்க - விளங்க. சகிமாதர் - தோழிப் பெண்கள். (௭௩)

பண்டைமா தவரிருவர் பண்ணிய தவத்தினாற்
பைம்பொனம் பலநடுவினிற்
பதுமவே தாத்தந்தை முழவவொலி செய்யவா
னவர்முனிவர் பரவியேத்தத்
தொண்டரர கரவொலி திகாந்தவரை முட்டியண்
டச்சுவர்து ளைத்துருவிடத்
தூயவா னந்தநற வொழுகுபங் கேருகத்
துணையடியி னொன்று பேர்த்துத்
திண்டிறல் படைத்தமுய லகன்வெரிந் குழிபடத்
திகழ்பரத முறையினூன்றித்
திந்ததித் தாதொந்த தந்தவென் றேதிரு
நடம்புரிந் தருள்செய்திடும்
அண்டர்நா யகனுட னுடியப ராசத்தி
யம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) இதன்கண் அம்பலவாணர் புரிகின்ற அருட் பெருங் கூத்தின் முறைமை கூறப்படுகின்றது. வேதாத்தந்தை- திருமால். திகாந்தம் - திசையின் முடிவு. பங்கேருகம் - தாமரை. மாதவரிருவர் - புலிக்கால் முனிவர், பாம்பு முனிவர். முயலகன் - நன்முயற்சியைத் தடுக்குமடையாள வடிவம். (எச)

செம்மா மலர்ப்பாவை வெண்மா மலர்ப்பாவை
சேடியர்க ளாகநின்று
செம்மணியி னம்மனையும் வெண்மணியி னம்மனையு
மேந்தியெதிர் திகழவீச
எம்மா மகத்துவ வறங்களும் புரிகையா
லிருண்மணியி னம்மனையைநீ
யேந்தியெதிர் தரமூன்று மொக்கக் கலந்துவான்
மிசையேற விரவிமதியு

மைம்மாலை யொத்தவடி வுற்றவா தித்தனருள்
மைந்தனுங் கூடிவிண்ணின்
வாவுத லெனக்கதிரு மதியுமிர வொடுநண்பு
வாய்ந்ததெ தென வேசிறக்க
அம்மானை யூர்ந்துசெம் மானைவைத் தவர்தேவி
யம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) *இப்பாட்டின்கண் வலப்பாற் றோழியாகிய திருமகள் செம்மணியம்மானையையும், இடப்பாற் றோழியாகிய நாமகள் முத்தம்மானையையும் கோமதி அம்மையின் எதிராக நின்று வீசவும், கோமதியம்மை நீலமணியாலாகிய அம்மானையை வீசவும் இம்மூன்றும் வானுறச் செல்லும் தோற்றம் ஞாயிறும் திங்களும் ஞாயிற்றின் மகனாகிய சனியும் முறையே விண்ணுறத் தாவுதலெனவும், ஞாயிறுந் திங்களும் இரவினுடன் நண்புபூண்டதெனவும் சொல்லும்படி காணப்பெறும்.*

*செம்மாமலர்-செந்தாமரை. வெண்மாமலர்-வெண்டாமரை. செம்மணி-மாணிக்கம். வெண்மணி-முத்து. எம்மா மகத்துவ-எத்தகைய பெரிய மேன்மையுமான. மைம்மாலை - இருண்மாலை; மேகஞ் சூழ்ந்த மாலைப் பொழுது. வாவுதல்-தாவுதல். அம்மானை: அம்+ஆனை - அழகிய ஆனேற்றை.* (எகு)

செல்லார் குழற்செருக் கசையவதன் மேலணி
செழும்பிறைப் பணிகருமுகிற்
சேர்ந்தபிறை போற்றவழ விருதனச் சுமையினாற்
சேணிடைக் கமலமென்ன
இல்லாத சிற்றிடையு நைந்திடப் பாரமுலை
யினினிட்ட வாரமசைய
விருகரத் திட்டநவ மணிவளைகள் கலகலென
விம்பர்முத லாவெழுந்த

பல்லா யிரங்கோடி யண்டமுங் கற்பித்த
பானல்விழி யிமையாதுவிண்
பண்ணவர்க ளுண்ணவமு தங்கொடுத் துக்காள
முண்டபரி சறியவைத்த
அல்லார்க ளத்தனொரு பாகத்தின் மேவுமயி
லம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) செல் - மேகம். குழல் - கூந்தல். செருக்கு: செருகு - கொண்டை. பிறைப் பணி - பிறை போன்ற ஓர் அணி. சேணிடைக் கமலம் - வானத்தாமரை. பானல்-கருங்குவளை. அல்- இருள்; இரவு. ஆர் - போன்ற. களம் - கண்டம். சிவபெருமான் நஞ்சுண்டு விண்ணவர்க்கு அமிழ்தம்உண்ண அளித்தனன். (எசு)

வம்பிற் கிசைந்ததன நிகரற்ற விரிதலைத்
தாழையும் மாவிலங்கும்
மாதுளையும் வில்வமுங் கோங்கமும் புன்னையும்
வண்டமைகள் பொதுளும்விளவும்
பம்புற்ற சம்பீர முஞ்செறியு முய்யான
நடுவினிற் பாவையன்னார்
பதுமக் கரத்திடை யெடுத்துதவு பன்மணியி
னம்மனைகள் பற்றிநீயும்
வெம்பிச் சினந்துமேல் வீசலக் கனிகடமை
வீட்டுவா யென்றெறிதல்போல்
விண்ணுளோர் மண்ணுளோ ரியாவரும் வியந்திட
விறற்புர மெரிக்க வேந்தும்
அம்பொற் சிலைச்சிலைக் கையரோ டாடம்மை
யம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) வம்பு - முலைக்கச்சு. தனம் - முலை. நிகரற்ற ஒப்பில்லாத, அம்மையின் கொங்கைகளுக்கு ஒப்பில்லாதன வருமாறு: தென்னங் குரும்பை, மாதுளங்கனி, வில்வப்பழம். கோங்கரும்பு, புன்னைப்பழம், விளாம்பழம், எலுமிச்சம் பழம்.

தாழை - தென்னை, பொதுளும் - நெருங்கும். பம்புற்ற - செறிந்த. சம்பீரம் - எலுமிச்சை. விறற்புரம் - வலிமையுள்ள கோட்டை. பொற்சிலை - பொன்மலை. (எஎ)

பற்பக லிழைத்தபுண் ணியபலத் தாற்சங்க
பத்மர்களு மரனுமரியும்
படிவமொன் ருய்க்கண்டு தெரிசிக்க வரநல்கு
வரராசை யிற்பண்ணவர்
சிற்பர்களு மதிசயித் திடவமைத் திட்டதிரு
வாலயத் தினிதிருந்து
தேவர்முப் பத்துமுக் கோடியும் முனிவர்சித்
தாதியரும் வந்து போற்ற
முற்பவமு மிப்பவமு முற்றுவினை நீக்கிவரு
பவமுரு தேமுடுக்கி
முளரியஞ் சேவடிப் பேறருளு மரனுரொர்
பாகமுங் கவரமுன்னி
அற்பகலு மிடைவிடா தேதழுவு மம்மைநீ
யம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) இதன்கண் சங்கபத்மர்கள் சிவபெருமானை அரன்அரி உருவாகக் கண்டு வழிபடத் திருவருள் புரிந்து வரங் கொடுத்தவள் கோமதியம்மை என்பது குறிக்கப்படுகின்றது. படிவம் - வடிவம். சிற்பர் - சிற்பிகள். பவம் - பிறப்பு. முளரி - தாமரை. அற்பகலும் - இரவும் பகலும் அம்மையின் திருநோக்கம் பட்டவர்பால் எவ்வினையும் அகலும். அகலவே எப்பிறவியும் வாராது, வாராதாகவே திருவடிப் பேறெய்திப் பேரின்பமுறுவர்.

காலையிர விக்குநிகர் செம்பொனுற் செய்துகவின்
மணிகளொன் பதுமழுக்திக்
ககனமுடி யைத்தடவு கோபுர மு மண்டப்
புறச்சுவ ரெனக்கதித்த
நாலுபா லுஞ்சூழ்ந்த திருமதிலு நந்திபின்
னுட்டிய துசத்தம்பமும்
நால்வருக் கருள்செய்த விருமறைத் திருவாயர்
நடனமிடு நாதசபையும்
வேலைவா ளைப்பொருத விழியுருத் திரகணிகை
மின்னுர்கள் பரதமுறையாய்
மிளிர்கொடி யெனத்துவண் டாடுமண் டபமுமிம்
மேதினியி னிற்கயிலை நேர்
ஆலயந் திகழும்வர ராசையம் பிகைதேவி
யம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) ககனம் - வானுலகம். நந்தி-ஆனேற்றுநந்தி. துசத்தம்பம்-கொடிமரம். உருத்திரகணிகையர் - திருக்கோவிற் பெண்பாற்றொண்டர்கள். திருக்கோவிற் றிருக்கோபுரம் உயர்ந்து காணப்படும் தோற்றம் திருக்கோவிலைச் சென்று வழிபடுவார் உம்பரினும் உயர்வர் என்பதன் உண்மையாகும். (எக)

காரா மெனக்கருங் கூந்தலை நினைத்துக்
களிப்பினெடு சிறைவிரித்துக்
கால்பெயர்த் தாடிவரு மாயூர நின்னியற்
கண்டுகவின் முகம்வாடலாற்
பேரான துலகினிற் பிணிமுக மெனப்பெறப்
பெற்றதாய்க் குறவிலாத
பிள்ளையாங் கோரகைநி னிசையமு தினைப்பெரிது
வந்துபேதுற்றுவெள்கு

நீரா லதற்குநா மங்காள கண்டமென
நிகழ்வுறச் செய்துதென்றல்
நேயமாஞ் சிறுகுழவி போலுலவு பூந்தரு
நிறைந்துதேன் முகைபிலிற்றும்
ஆராம மீதின்மல ரம்புயக் கையினு
லம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) இதன்கண் மயில் அம்மையின் கூந்தலைக் கண்டு மேகமெனக் கருதித் தோகை விரித்தாடி மகிழ்வுடன் நெருங்கிற்று. நெருங்கியதும் அம்மையின் சாயலுக்கு உடைந்து வாடிற்று. அதனால் பிணிமுகம் என்னும் பெயர் பெற்றதெனக் கூறப்படுகின்றது. பிணிமுகம் - துன்பமுகம். குயில் அம்மையின் இசையினைக் கேட்டு மகிழ்ந்து மயங்கி நாணிக்கிடந்தமையால் காளகண்டம் எனப் பெயர்பெற்றதாம். காளகண்டம் - வெறுப்பைத் தரும் கறுப்பு. இவை ஆசிரியர் கூறும் தற்குறிப்பேற்ற அணிகள். கோரகை - குயில். காளகண்டம் - குயில். நஞ்சு போன்ற வெறுப்புக் குரலினதாம்; ஆராமம்-சோலை. (அ0)

சந்தனத் தொயிலெழுது தடமுலைக் கொடியிடைச்
சலசவத னத்துமின்னார்
தமனியப் பாவையென வாடரங் கத்தினிடை
சதிமுறையி னுல்நடிப்பத்
தொந்தொமெனு முழவொலியொ டொத்ததா ளத்தொலி
துணைச்செவிக் கமுதமூறத்
தொன்முறையின் வழுவாது தொழுகுலத் தவர்மறைகள்
துகளறப் பயிலுமொலியும்
எந்தைசங் கரர்நந்தி மீதினி லுலாக்கொண்
டெழுந்துவர விம்பரும்பர்
எவ்வடிய ருங்கூடி யரகர வெனப்புகலு
மிவ்வொலியும் வாரியொலியாய்

அந்திபகல் நீங்காத வரராசை யம்மைநீ
யம்மானை யாடியருளே
அங்கரா கக்கொங்கை மங்கைகோ மதியம்மை
யம்மானை யாடியருளே.

(கு - ரை.) தொய்யில் - சந்தனக் குழம்பால் கரும்பு முதலியன போன்று பெண்கள் அழகுற எழுதுங் கோலம். சலசவதனம் - தாமரை போன்ற முகம். சதி - தாளவொத்து. துணைச் செவி - இருசெவிகள். தொழுகுலம்-சிவபெருமானைத் தொழுங் குலத்தார். மறைகள்-நாற்பொருள் பயக்கும் நற்றமிழ் நூல்கள். வாரி யொலி - கடலொலி. (அக)

## ௯. நீராடற் பருவம்

[இது பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வது. அது பிள்ளையை நோக்கித் தோழியர்கள் யாற்றுப் புதுவெள்ளநீர் ஆடுமாறு வேண்டுவதாகும்.]

வந்துபடி பவர்பாவ மோசனஞ் செய்யவட
கங்கைபரி சுத்தமடைய
வரிவிழிக் கடையருளி னெள்ளளவு நல்கிவெள்
வாணியும் பரிதிமுதல்வன்
தந்தசே யானகா ளிந்தியுந் தங்கள்பாற்
சார்ந்துதா னம்புரிதரத்
தவமுயற் றுஞ்ஞான வானந்த வெள்ளமே
சங்கரக் கடவுள்பாகஞ்
சொந்தமா கக்கொண்ட மரகதக் குயிலேது
ழாய்த்திரு முடித்துணைவர் தந்
துணைவியும் பாரதியு மிருபுறங் கைலாகு
தரவொரு சுடர்க்கொடியென
வந்தரத் தவராடு பொருநைநதி யமுதநீ
ரம்மைநீ யாடியருளே
ஆதிரையி னூர்மருவு மாதுகோ மதிதேவி
யம்மைநீ ராடியருளே.

(கு - ரை.) வடபாலுள்ள கங்கை, வாணி, காளிந்தி முதலிய யாறுகள் தூய்மையடையத் தென்பால் பொருநையாற்றில் திரு முழுக்குச் செய்ய வரமருளுமாறு அம்மையை நோக்கித் தவம் புரிகின்றன என இப்பாட்டின்கண் குறிக்கப் படுகின்றது. அம்மை, அறிவின்ப வெள்ளம். அவள் தண்டமிழ்ப் பொருநையில் நீராடி யருளுகின்றனள். மோசனம் - விடுதலை அடைதல் ; நீங்குதல். பரிதி - ஞாயிறு. தானம் - முழுக்கு. ஆதிரையினூர் -சிவபெருமான். சிவபெருமான் - பொன்னூர்மேனியன். திருவாதிரை மீனும் பொன்போன்று காணப்படும். அதனால் அம்மீன் சிவமீன் எனச் செப்பினர். (அஉ)

பாசிகயல் வள்ளைசெவ் வாம்பல்செங் கிடைபதும
முகைஞெண்டு பாய்வராலுட்
பற்றுற வுறுப்படக் கியகமட மும்பவள
வண்கிளையு மரிபரந்து
மூசுகுழல் கண்காது வாயதர முத்தணித
னம்முழந் தாள்கணைக்கால்
மொய்ம்புறும் புறவடிசெவ் விரலன்ன வென்றுமுதிர்
கவிவாணர் சொன்னதன்மை
ஏசிலது நம்மிடத் துண்டோ வெனச்சூழ
விருளையர்கள் சிவிறிநிறைய
விட்டகுங் குமநீ ரிறைக்கவிரு கரையுநவ
மணிகொழித் தெறியுமும்பர்
ஆசிலமு தப்பெருக் கென்னவரு பொருநைநீ
ரம்மைநீ யாடியருளே
ஆதிரையி னூர்மருவு மாதுகோ மதிதேவி
யம்மைநீ ராடியருளே.

(கு - ரை.) இதன்கண் வனப்புறு பெண்களின் பத்துறுப்புக் களுக்குரிய யாற்றில் காணப்பெறும் ஒப்புப்பொருள்கள் பத்தும் நிரல் நிறையாக வமைத்துப் பாடப் பெற்றுள்ளன. அவை வருமாறு: ''பாசி, கயல், வள்ளை, செவ்வாம்பல், செங்கிடை, பதும முகை, ஞெண்டு, வரால், கமடம், பவழக்கொடி ஆகிய பத்தும் முறையே கூந்தல், கண், காது, வாய், அதரம், தனம், முழந் தாள், கணைக்கால், புறவடி, செவ்விரல் ஆகிய பத்துறுப்புக்களுக் கும் ஒப்பாவன. பதுமமுகை - தாமரை மொட்டு. கமடம் - ஆமை. அரி-வண்டு. சூழ-ஆராய. ஏசில்-குற்றமற்ற. சிவிறி- நீர்தெளிக்கும் கருவி. ஆசில் - குற்றமில்லாத. (அ௩)

கொண்டலை நிகர்த்தநின் கூந்தலினி யற்கைமண
மோடுகுற் றேவல்புரியுங்
கோதையர்கள் பூசியம யிற்சாந் தகிற்றூம
முங்கூடி யோடுநீடு

தெண்டிரைப் புலவுமா றித்தெய்வ வாசனை
திகாந்தவரை முட்டவானிற்
றிங்கடவழ் பொதியா சலத்தினின் றிவ்வுலகி
னிற்செறிந் திடுமானிடர்
பண்டையிற் செய்தபா வங்களை நிவிர்த்திபுரி
பரமகங் கைக்கு நேராய்ப்
பைங்கமுகு தாழைகமை யின்றலை கவிழ்ந்திடப்
பரிதிகனன் மேனிகுளிர
அண்டமீ திற்பரந் தெழுபொருநை நதிநனீ
ரம்மைநீ யாடியருளே
ஆதிரையி னூர்மருவு மாதுகோ மதிதேவி
யம்மைநீ ராடியருளே.

(கு - ரை.) பொருநையாற்றில் அம்மை முழுகுதலால் அம்மையின் கூந்தலிலுள்ள இயற்கை மணமும் தோழிமாரால் பூசப்படும் மயிர்ச் சாந்து முதலியவற்றால் ஏற்படும் செயற்கை மணமும் அதன்கண் கலந்து அந்நீரை மிக்க நறுமணமுடைய தாக்குகின்றது. அந்நீர் கடலிற் பாய்ந்து கடலின் புலால் நாற்றத்தை யொழிக்கும். கொண்டல் - மேகம். தெண்டிரை-கடல்; சினையாகுபெயர். திகாந்தம் - திசைமுடிவு. பொதியாசலம் - பொதியைமலை. நேர் - மிகுதி; கங்கையினும் சிறந்தது தண்டமிழ்ப் பொருநை. (அச)

கச்சையுங் கங்கணமு மிளிர்சடை கழுத்தணிக
லன்களுங் காதுகொடிய
கணமணிப் பஃறலைச் சேடன் குலத்தில்வரு
காகோ தராக்களாக
இச்சையுட னேபுனை நதெரியினிடை யாடியிடு
காட்டினிற் பொடிகள்பூசி
யிபவுரிமெய் போர்த்துவன் புலியுரிய ரைக்கசைத்
திட்டவர் சிரத்தினீரை

எச்சிலென் றேதள்ளி நினதுதமிழ் நாட்டினுள
யாவையும் பரிசுத்தமேல்
இட்டிடச் செய்துதெண் டிரையுவரை மாற்றியெவ்
வுயிருக்கு முணவதாகி
அச்சுதம தாயுலகை ரட்சனைசெய் பொருநைநீ
ரம்மைநீ யாடியருளே
ஆதிரையி ஞர்மருவு மாதுகோ மதிதேவி
யம்மைநீ ராடியருளே.

(கு - ரை.) இப்பாட்டின்கண் கங்கையினும் பொருநை சிறந்ததென்பதற்குரியகாரணம் காட்டப்பட்டுள்ளது. கங்கணம்-கைக்கடகம். காதும் - அழிக்கும். கணமணி - பெருத்த மணி. பஃறலை-பலதலை. சேடன் - பாம்பு. காகோதராக்கள்-பாம்புகள். இடுகாடு - நன்காடு; சுடுகாடு. பொடி - வெண்ணீறு. (அ௭)

மதிமண் டலத்துவரை முட்டிமதி யுடன்மருவு
மறுவைத் துடைத்து விண்ணின்
வாழ்கின்ற வாரணமு மிங்குள்ள வாரணமு
மருவிவிளை யாடல்செய்யக்
கதிதங்கு கேசரியை ராசியிற் கேசரி
கலந்துகொண் டுறவுகொள்ளக்
ககனமுடி மீதோங்கு பொதியமுடி மேனின்று
கதிரமர ருலகினுள்ள
சுதைவந்து வார்ந்ததென வொழுகுவெள் ளருவிக
டொடர்ந்தொரு முகங்கொண்டுகீழ்த்
தொன்னிலம் மீதசுரர் மேதையா கியதுகள்
துடைத்துநற் சுத்திசெய்யும்
அதிர்கின்ற தாம்பிரவர் ணிப்புதிய வெள்ளநீ
ரம்மைநீ யாடியருளே
ஆதிரையி ஞர்மருவு மாதுகோ மதிதேவி
யம்மைநீ ராடியருளே.

(கு - ரை.) இதன்கண் பொருநையாற்று வெள்ளம் வானுலகை எட்டியதால் நேர்ந்த தன்மைகள் கூறப்படுகின்றன. வாரணம் - யானை. கேசரி - சிங்கம். ககனம் - வானுலகம். சுதை -அமிழ்து. மேதை -கள். (அசு)

வேறு

அங்கத் துயிரைத் தழுவியவா
ணவச்சேற் றினைமெய் யறிவெனுநீ
ராடிக் களைந்து பரிசுத்த
மாக்கி யழலிற் காய்ச்சியொளி
பொங்கித் திகழுந் தமனியம்போற்
பொலிய நினது திருவுருவிற்
புந்தி செலுத்து மடியர்சென்மப்
புணரி நீக்கித் திருவருளாம்
வங்கத் தேற்று மலரடியை
வணங்க வரந்தந் திடுமணியே
வாலி தாம்நன் முத்தமிரு
கரையு மலிய மகிழ்ந்துநல்குஞ்
சங்கத் திரள்சேர் கூழைநதி
தனில்நீ ராடி யருளுகவே
சங்க ரேசர் பாலுறையெந்
தாய்நீ ராடி யருளுகவே.

(கு - ரை.) இப்பாட்டின்கண் ஆருயிர்களைப் பண்டே புல்லிய ஆணவச் சேற்றினைத் திருவடியுணர்வாம் தெய்வநீரால் கழுவித் தூய்மையாக்கிப் புடம்போட்ட பொன்போல் மிளிரச் செய்து (கோமதியம்மை)யின் திருவுருவில் நாட்டஞ் செலுத்துவித்து மெய்யடியராக்கி அவர்தம் பிறவிப் பெருங்கடலைக் கடத்துவதற்கு நின் திருவடிப் புணையாம் தோணியினை நல்கிப் பேரின்பப் பெருந்துறைக்கண் ஏற்றியருளுகின்றனை; அத்தகைய வரந் தந்தருள வேண்டுமென்பது குறிக்கப்படுகின்றது. (அஎ)

பனிதோய் முகில்வா ரிதிநீரிற்
படிய நன்னீ ராகுதல்போற்
பணியா விரும்பு பரிசனவே
தியினுற் பசும்பொ ஞவதுபோல்
நனிநீ படியுந் தன்மையினுன்
நாகர் மனிதர் படியினவர்
நாள்நாளுஞ்செய் தீநீரை
நன்னீ ராக்கி யின்னிலத்தில்
இனிவந் துதித்து மரியாம
லிகமும் பரமும் விரும்பாமல்
யென்று முளதாய் நித்தியமா
யிலகு ஞான வானந்தத்
தனிவீ டளிக்கு நாகசுனே
தனில்நீ ராடி யருளுகவே
சங்க ரேசர் பாலுறையெந்
தாய்நீ ராடி யருளுகவே.

(கு - ரை.) இதன்கண் கோமதியம்மை நாகசுனேக்கண் படிந்தருளும் தன்மையினுல் அந்நீர் சிவபுண்ணிய நீராய்த் திகழ்கின்றது. அத்திருத்த நீரில் விண்ணவர் மண்ணவர் ஆகிய மன்னுயிர்கள் நின்திருவடியினே நினேந்து திருவைந்தெழுத்தோதி முழுகித் தூயராயின் அவர்தம் புன்மைகளனைத்தும் போயகன்று நன்மைகளனேத்தும் நனிமல்கி இம்மை மறுமை ஆகிய நிலேயிலா வாழ்க்கையில் மனம் செல்லாது தனி வீடெய்துவர் என்பது கூறப்படுகின்றது.

மரியாமல் - இறவாமல். இகம்-இம்மை. பரம் - மறுமை.

(அஅ)

நினது கணவர் தலேமீதி
னெடுநா ளிருந்த மாற்ருளாய்
நெஞ்சி னினேயா தேதோய
வந்த நேய மதனேயுன்னி

வனச நீல முதலான
மலரைத் திரைக்கை யால்வாரி
வணங்கு மடியார்க் கருளுதவு
மலர்மெல் லடியி லருச்சித்துத்
துணையுஞ் சங்கத் திரளோசை
துதியாய்த் துதித்துக் கங்கைமங்கை
தொண்டு புரிவான் கண்டுமகிழ்
வாகித் தூய வுளத்திரங்கித்
தனமு மணியுந் தருங்கூழை
தனில்நீ ராடி யருளுகவே
சங்க ரேசர் பாலுறையெந்
தாய்நீ ராடி யருளுகவே.

(கு - ரை.) இப்பாட்டின் கண்ணும் தற்குறிப் பேற்ற அணி காணப்படும்: சிவபெருமான் திருத்தலையிலிருக்கும் சலமகள் அம்மைக்கு மாற்றாளாவள். நீ (கோமதியம்மை) அதனை நினையாது முழுகவந்ததைக் கண்டு அவள் தாமரை, நீல முதலான நறுமலரை அலைக் கையாலெடுத்து நின்திருவடியில் அருச்சித்து, விரைந்த செலவினையுடைய சங்கக்கூட்டத்தின் ஓசையால் உன மகிழ வாழ்த்தி வணங்குகின்றனள். அதனால் பொன்னும் மணியும் தருகின்ற கூழையாற்றில் ஆடியருளுக.

வனசம் - தாமரை. துனை - விரைவு. தனம்-பொன். மாற்றாள்- கணவனுக்குப் பின் முறை வதுவையாய் வருபவள். (அக)

முனமே கங்கை தனைமுடிமேன்
முக்க ணுதர் சுமந்தபகை
முற்று துளத்திற் கொண்டூடல்
வைத்தா யின்று முளரிமலர்
அனைய திருச்செஞ் சேவடியா
லவள்பா னடந்து நீதோயில்
அண்ண லுடனே யூடல் செய்தா
லன்று நின்பா தோதகமென்

றினைத லிலாதா தரித்தெதிர்நின்
றெதிருத் தரமுஞ் சொல்வாரென்
றேமாப் படைந்து மனக்கலக்க
மின்று தவிர்வா ளிமையரசன்
தனையை யேதண் கூழைநதி
தனில்நீ ராடி யருளுகவே
சங்க ரேசர் பாலுறையெந்
தாய் நீராடி யருளுகவே.

(கு - ரை.) இப்பாட்டின்கண்ணும் தற்குறிப்பேற்ற அணியுள்ளது. அம்மை கங்கையாகிய மாற்றாளின்கண் இறைகூடினார் என்று ஊடினள். அதை மறந்து அம்மை அதே கங்கையில் தோய்கின்றனள். மேலும் ஊடல் நேரின் இறைவன் அம்மையைப் பார்த்து உன்னுடைய திருவடி பட்டுப் புனிதமாயதன்றோ அக் கங்கை என்று கூறி ஊடல் தீர்ப்பர் என்பதாம்.

தோயில் - முழுகினால். பாதோதகம்-திருவடிபட்ட நீர். ஏமாப்பு - இறுமாப்பு; களிப்பு. முக்கணுதர்-மூன்று திருக்கண்களையுடைய தலைவராம் சிவபெருமான். (௧0)

வானத் துருமிற் பிளிறொலியும்
வளருந் தாலப் புழைக்கரத்து
வண்டு மூசு மிருகவுளும்
வாக்கு மதவாற் றின்றொலியு
மீனக் கடலி னொலியடக்கும்
வேழக் குழாமுங் கதிர்ப்புரவி
மேய நிறத்தைப் பசும்புலென
விரும்பி விண்ணின் மேற்றாவச்
சேனைத் தலைவ ரூர்ந்துவருந்
திரள்வெம் பரிக ணிறைவீதி
சிறந்து தந்த நகரமெனச்
செல்வ மலியும் வரராசைத்

தானக் கிளியே கூழைநதி
தனில்நீராடி யருளுகவே
சங்க ரேசர் பாலுறையெந்
தாய்நீ ராடி யருளுகவே.

**(கு - ரை.)** *தெருவில் நிறைந்துவரும் யானைக் கூட்டங்கள் பிளிறு மொலி இடிபோன்று காணப்படும். அவற்றினுடைய இரண்டு காதுகளின் வழியாக வரும் மதநீர்ப் பெருக்கின் ஓசையும் அப் பிளிற்றொலியும் ஒன்று சேர்ந்து கடலொலியை யடக்கும். வானத்தை யளாவத் தாவிச் செல்லுங் குதிரைகள் கதிரவன் தேரில் கட்டப்பட்ட எழுநிறக் குதிரைகளில் பச்சைநிற முள்ளதும் ஒன்றாதலால் அதனைப் புல்லெனக் கருதி உண்ணச் செல்லுமாம். இத்தகைய யானை குதிரைகள் நிறைந்து செல்லும் வளஞ்சார் வனப்பமைந்தது தெரு.*

*பிளிறு - யானை முழக்கம். வாக்கும் - ஊற்றும். மேய - பொருந்திய. ஊர்ந்துவரும் - ஏறிச் செலுத்திவரும்.* **(கக)**

---

## கo. ஊசற் பருவம்

*[இஃது இருபத்தொராவது திங்களில் நிகழ்வது. அது பிள்ளையை ஊசலில் ஏற்றிவைத்துத் தோழியர்கள் ஆட்ட ஆடும் நிகழ்ச்சியாகும்.]*

முதுமறைக ணான்கினையு நான்குவட மாக்கியுப
நிடதமுடி வாம்பலகையின்
மூட்டிப் பொருத்தியத னடுவிருந் துனதருட்
சத்திகண முன்னுந்திட
இதுவது வெனுஞ்சுட்டி லாதமெஞ் ஞானவா
காயவரை யேகியாடும்
யெம்பிராட் டியாங்கள் பேதைமையி னுற்செய்த
விவ்வூச லின்மகிழ்ந்து
கதுவுறு மனத்தினு லாடுவது தேவரமு
தோடுகண் ணப்பனெச்சில்
கட்வுணிக ராய்க்கொள்ளி னீகொள்ள னீதியன்
ஞேகமழ் புனைச்சோலையிற்
புதுமது திரண்டொழுகு கூழைநா யகிதிருப்
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதியம்மை
பொன்னூச லாடியருளே.

**(கு - ரை.)** *திருவருளன்னை பழமறை நான்கினையும் நான்கு வடமாகவும், மறைமுடியினைப் பலகையாகவும் கொண்டு அதனடுவில் வீற்றிருந்து தன் அறிவாற்றல்கள் ஆட்ட அருள் வெளியில் இன்பக் கூத்தாடும் இயல்பினள்.*

*சுட்டிலாத - வரையறுத்துச் சொல்லொணாதை. பேதைமையால்-அறிவுத் தாழ்வால். கதுவுறு மனம் - பற்றுக்கொள்ளு மனம். பொற்றவர் - பொன்மலையில்.* **(கஉ)**

வேதனின தருளினு லெண்பத்து நான்கிலக்
கம்யோனி பேதமாக
விதவிதம தாய்ச்சிருட் டித்தவுயிர் செய்தவினை
வழியிக பரத்தினுக்கும்
பேதமுறு போகத்தை யூட்டிவைத் துச்சூத்திர
தாரியா யுடலினின்று
பேருலக ரறியாம லாட்டும் பராசத்தி
பெய்முகில்க டழையரும்புஞ்
சூதவன மேல்வதித ஞன்முகில் தரித்தவே
ணிக்கடவு ளென்று துன்னுஞ்
சுடர்மணி நிறத்தகுயின் மாரனைப் பொரவாவெ
னத்தொனி புரிந்தழைக்கும்
போதுசெறி சோலைசூழ் வரராசை யன்னை நீ
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரோ டுற்றகோ மதியம்மை
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) முதல்வரியில் "உரைசேரும் எண்பத்து நான்கு நூறுயிர" யோனி பேதப் படைப்புக் கூறப்படுகின்றது. சிவ பெருமான் திருமுடியில் நான்கு முகில்கள் தங்கியுள்ளன. மாமரச் சோலையிலும் முகில்கள் தங்கியுள்ளன. அதனால் அச்சோலை சிவ பெருமானை யொத்துக் காணப்படுகின்றது. இதனைக் கண்ட நீல மணி போலும் குயில்கள் காமனைச் சிவபெருமானுடன் பொர அழைப்பதுபோல் பெருமுழக்கம் முழக்குகின்றன.

வேதன் - படைப்போன். பேதமுறு - வேறுபாடுறுகின்ற. சூதவனம் - மாஞ்சோலை. சுடர்மணி - நீலமணி. (கூ)

கடையர்கடை சியர்முகங் கண்காது வாயைக்
கடுத்தகஞ் சமுநீலமுங்
கவின்வள்ளை யல்லியுங் கடிதுமென வேகடாக்
கட்டியுழு மலமுகத்திற்

கடையினுல் வேரகழ்ந் தின்னுமுளை யாவகை
பரம்புதட விப்புதைத்துப்
பைங்கூழ் வளர்த்திடும் பணையினிற் சங்கம்
பரிந்தீன்ற முத்தம்வாரி
இடையொடிய விளமுலை தடித்துவள ராப்பேதை
யேழையர்கள் சிற்றிலாக்கும்
இளவாழை பூகம்ப லாத்தென்னை மாத்தருவின்
ணிரவிக்கு மேனிழலதாய்ப்
புடைமருவு வரராசை யம்பதியில் வாழம்மை
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதியம்மை
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) கடையர்-உழவர். கடைசியர்-உழவப்பெண்கள். இப் பெண்களின் முகம், கண், காது, வாய் ஆகிய நான் குறுப்புக்களுக்கும் ஒப்புமுறையே தாமரை, நீலம், வள்ளை, அல்லி என்பனவாம். இவற்றை உழவர்கள் இன்னும் முளையா வகை களைந்தெறிவர். கடுத்த-ஒத்த. அலமுகம்-கலப்பைமுகம். (கச)

நினதுசெந் தாமரைத் தாளினை நிகர்த்தமா
ணிக்கநிரை யாய்க்குயிற்றி
நீளொளி பரப்புபல கையின்மீ துனகையொத்த
நித்தில வடம்புனைந்து
கனகவரை வில்லர்புய மனையபவ ளந்தானு
நாட்டிநின் காயமொத்த
கதிர்மர கதத்தினி னிழைத்தவுத் திரமிசைக்
கட்டிநின் மயமதாக
வனையுமிவ் வூசன்மதி மண்டலந் தொட்டாட
மகிணருள மூசலாட
மற்றுள சராசரத் துயிர்களு முவந்தாட
மாடமுடி மேல்விண் மணியைப்

புனையும்வர ராசைவரை ராசனருள் தேவிநீ
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதியம்மை
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) விழுமிய முழுமுதற் சிவன் எல்லாப்பொருள்களுடனும் நீக்கமின்றி நிறைந்தியைந்து அவற்றை இயக்கியருள்கின்றனன். அவைகளும் இயங்கியாடுகின்றன. அங்ஙனம் சிவபெருமான் அவற்றை ஆட்டினும் அவன் ஆடுவதில்லை. அதற்குப் பொருத்தமான வொப்பு ஊஞ்சலாடுவதே. ஊஞ்சலாடுபவன் ஊஞ்சலின்மேல் வீற்றிருப்பினும் அவன் ஆடுவதில்லை. அவ்வூஞ்சல் மட்டுமே ஆடுகின்றது. அக்குறிப்பு இப்பாட்டின்கண் காணப்படும். அம்மை திருவூசலின்மேல் வீற்றிருந்து தோழியர்கள் அவ்வூசலை ஆட்ட ஆடுகின்றனள். அதனைக் கண்டு சிவபெருமானின் திருவுள்ளமும் களிப்புமிகுதியால் ஆடுகின்றது. சிவபெருமானின் திருவுள்ளத் திருக்குறிப்பின் வழியே திருவருளாகிய திருவாணை*யின் இவர்ந்தூர்தலென்னும் அதிட்டான வாயிலாக அறிவுள்ள உலகத்திற்கும் அறிவில் உலகத்திற்கும் இயக்கம்-புடைபெயர்ச்சி நிகழ்கின்றது. இறைவன் திருவாணையுடன் இயைந்து நிற்கத் திருவாணை உயர்திணையுடனும், அஃறிணையுடனும் இயைந்து நிற்க அவை இயங்குகின்றன என்பதை வரும் ஒப்பின் வாயிலாகக் காண்பாம் "மகிணருள மூசலாட" என்பது திருவுள்ளத் திருக்குறிப்பாகும். அம்மை திருவருளாகும். தோழியர் உயர்திணையாகும். ஊசல் அஃறிணையாகும். ஆட்டம் இயக்கமாகும். இக் குறிப்பினை ஒரு வெண்பாவினுற் றருதும்:

ஈங்கூசல் அஃறிணையாம் எண்ணும் உயர்திணையும்
பாங்குசெறி தோழியராம் பண்புடனே—ஓங்குநிறை
அம்மை திருவருளாம் அப்பன் மகிணனும்
செம்மையாட் டம்மியக்கம் தேறு.

நிகர்த்த-ஒத்த. குயிற்றி-பதித்து. நகை-பல். நித்திலம்-முத்து. கனகம்-பொன். வரை-மலை. தாணு-தூண். மதிமண்டலம்-திங்கள்மண்டலம். (கூ௫)

*அவையே. சிவஞானபோதம், சூத்திரம் - உ.

களபமுலை மாதரா ரிகுளைய ருடன்காத
லூறுபொய்த லாடவவர்தங்
கமழகிற் றூமமும் விரைநறுங் கோதையு
மகலாத கரியகுழலை
இளநகையை யதரத்தை நீருண் டெழுந்தகா
ரிணர்முல்லை கோபமென்ன
வெழின்மஞ்ஞை சிறைவிரித் தாடியிள வேனிலைக்
கார்கால மென்ன வெண்ணும்
வளமருவு சோலைசெறி வராசை யம்பதியில்
மனமொழிமெய் மூன்றுமொன்றி
வன்னியிடை மெழுகென்ன வுருகியுரு கிப்பழைய
வழியடிய ரன்புகந்து
புளகிதமு றப்பரவு துளபமுகில் சோதரீ
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதியம்மை
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) குழல், நகை, அதரம் மூன்றும்போல் விளங்குவன கார், முல்லை, கோபம் என்பன. கோபம் - தம்பலப்பூச்சி. இணர் - கொத்து. புளகிதம்-மயிர்ச்சிலிர்ப்பு. சோதரி-உடன் பிறந்தாள். திருமாலுக்குத் தங்கையென்பது தத்துவ முறையானமைவது. (கக)

வள்ளநிறை பாலமுது வெள்ளனங் கிள்ளைகட்
கூட்டிமட மொழிபயிற்று
மயிலன மடந்தையர்க ளுபரிகையின் மீதுலவி
வாதா யனத்தருகினில்
வெள்ளொளி பரப்பிவரு பிள்ளையம் பிறையைமினிர்
மென்கரத் தாலெடுத்து
வின்னுதலை யொப்பென்றும் நடுவிற் களங்கம்விரை
கமழ்நான திலகமென்றும்

எள்ளரிய கவிவாண ருவமித்தல் சரிவிண்ணி
னேகென விடுத்து மகிழும்
இனமணி யிழைத்தமா ளிகையுமுப வனமீ
திருந்துநறை யுண்டுபாடும்
புள்ளொலியு மருவுபூ கயிலாய நாயகீ
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதிதேவி
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) இப்பாட்டின்கண் வானளாவ உயர்ந்த மாடங்களின் வனப்புக் கூறப்படுகின்றது. மேன்மாடத்து வீற்றிருக்கும் பெண்கள் தங்கள் உபரிகையின் சாளரத்தின் அருகில் நிற்கும் பிள்ளைத் திங்களைக் கையிலெடுத்து அது புலவர் கூறும்படி தங்கள் நெற்றிக்கும் பொட்டுக்கும் ஒப்பாக விருக்கின்றதா என்று சரிபார்த்து விட்டுவிடுகின்றனர் என்னுங் குறிப்புக் காணப்படுகின்றது. பிள்ளைத்திங்கள் - எட்டாம் பிறை. இது பெண்களின் நெற்றிக்கு ஒப்பு. அதன்கண் காணப்படும் களங்கம் பொட்டுக்கு ஒப்பு. எனவே, பொட்டணிதல் நெற்றிக்குச் சிறப்பளிப்பதாகும். இது "செம்பொ னூர்தில கம்முல குக்கெலாந் நம்பனும நமச்சிவாயவே" என்பதனுல் விளங்கும்.

மயிலன - மயிலன்ன ; மயிலையொத்த. வாதாயனம் - சாளரம் ; மண்டபம். உபரிகை - மேன்மாடம். உபவனம் ஊர்சூழ் சோலை. (கள)

நன்னில மகட்குமுக மன்னசெந் தாமரை
யலர்ந்தபணை யூடெழுந்த
நறியசெஞ் சாலிகள் விளைந்தகதி ரூடுமே
தித்திரண டந்துழக்கித்
துன்னுகதிர் மேய்ந்துகன் னற்படப் பையினிற்
றெடக்குவே லியைமுறித்துச்
சூழலுட் சென்றுகடை வாய்குதட் டியபோது
சுடர்முத் துதிர்ந்துமலிய

மன்னுமக் கன்னலை முறித்தருந் திச்சிலவன்
மேதிகள் வயற்குளேகி
வண்முத்தம் வாயினி லுதிர்த்திடக் கண்டிடம்
மாறிவரு முத்தநோக்கிப்
பொன்னுலவு மள்ளர்கள் வியக்கும்வர ராசையுமை
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதியம்மை
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) இதன்கண் வயிலில் செஞ்சாலி நெற் கதிர்களை மேய்ந்த எருமைகள் பக்கத்திலுள்ள கரும்புத் தோட்டத்து வேலியை முரித்து உட்புகுந்து அசைபோட்டன. அப்பொழுது சாலிமுத்துக்கள் உதிர்ந்தன. கரும்பை முரித்துத்தின்ற சில எருமைகள் வயலில் வந்து அசைபோடுங்கால் கரும்பு முத்தை உதிர்த்தன. இதனைக்கண்ட மள்ளர்கள் கரும்பின் முத்து வயலில் எப்படி வந்ததென்று மருண்டனர் என்னும் குறிப்புக் காணப்படுகின்றது.

புனை - பண்ணை ; வயல். மேதி-எருமை. கன்னல் - கரும்பு.

(கஅ).

வாதிட்ட சமணர்களை வையைநதி நீரிலும்
வன்னியிலு மெழுதியிட்ட
வண்டமிழ்த் தேவார மானகவி யால்வெல்ல
மாமணி யிழைத்தகிண்ண
மீதிட்ட பொற்றனத் தமுதருத் திக்கௌணி
யக்குலத் தினிலுதித்த
மெய்ஞ்ஞான சம்பந்த ரைக்குகனை வேழமுக
னைப்போல் வளர்த்த மின்னே
ஏதிட்ட மானபொரு ளென்றுபழ வடியருக்
கெண்ணுமு னளிக்குநிமலீ
யிகபரத் தாசையை யிகந்தபொதி யத்தவ
னெழுந்தமதி தோறும்வந்து

போதிட் டருச்சனைசெய் வரராசை யன்னைநீ
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதியம்மை
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) இதன்கண் அம்மை ஆளுடைய பிள்ளையாருக்குப் பாலமுதூட்டியமை சமணர்களுடன் வழக்கிட்டு வெல்லத் தேவாரம் அருளிச்செய்யும் பொருட்டேயாம். அத் திருநெறிய தமிழ் தீயினும் நீரினும் அழியாது நிலைபெற்றுச் செந்தமிழ்த் திருமறையின் சிறப்பையும் அம் மறையால் மட்டுமே பெறப் படும் ஒருவனும் சிவபெருமானின் சீர்மையினையும் அன்றும் இன்றும் என்றும்நின்று விளக்கும் நீர்மையது.உலகப்பொருள்கள் காற்றுத் தீ நீர் ஆகிய இவற்றால் அழிவன. தமிழ் இவற்றால் அழியாது இவற்றை வெல்லும் வீறுடைய தென்பதை மெய்ம்மையாகக் காட்டும் விழுத்தகு நிகழ்ச்சியே பாண்டியன் வெப்பு, தீ, நீர் இவற்றான் உணர்த்தப்பட்ட தமிழ்மறை நிகழ்ச்சியாகும். பாண்டியன் வெப்பு ஊற்றுணர்ச்சிக் கன்றிக் கட்புலனுக் கெய்தாமையான் காற்றுக் குறிப்பாகும்.

வன்னி - தீ. ஏதிட்டமான - விருப்பமான் எதுவும். (கக)

சேணிற் பொலிந்தமதி கதிரிரவி நாட்குலஞ்
செம்பொன்மக மேருவென்னத்
தேர்ந்துலவ விரணியத் தாற்றிருந் தியதகடு
சேர்த்துவேய்ந் திட்டமாடத்
தூணிற் பொலிந்ததோ கையர்கள்சித் திரநிரை
துணைக்கணிமை யாதுகூடுந்
தொடையல்வா டாதவை யறிந்துதம் மினமாத
ராமெனச் சுவணவுலக
மாணுற்ற மடவியர்கள் வந்துபார்த் திம்பரின்
வதிந்ததப தியர்கள்கையின்
மாட்சிமையை யதிசயிக் குந்தெய்வ வரராசை
மாநகர் புரந்தமயிலே

பூணிற் பொலிந்ததன வாவுடைக் குமரிநீ
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதியம்மை
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) இப்பாட்டின்கண் சிற்பிகளின் கைத்திறமையைப் பொன்னுலக மாதரார் கண்டு வியந்து பாராட்டுதல் குறிப்பிக்கப்படுகின்றது. அஃதாவது மேன்மாடத்துத் தூணில் கைவல் சிற்பியரால் செதுக்கப்பட்ட வனப்புமிக்க பெண் ஓவியத்தின் கண்கள் இமைத்தில; சூட்டப்பட்ட பூக்கள் வாடல. இவற்றால் பொன்னுலக மாதராகிய அரமகளிர் அப் பெண்ணோவியங்களைத் தங்கள் இனமெனக் கருதியளவளாவ வந்தனர். வந்து ஓவியம் எனக் கண்டனர். கண்டதும் மருண்டனர். மருண்டு சிற்பிகளை வியந்து சென்றனர். பண்டைக்காலத்துக் கைவல்ல சிற்பியர்களின் திறங்களெல்லாம் திருக்கோவிற் சிற்பங்களாகத் திகழ்கின்றன.

சேண் - தொலைவு. நாட்குலம்-நட்சத்திரக்கூட்டம். இரணியம்-பொன். தொடையல்-மாலை. தபதியர்கள்-சிற்பிகள். கையின் மாட்சி-கைத்திறமாண்பு; வேலைப்பாடு. (க00)

தாரணி கருங்குழலு மீரெண் கலாநிதி
தனிற்றிகழு மெழில்வதனமுந்
தனுவைநிகர் நுதலுமிரு காதிலடி யார்குறை
தனைத்தவிர்த் தாடியென்ன
ஈரமொ டடிக்கடி யுரைத்திடச் செல்வதென
வேகுமிரு கருணைவிழியு
மெம்பிரா னுள்ளத்தி னினிதுவப் புறமலரு
மிணர்முல்லை யனைய நகையும்
வாரணி திருத்தனமு மணியணி நிரைத்தகாஞ்
சிக்கிசையும் வல்லியிடையும்
வனசமல ரைப்பொருத திருவடியு மரகதத்
திருமே னியும்மலிந்த

பூரண சௌந்தரீ வரராசை யன்னைநீ
பொன்னூச லாடியருளே
பொற்றவர் தரித்தவரொ டுற்றகோ மதியம்மை
பொன்னூச லாடியருளே.

(கு - ரை.) இப் பாட்டின்கண் கோமதியம்மையின் சொல்லவும் எண்ணவும் ஒண்ணு வனப்பமை திருவுருவினை அணிபெற ஓதுகின்றனராசிரியர். திருமுகம், திருநுதல், திருவிழி, திருநகை, திருமுலை, திருஇடை, திருவடி, திருமேனி ஆகிய எண்பேறுறுப்புக்களை அவ்வவற்றிற்குரிய சிறப்புடன் குறிக்கப்பட்டிருப்பது காண்க. இத் திருப்பாட்டினலும், இத் திருப்பாட்டைத் திருக்கடைக் காப்பாகக்கொண்டிருக்கும் இந்நூலினலும் ஓதுவார், கேட்பார். உன்னுவார், உவந்தெழுதி நிலைப்பிப்பார் எண்பெரும் செல்வமும், எட்டுவான்குணமும் தட்டின்றி எய்தி என்றும் மாரு இன்புடன் வாழ்வாரென்னும் இயைபெடுத்துக் கூறும் குறிப்பே எட்டுறுப்புக்கள் கிளர்ந்தெடுத் தோதப்பெற்றன என்க.

தார் - மாலை. குழல்-கூந்தல். ஈரெண்கலாநிதி - திங்கள். ஈரெண்கலை-பதினறுகலை. வதனம்-முகம். தனு-வில். நிகர்-ஒப்பு. நுதல்-நெற்றி. ஆடி-ஆள் + தி-ஆள்வாயாக. ஈரம்-அன்பு. கருணை - பெருந்தண்ணளி. விழி-கண். நகை-பல். வார்-கச்சு. தனம் - முலை. காஞ்சி - இடையிலணியும் அணி. வல்லி-கொடி. வனசம் - தாமரை. மரகதம் - பச்சை. சௌந்தரீ - அழகுடையவளே! (க0க)

காஞ்சி - எண்கோவை. இவ்வுண்மை வருமாறு :

“காஞ்சி மேகலை கலாபம் பருமம்
விரிசிகை மாத ரிடையணி எனப்படும். அவற்றுள்,
காஞ்சியெண் கோவை எழுகோவை மேகலை
கலாபம் நாலுன்கு பருமம் பதினெட்டு
விரிசிகை யெண்ணுன்கு கோவை யென்ப.”

—பிங்கலம், ககக௯

**கோமதியம்பிகை பிள்ளைத்தமிழ்**

**மூலமும் உரையும்**

**முற்றுப்பெற்றன.**

---

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]

P: 92)
178
90
90

